# உள்ளே

# முன்னுரை

உரூப் என்ற புனைப்பெயரில் பிரபலமான திரு. பி.சி. குட்டி கிருஷ்ணன் தம்முடைய முப்பத்தெட்டாவது வயதில் எழுதிய "உம்மாச்சு" நாவல் மூலம் புகழின் உச்சத்தை எட்டினார். அதற்கு ஐந்தாண்டுகளுக்குப் பின் அவர் எழுதிய "சுந்தரிகளும் சுந்தரன் மார்களும்" நாவல் அளவில் பெரியது, பரப்பில் அகன்றது, நிதர்சனமானது. பல திறனாய்வாளர்களின் நோக்கில் உம்மாச்சு தான் அவருடைய வேறெந்த நாவலையும்விடச் சிறந்ததாகும். ஆமினா, குஞ்சம்மையும் கூட்டாளிகளும், ஊமைப் பெண், அணியறை, அம்மிணி ஆகியன அவரது பிற குறிப்பிடத் தக்க நாவல்கள்.

நாவலாசிரியர் என்ற முறையில் அவருடைய அடிப்படை மனிதாபிமானம்தான்; நிகழ்ச்சிகளல்ல. தனிநபர்களை இனம் காட்டத்தான் அவர் நிகழ்ச்சிகளைப் பயன்படுத்திக் கொள்கிறார். அத்தகைய நிகழ்ச்சிகள் கதாபாத்திரங்களை அறிமுகப்படுத்து கின்றன. ஆக மொத்தத்தில் அவருடைய எல்லா நாவல்களுமே உளவியல் ஆராய்ச்சிகளே. அவருடைய வாழ்க்கை நோக்கத்தை ஒரே வார்த்தையில் குறிப்பிட்டுச் சொல்லிவிடலாம்--அது தான் மனிதாபிமானம். அவருடைய வசீகரமான நடையழகை ஆராய்ந்து பார்த்தால் இரண்டு விஷயங்கள் புலப்படும்--ஒன்று, பளிச்சிடும் நகைச் சுவை; மற்றொன்று, மனோகரமான கவிதா சக்தி வாய்ந்த சொல்லாற்றல். அவருடைய நாவல்களின் பெரும்பாலான பாத்திரங்கள் சாமானிய ஆணும் பெண்ணுமான மனிதர்களே; அவர்களிலும் பெரும்பாலோர் நாகரிகப் பகட்டும் படிப்பறிவும் இல்லாத கிராம மக்களே. ஆனால் மனித இயல்பின் எல்லப் போக்குகளையும் பிரதிபலிக்கும் பிரதிநிதிகள் அவர்கள். அவர்களில் மகோன்னதமாக மன முதிர்ச்சி பெற்றவர்களும் உண்டு; கீழ்த்தரமான மிருக உணர்ச்சி பெற்றவர்களும் உண்டு. அவர்களுள் சிலர் தங்களது எளிய, நேரிய போக்கினால் தெய்விகத் தன்மையை எட்டுகிறார்கள்; வேறு சிலரோ தங்களுடைய வக்கிரங்களினால் நரகத்தின் ஆழத்தை எட்டுகிறார்கள். சில

சந்தர்ப்பங்களில் அவருடைய பாத்திரங்களை வியந்து, "மனிதன் எவ்வளவு உயர்வான படைப்பு! அவனுடைய திறமை எல்லையில்லாதது, அறிவார்ந்தது!" என்று பாராட்டி மகிழ் கிறோம். வேறு சில சந்தர்ப்பங்களில், "இந்த ஈனப் பிறப்பின் சிறுமைதான் என்னே!" என்று காறி உமிழ்கிறோம்.

"உம்மாச்சு" நாவலின் கதைப்பொருள் மனித இனம்போல் பழமையானது; தனிநபர் அனுபவம்போல் என்றென்றும் புதுமையானது. அதன் மையக் கருத்து பழைய இலக்கியங்களில் காணப்படுவதேயாகும். கொலையாளி கொலை செய்யப் பட்டவனின் மனைவியை மணந்து கொள்கிறான்; கொலை செய்யப்பட்டவனின் மகன் அவர்கள் இருவரையும் வஞ்சம் தீர்த்துக்கொள்ளப் பொருதி நிற்கிறான். கொலையாளி கொலை யுண்டவனின் மனைவியை மணந்துகொள்வதான இதைப் போன்ற கதைகள் பல ஏற்கனவே இருக்கின்றன.

இந்த நாவலில் வரும் மாயன் உம்மாச்சுவின் கணவனான பீரானைக் கொலை செய்கிறான்; பின்னர் அவளையே மணந்து கொள்கிறான். பீரானின் மகன் அப்து மாயனை வெறுக்கிறான். கிரேக்க அறிஞரான ஹெர்மன் ஊஸ்னர் பருவகாலங்களை உருவகப்படுத்தும் முறையை திறனாய்வாளரான கில்பர்ட் மர்ரே குறிப்பிடுகிறார். குளிர்காலத் தேவனான கிரெஸ்டெஸ் கோடைப் பருவத்தைக் கொல்வதாகவும், பின்னர் கோடையின் மனைவியான பூமியை, குளிர் மணந்து கொள்வதாகவும், ஹெர்மன் ஊஸ்னர் விவரிக்கிறார். சூரிய புத்திரனான பலிச் சக்கரவர்த்தியையும், மழைக் கடவுளான இந்திரனின் புத்திரனான சுக்ரீவனையும் இத்தொடர்பில் நாம் நினைவுபடுத்தியுள்ளோம். இந்தப் புராணகதைகளின் அடிப்படை, வேளாண்மைச் சின்னங்களான அரசர்களையும், காலக் கணக்கீடுகளான ஆண்டுகளின் சின்னங்களான வேதாளங்களையும் தொடர்புபடுத்துவதாகும். இந்தக் கதைகளில் பெண் என்பவள் அன்னை பூமியை உருவகிக்கிறாள்; கொலையுண்டவனின் மனைவி கொலை செய்தவனின் மனைவியாக மாறுகிறாள். மறைந்த பருவ காலத்தின் மனைவியைப் பின்வரும் பருவம் மணந்து, இயற்கை தன் வளத்தை தொடர்ந்து பசுமையாக வைத்திருக்கும் ஒரு யுக்தி இது. புராணக் கதைகளின் அடிப்படையை இயற்கை சார்ந்த கதைகளாகத் தொடர்புபடுத்துவது என்பது மனித இயல்புகளைப் புறக்கணித்துக் கூறுவதற்காக அல்ல. கில்பர்ட் மர்ரே கூறுவதையே

மீண்டும் குறிப்பிடலாம்; "இயற்கையைப் பற்றிய இந்தக் கதைகளெல்லாம் மனித சமுதாயத்தில் நிகழ்கின்ற சம்பவங்களை ஆதாரமாகக் கொண்டவைகளே; வெறும் சூனியத்திலிருந்து படைக்கப்பட்டனவல்ல. ஆதி காலத்திலும் இந்த வழியில் தான் சிந்தனையும் கற்பனையும் இடம் பெற்றன."

இந்தப் பேருண்மையின் இரகசியத்தைத்தான் நாம் "உம்மாச்சு" நாவலிலும் காண்கிறோம். புராணக்கதை உணர்வுபூர்வமாக மீண்டும் புனையப்பட்டிருப்பதாக இங்கு நான் பொருள் கொள்ளவில்லை. சமகால வாழ்க்கையிலிருந்து இயல்பான கதை ஒன்றை ஆசிரியர் தேர்ந்தெடுக்கிறார். தான் அவ்வாறு தேர்ந் தெடுத்தது கூட ஷேக்ஸ்பியரின் ஹாம்லெட் கதையைச் சார்ந் திருப்பதாக அவர் உணராதிருக்கலாம். பன்னெடுங் காலமாகப் பழகிவரும் கதைதான் முற்றிலும் புதிய உருவில் படைக்கப் பட்டிருப்பதை நாம் புரிந்துகொள்கிறோம்.

உம்மாச்சு ஒரு முஸ்லிம் பெண். குழந்தைப் பருவத்தில் அவளுக்கு இரண்டு கூட்டாளிகள் இருந்தார்கள். பீரானும் மாயனும். பீரான் பணக்காரன், அழகன், நாசூக்கானவன். மாயன் ஏழை, திடகாத்திரன், சுறுசுறுப்பானவன், உணர்ச்சி மிக்கவன், அடாவடிக்காரன். உம்மாச்சு மாயன்பால் கவரப்படுவதைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. ஆனால் அவளுடைய பெற்றோர்கள் அவளை பீரானுக்கு மணம் முடித்து விடுகிறார்கள். இது மாயனைப் பைத்தியத்தின் எல்லைக்கே இழுத்துச் சென்றுவிடுகிறது. இந்தத் தருணத்தில் இடைத்தரகராக இருந்த கிழவரை மாயன் வம்புக்கிழுக்கிறான். கோபத்தின் உச்சத்தில் மாயன் அவரை நையப் புடைத்துவிடுகிறான். களைத்துப் போன கிழவர் சோர்ந்து போய்க் கீழே விழுந்துவிடுகிறார். கிழவர் இறந்துவிட்டதாக மாயன் தவறுதலாக நினைத்துக் கொண்டு, அந்த ஊரிலிருந்தே ஓடிவிடுகிறான். ஒதுக்குப்புறமான காட்டுப் பகுதியான வயநாடு சென்று தலைமறைவாகிவிடுகிறான். மலைச் சாரலுக்கு வியாபாரம் நடத்தும் ஒரு வணிகரிடம் அவன் முதலில் வேலைக்கு அமர்கிறான். பின்னர், மலையில் பாறைகளை உடைக்கும் வேலையில் ஈடுபட நேர்கிறது. ஐரோப்பிய வியாபாரிகள் தொடங்கி இடையே விட்டுப்போன வேலை அது. பாறைகளை இடித்து நொறுக்கி, அவற்றில் கலந்திருக்கும் தங்கத் துகள்களைச் சேகரித்து, ஒரு பொற்கொல்லனின் உதவியால் தங்கத்தைப் பிரித்து, பக்கத்து நகரங்களில் கள்ளச்சந்தையில்

வியாபாரம் செய்யும் வழியைக் கடைப்பிடிக்கிறான். இவ்வாறு சிறிது பணம் சேர்த்து, தனக்கென்று ஒரு வீட்டையும் கட்டிக் கொள்கிறான்.

சில ஆண்டுகளுக்குப் பிறகு, கல்யாணத் தரகரான கிழவரின் மகன் ஹஸ்ஸன் அங்கு வந்து சேர்கிறான். மாயனின் தாக்குதலினால் கிழவர் சாகவில்லையென்றும், மாயனைப் போலீஸ் தேடவில்லையென்றும் ஹஸ்ஸன் மூலமாக மாயன் அறிய நேர்கிறது. நிம்மதிதான். ஆனால் உம்மாச்சு ஆறு வயதுப் பையன் ஒருவனுக்குத் தாயாக மகிழ்ச்சியுடன் இருக்கிறாள் என்ற செய்தி அவனை நோகச் செய்கிறது. என்றாலும் அவளைப் பார்க்க வேண்டும் என்ற தவிப்பை அவனால் அடக்க முடியவில்லை. மலையில் வியாபாரப் பொறுப்புக்களை ஹஸ்ஸனிடம் ஒப்படைத்துவிட்டு மாயன் சொந்த ஊர் நோக்கிக் கிளம்புகிறான். அங்கு அவன் உம்மாச்சுவைச் சந்திக்கிறான். அவளுக்கு மாயன் மீதான தாபம் சற்றும் குறையவில்லை என்று அறிந்தபோது அவனுடைய பழைய உணர்வு மீண்டும் கிளர்ந்தெழுகிறது. இன்னொருவன் அவளுடன் வாழ்க்கை நடத்துக்கிறான் என்ற எண்ணத்தைக்கூட மாயனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை; மனத்தில் பெரும் பாரமாக அது அவனை உறுத்துகிறது.

ஒருநாள் இரவு எல்லோரும் தூங்கிக்கொண்டிருந்தபோது அவன் யாரும் அறியாமல் அவர்களுடைய வீட்டிற்குள் நுழைந்து, கள்ளங்கபடற்று நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்த பீரானை மாயன் கொலைசெய்து விடுகிறான். அச்சமயத்தில் விழித்துக்கொண்ட பாலகன் அவனைப் பார்த்து பயந்து அலறவே மாயன் ஓடிவிட்டான். ஆனால் உம்மாச்சு குழந்தை அலறிய கூச்சலினால் விழித்தெழுந்த நிலையில், மங்கிய நிலவொளியில் ஓடியவனின் சாயலைப் புரிந்துகொண்டுவிட்டாள். அவன் முந்தின நாளே ஊர்க்காரர்களிடம் தான் வயநாட்டுக்குத் திரும்பிப் போவதாகப் பயணம் சொல்லிக்கொண்டுவிட்டான். ஆனால் காரியத்தை முடித்த பின்னர்தான் கிளம்பினான். கிராமத்தில் அவனை யாரும் சந்தேகப்படவில்லை. பயங்கரத் தவிப்பிலும் பதற்றத்திலும் அவனுடைய நாட்கள் கழிந்தன. சிறிது காலம் கழித்து, தன்னுடைய உற்றார் உறவினரைப் பார்த்துத் திரும்ப உதவும் நல்லெண்ணத்துடன் பெருந்தன்மையாக அனுப்புவதுபோல் சொந்த ஊருக்கு ஹஸ்ஸனை அவன் அனுப்பி வைத்தான். அவன் திரும்பி வரும்போது ஊர் நிலவரங்களை

நிச்சயம் அறிந்து வருவான் என்பதே மாயனின் நோக்கம். கவலை, தனிமை, தவிப்பு, அச்சம் என எல்லாமாக அவனை மனம் மருளச் செய்தன. இந்த அவல நிலையை ஒரு முடிவுக்குக் கொண்டுவர தற்கொலைதான் ஒரே வழி என்று கடைசியில் முடிவு செய்தான். இந்தச் சிக்கலான நேரத்தில் ஹஸ்ஸன் ஊரிலிருந்து திரும்பி வந்து சேர்ந்தான்; செய்தி ஒன்றையும் கொண்டு வந்திருந்தான். முன்பு எப்போதோ பீரானால் பழிவாங்கப்பட்ட சோழி என்பவன் பிரானைக் கொலை செய்துவிட்டதாகவும், அதற்காக அவன் தூக்கு தண்டனை பெற்றுவிட்டதாகவும் ஹஸ்ஸன் செய்தி தெரிவித்தான். அந்த பயங்கர இரவின் நிகழ்ச்சியின்போது உம்மாச்சு அவனை நேரடியாகப் பார்த்திருந்தபோதும், விசாரணையின் போக்கை அவள் திசை திருப்பியிருக்கிறாள் என்பது மாயனுக்குப் புரிந்துவிட்டது.

மாயன் சொந்த ஊருக்குத் திரும்பி வந்தான். அவன் சம்பாதித்துக்கொண்டு வந்திருந்த திரண்ட சொத்து சமூகத்தில் அவனுக்கு மதிப்பையும் மரியாதையையும் தேடித் தந்தது. அவன் உம்மாச்சுவை மறுமணம் செய்து கொண்டதை யாரும் வித்தியாசமாக நினைக்கவில்லை.

உண்மைக் காதலின் போக்கு சுமுகமாக இருப்பதில்லை என்பது பொதுவழக்காக இருந்தாலும்கூட இந்நாவலில் வரும் அளவுக்கு இடர்ப்பாடுகள் கொந்தளித்துக் குழப்பியதில்லை. தன் தந்தையைக் கொலை செய்தவனின் முகம் அப்துவின் மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டது. அவன் தன் தாயை வெறுக்கத் தொடங்கினான். மாயனை அவன் பார்ப்பதைக்கூட வெறுத்தான் என்று தனியே சொல்லத் தேவையில்லை. இந்த எரிதழலை அவன் பல ஆண்டுகள் தன்னுள் பொதிந்து வைத்திருந்தான். தன் வளர்ப்புத் தந்தை மாயன் மீதான குரோதம் அப்துவிடம் நாளுக்குநாள் வளர்ந்தது. உம்மாச்சுவுக்கு அதற்குப் பிறகு இரண்டு பையன்கள் பிறந்தார்கள். அப்து எப்போதும் மந்தமாக, கலகலப்பில்லாமல் குடும்பத்திலிருந்து அன்னியப்பட்டுத் தனியாகவே இருந்தான். அவனுடைய குடும்பத்தின் காரியஸ்தரான சாப்புண்ணி நாயர், அவருடைய துடுக்கான மகள் சின்னம்மு ஆகியவர்களின் நட்புறவுதான் அவனுக்கு இதம் தருவதாக இருந்தது. அவன் வளர்ந்து வாலிபனானபோது மேலும் மேலும் தனிமையிலாழ்ந்தான். தனிமையும் விரக்தியும் அவனைப் பொறுப்பற்ற விடலைச் சிறுவர்களின் தோழமைக்கு ஆளாக்கின. உம்மாச்சுவுக்கு இது பெருங்கவலையை அளித்தது. அவன் மீது

ஆதிக்கம் கொண்டிருந்த காரியஸ்தர் சாப்புண்ணி நாயரின் உதவியை அவள் நாடினாள். அவருடைய அறிவுரை பலனளித்தது. ஆனாலும் அப்து தனக்குத் தானே முக்காடிட்டுக் கொண்டு முடங்கிப் போனான். அவனுடைய உள்மனத்தை அரித்துக் கொண்டிருப்பது என்னவென்பதைக் கொஞ்சங்கூடத் தெரிந்து கொள்ளாத உம்மாச்சு அவனுடைய கவலைகளைக் களைந்தெறிய முயன்றாள். அவனை சகஜமாகப் பழகும்படியும், குடும்பத்துத் தலைவனான மாயனிடம் மரியாதை செலுத்தும்படியும் அவள் அவனை வேண்டிக்கொண்டாள். இதைக் கேட்டபோது அவன் தன்வசம் இழந்தவனாய் வெகுண்டெழுந்து, "அந்தப் போக்கிரியின் கைகளைப் பார்! என் அப்பாவின் இரத்தத்தை அந்தக் கைகளில் காண்பாய்!" என்று குமுறிப் பேசினான்.

மனதுக்குள் கனலை வளர்த்துக்கொண்டு குமைந்து கொண்டிருக்கிறான் மகன் என்று தெரிந்துகொண்டதும் உம்மாச்சுவினால் அதைத் தாங்க முடியவில்லை. அவளுடைய மனம் நொறுங்கிச் சிதைந்தது. படுத்த படுக்கையானாள். ஆனால் உயிர் என்ற ஒன்று இருக்கும் வரை நம்பிக்கை துளிர் விடுமல்லவா? சிக்கலிலிருந்து விடுபட உம்மாச்சுவுக்கு ஒரு வழி தோன்றியது. அப்துவுக்குப் பிடித்தமான ஒரு பெண்ணை மணம் முடித்து வைத்துவிட்டால் எல்லாப் பிரச்னைகளுமே தீர்ந்துவிடுமென்று அவள் நம்பினாள். ஆனால் அதை நிறைவேற்ற எடுத்துக் கொண்ட வழிமுறை மிகப் பெரிய பிசகாகிவிட்டது. இந்தத் திருமணப் பேச்சின் மூலம் அப்துவுக்கும் மாயனுக்கும் இடையேயான உறவு சுமுகமாகவிட வேண்டுமென்று அவள் எதிர்பார்த்தாள். எனவே அப்துவிடம் கல்யாணப் பேச்சுப் பேசும் பொறுப்பை மாயனிடம் ஒப்படைத்தாள். இந்தச் சிக்கலைத் தவிர்த்திருக்கலாம்தான். ஆனால் மிதமிஞ்சிய உற்சாகத்தினால் அவர்கள் மதிமயங்கிவிட்டதால் அந்தச் செயலே முட்டாள்தனமாகிவிட்டது. மாயன் பேசத் தொடங்கியவுடனேயே அப்து எடுத்தெறிந்து பேசினான். "நான் உன்னை என் பிள்ளையாகப் பாசத்துடன் வளர்த்தேனே!" என்று மாயன் சொல்லவே, "உன்னை யார் வளர்க்கச் சொன்னது? என்னை அப்போதே தீர்த்துக் கட்டியிருக்க வேண்டியதுதானே? உன் குறி தவறியிருக்காது. அதுதான், என் தந்தையைக் கொன்றதிலிருந்தே உன் திறமை விளங்கிவிட்டதே!" என்று வெடித்தான்.

அந்தக் கணமே எல்லா நம்பிக்கைகளும் நொறுங்கித் தகர்ந்தன. தன் பாசத்துக்குரிய குடும்பத்தாரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு மாயன் காட்டிலுள்ள வீட்டுக்கே திரும்பிச் சென்றான்.

அங்குச் சில நாட்களே கழித்தான். இதற்கிடையே அவனுடைய இளைய மகன் அவனைப் பார்க்க வந்தான். பிள்ளைகள் மீதும், அவர்களைப் பெற்றெடுத்த தாயின் மீதும் கொண்டிருந்த பாசத்தால் கூட அவனது நெஞ்சக்கனலைத் தணிக்க முடியவில்லை. தனது நம்பிக்கைக்குப் பாத்திரமான ஊழியனான ஹஸ்ஸனுக்குத் தன் மலைவீட்டைக் கைமாற்றிப் பரிசாகக் கொடுத்துவிட்டு மாயன் காட்டுக்குள் மரத்தில் தூக்கிட்டுக்கொண்டான்.

கதை அத்துடன் முடிந்துவிடவில்லை. தங்கள் தந்தை மீது அப்துவுக்கிருந்த குரோதத்தை மாயனின் பிள்ளைகள் புரிந்து கொண்டார்கள். இது புதிய விளைவை ஏற்படுத்தி, பழி வாங்கும் உணர்ச்சியை வளர்க்கும் என்பதைத் தன் புத்திக்கூர்மையினால் உம்மாச்சு பிரித்து வைத்தாள். குடும்பச் சொத்துக்களை பாகப்பிரிவினை செய்து, தான் அப்துவுடன் தங்கினாள்.

தேர்தல் வந்தது. மாயனின் மகன் முஸ்லீம் லீக் வேட்பாளனாக நின்றான். அப்து இந்திய தேசிய காங்கிரஸ் வேட்பாளனாகப் போட்டியிட்டான். அப்போது சின்னம்மு உள்ளூர்ப் பள்ளியில் ஆசிரியையாகப் பணியாற்றினாள். காங்கிரஸ் கொள்கைகள் அவனுடைய மனதில் வேர்விடக் காரணமாக இருந்தவள் அவள் தான். அவனில் ஆத்மபலம் பெருக அவளே ஊற்றுக்கண்ணாக இருந்து வந்தாள். அவர்கள் அடிக்கடி தனிமையில் சந்தித்துக் கொண்டார்கள். தன் உடலையும் உள்ளத்தையும் அவனுக்கு அர்ப்பணிக்க அவள் தயங்கவில்லை; அதற்கான சமூக அங்கீகாரத்துக்காக அவள் காத்திருக்கவுமில்லை. போதிய மனத் தெம்பு அவளிடம் இருந்தது. அப்துவிடம் காணப்பட்ட மனச் சுளுக்கைச் சரிப்படுத்தும் ஆவலில் அவள் எதையும் செய்யும் தைரியம் பெற்றாள். தன்னைத் தானே அவனிடம் முழுமையாக அர்ப்பணித்துக்கொண்டால் அந்த உறுதிப்பாடு மூலம் அவன் மனத்தென்பு பெற்றுவிடுவான் என்பதை அவள் அவனுக்குச் சார்பாக வாக்களித்தாள். அதன் அடுத்த செயலாக அவள் நேராக அப்துவின் வீட்டை அடைந்தாள் - தாற்காலிகமாக அல்ல, நிரந்தரமாக அந்த வீட்டிலேயே குடும்பம் நடத்துவதற்காக.

சாப்புண்ணி நாயர் குடும்பமும் உம்மாச்சு குடும்பமும் தொடக்கம் முதலே நட்புறவு கொண்டிருந்தன. சொல்லுக் கடங்காத ஒட்டுறவுடன் ஒன்றுக்குள் ஒன்றாக அவை பழகி வந்தன. எனினும் இந்தப் புதிய பிணைப்பு உருவானதை உணர்வு பூர்வமான தோழமை உறவு இருந்தும் கூட அவற்றால்

ஜீரணித்துக்கொள்ள முடியவில்லை. ஆனால் ஒரு மாயம் நிகழ்ந்தது. அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் உள்ளதை உள்ளவாறே ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவத்தைப் பெற்றார்கள். வாழக்கை என்பது ஒளி என்றும், சாவு என்பது இருட்டு என்றும் அவர்கள் உணர்ந்து கொண்டதே அதற்குக் காரணம் ஆகும். சாவதைவிட வாழ்ந்து காட்டுவதே பெருமைக்குரியது என்ற கருத்தை நாவலாசிரியர் வெளிப்படுத்துகிறார்.

இறுதிப் பகுதியைத் தவிர, இக்கதையின் ஒரு போக்கு ஷேக்ஸ்பியரின் அமர கதையான ஹாம்லெட்டை ஒத்திருப்பது புலனாகும். இறந்தவர் ஆவி மீண்டும் பூமிக்கு வருவது அவல உணர்வைத் தூண்டிவிடுவதற்கேயாகும். பீரானின் ஆவி அப்துவின் மனதுக்குள் வாழ்ந்திருந்து பழிவாங்கும் உணர்ச்சியைத் தூண்டிவிடுகிறது. ஆனால் காதலெனும் தெய்வீக சக்திகொண்டு சின்னம்மு அவனை வாழ்வுநோக்கி ஈர்க்கிறாள். மடிந்து அழிவதைவிட வாழ்ந்து நிலைப்பதற்கு அவனுக்கு அதிகப் பிடிப்பு ஏற்படுகிறது. இந்திய மரபு மீறப்படாத வகையில், சாவை வெற்றி கண்டு வாழ்க்கை உன்னதம் பெறுவதை விளக்குவதால் இந்த நாவல் பொலிவும் பெருமையும் பெறுகிறது.

இந்தக் கதையின் முடிவைப் பற்றி இரண்டு குற்றச்சாட்டுகள் கூறப்படுகின்றன. கலைப்படைப்பின் சீர்மையைவிட ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமை குறித்த தன் கொள்கையை வெளிப்படுத்தும் ஆர்வத்தை ஆசிரியர் முதன்மைப்படுத்தியிருக்கிறார் என்பது முதல் குற்றச் சாட்டு. காதலுக்குக் கண்ணில்லை என்று என்னதான் வாதிட்டாலும், சின்னம்மு போன்ற கௌரவமான ஒரு கதாபாத்திரம் முறையான திருமண அங்கீகாரம் பெறாமலே காதலனுடன் படுக்கையறையில் பங்கேற்பது என்பது இழிவானதும் தேவையற்றதும் ஆகும் என்பது இரண்டாவது குற்றச்சாட்டு. கதை வளர்ந்த விதம் முறைகேடானதும் நடைமுறைக்கு இயலாததுமாக இருந்திருந்தால் இத்தகைய குற்றச்சாட்டுகளுக்குப் பொருள் உண்டு. நடைமுறை வரம்பு என்பதுதான் ரசனையின் அடிப்படை. நடைமுறை வரம்பை ஆசிரியர் எந்த இடத்திலும் மீறவில்லை. அளவில்லாத தன்னம்பிக்கை, தன்முனைப்பு, அர்த்தமில்லாத பழக்கவழக்கங் களை எதிர்த்து நின்று மீறும் போக்கு ஆகியன இணைந்த ஒரு பெண்ணாகத்தான் சின்னம்மு தொடக்கத்திலிருந்தே சித்திரிக்கப்பட்டிருக்கிறாள். அதே சமயத்தில் அவளிடம் மென்மை

யான இதயம் இருந்தது. உணர்ச்சிகளை பகிரங்கப்படுத்துவதில் அவள் நம்பிக்கை கொள்ளவில்லை; ஆனால் அவை ஆழமாக வேரூன்றியிருந்தன. அவளுடைய காதல் பொருள் பொதிந்ததாயிருந்தது. தன்னுடைய பொறுப்புக்களையெல்லாம் ஏற்கவல்ல திட மனம் சின்னம்முவுக்கு உண்டு என்று அப்து தெளிவாகப் புரிந்துகொண்டான். உள்ளுக்குள் கனன்று கொண்டிருந்த அவனுடைய ஆண்மையை உருகுநிலைத் தங்கப்பாளமாக ஏற்று, இரக்கத்தை அதன் மீது தூவி, உணர்வுபூர்வமான அனுபவமாக அதைப் பதப்படுத்தினாள். அவளுடைய பரிவும் பாசமும் கிடைக்காமல் இருந்திருக்குமானால் அவன் உணர்விழந்து, சீர்கெட்டு அவலநிலை அடைந்திருப்பான். பெண்மைக்குரிய நிரந்தர விவேகம் அவளைத் தற்காலச் சமூக வரம்புகளை மீறிச் செயல்பட வைத்தது. இந்திய தேசிய காங்கிரஸ் ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமையை வலியுறுத்தியது; மகாத்மா காந்தி போன்ற தலைவர்கள் இந்திய இளைஞர்களிடேயே இந்தக் கொள்கை பரவும்படித் தூண்டினார்கள். மனித இனம் முழுவதும் தோழமையுணர்வினால் ஒன்றாகிவிடும் அச்சமற்ற புதியதோர் உலகம் உருவாக இருப்பதைப் பற்றிக் கொஞ்சம்கூட அறிந்திராத முதியோர்களைப் புறக்கணிக்க இளைஞர்களுக்கு அத்தகைய தூண்டுதல் தைரியத்தைக் கொடுத்தது. புதிதாக உருவாயிருந்த அரசியல் சூழ்நிலையும், கொள்கைகளில் ஈடுபடுத்திக்கொள்ளும் முனைப்பும் இந்த நாவலில் தெளிவாகவே சித்தரிக்கப் பெற்றிருக்கின்றன. எனவே நாவலின் போக்கு கலைப்படைப்புக்குப் பொருந்தவில்லை என்ற குற்றச்சாட்டு ஆதாரமற்றுவிடுகிறது.

திருமணம் குறித்த சமூக அங்கீகாரத்தின் வரம்பு மீறுதல் என்பதைக் குறிப்பிடும் போது, இக்கருத்து பழங்காலத்திலிருந்தே கையாளப்பட்டு வந்திருக்கிறது என்பதை மறந்துவிடக் கூடாது. உலக இலக்கியங்களில் குறிப்பிடத் தகுந்ததான சாகுந்தலம் ஒன்றே இதற்கான மறுப்புத் தெரிவிக்கப் போதுமானது. சின்னம்முவுக்குச் சார்பான அதிகப்படியான நியாயம் வேறொன்றும் உண்டு. துஷ்யந்தனைவிட அதி நம்பிக்கைக்குரிய காதலன் அப்து என்பதை சின்னம்மு புரிந்துகொண்டிருந்தாள்; அப்துவும் நடைமுறையில் அதை நிருபித்துக் காட்டினான். குழந்தைப் பருவத்திலிருந்தே அவர்கள் ஒருவரையொருவர் அறிந்திருந்தார்கள். திருமணச் சடங்கின் புனிதம் என்பது நம்பிக்கை என்ற ஹோமகுண்டத்தில் சுடர்விடுவதாகும்.

மற்றொரு நோக்கில் இந்தப் படைப்பு ஒரு சிறந்த அவல இலக்கியம். அவல நாடகமான ஹாம்லெட்டில் ஹாம்லெட்தான் மையப் பாத்திரம். ஹாம்லெட்டுக்கு நிகரான அப்து இந்த நாவலில் அவ்வாறு மையப் பாத்திரமல்ல. உம்மாச்சுதான் மையப்பாத்திரம். அவளுடைய கதை சோகமானது. அவள் ஒரு புறம் காதல் உணர்ச்சி மிகுந்தவளாய்க் கற்பனாரீதியாகக் கனவுகள் காண்பவள்; மறுபுறம் நடைமுறைக் கேற்ப எதையும் எடையிட்டுப் பார்க்கும் காரியவாதி. இந்த முரண்பாட்டுக் குழப்பம்தான் அவளைச் சோகத்திற்குள்ளாக்குகிறது. மாயனைக் காதலித்த அளவு தீவிரத்தோடும் உணர்வு எக்களிப்போடும் தன்னால் பீரானைப் போற்றி மதிக்க முடியாது என்பதை அவள் அறிந்திருந்தாள். ஆனாலும் பீரானைக் காட்டிலும் பொருத்த மான வேறொரு மருமகனைத் தேர்ந்தெடுக்க முடியாது என்று அவளுடைய பெற்றோர்கள் தீர்மானித்தபோது, உள்ளுக்குள் ஏதோ ஒன்று உறுத்தியபோதும் அவள் பவ்யமாகப் பணிவுடன் தன் சம்மதத்தைத் தெரிவித்தாள். மணமொத்த தாம்பத்தியத்தைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்க வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் அவளுடைய இதயத்தின் அடி ஆழத்திலிருந்து ஒரு வேதனை பீறிட்டெழுந்தது. மிருக பலத்தையும் முரட்டுத்தன்மையையும் புலப்படுத்திய மாயனின் ஆண்மை மிக்க உடலமைப்பு அவளுடைய கற்பனைகளையெல்லாம் வசப்படுத்தி வைத்திருந்தது. நெருக்கமான நேரடித் தொடர்பு அவர்களிடையே இல்லை; அதனாலேயே தான் இழந்து நிற்பது எது என்பதை அவளால் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் உயிரோட்ட மான ஏதோ ஒன்றை இழந்து நிற்பதான எண்ணத்தால் அவள் புழுங்கித் தவித்தாள். தோல்வியை எளிதில் ஒப்புக்கொண்டு விதியை நொந்துகொள்ளும் இயல்பு அவளுக்குக் கிடையாது. ஆனால் திமிறி ஓட வழியில்லை.

தனக்குக் கொடுக்கப்பட்ட நாடகப் பாத்திரத்தை மிகை நடிப்பால் அவள் கெடுத்துவிட்டாளோ என்று தோன்றும்; ஆனால் உளவியல் சார்பான சமனத்திற்கு அது தேவையே என்றுதான் கொள்ள வேண்டும். பணமும் சொத்தும்தான் பீரானுக்குச் சார்பாக நிற்கும் கூறுகள். மகாராணியைப் போல அவள் சொத்தை ஆண்டுகொண்டு, கணவனைக் கைக்குள் அடக்கி அதிகாரம் செலுத்த முடியும். கணவனை அலைக்கழித்து இம்சைப்படுத்துவதிலும், திருமணத்தைப் பேசி முடித்து வைத்த

கிழவர் மீது ஆங்காரப்பட்டுக் கொடுமைப்படுத்துவதிலும் அவள் ஈடுபட்டு, பிறர் துன்பத்தில் ஆனந்தம் காணும் மன வக்கரிப்பு கொண்டாள். மனக்கோட்டை இடிந்ததைச் சமனப்படுத்திச் சமாதானம் அடைந்து அதட்டலும் ஆணையுமாக அவள் தன் வாழ்நாளைக் கழித்திருக்கலாம்தான். ஆனால் அப்படி நடக்கவில்லை. காதல் கனவுகளை அவளில் கிளறிவிட்டுக் கொண்டிருந்த மாயனின் வருகை அவளது மன நாகத்தைச் சீண்டிவிட்டது. பரம்பரைப் பழங்கதைகளில் வருவது போன்று அவள் கொலைச்செயலுக்கு உடந்தையாக இருக்கவில்லைதான்; ஆனால் கொலை நடந்து முடிந்தபோது கொலையாளியைப் பாதுகாக்கத் தன்னாலான எல்லாவற்றையும் செய்தாள். ஒரு பாவமும் அறியாத, ஐந்து குழந்தைகளுக்குத் தகப்பனான சோமியைச் சிறைக்கனுப்பியதற்குத் தான்தான் பொறுப்பு என்பதை அவள் அறிந்திருந்தாள். இந்தச் சிக்கலான திருப்பம் அவளுடைய மனதை வெருவாக பாதித்திருக்க வேண்டும். ஆனால் அவள் அசைந்து கொடுக்கவில்லை.

உம்மாச்சு உணர்ச்சி மிக்கவள்; லௌகிகமானவள். நிலம் எப்படி உரிய பருவம் வரும்போது செழித்துக் குலுங்குகிறதோ, அதே போல வாய்ப்புக் கிடைக்கும்போது மலர்ச்சியான வாழ்க்கை வாழ விரும்புபவள். மூன்றாவது நபர் ஒருவருக்கு தன்னைப் பற்றிய இரகசியம் தெரிந்திருக்கிறது என்று அறிந்துகொள்ளும் வரை குற்ற உணர்வோ பச்சாத்தாபமோ அவளிடம் தென்படவில்லை. அப்துவின் வார்த்தைச் சாடல் வெடிமருந்து போல் வெடித்து தம்பதிகளின் மன அமைதியை வேரோடு கில்லி எறிந்தது. உம்மாச்சுவின் பிற்கால வாழ்க்கை மரணத்தைவிட மோசமாக இருந்தது. கொடுமை கலந்த அவலம் நம்மில் இரக்கத்தையும் நடுக்கத்தையும் ஒருசேர உருவாக்குகிறது. உணர்ச்சி வெளிப்பாட்டினால் மனதைத் தூய்மைப்படுத்திக்கொள்ள சோகக் கதைகள் பயன்படுகின்றன என்ற அரிஸ்டாட்டில் கொள்கையைச் சார்ந்து இந்த அவலத்தை விளக்கலாம்.

உம்மாச்சு மிகச் சிறந்த நாவல். உள்ளத்தில் உறங்கிக் கிடந்தாலும் ஆசைகளும் அச்சங்களும் உணர்ச்சிகளும் எவ்வளவு ஆற்றல் பெற்றிருக்கின்றனவென்று விவரிப்பதுதான் இந்த நாவலின் வெற்றியின் இரகசியம். பல இலக்கியக் கொள்கைகள் இதையே சுட்டுகின்றன. முப்பது ஆண்டுகளுக்கு முன்பு "மாத்ருபூமி" வார இதழில் உம்மாச்சு தொடர்கதையாக

வெளிவந்தபோது, வாசகர்கள் எப்படி ஒவ்வொரு வாரமும் இதற்காகக் காத்திருந்தார்கள் என்பதை நான் அறிவேன். மலையாள நாவல்களைத் தொடர்கதைகளாக வெளியிடலாம் என்ற முறையை முதன்முதலாகப் பிரபலப்படுத்தியது இந்த நாவல்தான்.

கதையின் கருவைத் தேடிக் கண்டுபிடிப்பதிலோ, அதற்கு உருவம் கொடுப்பதிலோ மட்டும் ஓர் இலக்கியப் படைப்புக்கு உயர்வு கிடைத்துவிடாது. அதைச் சொல்லும் முறையால்தான் அதற்கான உயர்வு கிடைக்கிறது. கதை சொல்லும் முறையின் கட்டமைப்பு நேர்த்தியை மொழிபெயர்ப்பின் மூலமாக வாசகர் எளிதில் தெரிந்துகொள்ளலாம். வட்டார வழக்குகள், வட்டார வாழ்க்கை முறையை வெளிப்படுத்தும் கொச்சைப் பேச்சு ஆகியவற்றை மூல நூல்தான் சரிவரத் தர முடியும். மலையாளத்திலுள்ள மாப்பிள்ளை இனத்து மக்களின் வட்டார மொழியை எழுத்தாக்கும் லாகவம், சில பாத்திரப் படைப்புக் களின் சித்திரிப்பு ஆகியவற்றை அப்படியே மொழிபெயர்ப்பில் கொண்டு வருவது முடியாதுதான். மொழிபெயர்ப்பு வாசகர் களுக்கு இத்தகைய இழப்பு எப்போதும் உண்டு. ஆனாலும் வடித்துக் கொடுக்கப்பட்டதில் இலக்கியப் படைப்பின் மேதாவிலாசத்தின் சாரம் ஏராளமாக இருக்கிறது.

டாக்டர் எம். லீலாவதி

# 1. குதாமின் கதை

எங்கள் ஊரில் ஒரு பீரான் இருந்தான். சிறுவன்தான், பதினைந்து வயதுதான் இருக்கும். பலசாலி என்று சொல்ல முடியாது. ஆனால் அழகன். நீண்ட மூக்கும் மலர்ந்த கண்களும் கறுத்த புருவங்களும் இடது புருவத்தின் கடைக்கோடியில் ஒரு கறுத்த பாலுண்ணியும் செக்கச் சிவந்த உடம்பும் - எல்லாமாகச் சேர்ந்து அவனை அழகனாக்கியிருந்தன. அப்பா சேக்குட்டி முதலாளி பெரும் பணக்காரராக இருந்ததனால் பகட்டான உடுப்புக்கள் அணிய அவனுக்கு முடிந்தது. பீரான் எப்போதும் அலங்காரமான குப்பாயமும் தோல் செருப்பும் அணிந்திருப்பான்.

அவனைக் காணும்போது ஆண்களும் பெண்களும் சொல்வதுண்டு: "அவன் ஒரு அழகான பொம்பிளைதான்." இதை அவமானகரமான அபிப்பிராயமாக அவன் கருதியதில்லை. எப்படிக் கருதுவான்! தடிமாடு, உடும்பு, பிசாசு என்பனவே அவன் திட்டுவதற்கு சாதாரணமாகப் பயன்படுத்தும் சொற்கள். இப்படித் திட்டிவிட்டதனால் ஏற்பட்ட ஒருவகை மனத்திருப்தியோடு பீரான் வாழ்ந்து வந்தான். ஊராருக்குத் தன்னைப் பற்றி நல்ல அபிப்பிராயம்தான் என்ற நினைப்பில் உண்டான அகந்தையோ என்னவோ!

"நான் சேக்குட்டி மொதலாளி மகனாக்கும்' என்று அவன் அடிக்கடி கற்பனையில் மூழ்கிப் போவதுண்டு. அது உண்மைதான். ஆடம்பரமான ஆடைகளில்லாமல் பீரானை யாரும் எப்போதும் பார்த்ததில்லை.

ஆனால் அவனுடைய தோழனான மாயன் மட்டும் ஒரு நாள் அவன் சட்டை இல்லாமல் வெறுமையாக இருந்ததைப் பார்த்திருக்கிறான். பள்ளிவாசல் குளக்கரையில் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. உம்மாச்சு செய்த வேலை. அவள் பீரான் மீது தண்ணீரை வாரி இறைத்துவிட்டாள். நனைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் இறைக்கவில்லை; நனைத்து விடுவதாக பயமுறுத்தி

பாவனைதான் செய்தாள். பாவனையில் முன்பாகம் முழுக்க நனைந்துவிட்டது.

பீரானுக்கு முதலில் அழுகைதான் வந்தது; பிறகு கோபமும் சேர்ந்தது:

"இந்த ஈனப் பொறப்பை நான் வெட்டிப்பிடுவேன்!"

அப்போது உம்மாச்சுவுக்கு சிரிப்புத்தான் வந்தது. அடக்க முடியாத சிரிப்பு. பீரானுக்கு கோபம் முட்டிக்கொண்டு வந்தது. கடைசியில் மாயன் மத்தியஸ்தத்திற்கு வந்து உம்மாச்சுவிடம் சொன்னான்:

"நீ போடீ அந்தப்பக்கம். அவன் ஒன்னெ வெட்டிப்பிடுவான்!"

தன்னை அவன் அவ்வாறு பிடித்துக் கொன்றுவிடுவதில் அவளுக்கு விருப்பமில்லை என்பதனால் அவள் பள்ளிவாசல் திண்ணைக்குப் போய்விட்டாள்.

பீரானுடைய சட்டையிலிருந்து தண்ணீர் கண்ணீரைப்போல் சொட்டுச் சொட்டாக விழுந்ததைக் கண்டபோது, "சுந்தரி முங்கிக் குளிச்சிருக்கிறா!" என்று உரக்கக் கூவத்தான் மாயனுக்குத் தோன்றிற்று. ஆனாலும் அந்த சமயத்தில் அவனுக்கு அதற்குத் தைரியமில்லை.

"நீ போயி பிழிஞ்சி உடுத்திக்கோ" என்று பீரானுக்கு உபதேசம் செய்தான். சட்டையில்லாமல் பீரானை அன்றைக்குத்தான் மாயன் பார்த்தது.

"சட்டையைக் கழட்டினப்போ தோலுரிச்ச பழம் மாதிரி இருந்திச்சி. காக்கா கொத்தக்கூட ஒடம்பிலே சதையில்லே." மாயன் அபிப்பிராயம் தெரிவித்தான்.

"அதெல்லாம் இல்லே." பீரான் மறுத்தான்.

"நீ என் ஒடம்பை ஒரு தரம் பாரு." தன் மாரைத்தட்டியபடி மாயன் சொன்னான். "பயில்வானாக்கும், இருந்தா இப்பிடி இருக்கணும்."

அதை ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லாததால் பீரானின் சிந்தனை தடம்மாறியது. "நான் அந்த உம்மாச்சுவைப் பிடிச்சிக் கொல்லணும்" என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந் தான். மாயன் அவனை எதிர்த்துப் பேசவில்லை.

பீரான், மாயன் உம்மாச்சு ஆகிய மூவரும் நெருங்கிய நண்பர்கள். அவர்கள் எல்லோருமாகச் சேர்ந்துதான் பள்ளி வாசலுக்குப் போவார்கள். சேர்ந்துதான் திரும்புவார்கள்.

"பிள்ளைகளா, திரும்பறப்போ உம்மாச்சுவையும் கூட்டியாந் திருங்க" என்று உம்மாச்சுவின் அம்மா ஆண்பிள்ளைகளைக் கேட்டுக் கொள்வாள்.

உம்மாச்சுவிடமும் சொல்லி வைப்பாள்: "அடியே, சின்ன மொதலாளியெ தொந்திரவு பண்ணாதே!"

"சின்ன மொதலாளி' என்று அவள் குறிப்பிட்டது பீரானைத் தான். இதைக் கேட்கும் போது தன் உயரம் முழம் அதிகரித்து விட்டதாக அவனுக்குத் தோன்றும்.

பீரானை மட்டும் முதலாளி என்று குறிப்பிட்டதில் மாயனுக்கு விருப்பமில்லைதான். ஆனாலும் தன் அப்பாவை முதலாளியென்று சொல்ல ஒரு நியாயமும் இல்லாததால் அவன் எதிர்ப்பை அடக்கிக்கொண்டான். இந்த முதலாளி உணர்வெல்லாம் வேகமாகப் பத்தடி நடக்கிற வரைக்கும்தான். அப்போது பின்தங்கிப் போகும் உம்மாச்சு கத்துவாள்.

"வெள்ளிக் கோலே, கொஞ்சம் மெதுவா நடங்க."

"அப்படீன்னா ஒன் கால்லே அம்மி கட்டியிருக்கா?" என்று கேட்டபடி பீரான் உடனே நிற்பான்.

வெள்ளிக்கோல் என்று தன்னைக் கூப்பிடுவது பீரானுக்குப் பிடிக்கும். அவனுடைய அப்பா சேக்குட்டி முதலாளிக்கும் பிடிக்கும். அதன் பின்னணியில் பெருமை கொள்ளத் தக்க ஒரு கதை உண்டு. ஆனால் உண்மையில் நடைமுறையில் உள்ள பெயர் குதாம் சேக்குட்டி என்பதுதான்; அதாவது, கிட்டங்கிக்கார சேக்குட்டி என்பதுதான். அப்படி யாரும் கூப்பிடுவதில்லை. அப்படிக் கூப்பிடுவது சேக்குட்டிக்கு மட்டுமல்ல, அவருடைய அப்பா-தாத்தாமார்க்குக்கூடப் பிடிக்காது.

குதாம் என்ற குடும்பப் பெயர் வந்தது எப்படியென்பதைக் கண்டுபிடிக்க வேண்டுமானால் சரித்திர பூர்வமாக நிறையத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்படித் தெரிந்து வைத்திருந்த சில கிழவர்கள் அந்தக் கிராமத்திலிருந்தார்கள்; கிழவிகளும் இருந்தார்கள்.

அவர்களில் முதன்மையானவர் அகம்மதுண்ணி என்ற கிழவர். அவர் சரித்திர ஆசிரியராகவே பிறந்தார் என்றுதான் தோன்றும். ஊர்களைப் பற்றியும் குடும்பங்களைப் பற்றியும் பல கதைகள் அவருக்குத் தெரியும். எப்படித் தெரிந்து வைத்திருக்கிறார் என்று யாருக்கும் தெரியாது. சரித்திரப் பாடத்தின் ஓர் இரத்த சாட்சி கிழவன் அகம்மதுண்ணி. இந்தத் தொழில்முறையில் பட்டாடை மட்டுமல்ல, வெட்டுக்குத்தும் வாங்கியிருக்கிறார். சில சரித்திர உண்மைகளை சில சமயங்களில் வெளிப்படையாகப் பேசினால் கொக்கிபோட்டு சிக்க வைத்தது போலாகிவிடுமல்லவா? தைரியசாலியான அகம்மதுண்ணி எதையும் ஒளித்து மறைப்ப தில்லை. அதனால் சிலசமயத்தில் சில்லறைக் காயங்களை ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

அவருக்கு யாரையும், எதையும் பொருட்படுத்த வேண்டிய அவசியமில்லை. காலணா சொத்து கிடையாது. குடும்பம் என்று சொல்ல ஒரு மகன்தான் உண்டு - ஹஸ்ஸன்.

மூன்று குழந்தைகளை அகம்மதுண்ணியின் கைகளில் ஒப்படைத்துவிட்டு அவருடைய மனைவி இறந்தாள். அதில் இரண்டு பேர் அடுத்தடுத்து அம்மா போன வழியே போய்ச் சேர்ந்தார்கள். ஹஸ்ஸன் மட்டும் எப்படியோ கொத்திப் பொறுக்கி ஒரு வகையாய் வளர்ந்தான்.

அவன் ஒரு உதவாக்கரை என்பதுதான் மகனைப் பற்றி அகம்மதுண்ணிக்கிருந்த அபிப்பிராயம். ஆனாலும் சரித்திர உண்மைகளைச் சொல்வதன் மூலம் கிடைக்கப்பெறும் சில்லறைத் தொகைகளில் ஒரு சிறிய பகுதியை அவனுக்கும் கொடுப்பதுண்டு: "சல்லிப்பயலும் பொழச்சிப் போகட்டும்."

ஒரு சரித்திர ஆசிரியரைப் பராமரிக்கும் பொறுப்பு சமுதாயத் திற்கு உண்டு என்ற கருத்துக்கொண்டிருந்தார் அகம்மதுண்ணி. அவர் பெரியவர்களிடமிருந்தும், சிறியவர்களிடமிருந்தும், வித்தி யாசம் பாராட்டாமல் உதவி எதிர்பார்ப்பார். பெரியவர்கள் உதவமறுத்தால் ஒரு எதிர் நடவடிக்கை போல அவர்களுடைய பழைய சரித்திர ரகசியங்கள் முழுவதையும் அவிழ்த்துக் கொட்டுவார். அப்படி சேக்குட்டி முதலாளியின் சரித்திரப் பழைமையை ஒரு தடவை உரித்துக்காட்டிய போதுதான், குதாமின் கதை ஊர் மக்களுக்குத் தெரிய வந்தது. அகம்மதுண்ணி சொன்னது இதுதான்:

"டச்சுக்காரங்க என்கிற வெள்ளைக்காரங்க முன்னாலே இங்கே ரொம்ப ஆதிக்கமா இருந்தாங்க. அந்த காலத்திலே பரங்கிகளுக்கும் சீமக்காரங்களுக்கும் அவங்களைக் கண்டா ரொம்ப பயம். அவங்க எதுக்கும் தயங்காதவங்க.

"சண்டை சச்சரவிலே தலையைக்கூடச் சீவிடுவாங்க. ஜெயிச்சா தலைமேலே ஏறுவாங்க; தோத்துட்டா காலைப் பிடிப்பாங்க... அப்படி இருந்தது அவங்க வெவகாரம். அவங்க துப்பாக்கியும், கப்பலும், பீரங்கியும் கொண்டு வந்தாங்க! நம்ம கையிலிருந்த வாளும் கத்தியும் வச்சி மீன் அறுக்கத்தான் முடியும். என்ன? கடல் பக்கம் போனா அவங்க பட்டாளம்; எங்கே பார்த்தாலும் அவங்க அமர்க்களம். ஏலமும் மொளகும் கப்பல் கப்பலா கடத்திப் போனாங்க. அவங்களோட பெரிய ஆபீசு இருந்த எடம் கொடுங்கல்லூர்; சின்ன ஆபீசு பாலக்காடு. அத்தோடே ஆளைப் பிடிக்கவும் ஆரம்பிச்சாங்க."

"ஆளைப் பிடிக்கவா?" குறுக்கே யாரோ கேட்டார்கள்.

"அந்த தமாசத்தைத்தானே சொல்லணும். அப்போ நாயருங்களோடே பொண்ணுங்களைக் கடத்தியே கொண்டு போயிடுவாங்க."

"கடத்துறதா?"

"ஆமாங்கறேன். ஒவ்வொருத்தர் மேலேயும் ஏதாச்சும் குத்தம் சொல்வாங்க. வீட்டிலே இருக்கிற யாராவது ஒருத்தர் எதிர்த்துப் பேசினாலும் அந்த வீட்டில் இருக்கிற அத்தனை பேரும் குத்தவாளிங்கதான்; கடத்திக்கிட்டுப் போயிடுவாங்க. ஒரு புலையன் ஒரு சின்னக் கல்லெடுத்து ஒரு பொண்ணு மேலே வீசினாக்கூட அந்தப் பொண்ணு உயர்ந்த ஜாதியில்லாமப் போயிடுவா."

இப்போது இரகசியம் ஒன்றை வெளிப்படுத்தப் போவதுபோல் குரலைத் தாழ்த்தி அகம்மதுண்ணி சொன்னார்: "அதிலே ஒண்ணுதான் நம்ம சேக்குட்டியோடே முன்னோருங்க."

"அப்படீன்னா? வேறே ஓர் ஆள் கேட்டான்.

அகம்மதுண்ணி தொடர்ந்தார்: "ஒரு ஒதுக்கிவச்ச நாயரச்சியை டச்சுக்காரன் கொண்டு போனான். எங்கேயாக்கும்? அவங்க கிட்டங்கிக்கு. கடத்திக் கொண்டு போகிற அடிமைகளையெல்லாம் ஒரே எடத்தில் சேர்த்து வைக்க ஒரு கிட்டங்கி வச்சிருந்தாங்க; அங்கேதான் கொண்டு போனாங்க. விவரம் புரியாத பொண்ணு

கால்ச்சராய் போட்டவங்களைக் கண்டதும் எலிக்குஞ்சைப் போல நடுங்கிட்டா. அவங்க கை காட்டின எடத்துக்கு நடந்திட்டா. பொண்ணுன்னாலும் வகையான பொண்ணு. வயநாடன் மஞ்சளை ஒடிச்ச நெறம்; இளமானோடே கண்ணு."

"அகம்மதுண்ணி பாத்ததுண்டா?" குறுக்கே ஒராள் கேட்டான்.

"சீமையைப் பாத்திட்டுதான் சீமை இருக்குன்னு சொல்றதா? சீமையைப் பாத்தவங்க இருக்காங்கல்ல, அதே போலத்தான். எங்க தாத்தா அந்தப் பொண்ணைப் பாத்திருக்காரு."

"அப்புறம்?"

"பொண்ணு திரும்பத் திரும்ப அழுதிருக்கா. அண்ணாந்து பாத்து ஆண்டவனைக் கூப்பிட்டுப் பாத்தா. இதைப் பாத்துக்கிட்டு தொலைவிலே ஒரு போக்கிரி நிண்ணிருந்தான். யாரு? ஒரு அரபிக்காரன்."

"அரபிக்காரனா?"

"என்னத்தைச் சொல்ல கிழவன்தான். ஆனால் வாட்டசாட்டமானவன். கடல்லே வாசம் பண்றவன். திருடுவான்; வழிப்பறி செய்வான். கப்பல்காரங்களுக்குக் கூட அவன் பேரைச் சொன்னாலே கதிகலங்கும். வைரம் பாய்ஞ்ச சந்தனக் கட்டை போல இருந்த அந்த முரட்டுக் கிழவன் மீசையை முறுக்கிக்கிட்டு ஒரு தரம் பாத்தான். கமுகுப் பூக்குலை போல இருந்த நாயரச்சியை பாத்தப்போ கிழவனுக்கு ஒரு துடிப்பு. என்னத்தைச் சொல்ல, அப்புறம் பொண்ணு கிழவனோட 'ஷ்டாப்' ஆயிட்டா."

"எப்படி?"

"திருட்டுத்தனமாத்தான்."

"அய்யோ! அந்தப் பொண்ணுக்கு நரகம்!" -இடையே ஒரு கிழவன் குறுக்கிட்டுச் சொன்னான்.

"அவளோடே சொர்க்கம்- அப்படித்தான் சொல்லணும். அவளுக்கு அவனைப் பிடிச்சிரிச்சி; அவனுக்கும் அவளைப் பிடிச்சிரிச்சி. ஒருத்தரையொருத்தர் பிரிய முடியாதபடி ரெண்டு பேருக்கும் பிடிச்சிப் போச்சி."

"நிசம்மாவா?" - கிழவன்.

"அப்படித்தான். அவ மதம் மாறிட்டா. அந்தப் பொண்ணுக்குப் பொறந்தவன்தான் இந்த சேக்குட்டியோடே பெரிய தாத்தா

வோடே அப்பன்-குதாம் சுலைமான். இந்தக் கதை பூராவும் எங்கம்மாவுக்குத் தெரியும். அதனாலேதான், நாளை கேட்டப் போ இந்தச் சைத்தான் - இந்த குதாம் - தரமாட்டேன்னது... அப்படீன்னா அவனைக் கொல்லணுமில்ல.."

கொல்ல வேண்டாமென்று யாரும் சொல்லவில்லை. எல்லோரும் அவரவர் வழி போய்விட்டார்கள்.

இதுதான் குதாம் சரித்திரம். இந்தச் சரித்திரத்தை, என்ன காரணம் கொண்டோ, வெளியில் சொல்ல சேக்குட்டி முதலாளி விருப்பப்படவில்லை. வெள்ளிக் கோல் என்ற குடும்பப் பெயரை அவராகவே சூட்டிக்கொண்டார்.

சேக்குட்டி முதலாளியின் தாத்தா பெரியதனக்காரராக இருந்த காலத்தில் அவருக்கொரு சந்தேகம் தோன்றிற்று. இரும்பாலும் மரத்தாலும் செய்த நாட்டுத் தராசை எப்படி வெள்ளிக்கோல் என்று சொல்வது? வியாபார ரீதியான இந்த முறைகேட்டைத் திருத்த வேண்டுமென்று அவருக்கு எண்ணம் ஏற்பட்டது. ஒரு வழியும் புலப்படவில்லை. ஒரு பொறிதட்டிற்று. உடனே கொஞ்சம் வெள்ளி வாங்கி ஒரு துலாக்கோல் செய்தார். உண்மையான வெள்ளிக்கோல் தயாராகிவிட்டது.

"வெள்ளிக்கோல்னு சொன்னா வெள்ளியாலே செஞ்ச தராசுன்னுதானே அர்த்தம்!" என்று பத்துப் பேர் கேட்க அந்த வட்டாரத்தில் பேச்சு பரவவும் வழி செய்தார். அந்த வெள்ளிக் கோலை வீட்டு முற்றத்து உத்தரத்தில் கட்டித் தொங்கவிட்டார்.

வியாபார சரித்திரத்தில் ஒரு புரட்சி உண்டாக்கிய இந்த தீரனைப் பற்றி கிராமத்து சரித்திரக்காரர்கள் ரொம்பவும் புகழ்ந்து பேசிக்கொண்டார்கள்.

அப்படியாக வெள்ளிக்கோல் என்ற குடும்பப் பெயர் தலைமுறை தலைமுறையாக வந்து, சேக்குட்டி முதலாளிக்கும் வந்து சேர்ந்தது; இப்போது பீரானுக்கும் அது சொந்தம்.

அதனால் உம்மாச்சுவும் மாயனும் தன்னை 'வெள்ளிக்கோலே' என்று கூப்பிடும்போது பீரானுக்கு ஓர் எக்களிப்பு. அப்போ தெல்லாம் அவன் புருவக் கோடியிலுள்ள கறுத்த பாலுண்ணியை மெதுவாகத் தடவிக்கொண்டே சொல்லிக் கொள்வான்: 'நான் எங்கப்பா மகனாக்கும்!'

இப்படி மனமொப்பி மூவரும் நட்பாக இருந்தாலும், இடையிடையே பள்ளிவாசலிலிருந்து திரும்புகையில் சில சண்டை

சச்சரவுகள் நடக்கும். மாயனும் பீரானும் மோதிக்கொள்வார்கள். உம்மாச்சு விலகி நின்று கொள்வாள். அப்படித்தான் ஒரு நாள் சண்டை ஆரம்பித்து, தெய்வத்தின் சக்தியைப்பற்றி விவாதம் ஆரம்பித்தது. பீரான்தான் தொடங்கி வைத்தான்.

"பெரும்படப்பிலிருக்கிற பள்ளிவாசல், குண்டோட்டியிலிருக்கிற பள்ளிவாசலைவிட ஒசந்தது."- பீரான் சொன்னான்.

"எப்படி?" - உம்மாச்சு கேட்டாள்.

"அதுதான் ஒசந்தது. அப்பிடித்தான். எங்க தாத்தாவோடே வாப்பா அதைக் கட்றதுக்கு பணம் குடுத்திருக்காரு. எங்கப்பா வெறும் பகட்டுக்காரரில்லே!" - பீரான் பெரும்படப்பு மசூதியின் சரித்திர ரீதியான உயர்வைப் பற்றி வர்ணிக்கலானான்.

"அதோடே கும்பம் பாத்திருக்கியா?"

"ஏன்?" - உம்மாச்சு கேட்டாள்.

"அது தங்கக்கட்டியாக்கும். எங்க தாத்தாவோடே வாப்பா கிட்ட நெறைய தங்கம் இருந்திச்சி."

"சும்மா அளக்காதே!" - மாயன் இடையில் புகுந்து சொன்னான்: "குண்டோட்டி பள்ளிவாசல்தான் ஒசந்தது!"

"நீ சொல்லி நான் கேக்கணுமோ?" பீரான் எதிர்த்தான். "பெரும் படைப்பு மசூதி உச்சிக்கு ஏறி நிண்ணு பாத்தா மக்காவும் மதீனாவும் தெரியும்."

"அப்பிடியா?" - உம்மாச்சுவின் நீலக் கண்கள் மலர்ந்தன.

"சரியான டாவு!" மாயன் ஏளனமாகச் சிரித்தான்: "குண்டோட்டி பள்ளிவாசலைப் பத்தி ஒனக்கு என்ன தெரியும், வெள்ளிக்கோலே? அதோடே உச்சிக்கு ஏறினா சொர்க்கத்துக்கே போகலாம். பெறகு இந்த வம்பெல்லாம் வேண்டாம்." மாயன் கை நீட்டிக் காட்டித் தொடர்ந்தான். "அதோடே உச்சியிலேருந்து ஒரு முழ உயரத்திலே எட்டிப் பாத்தாக்கூட சொர்க்கத்திலே தேவதைங்க நடமாடறதைப் பாக்கலாம்."

"நீ பாத்திருக்கியா, மாயா?" உம்மாச்சு கேட்டாள்.

"அம்மாடி! நம்மளாலே அந்த உச்சிக்குப் போக முடியுமா? பெரியவங்கதான் போவாங்க, வருவாங்க."

"ஹோஜராஜாவான தம்பிரானே!..." உம்மாச்சுவின் பார்வையில் பயமும் வியப்பும் கலந்தாடின. ஆத்மீக சக்தியுள்ள

பள்ளிவாசல்காரர்கள் அங்கே ஏறி நின்று சொர்க்கத்தில் நடக்கும் நடவடிக்கைகளைத் தெரிந்துகொண்டு வந்து பூமியில் இருப்பவர்களுக்குச் சொல்வார்கள் என்று மாயன் சொன்னபோது, உம்மாச்சு அயர்ந்துபோனாள்.

நடைமுறை உலகம் பற்றி உம்மாச்சுவுக்கு விவரம் எதுவும் அதிகமாகத் தெரியாதிருந்தாலும் பிசாசு, சைத்தான், கறுப்பு முதலிய கண்ணுக்குத் தென்படாத விஷயங்களைப் பற்றி நிறையத் தெரிந்து வைத்திருந்தாள். உச்சந்தலைக்கு மேலாக கண்ணுக்குத் தெரியாத பல அசுர கணங்கள் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் ஓர் உலகத்தில்தான் தாங்கள் வாழ்ந்துகொண்டிருப்பதாக அவளுடைய அம்மா அவளுக்குச் சொல்லிக் கொடுத்திருந்தாள்.

ஏகாந்தமான அமைதியான இரவு வேளைகளில், நிலவொளியில் மூழ்கிக் கிடக்கும் உலகத்தை ஜன்னலினூடே பார்த்துக் கொண்டிருக்கும்போது, இம்மாதிரியான அருவங்களைப் பற்றிய நினைவுகளில் அவள் ஆழ்ந்து விடுவதுண்டு. நீந்தி விளையாடும் நிழல்கள் தெய்வீக அழகோடு அவளுடைய இதயத்தில் பதிந்துவிடும். பனி படர்ந்து ஒளிரும் புல்வெளிகள் வான முகட்டிலிருந்து யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போலத் தோன்றும். ஆடிச் சலசலக்கும் பனைமட்டைகளைப் பார்த்தபடி தேவதைகள் சிறகடிக்கும் சத்தம் கேட்குமா என்று அவள் உன்னிப்பாக செவி சாய்ப்பதுண்டு. அதன் தொடராக, குண்டோட்டி மருதியைப் பற்றி மட்டுமல்ல, அந்த தெய்வீக உண்மையை அறியச் செய்த மாயனைக் குறித்தும் உம்மாச்சுவுக்கு மதிப்பு ஏற்பட்டது. அவள் வெளிப்படையாகப் பேசவும் செய்தாள்:

"அப்பிடித்தானிருக்கும், குண்டோட்டி மருதிதான் பெரிசாயிருக்கும்!"

"அதிலே சந்தேகம் இருக்காக்கும்!" மாயன் கூடச் சேர்ந்து கூடேற்றுவான்.

"ஓ! பெரும்படப்பு மருதியைப் பத்தி மட்டமால்ல பேசறீங்க!" - மிகவும் வெறுப்புடன் பீரான் சொன்னான்.

"அது மட்டந்தான்." - மாயன் சொன்னான்

"ஒசந்ததுதான்." - பீரான் விடவில்லை.

"மட்டந்தான்." - உம்மாச்சுவும் சேர்ந்துகொண்டாள்.

பீரானுக்கு எரிச்சலேற்பட்டது; சட்டென்று கோபம் வந்தது. தன்னையும் தன் குடும்பத்தையும் சம்பந்தப்பட்ட ஏதோ ஒன்று நஷ்டப்பட்டுக்கொண்டிருந்தது என்று நினைத்தான். எல்லா சக்தியையும் திரட்டி பீரான் அவர்களைத் திட்டத் தொடங்கினான்:

"சைத்தானுங்களா, எங்கிட்ட அதெல்லாம் வச்சிக்கிடாதிங்க!"

"போடா, குதாமே!"

மாயனின் இந்த வார்த்தையால் நிலைமையே மாறிவிட்டது. குதாம் என்ற அந்த வார்த்தையைக் கேட்டதும் பீரானின் காலிலிருந்து தலைவரை வீராப்பு கிளம்பியது.

"இனிமே அதைச் சொன்னா தலையைச் சீவிப்பிடுவேன்."

"போடா, குதாமே!" - மீண்டும் அதே திட்டு வந்தது.

உடனே அடிதடி தொடங்கியது. மாயனும் பீரானும் தங்களுக்குள் வலுவான சண்டையில் இறங்கினார்கள்.

"குதாமே!"

"டேய்!"

"குதாமே!"

"சைத்தானே!"

இந்த வார்த்தைகளும் அடிதடிச் சத்தமும் கலந்து கேட்டன. மாயனுக்கு பலம் அதிகம். அவன் ஒரு கில்லாடி. பீரானின் அழகு முகம் செம்பருத்திப் பூப்போல் சிவந்துவிட்டது. பிடி, இழுப்பு, கடி, பிறாண்டல், உதை, மிதி; எழுதுபலகையும் புத்தகமும் பாதையில் சிதறி விழுந்தன. பட்டுச் சட்டையின் மேல் பாகம் கிழிந்தது; மாயனின் முன்கையில் பீரானின் கடியினால் இரத்தம் கசிந்தது. ஆனாலும் இரண்டு பேரும் ஓயவில்லை. சண்டை; பயங்கரச் சண்டை!

"ஒன்னெக் கொல்லாம விடமாட்டேன், குதாமே!" - மாயன் வீர முழக்கம் செய்தான்.

"நீ என்னெக் கொல்லுடா பாப்போம்!" - மூச்சிரைக்க பீரானும் கத்தினான்.

உம்மாச்சுவோ உயரே மதில்மேல் ஏறி நின்று கொண்டு சண்டை நடப்பதைப் பார்த்து ரசித்தாள்.

"விளாசு, மாயனே, விளாசு!" அவள் மேலே மேலே அந்த வீராதி வீரர்களை உற்சாகப்படுத்தினாள். அவளை இவ்வளவு ரசிக்கச் செய்த சம்பவம் சமீபத்தில் எதுவும் நடக்கவில்லை.

அந்தச் சண்டை தொடர்ந்துகொண்டிருந்தது. விழுவதும் உருளுவதும் மீண்டும் எழுந்தும் பொருதுவதும். இடறும் தொண்டை, துடிக்கும் நெஞ்சு, வியர்வையில் குளித்த உடல்கள். உம்மாச்சு மேட்டின் மேலிருந்து கைகொட்டிச் சிரித்தாள்: "பஷ்ட்...பஷ்ட்...பஷ்ட்!"

அவளுடைய தலைக்கு மேல் இருந்த மூங்கில் புதரிலிருந்து மரங்கொத்திப் பறவை கூவிற்று : குக்கூ..குக்கூ..குக்கூ...

எதிர்பார்க்காத ஒரு சம்பவம் திடீரென்று நிகழ்ந்தது. அந்த வீராதி வீரர்களுக்கு நடுவில் ஒருவன் வந்து குதித்தான் : "நிறுத்துங்க...நிறுத்துங்க!"

உம்மாச்சு பார்த்தாள்; அவன் சாப்புண்ணி. அவன் ஓலைச்சுவடியும் எழுத்தாணியுமாய் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிக் கொண்டிருந்தான். முன்நெற்றியில் கட்டி வைத்த குடுமி நுனி காற்றில் பறந்து அலைபாய்ந்தது. ஓலைச்சுவடிக் கட்டையும் எழுத்தாணியும் மேட்டின்மேல் வைத்துவிட்டு, சண்டையிட்டுக் கொண்டிருந்த அந்த இளைஞர்களின் நடுவில் தாவினான்.

"நீ விலகிப் போ, நாயரே!" -- மாயன் வேண்டிக்கொண்டான்.

"அய்யோ! வேண்டாம்!" -- சாப்புண்ணி தடுத்தான்.

"அவனை ஒரு வழி பண்றேன்." -- பீரானும் முன்னால் பாய்ந்தான்.

"தெம்பிருக்கிறவங்க அடிச்சிக்கிட்டா, இந்தக் கொரங்குப் பய நாயர் எதுக்கு இப்படி குறுக்கே வந்து குதிச்சான்?" -- உம்மாச்சு எரிச்சலுடன் சொன்னாள். ஒரு நத்தையைத் தொட்ட முகபாவத்துடன் அவள் அதைச் சொன்னாள்

சாப்புண்ணி விலகவில்லை. அவன் தடுத்தான் : "அய்யோ! விடுங்களேன்!"

"அய்யோ! விலகிப் போங்களேன்!" -- மீண்டும் அறைகூவல்.

"தள்ளுடா!"

"இந்த ஹம்க்கினைக் கொன்னுட்டுத்தான் மறு காரியம்!"

"போடா குதாமே!"

படீர் - அடி. மீண்டும் கொக்கிப் பிடி, கடி, இடி, கட்டி உருளல். இதற்கிடையில் சாப்புண்ணிக்கும் ஒன்று கிடைத்தது.

"அய்யோ! கடவுளே குருவாயூரப்பா!" -- சாப்புண்ணி விலகிக் கொண்டான். உம்மாச்சு குலுங்கிக் குலுங்கிச் சிரித்தாள். அப்போதும் அவளுடைய கண்கள் கருவண்டுகள் போல் அந்தப் போர்வீரர்கள் மீதுதான் மொய்த்திருந்தன.

இதற்கிடையில் பீரானின் நெஞ்சில் மாயன் ஏறிக் குந்திக் கொண்டான். அவன் இரண்டு கைகளாலும் எதிரியின் கன்னங் களில் அறையலானான். பீரானின் முகத்தைப் பார்க்கவே கஷ்டமாக இருந்தது. கறுத்த பாலுண்ணியின் அடியிலிருந்து ஒரு நேரான கீறல் காயத்திலிருந்து இரத்தம் கசிந்தது. உம்மாச்சு மீண்டும் கைகொட்டிச் சிரித்தாள். "பஷ்ட்!...பஷ்ட்!....பஷ்ட்!..."

சாப்புண்ணி உள்ளுக்குள் புகைந்தான். ஒரு கொலைபாதகம் தான் அங்கே நடக்கப் போகிறது. அவன் சுற்றும் முற்றும் பார்த்தான். பெரியவர்கள் யாராவது அந்தப் பாதையில் வந்தால்! களம் காரியஸ்தன் ராமன் நாயரோ, மொய்து ஹாஜியோ - யாராவது. ஆனால் ஒரு வெறிநாய் கூட வரவில்லை. என்ன வழி?.....என்ன வழி? சாப்புண்ணி யோசனை செய்தான். சட்டென்று ஒரு யுக்தி தோன்றிற்று. அவன் உரக்கக் கூவினான் : "அய்யோ, அதோ வர்றாங்க!"

"யாரு?" -- உம்மாச்சு கேட்டாள்.

"பள்ளிவாசல் மௌல்வியாரு!"

அடிதடி நின்றது. மாயனும் பீரானும் குதித்து எழுந்தார்கள். உம்மாச்சு மதிலிருந்து சறுக்கி இறங்கினாள். எழுத்துப்பலகை களையும் புத்தகங்களையும் வாரி எடுத்துக்கொண்டு முன்பின் பார்க்காமல் பாய்ந்து ஓடினார்கள். சாப்புண்ணி மெல்லச் சிரித்தான். பிறகு உடம்பில் அடி விழுந்த இடத்தைத் தடவிக் கொண்டு, ஓலைச்சுவடியையும் எழுத்தாணியையும் எடுத்துக் கொண்டு நடந்தான்.

நூற்றாண்டுக்கு முன்பு நடந்த ஒரு நாயர் பெண்ணின் பிரேம பந்தத்தை சொல்லி அந்த முஸ்லிம் நடத்திய மல்யுத்தம் அவ்வாறு முடிவடைந்தது. ஆனாலும் சாப்புண்ணியின் காதில் எப்போதும் உம்மாச்சுவின் குரல் முழங்கிக்கொண்டிருந்தது : 'பஷ்ட்!..பஷ்ட்!.. பஷ்ட்!..பஷ்ட்...'

## 2. அத்தரின் மணம்

கறுப்புச் சந்தைக்காரனுக்குப் பணம் வளரும் வேகத்தில் அல்லவா பெண் வளர்கிறாள்! ஒரு நாள் அதிகாலை விழித்தெழுந்து பார்க்கும்போது அதோ ஒரு கன்னிப் பெண்! கண்களில் கனவுகளும், கன்னங்களில் பன்னீர்ப் பூக்களும், வானவில்களும் தோன்றுவதும் மறைவதுமாக இருக்கும். வசந்தம் அவளைச் சுற்றி வலை பின்னிவிட்டிருந்தது. அவளோடு கூட்டாக வளர்ந்த ஆண்பிள்ளைகளுக்கு ஏதோ ஒரு முறைகேடு நடந்தது போலத் தோன்றும். இயற்கை ஒரு சதியாலோசனை நடத்தி யிருக்குமோ? அவர்கள் அப்போதும் சிறுவர்களாகவே இருப் பார்கள்; அவள் மட்டும் பெரியவர்கள் கூட்டத்தில் ஒருத்தியாகச் சேர்ந்திருப்பாள்.

உம்மாச்சு விஷயத்திலும் இதுதான் நடந்தது. உம்மாச்சு வளர்ந்தபோது அவளுடைய அழகும் வளர்ந்தது. வாலிபம் அந்த உடம்பில் தாராளத்தைக் காட்டியிருந்தது. செழித்துக் கொழித்த கன்னங்களில், உயிர்ப்பு திரண்டு மோதிக் கிடந்தது. படையெடுக்கும் இரண்டு கண்கள்; அவள் பார்க்கும்போது, இரண்டு நட்சத்திரங்கள் உரசி விழுவது போலிருக்கும். எல்லாவற்றையும் விட அதிகமாக ஈர்த்தது அவளைச் சுற்றி வீசிய நறுமணம்தான். அவள் அசைந்தாளானால் அத்தரின் மணம் கமழும்.

அந்த மணம் பீரானை மயக்கம் கொள்ளச் செய்தது. அவன் சொன்னான் : "மாயனே, அவளை நான் கட்டிக்கப் போறேன். நீயே பாரு."

"நீ கெட்ட மாட்டே." -- உடனே மாயனும் சொன்னான்.

"ஏனாம்?"

"கட்டிக்க முடியாதுன்னா?"

"எதுக்காக?"

"ஒரு அத்தர்க்காரன் மகளைக் கட்டிக்க ஒங்கப்பா ஒன்னெ விடமாட்டாரு." -- மாயன் விவகாரங்களின் இருப்பைத் தெளிவாக்கினான்.

"அத்தர்காரன்கிறதுக்காக எதுக்கு இத்தனை எளக்காரம் பேசணும்?" -- பீரான் நியாயவாதம் பேசினான்.

"ஒன்னோட இந்த வக்கீல்தனம் ஒண்ணும் ஒங்கப்பா காதிலே ஏறாது, தெரிஞ்சுக்கோ."

"அப்படீன்னா, மாயனே, எனக்கு உம்மாச்சுவைக் கட்டிக்க முடியாதுன்னா சொல்றே?"

"அப்படித்தான்."

"அப்புறம் எதுக்காக, மாயனே, இந்த உலகத்திலே இருக்கணும்?" -- பீரான் சோர்ந்து போய்த்தான் இதைக் கேட்டான்.

"உம்மாச்சுவைக் கெட்டினவன்தான் ஒலகத்திலே இருக்கணும்னு வச்சால் ஒருத்தனைத் தவிர மத்தவனெல்லாம் தூக்கு மாட்டிச் சாக வேண்டியதுதான்!" -- மாயன் கேலியாகத் தொடர்ந்தான். "என்ன, பீரானே, அந்த ஆசையை அங்கிட்டுக் கழட்டி வச்சிட்டு நல்ல பிள்ளையா ஒரு பொண்ணைக் கெட்டிக்கோ. உம்மாச்சுவைக் காட்டிலும் ஒசந்த பொண்ணு எத்தனை இருக்கு இந்த ஒலகத்திலே? அதை விட்டுட்டு, இப்போ இந்த அத்தர்க்காரன் மகளாம்!"

"அப்பிடிச் சொல்லாதே, மாயனே. இவ்வளவு மூக்கும் முழியுமா ஒருத்தி இருப்பாளா, மாயனே?"

"இல்லாமே என்ன? இருக்கும். அவளைத்தான் கெட்டிக்கணும்னா கெட்டிக்கோ. நான் போறேன்." மாயன் விருப்பமில்லாதது போல் நன்றாகவே நடித்து போகக் கிளம்பினான்.

"நில்லு மாயனே, ஏதாவதொரு வழி?"

"பீரானே, வழி இல்லாததுக்கு வழியே கிடைக்காது. வெறுமனே மனசுக்குள்ளே நொந்து புண்ணியமில்லே. நான் ஒனக்கு ஒரு நண்பன். அதனாலேதான் சொல்றேன். சேக்குட்டி மொதலாளியோட மகனா இருக்கிறே; அத்தர்காரன் மகளைக் கெட்டறது நடக்கிற காரியமில்லே. அதை எப்பவும் நெனச்சிக்கோ." மாயன் முடிவாகச் சொல்லிவிட்டு நடந்தான்.

பீரானின் இதயம் சோர்ந்து இருண்டுவிட்டது. இன்று வரைக்கும் சேக்குட்டி முதலாளியின் மகனாக இருந்ததில் அவன்

பெருமைதான் கொண்டிருந்தான். தேவைப்பட்ட இடத்தி லெல்லாம் அந்தப் பெருமையை விளம்பரப்படுத்தவும் செய்தான். இப்போதுதான் அந்தப் பெருமையே அவனுடைய ஆசைக்கு விலங்காக மாறி நிற்கிறது.

பீரானுக்கு தன்மீது தனக்கே வெறுப்பு ஏற்பட்டது. அவன் யோசித்தான். அனாதிகாலம் முதற்கொண்டே, உலகம் தொடங்கிய நாளிலிருந்து, பிரபஞ்சத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் பற்றியும் ஆதாம் நபியைப் பற்றியும் ஹவ்வா பீபியைப் பற்றியும் யோசித்தான். அவர்களுடைய சந்ததி, பரம்பரைகளைப் பற்றி யோசித்தான். அவர்கள் புரிந்த பல சாதனைகளைப் பற்றி யோசித்து யோசித்து அந்த வழியில் சிந்தனை சென்றபோது .... ஆ .... உம்மாச்சு அல்லவா மனதில் நிற்கிறாள்! பீரானுக்கு அயர்வு தோன்றிற்று. அவன் யோசித்தான் : "எதுக்கு அவ அத்தர்காரன் மகளாப் பொறந்தா?"

"என்ன மொதலாளி, அத்தராலி வாசப்படியிலே நிண்ணுக்கிட்டு யோசனை?" -- திடீரென்று பின்பக்கமிருந்து ஒரு கேள்வி. பீரான் திரும்பிப் பார்த்தான். சரித்திரக்காரர் அகம்மதுண்ணி. அவருடைய அந்தக் கேள்வியில் ஏதோ உள்ளடங்கியிருக்கிற தல்லவா?

"இல்லே - ஒண்ணுமில்லே...அது அப்புறம்....என்ன அகம்மதுண் ணியண்ணே?" பீரான் உருண்டு புரண்டு அப்படியொரு கேள்வியில் சென்று விழுந்தான்.

"விசேஷமா ஒண்ணுமில்லே. ஆனாலும் உங்ககிட்ட ஒண்ணு கேக்கணும்."

"என்னது?"

"நீங்க ஒரு பெரிய மொதலாளியில்லே?"

"அதனாலே?"

"அப்படியிருக்க நமக்கெதுக்கு இந்தக் கொணம்?"

"என்னண்ணே சொல்றது?"

"என்ன சொல்றது? ஒரு எட்டணா எடுத்து எறிஞ்சி, போயி வெத்திலை பாக்கு போட்டு வாங்க அகம்மதுண்ணியண்ணேன்னு சொல்லக் கூடாது?"

"இவ்வளவுதானே?" பீரான் ஒரு நிமிடம் யோசனை செய்துவிட்டு எட்டணா எடுத்துக் கொடுத்தான். அகம்மதுண்ணி

வட்டத் தாடியைத் தடவிக் கொண்டு சிரித்தார். "நீங்க ஒரு மொதலாளிதான்...உங்க அப்பா தாத்தாங்க கதையெல்லாம் இந்த அகம்மதுண்ணிக்குத் தெரியும்." ஒரு சரித்திரக்காரனின் கௌரவத்துடன் அவர் பேசினார். பீரான் சிரித்துக்கொண்டே கேட்டான் :

"இந்த அத்தராலி கதை எப்பிடி?"

"என்னது ? உங்களுக்கு நோட்டம் இருக்கோ?"

"என்ன நோட்டம்?"

அகம்மதுண்ணி மறுபடியும் தாடியைத் தடவிக் கொண்டார் : "இல்லே, நான் ஒண்ணும் சொல்லலே....உங்க போக்கு சரியானது தான்."

"ம்?" -- பீரான் அந்தக் குடும்பக் கதையைக் கேட்க உற்சாகம் காட்டினான். அவன் முன்னால் நடக்க, அகம்மதுண்ணி பின்னால் நடக்க சரித்திரக் கதை தொடங்கிற்று :

ஒரு தைரியசாலியான போர்வீரனின் பாரம்பரியம் அத்தராலிக்கு உண்டென்று அகம்மதுண்ணி சொன்னார். முன்னால் டச்சுக்காரர்களுக்கும் போர்ச்சுகீசியர்களுக்கும் கொச்சியில் சண்டை நடந்துகொண்டிருந்த காலம். போர்ச்சுகீசியரின் பக்கத்தில் செம்பகச்சேரி ராஜாவும் பத்தாயிரம் நாயர்களும்.

"இப்ப மாதிரி வெண்ணெய் வெட்டி வீரங்க இல்லே. வெட்டினா கழுத்தைத் துண்டாக்கற வீரங்க" என்று அகம்மதுண்ணி விவரித்தார். டச்சுக்காரர்கள் பங்கில் அவர்கள் மட்டும்தான். ஆனாலும் அவர்கள் பின்வாங்கவில்லை. மழைக்காலமும் ஆரம்பித்தது. வடக்கே கடலும் உரமான டச்சுக்காரர்களும் ஒரு பக்கம்; மறுபக்கம் பெரிய படையும் பரங்கிகளும் நீயா நானா என்று நின்றார்கள். இதற்கிடையில் டச்சுக்காரர்களைத் தோற்கடிக்க ஐந்தாறு கப்பல்கள் நிறைய பரங்கிகள் கரை இறங்கினார்கள். அதற்குப் பிறகு டச்சுக்காரர்களுக்கு அங்கே தாக்குப் பிடித்து நிற்க முடியவில்லை.

"இனி போக்கு இல்லேன்னு தெரிஞ்சப்போ அவங்க ஒரு சூச்சும வேலை செஞ்சாங்க." -- அகம்மதுண்ணி எக்களிப்போடு சொன்னார்.

"என்ன?" -- பீரான் கேட்டான்.

"டச்சுக்காரங்க கூட்டத்திலேயும் நாயருங்க இருந்தாங்க. அவங்களும் ஓடிப்போனவங்கதான்னு வச்சிக்குடுங்க. அதிலே

ஒருத்தனையும் யூதன் ஒருத்தனையும் அவங்களோட இடத்திலே நிறுத்தினாங்க."

"அப்புறம்?"

பட்டாளத்துக்காரன் இரவு முழுவதும் விழித்தபடி சொல்லிக்கொண்டிருந்தான் : "யாரங்கே?...அங்கேயே நில்லு." - இந்த மாதிரி. சமயம் பார்த்து யூதன் மணி அடித்துக் கொண்டிருந்தான். இதற்கிடையில் டச்சுக்காரர்கள் கடல் கடந்து போயிருந்தார்கள்.

"பரங்கிகளுக்குத் தெரியலே?"

"அதுதானே தந்திரம்? இந்தப் பட்டாளத்துக்காரங்களோட சந்தடியைக் கேட்டப்போ, டச்சுக்காரங்க அங்கேயே இருக்கிறதாத்தான் பரங்கிங்க நெனச்சாங்க."

மறுநாள் காலையில்தான் உண்மை வெளிப்பட்டது. யூதன் தப்பிவிட்டான்; நாயர் பொறியில் சிக்கிக்கொண்டான். பரங்கிகள் அவனைப் பிடித்து பாளையத்தில் கொண்டுபோய் விசாரித்தார்கள் : "எங்கே டச்சுக்காரங்க?" பேச்சில்லை; மீண்டும் கேள்வி; மீண்டும் மௌனம். துப்பாக்கியும் ஈட்டியும் ஒரே சமயத்தில் நீட்டிக் கேட்டார்கள். நாயர் வாயே திறக்கவில்லை. கடைசியில் அவனை ஒரு கிட்டங்கியில் அடைத்தார்கள்.

"கொன்னுட்டாங்களா?" -- பீரான் கேட்டான்.

"இல்லே. அன்னிக்கி ராத்திரியிலே ஒரு அரபிக்காரனும் சீனாக்காரனும் சேர்ந்து அவனைக் காப்பாத்திட்டாங்க. ஆனா ஏதோ மாய மந்திர வேலை நடந்திருக்கும் போலே நம்ப வேண்டியிருக்கு."

அப்படித் தப்பிப் போன அந்த நாயர் அரபிக்காரனுடன் கூட்டாளியாக வாழத்தொடங்கினான். சீனாக்காரனோடும் அவனுக்குத் தொடர்பு ஏற்பட்டது. வாசனை திரவிய வியாபாரத்தில் அவன் ஒரு பங்காளியானான். பின்னர் ஒரு பெண்ணையும் பார்த்துக் கட்டிக்கொண்டான். "அந்த ஒரு வாரிசுதான்...யாரு? அத்தராலி. புரிஞ்சதா?"

அகம்மதுண்ணி சொன்ன இந்த சரித்திரம் பீரானை கொஞ்சத்துக்குக் கொஞ்சம் ஆசுவாசப்படுத்தியது. பெரிய பாரம்பரியம் உள்ள குடும்பமாக அல்லவா இருக்கிறது! ஆனால்

அப்பாவுக்கு இதெல்லாம் தெரியுமா? வழி பிரிய வேண்டிய இடம் வந்ததும் பீரான் சொன்னான் : "அகம்மதுண்ணி அண்ணனெப் பார்க்கலாமில்லே?"

"பார்க்கலாம்."

சரித்திர வியாபாரத்தின் மூலம் அன்று திரட்டிய எட்டணாவை வேட்டி முடிச்சில் கட்டிக்கொண்டு அவர் நடந்தார். அத்தர் ஆலிக்கு இந்தச் சரித்திரத்தைப் பற்றி ஏதாவது தெரிந்திருக்குமா? அவருடைய மனைவி தித்தய்யக்குட்டியம்மையைப் பொருத்தவரை குறிப்பிட்டுச் சொல்வதற்கு எதுவுமில்லை.

"இந்தக் குடும்பம் இப்போ தட்டுக்கெட்டுப் போயிருந்தாலும் முன்னாலே ஓசந்துதான் இருந்திருக்கு. இதோட மணம் குணம் ஊர்லே தெரிஞ்ச காலம் ஒண்ணு இருக்கத்தான் செய்தது" -- என்று அவர்கள் அடிக்கடி பேசிக் கொண்டாலும் கூட, தங்கள் குடும்ப சரித்திரம் அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை.

ஆலியின் அப்பா அத்தர் அஸ்ஸோனார் சென்ட் குப்பிகள் நிரப்பிய பெட்டி தூக்கி நடந்து வியாபாரம் செய்து கொண்டிருந் தார். அவருடைய அப்பா அரண்மனைக்கு அத்தர் கொடுத்துக் கொண்டிருந்த அத்தர் அகம்மது - இது மட்டும்தான் ஆலிக்குத் தெரிந்திருக்கும். எப்படியானாலும் ஆலி பிறந்த போது குடும்பத்தின் நிலைமை அப்படியொன்றும் மெச்சும்படியாக இல்லை. மலைச் சரிவில் ஒரு பத்து மரக்கால் விதைப்பாடு நிலமுண்டு. தொழுவத்தில் இரண்டு மாடுகள். மூன்று குட்டிகளை ஈன்ற ஆடு. அத்தர் விற்கும் பெட்டி. பத்து முப்பது கோழிகள். வயோதிகர்களான அம்மாவும் அப்பாவும். இதுதான் குடும்பத்தின் நிலை. ஆலி தலையெடுத்த பிறகு கொஞ்சம் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. இப்போது இருபத்தைந்து மரக்கால் விதைப் பாடு நிலமும் நான்கு மாடுகளும் இருக்கின்றன. குட்டி போட்ட ஆடு இல்லை. ஆனால் ஒரு பசு இருக்கிறது. கோழிகள் பெருகியிருக்கின்றன. அம்மாவும் அப்பாவும் இறந்துவிட்டார்கள்.

அம்மாவும் இறந்த பிறகுதான் ஆலி கல்யாணம் கட்டிக்கொண்டது. திருமணத்தைப் பற்றி அவருக்கு உயர்ந்த அபிப்ராயம் எதுவும் இருந்ததில்லை.

"கல்யாணம் பண்ணினால் மனிசன் காலைக் கட்டினாப்பிலே தான்" -- இது தான் ஆலி கொண்டிருந்த தத்துவம்.

இப்படி அந்தத் தத்துவத்தை வெளிப்படையாகப் பேசிக் கொண்டே அவர் தித்தய்யக்குட்டியம்மையைக் கட்டிக் கொண்டார்.

"ஒங்க காலைப் பிடிச்சி நான் தொங்கறேனா?" -- தித்தியக் குட்டியம்மை கேட்டாள்.

"ஆமா, தொங்கத்தான் போறே." -- ஆலியும் சொன்னார். ஆனால் கல்யாணம் முடிந்தபோது, பொதுவாக உலகத்தைப் பற்றி அவர்களுக்கு கெட்ட அபிப்ராயம் எதுவும் இல்லை.

"அவ பவிசு உள்ளவளாக்கும்!" என்றொரு பதிலைத்தான் அவர் ஊர்க்காரர்களிடம் சொல்லி வைத்திருந்தார். ஊர்க்காரர்கள் இதை எப்படி நம்பினார்கள் என்று ஆலிக்குத் தெரியாது. அதில் அக்கறையுமில்லை.

ஆலி விவசாயமும் அத்தர் வியாபாரமும் செய்து வந்தார். தித்தய்யக்குட்டியம்மை குடும்பத்தை பாங்காக நடத்தினாள். நெல் குத்துவாள்; வைக்கோல் மிதிப்பாள்; அடிப்பாள்; சாணநீர் தெளிப்பாள்; பால் கறப்பாள்; சமைப்பாள்; உண்ணுவாள்; ஊட்டுவாள். பால் கறந்தும் முட்டை விற்றும் கிடைக்கும் காசை சுவர் இடுக்குத் தொண்டில் சேர்ந்து வைப்பாள். ஆலிக்கு அதற் கெல்லாம் அவகாசம் கிடையாது. இந்த நெரிசல்களுக்கிடையில் அவள் பிரசவிக்கவும் நேர்ந்தது -- ஒரு பெண் குழந்தை.

"....ம்....ஒரு பையனைப் பெத்துப் போடுவே அப்படீன்னு நான் நெனச்சேன்." ஆலி சொன்னார்.

"பொண்ணுக்கு என்ன கொறச்சலாம்?" படுக்கையிலிருந்தபடி தலையைச் சாய்த்து தித்தய்யக்குட்டியம்மை கேட்டாள்.

"ஒன்னெ மாதிரி இல்லாமே இருந்தாச் சரிதான்."

"நீங்க ரொம்ப அழகாக்கும்?"

கணவர் சிரித்துவிட்டு அத்தர்ப்பெட்டி எடுத்துக்கொண்டு வெளியே போனார். அதற்குப் பிறகு குடும்பத்தில் ஏகப்பட்ட வேலை போலிருக்கிறது; தித்தய்யக்குட்டியம்மை பிரசவிக்க வில்லை. ஆலிக்கு ஆணும் பெண்ணுமாக இருந்தது உம்மாச்சு மட்டும்தான். ஆலிக்கு அவள் என்றால் உயிர். அவளை எப்படியெல்லாம் வளர்ப்பது, அவளுக்கு என்னென்ன செய்ய வேண்டியது என்று கவலைப்பட்டுக்கொண்டிருந்தார். தன்னுடைய மகள் ஆடை அணிகளுடன் அழகாக உலவ வேண்டும் என்று

அவருக்குஆசை. நாலு பேர் அவளைப் பற்றிப் பாராட்டிப் பேசுவதை கேட்கக் கொள்ளை ஆசை.

"வாப்பா, எனக்கு நாலு வளையல் வாங்கணும்." உம்மாச்சு சொல்ல வேண்டியதுதான் தாமதம்.

"வாங்கியார்றேன், கண்ணு." ஆலி சம்மதம் கொடுப்பார்.

"ஒரு ஜரிகை போட்ட முக்காட்டுத் துணி?"

"நான் சாயந்திரம் வர்றப்போ கொண்டு வர்றேன்."

அதை வாங்கி வரவும் செய்வார். அவ்வளவு அதிகம் மகளுக்குச் செல்லம் கொடுப்பதில் தித்தய்யக்குட்டியம்மைக்குச் சம்மத மில்லை.

அவள் கணவனிடம் சொல்வாள் :

"நீங்க இப்படி விழுந்து விழுந்து அவளைத் தலைக்கு மேலே வைக்காதீங்க. பொண்ணு கேக்கறதும் வாப்பா வாங்கித் தர்றதும்! இதெல்லாம் என்னிக்கும் உருப்படாது. சம்பந்தம் தேட வேண்டிய வயசிலே ஒரு பொண்ணு வெட்டித்தனம் பண்றதைப் பாருங்க!"

"இந்தா நீ கவலைப்படதே. அவளை ஒன்னெ மாதிரி ஆக்கிப் பிடாதே."

அப்பாவும் விடுவதில்லை. அவ்வாறு மகளைப் பற்றி ஏதாவதொரு தர்க்கம் எப்போதும் அந்த வீட்டில் நடந்து கொண்டேயிருக்கும். அப்பாதான் எப்போதும் ஜெயிப்பார். மகள் சம்பந்தப்பட்ட தர்க்கத்தில் எப்போதும் கணவர்தான் ஜெயிக்க வேண்டும் என்பதுதான் தித்தய்யகுட்டியம்மைக்கும் ஆசை. கணவரை மேலும் மேலும் ஜெயிக்கச் செய்வதற்கு அவள் அவரைப் பல வழிகளிலும் எதிர்த்து நிற்பாள்.

ஆலி வெளியே போனதும் அவள் பக்கத்து வீட்டுக்காரர்கள் கேட்கும்படி வெளிப்படையாகப் பேசுவாள் : "மகள்னு சொன்னாப் போதும், வாப்பா உசிரை விட்டிருவாரு."

உம்மாச்சுவின் மேனி முழுவதும் நகைகள்தான். காதில் தங்கம்; கழுத்தில் தங்கம்; கைகளில் தங்க வளையல்களும் கண்ணாடி வளையல்களும் கலந்து ஒலியெழுப்பும். இடுப்பில் பல நாசூக்கு வேலைகள் கூடிய ஆகலமான ஒட்டியாணம், கழுத்து நிறைய தங்கத் தாயத்துகள், மண்ணெண்ணெய்ப் பீப்பாய்கள் கட்டை வண்டியில் ஏற்றியது போல், உம்மாச்சு அசைந்தாலே ஓசை

கிளம்பும். க்லிங்...ப்லிங்...க்லிங்....ப்லிங்...ஆடைகளும் உயர்தரமானவை. பளபளக்கும் ஒளிர்வு; தேகத்தில் இறுகி தேகத்தின் ஆகிருதி முழுவதையும் எடுத்துக் காட்டும் குப்பாயம். ஜரிகை வைத்த பட்டு முக்காடு -- இப்படி. கையில் மருதாணி; கண்ணில் மை. அவள் நடக்கும் வழியெல்லாம் அத்தரின் பரிமளம் பொங்கும். ஒரு செழிப்பான வசந்த காலம் போவது போலிருக்கும்.

உம்மாச்சுவின் நறுமணம் அந்த இடத்தில் மட்டுமல்ல, தொலைவிலும் பரவிற்று. "அத்தர் ஆலியின் மகளா?" எல்லோரும் பரஸ்பரம் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்; வெளிப்படையாகவும் பேசத் தவறவில்லை. அத்துடன், கல்யாணக் கமிஷன்கள் பல அந்த வீட்டிற்கு வந்து சென்றன. கல்யாணக் கமிஷன்களின் மெம்பர்கள் பெரும்பாலும் பெண்களே. அவர்கள் ஒரு தேர்வுத் திட்டத்தோடும் கேள்விப்பட்டியலோடும்தான் வீடேறுவார்கள். கண், காது, மூக்கு, கை, கால், நாக்கு தலையின் பேன் -- இவை எல்லாவற்றையும் பரிசோதிப்பார்கள். திருப்தியாயிருந்தால் அதற்குப் பிறகு கேள்விகள். இப்போது உம்மாச்சுவின் உலக அறிவு முழுவதையும் பிரகடனப்படுத்த வேண்டிய சந்தர்ப்பம். சில கமிஷன்கள் நல்ல ரிப்போர்ட்டுகள் சமர்ப்பிக்கும்; சில பாதகமானவை. சில வரன்கள் ஆலிக்குப் பிடிக்கவில்லை. "அது நமக்கு வேண்டாம்."

"பின்னே யாராவது சுல்தானா ஒங்க மகளுக்கு வரப் போறான்?" நித்தய்யக் குட்டியம்மை கேட்பாள்.

"இந்தா, சும்மா கிட!" - ஆலி எச்சரிக்கை செய்வார். அத்துடன் அந்தப் பேச்சு அடங்கும். சிலருக்கு பெண்ணை பிடிக்காமல் போவதும் உண்டு. அப்போதுதான் நித்தய்யக்குட்டியம்மையின் ஆங்காரம் முழுவதும் வெளிப்படும். அவள் ஒரு சண்டைக் கோழியைப் போலச் சீறிப் பாய்வாள் : "இல்லே; இனி அவனுக்குப் பிடிச்சாலும் என் மகளை அந்தப் பயலுக்கா குடுப்பேன்? ஓ! எப்படிப்பட்ட மாப்பிள்ளே!"

கல்யாணப் பேச்சுக்கள் தொடங்கிக் கழியும் போதெல்லாம் உம்மாச்சு மகிழ்ச்சி பூர்வமாகப் பெருமூச்சு விடுவாள் : "ஆண்டவனே, நீதான் என்னைக் காப்பாத்தினே!"

எல்லாக் கல்யாணப் பேச்சுக்களும் தட்டிக் கழிய வேண்டும் என்றுதான் உம்மாச்சு விரும்பியதாகத் தோன்றிற்று.

தாய்க்குக் குழப்பம், தந்தைக்கு எதிர்பார்ப்பு, மகளுக்கு பயம் -- இப்படி நாட்கள் போனபோதுதான், பீரானுக்கு எண்ணம் ஏற்பட்டது. "அவளை நான் கட்டுவேன்" என்று.

ஆனால் சேக்குட்டி முதலாளியுடன் பேசி அவரைச் சம்மதிக்க வைப்பது என்பது அவ்வளவு எளிதல்ல. மாயனின் எச்சரிக்கை பொருள் பொதிந்ததுதான். அப்படி ஆசைக்கும் பயம் கலந்த சந்தேகத்துக்கும் பீரானின் இதயத்தில் ஒரு போராட்டம் நடந்தபோதுதான் சரித்திரக்காரனான அகம்மதுண்ணியைக் கருவியாகப் பயன்படுத்த வேண்டிய தேவை அவனுக்கு ஏற்பட்டது.

அவன் ஒரு ரூபாயை அகம்மதுண்ணியின் கையில் வைத்து விட்டுக் கேட்டான் : "இதுக்கு என்ன வழி, அகம்மதுண்ணியண்ணே?"

"அப்படீன்னா, சின்ன முதலாளி அத்தர் மணத்திலே விழுந்திட்டீங்க? இல்லே?"

"நீங்க என்னோட அண்ணன் மாதிரியில்லையா?"

"இல்லையா பின்னே!"

"எனக்கு ஒரு ஆசை."

"சரி." அகம்மதுண்ணி சரித்திர ரீதியாக சிந்தித்தார். பிறகு சொன்னார் : "உங்களுக்காக கொஞ்சம் செய்ய முடியுமான்னு பார்ப்போம்."

முயற்சியில் இறங்கினார். அன்று சேக்குட்டி முதலாளி முன்பாக அகம்மதுண்ணி ஒரு சின்னப் பிரசங்கம் அடித்தார்.

உலகத்தில் உள்ள கன்னிகளைப் பற்றியும், அவர்களுடைய குண விசேஷங்களைப் பற்றியும் இருந்தது அந்தப் பிரசங்கம். அன்றைய நிலையில் கல்யாணத்திற்குத் தயாராக இருந்த ஒவ்வொரு கன்னிப் பெண்ணையும் பற்றியும் அவர் விமர்சனம் செய்தார். பல குடும்பங்களின் சரித்திரங்கள் சொட்டைதான். குடும்பப் பரம்பரை நன்றாய் இல்லாத பெண்ணுக்கு எந்தக் குணம் எப்படி இருந்தாலென்ன! சிலருடைய குடும்பம் நல்லதுதான்; ஆனால் பெண் உருப்படியில்லை. கடைசியில்தான் உம்மாச்சுவின் சரித்திரத்தை முன்வைக்க முடிந்தது : "அவளைக் கட்டினவன் குடுத்து வச்சவன்."

"என்னது!" வாயிலிருந்த சுருட்டை எடுத்துவிட்டு சேக்குட்டி முதலாளி கேட்டார்.

"இத்தனை பவிசும் பணமும் உள்ள ஒரு பொண்ணைக் காண முடியாது. இது நான் சொல்லலே. பள்ளிவாசல் பெரியவரு சொன்ன பேச்சாக்கும்."

"என்னது?" - முதலாளி மீண்டும் வாயிலிருந்து சுருட்டை எடுத்தார்.

"அந்தப் பொண்ணைக் கட்டிக்கிற பையனுக்கு மேலே மேலே ஏத்தந்தான். சொல்லி என்ன செய்றது? உங்க மகனுக்கு அது மேலே பிடிப்பில்லியே!"

"என்ன பிடிக்கலே?"

"அவருக்கு பிடிச்சதைத்தானே அவரு கட்டுவாரு?"

"என்னவாம்?"

"நீங்க முரண்டு பிடிக்க வேண்டாம். அவரு மனசு போல ஆகட்டுமே!"

"அவன் மனசு போலேயா?....அப்போ அவன் என் மகன் இல்லியா?"

"ஆனா இந்தப் பொண்ணைக் கட்டணும்னு நீங்க கட்டாயப் படுத்தினா அவரு கேக்க மாட்டாரு, மொதலாளி."

"கேக்க மாட்டானா? என் மகன்னா கேப்பான்; கேக்காட்டி அவன் என் மகனில்லே....."

"நெறயப் பேரு கண்ணு வச்சிருந்த பொண்ணாக்கும்! முந்திக் கிட்டாத்தான் இந்த மாதிரி நல்ல பொண்ணுங்க கிடைக்கும். இதைச் சொன்னா உங்க மகன் புத்தியிலே ஏறணுமில்ல? வாப்பா சொன்னாலும் நான் இந்த விஷயத்திலே கேக்கப் போறதில் லேன்னு சொல்றாரு."

"என்ன?" -- சுருட்டை வீசி எறிந்துவிட்டு சேக்குட்டி முதலாளி குதித்து எழுந்தார்......கால் மிதியடி 'கடோம்--படோம்' என்று ஒலித்தபடி நான்கு தடவை அங்கும் இங்குமாக வேகமிட்டு நடந்தார். அப்புறம் அகம்மதுண்ணியின் முகத்தை உற்று நோக்கிக் கேட்டார் : "அகம்மதுண்ணி அண்ணே, அவன் என் மகன் தானில்லையா?"

"அதில..."

"என் மகனா இல்லியா?"

"ஆமாம்."

"அப்படீன்னா அவன் அந்தப் பொண்ணைத்தான் கட்டணும். இந்த சேக்குட்டி இப்படி ரெண்டு காலாலே நடக்கணும்னு இருந்தா கட்டணும். என்ன?"

"உங்களுக்கு உங்க மகனை வெலக்கி வைக்க முடியுமா?"

"முடியும்தான்! என்ன? இந்தச் சேக்குட்டி நல்லவனுக்கு நல்லவன்தான்; கெடுதல் நெனச்சால் மகா பொல்லாப்புத்தான். என்ன...எங்கப்பாவும் அப்பிடித்தான் இருந்தாரு. என்ன?"

"ஆமாங்க."

"எங்கப்பா சொன்னபடி நான் கேட்டேன். நான் சொன்னபடி அவன் கேக்கணும். என்ன?"

"அதுதாங்க சரியான வழி. அழகான பொண்ணு; ஒசந்த குடும்பம்." அகம்மதுண்ணி வீர பரம்பரையில் வந்த குடும்பங் களைப் பற்றிக் கொஞ்சம் பிரசங்கம் செய்தார்.

சேக்குட்டி முதலாளி பொறுமையுடன் இருந்து கேட்டார்.

"ஒண்ணும் சொல்ல வேணாம். அவன் கட்டிக்குவான். என்ன?"

"சொல்லிப் பார்ப்போம்."

சொல்லிப் பார்த்தார். அகம்மதுண்ணியின் வழிகாட்டலின்படி பீரான் எதிர்ப்பக்கம் நன்றாகவே நடித்தான். தந்தைக்கும் மனுக்கும் இடையே ஒரு சண்டை நாடகமே நடந்தது. கடைசியில் மகன் கீழ்ப்படிந்தான். அன்று மாலையில் கிழவர் அகம்மதுண்ணி அத்தர் ஆலியின் வாசற்படியில் நின்றபடி கேட்டார்: "பிடிச்சிருக்கவில்லை?"

".....ம்....சரி" ஆலி கொஞ்சம் அச்சத்துடன் சம்மதித்தார்.

"அகம்மதுண்ணியண்ணன் கையிலேதான் நம்ம காரிய மெல்லாம்." - மறைப்புக்குப் பின்னாலிருந்து நித்தய்யக் குட்டியம்மை சொன்னாள்.

"அதைச் சொல்லாதே. இந்தக் குடும்பத்தோட பழைய கதையிலேருந்து எல்லாமே எனக்குத் தெரியும். நீங்க முன்னாலே இருந்த நெலைமைக்கு வரணும்ங்கிறதுதான் என்னோட ஆசை."

"அது சரிதானே!" மறைப்புக்கு பின்னாலிருந்து.

"ஆகட்டும்; இத்தினி வெத்திலை பாக்கு வாங்கணும். ஒரு ரூபாய் குடேன், ஆலி!"

ஆலி காசுப் பெட்டியிலிருந்து ஒரு ரூபாய் எடுத்துக் கொடுத்தார். அகம்மதுண்ணி சிரித்துக்கொண்டு வட்டத் தாடியைத் தடவியபடி படியிறங்கினார்.

நித்தய்யக்குட்டியம்மையின் பின்னாலிருந்து அத்தரின் மணம் கலந்த ஒரு பெருமூச்சு வந்தது. அது உம்மாச்சுவினுடையது : "ஆண்டவனே....கடைசியிலே ஏமாத்திட்டியா?"

## 3. நம்பூரச்சனைக் கொன்ற கை

"எங்கேயாக்கும்?"

"யாரு மாயனா? என்னப்பா மொறச்சிப் பார்க்கிறே?" சரித்திரக்காரரான அகமதுண்ணி கேட்டார்.

"ஓன் மொகரை அழகைப் பாத்தேன்!"

"உனக்கென்ன ஆச்சிப்பா, மாயனே?"

"ஒலக்கை! என்னய்யா?"

அகமதுண்ணி மாயனை ஏற இறங்க ஒரு முறை பார்த்தார். முறைத்த கண்ணும், துடித்த மூக்கும், கறுத்த மீசையும் தாடியும் அவனுடைய கறுத்த முகத்தை மேலும் கறுப்பாக்கிக் காட்டின. மைதானம் போல் பரந்த மார்பு; உலக்கை போன்ற கைகள். எதிரியைப் பார்த்த காட்டெருமையின் தோற்றம். ஆக மொத்தம் நிலைமை சரியில்லையென்று அகமதுண்ணிக்குத் தெரிந்தது. சரித்திர ரீதியான தெளிவுரை தரத் தக்க சந்தர்ப்பமில்லை அது. அவர் விலகி நின்றபடி சொன்னார்:

"அப்போ, மாயனே, கொஞ்சம் வழி விடறியா? நான் அவசரமா போய்க்கிட்டிருக்கேன்."

"நில்லுங்க"! -- அது ஒரு கட்டளையாக இருந்தது. இடி முழங்கியது போன்ற அந்தச் சத்தத்தைக் கேட்டு வயோதிக சரித்திரக்காரர் நடுங்கி விட்டார். சுற்றிலும் பார்த்தார். குறுகலான பாதை அது. இரண்டு பக்கமும் உயர்ந்ததான மதில் மேடுகள்; அவற்றிற்கு மேல் வேலி. வேலிக்கு மேல் திருதாளிப் பூச்செடியும் பாடைவள்ளிக் கொடியும் சுற்றிப் பிணைந்து கிடந்தன. ஓரிரண்டு பொன்னரளிப் பூக்கள் முறைத்துப் பார்த்தன. வேறு எதுவுமில்லை; யாருமில்லை.

"கொஞ்சம் வெலகிக்கோ, மாயனே."

"அங்கேயே நில்லும்." அந்தக் காட்டெருமை மீண்டும் ஒரு முறை அலறிற்று.

அதைக் கேட்டதும் அகமதுண்ணிக்கும் ஒரு தைரியம் வந்தது. இருவரும் நிலைப்பாக நின்றுகொண்டார்கள்.

"என்னப்பா?"

"நீ என்ன மனிசனா, மாடா?" - மாயன் கேட்டான்.

"எப்படி உனக்குத் தோணுது?"

"ஒரு போக்கிரின்னு, ஹம்க்கான்னு."

"அப்படீன்னா அந்த மாதிரியே வச்சிக்கோ!"

"வேணாம்; மேலே நகரக் கூடாது."

"நகர்ந்தா? சீவிப்பிடுவியோ?"

"வாயை மூடுடா, ஹம்க்கே!"

மாயன் கோபத்தின் உச்சத்தில் இருந்தான். உம்மாச்சுவின் கல்யாணம் முடிந்து விட்டது என்று கேட்டபோது தொடங்கியது தான் இந்த ஜிஹாது செய்யப் புறப்படும் -- போர் வெறி -- ஆவேசம். அது மறக்க இயலாததான பேரிடியாக விழுந்திருந்தது.

பீரானுக்கு ஒரு மோகம் உண்டென்று மாயனுக்குத் தெரியும். ஆனால் அது நடக்கக் கூடிய காரியமல்ல என்று அவன் நம்பி யிருந்தான். பெருந்தனக்காரரான சேக்குட்டி முதலாளி முற்றாக எதிர்ப்பைக் காண்பிப்பார் என்று மாயன் எண்ணியிருந்தான். அங்கேதான் தப்பு நடந்துவிட்டது. அதற்கிடையில் இந்தக் கிழவன் அகமதுண்ணி குறுக்கே விழுந்து காரியத்தைக் குழப்பத்தில் ஆழ்த்துவான் என்று யார் நினைக்க முடியும்? உம்மாச்சுவைத் தான்தான் கட்டிக்கொள்ள முடியமென்று அதுவரை அவன் திடமாக நம்பியிருந்தான். உம்மாச்சுவுக்கும் அதுதான் விருப்பமென்று மாயனுக்குத் தெரியும். அவளைக் காண்பதென்பது எளிதல்ல. அவளைச் சுற்றிலும் முன்னேற்பாட்டுடன் ஒரு கம்பீரமான கோட்டையை அத்தராலியும் தித்தய்யக்குட்டி யம்மையும் வலுவாகக் கட்டியிருந்தார்கள். ஆனால் அத்தரின் மணத்தையும் காதல் கனவுகளையும் மறைத்து வைக்க முடியாதல்லவா? அது வேலியை முறிக்கும்; சுவரை இடிக்கும்; கோட்டை மதில்களில் துளைகளை உண்டாக்கும். இதயம், தடையை மீறவும், முரண்டு பிடிக்கவும் தொடங்கும். கூடாது என்று சொல்லிப் பயனில்லை; நடந்தே தீரும். இயற்கைதான் அங்கே காவல். முகம் பார்க்காவிட்டால் ஏகாந்தத்தின் மறைவில்

பல தடவைகள் பரஸ்பரம் பேச்சு வார்த்தைகள் பரிமாறிக் கொள்ளப்பட்டன : "உம்மாச்சு, என்னை மறந்திட்டியா?"

"மறந்திட்டேன்னு வச்சுக்கிடுங்களேன். அதலே ஓங்களுக்கென்ன நஸ்ட்டம்!"

"இல்லியா பின்னே?"

"ஏமாத்துப் பேச்சு!"

"கள்ளத்தனம்னு நெனைக்காதே; இது என் நெஞ்சிலேருந்து வர்ற பேச்சாக்கும்."

"நெசம்மாவா? என்னெ மறந்துதான் போய்ட்டீங்களாக்கும்னு நெனச்சேன்."

அதற்கிடையில் ஒரு மிதியடி சத்தம். கனைப்புக் குரல், ஒரு கூப்பிடு குரல், வசவு - இவற்றில் ஏதும் எதிர்பட்டால் இரண்டு நிழல்களும் வெவ்வேறு திசைகளில் பிரிந்து செல்லும். சத்தமோ சந்தடியோ இருக்காது. பிரபஞ்சம் அதன் முடிவில்லாத பயணத்தில் இருந்தது.

மாயனின் நெஞ்சத்தில் கனவுகள் வளர்ந்து, தழைத்து, பூவிட்டு நிலைத்தன. உம்மாச்சுவை மணந்துகொண்டதற்குப் பின்னால் அமையவிருக்கும் பௌர்ணமி இரவுகளைப் பற்றி அவன் கனவு கண்டிருந்தான். பூக்களும், நிலாவும், அத்தர் மணமும் நிறைந் திருக்கும் உலகத்தில் இருவர் மட்டுமே இருப்பார்கள் -- மாயனும் உம்மாச்சுவும். அந்த இரண்டு ஆத்மாக்களின் இயக்கத்தினால் தான் பிரபஞ்சம் நிலைத்திருக்கும். அந்த மனோகரமான எதிர்காலத்தை நினைத்துக்கொண்டு அவன் பாடுவான் :

> "கருவண்டு மொய்த்ததுபோல் கூந்தலிருக்கும்
> புருவம்வரை கண்ணிமைகள் சிறகடிக்கும்
> மதிமுகத்தின் ஒளிகண்டு மாணிக்கம் நாணும்
> மையிட்ட கண்ணெனன்னை வெட்டி நோக்கும்."

இந்தப் பாடலோசை பல தடவைகள் அந்தக் குன்றுப் புறங்களில் இனம் புரியாத இதய வேதனையுடன் எதிரொலிக்கும். அப்படி நடக்கும் போதெல்லாம் அவனுடைய இதயத்தில் ஒரு முள் குத்தியிருக்கும்; "கையிலே காசில்லாமல் பெண் கிடைக்குமா?" அதற்கான முயற்சியில் இறங்கியிருக்கும்போதுதான் அகமதுண்ணி இடையில் புகுந்து எல்லாவற்றையும் நாசமாக்கியது. அந்தக் கிழவனை அடித்து நொறுக்கித் தூளாக்கும் அளவுக்கு வெறுப்பு ஏற்பட்டிருந்தது மாயனுக்கு.

"உனக்கிப்போ என்ன வேணும்?" அகமதுண்ணி மீண்டும் கேட்டார். "எனக்கு வேறே வேலை இருக்கு."

"சைத்தான் செய்ற வேலையை நீ செய்யப் போறிய? அது ஒன்னெ செய்யச் சொல்லியிருக்கா?"

மாயன் கடுங்கோபத்தோடு கேட்டான்.

"நான் இப்போ என்ன பண்ணிப்பிட்டேன்?"

"ஊர்லே இருக்கிற பொண்ணுங்களையெல்லாம் கட்டிக் கொடுக்க ஒன்னைத்தான் யாராச்சும் ஏற்பிச்சிருக்காங்களா?"

"அப்படீன்னா உனக்கு அதுதான் கோபமா? உனக்கும் அவ மேலே ஒரு கண்ணா? ஏண்டா மாயனே, பொன் இருக்கிறவன் பொண்ணைக் கட்டுவான், இல்லாதவன் பாத்துக்கிட்டு நிப்பான். அதுக்கான வழியைப் பாரு. அதை விட்டிட்டு சண்டைக்கு நின்னா எப்படி?"

"ஒன் தலை! சைத்தானே, ஒன்னெ நான்...."

"என்ன, கொன்னுப்பிடுவியா? ஜாக்கிரதை! நான் ஒண்ணும் நம்பூதிரியில்லே. அந்த நெனைப்பிலே எங்கிட்ட வராதே!"

அகமதுண்ணியின் இந்த வார்த்தைகள் நிலைமையை வெகுவாக மாற்றிவிட்டன. அது ஒரு போருக்கு அழைப்பு விடுப்பது போலத்தான் மாயனின் செவியில் வந்து விழுந்தது. அது அவனை மட்டுமல்ல, அவனுக்கு முன்னதாக வாழ்ந்து கழிந்த தலைமுறை களையும் சவாலுக்கு அழைப்பது போலிருந்தது. அந்தக் கேள்வி குடும்பப் பரம்பரையின் அஸ்திவாரத்தையே சென்று தாக்கிற்று. அந்தக் கதை மாயனுக்கும் தெரிந்ததுதான். அகமதுண்ணி அதைப் பல தடவை பல இடங்களில் பிரஸ்தாபிக்கிறார்.

"அந்த வீட்டோட அஸ்திவாரத்தை நான் பார்த்தவன்தான்" என்றுதான் அகமதுண்ணி சொல்லுவார். அதைத் தொடர்ந்து அந்த நீண்ட கதையைக் கிழவர் விவரிப்பார்:

"ரொம்பக் காலத்துக்கு முந்தினது. அப்போது அந்தக் குடும்பம் செல்வாக்குடன் இருந்த காலம். பார்க்கிற இடமெல்லாம் அவர்களுடைய பூர்வீகச் சொத்தாகவே இருந்தது. இவ்வளவு பெருத்த சொத்து எப்படிச் சேர்ந்தது என்று யாருக்கும் தெரியவில்லை. ஆண்டவன் அருள் செய்தால் யார்தான் சொத்து சேர்க்க முடியாது! அந்தக் குடும்பத்தைப் பொருத்தவரை ஆண்டவன் மட்டுமல்லாது, அரண்மனைகளில் தம்புராட்டிகளும்

அவர்களுடைய பிள்ளைகளான தம்புரான்களும் அருள் செய்தார்கள் என்று சொல்லக் கேள்வி. அனேக மரக்கால் நெல் குத்தகையாகவும், மீதி வார ாகவும் வந்து சேரும். தலையாரியான இட்டிரி நம்பூதிரி அன்றைக்கு மகா சாமர்த்தியசாலியாக இருந்தார். குளி, தேவாரம், சாப்பாடு - இதிலெல்லாம் நல்ல நியமம். அதிலும் அவர் நாட்டாண்மைக்காரர். எதிலும் எந்தக் குறைவுமில்லை.

"நம்பூரச்சனுக்கு பொண்டாட்டிங்க நாலு பேர். அதிலே ரெண்டு பேர் நம்பூதிரிப் பொண்ணுங்க. இன்னொண்ணு வாரஸ்ய குலம். அப்புறம் இன்னொண்ணு தம்புராட்டி குலம்.

சந்தான வாரிசுக்கான இரண்டு நம்பூதிரிப் பெண்களையும், வெறும் பொழுதுபோக்குக்காக இரு வேறு குலப் பெண்களையும் வைத்திருக்கும் அந்தத் தலையாரியான இட்டிரி நம்பூதிரியின் பெயரைச் சொன்னாலே போதும், எல்லோருக்கும் மரியாதையும் பயமும் ஏற்பட்டுவிடும். எங்கே திரும்பினாலும் அவருடைய அதிகாரம் செல்லுபடியாயிற்று. "இது தவிர போகிற பக்கமெல்லாம் வைப்பாட்டிங்க வேறே. ஆனா அதெல்லாம் கணக்கிலே சேர்த்தியில்லேன்னு வச்சிக்கிடுங்க. வெள்ளம் வந்தாலும் வரும், போனாலும் போகும். இப்படியெல்லாம் இருந்தாலும் அவர் கவலைப்பட்டதில்லை. என்ன! இப்படியெல்லாம் இருந்தாலும் அவரு பெரிய மனிதர்தானே?" என்று அகமதுண்ணி கேட்டார். கேட்டுக்கொண்டிருந்த எவரும் நம்பூதிரியின் யோக்கியதையை மறுக்கவில்லை. அந்த நம்பூதிரி அளவுக்கு மனைவிமார் கொண்டிருந்த முஸ்லீம் பிரமாணிமாரையும் அவர்களுக்குத் தெரியும் என்றதனால் சிலர் சொன்னார்கள் : "அந்த நம்பூதிரிதான் சரியான ஆம்பிளே!"

அவ்வாறு இட்டிரி நம்பூதிரிப்பாடு ஓர் ஆணாக வாழ்ந்திருந்த காலத்தில் ஓர் ஆபத்து நேர்ந்தது. வீட்டிலும் சுற்றுவட்டாரத் திலும் ஒரு கிசுகிசுப்பு. பேசிப் பேசி அது ஊர் முழுக்கப் பரவிவிட்டது. ஆனாலும் சம்பந்தப்பட்டவர் இட்டிரி நம்பூதிரிப்பா டாக இருந்ததனால் எல்லோரும் காதுக்குள்தான் கிசுகிசுத்துக் கொண்டார்கள். குடியிருப்பை இழக்கவோ, ஜாதிப் பிரஷ்டம் செய்யப்படவோ யாரும் விரும்பவில்லை! கொஞ்சம் இக்கட்டான நிலைமையாக இருந்தது. ஒரு கள்ளத் தொடர்பான விஷயம். உண்மையாகவே, கள்ளத் தொடர்பு இருப்பதைவிட, அப்படி ஒரு கள்ளத் தொடர்பு இருப்பதாகப் பேசப்படுவது

அதிபயங்கரமானது. அது வேகமாகப் பரவும். இந்தக் கள்ளத் தொடர்பு விவகாரம் இட்டிரி நம்பூதிரியின் மனைவியைப் பற்றியது.

இட்டிரி நம்பூதிரியின் மனைவியான பாப்பி இயல்பாகவே அடக்க ஒடுக்காமானவள். பக்தை.

"நான் இந்த பூமியில் எப்படி வந்து சேர்ந்தேன்?" என்றொரு முகபாவம்தான் அவளுக்கு எப்போதும். பாசுரங்கள் பாடுவதும், ஜபமாலை உருட்டி ஜபிப்பதும், அடுக்களையில் வேலை முடிப்பதுமாக அந்த அமைதியான வாழ்க்கை நடப்பதாகத்தான் மூத்த மனைவிமாரின் அபிப்ராயம். உலகம் பாப்பியைப் பார்த்ததில்லை; பாப்பியும் உலகத்தைப் பார்த்ததில்லை. வீட்டின் வடக்குக் கட்டைத் தாண்டி அவள் எப்போதாவது வெளியே போக நேருமானால், அது கோயில் குளங்களில் சாமி தரிசனத்துக்காகத்தான் இருக்கும். அந்த வாழ்க்கை ஒரு வகையில் தவமாகத்தான் இருந்தது -- எதற்காக என்று தபஸ்வினிக்குக் கூடத் தெரியாது. சுருக்கமான தேவைகள், சுருக்கமான அபிலாஷைகள், சுருக்கமான எதிர்பார்ப்புகள் -- ஓர் ஒற்றை ஈரத் துணியை வயிற்றுடன் சேர்த்துக் கட்டி மரத்துப் போகச் செய்யும் வாழ்க்கை. பாப்பிக்கு எப்போதும் சந்தேகம்தான். தலைமுடியைக் கோதியாயிற்றா?....நன்றாக சுத்தம் செய்தாயிற்றா? கெடுதலாக ஏதாவது பேசிவிட்டோமா?

அப்படி அப்போதெல்லாம் அவள் பிரார்த்தனையும் செய்வாள்: "கிருஷ்ணா....நல்லதே காட்டுப்பா!"

அப்படியிருந்தும் பாப்பி கெட்டுப்போனாள் என்றுதான் வதந்தி. உண்மை யாருக்கும் தெரியவில்லை. வீட்டில் எடுபிடி ஆள் ஒருவன் உண்டு. எடுபிடி வேலையும், அடாவடித் தனமும்தான் அவனுக்குத் தொழில். நம்பூதிரியின் மெய்க்காப்பாளன். அதிலும் இரண்டாவதாகச் சொன்ன அடாவடித்தனம்தான் முக்கிய வேலை. ஜல்லிக்கட்டு காளையைப்போல வாட்டசாட்டமாக இருந்த அவனை மல்யுத்தத்துக்காகவே நம்பூதிரிப்பாடு வளர்த்து வந்தார்.

நம்பூதிரி ஊரான தேச்சேரியின் மல்யுத்த கோஷ்டியில், ராரிச்சன் இருந்தாலே போதும், வெற்றி எப்போதும் தேசச் சேரிக்குத்தான். காட்டெருமை அளவு பலம்; மிருகத்தைவிட அறிவு- இதுதான் அந்த ராரிச்சன். வைக்கோல் போரைச் சுற்றிக்

கொத்திப் பொறுக்கி அவன் வாழ்ந்து வந்தான். யானைக் குட்டிக்கும் அவனுக்கும் வேறுபாடு இருக்கத்தான் செய்தது. தொடுகறி இல்லாமல் யானை சோறு சாப்பிடும்; ராரிச்சன் முருங்கை இலைக்கறியோடு உருட்டித் தள்ளுவான். யானைக்கு விலை உண்டு; இவனுக்கு விலை கிடையாது.

இந்த ராரிச்சனையும், பாப்பி தம்புராட்டியையும் சேர்த்து குளக்கரையில் பார்த்ததாகவோ, பார்த்ததாகச் சந்தேகம் தோன்றியதாகவோ, பார்ப்பதற்கு வாய்ப்பு உண்டென்ப தாகவோ, இந்த இவருடைய நிழல்களும் பரஸ்பரம் முட்டிக் கொண்டதாகவோ- இப்படிப் பல வகையான வதந்திகள் எழுந்தன. இத்தகைய வதந்திகள் எங்கிருந்து கிளம்பின என்பது மட்டும் மர்மமாகவே இருந்தது. யாருக்கும் தெரியவும் இல்லை. கடைசியில் இட்டிரி நம்பூதிரிப்பாடின் காதில் இதைப் போட்டது பாப்பியின் சக்களத்தியான இரண்டாம் மனைவிதான் ஆலோ சித்து நம்பூதிரியாரிடம் சொல்லிவிட்டதாக வதந்தி: எப்படியோ அது நம்பூதிரியின் காதுக்கு எட்டியது. நம்பூதிரிப்பாடுக்குக் கோபம் மூண்டது. நம்பூதிரிப்பாடு நான்கு தடவை அங்கும் இங்கும் நடந்தார். ஒவ்வோர் அடி வைத்தபோதும் அந்த அரண்மனையின் அஸ்திவாரம் அதிர்ந்தது. உடனே ராரிச்சனைக் கூப்பிட்டுச் சொன்னார்: "டேய், ராரிச்சன்! இப்பவே, உடனே வெளியே போ."

"சாமி, போகச் சொல்லாதீங்க, நான் தப்பே செய்யலீங்க."

"மூச்சுக் காட்டாதே இப்பவே இந்த ஊரைவிட்டு வெளி யேறணும். போகலேன்னா...ம்..உன் போக்கிரித்தனத்தை இங்கேயேவா காட்டறே? மோசக்காரா!"

அதற்குப் பிறகு ராரிச்சன் எதுவும் பேசுவதற்கில்லை. அவன் அந்தப் படியை மட்டுமல்ல, ஊர் எல்லையான மலையையும் தாண்டிப் போய்விட்டான்.

அது ஒரு பயங்கர நாளாக இருந்தது. நம்பூதிரிக்கு கோபத்தால் தலைகால் புரியவில்லை. செங்கதிரோன் மேற்கில் அடிவானத்தை அடைந்தான்; நம்பூதிரி அந்தப்புரமான வடக்குக் கட்டுக்குச் சென்றார். அமைதியாக ஜபித்துக் கொண்டிருந்த பாப்பியின் தலைமுடியை எட்டிப் பிடித்திழுத்து ஆவணப் பலகையால் ஒரு போடு போட்டார்.

"கடவுளே!" என்று அலறித் துடித்து பாப்பி கீழே விழுந்தாள். அவளுடைய நெற்றிப்பொட்டிலிருந்து இரத்தம் வழிந்தது. இதைப்

பார்த்த நம்பூதிரியின் தாயார் அலறிக்கொண்டு ஓடி வந்து, "என்ன மகனே, என்ன பாவ காரியம் பண்ணிட்டே?" என்று சொல்லியவாறு தடுத்தாள். ஆனால் வெறிகொண்டிருந்த நம்பூதிரி அதைக்கேட்டுக் கொள்ளவில்லை.

பட்--க்கும், பட்---க்கும் --- அடியும் உதையும்; உதையும் அடியும். அந்த உதைபட்டு பாப்பி அங்குமிங்கும் உருண்டாள். இரத்தம் படிந்த ஓர் உயிர் நம்பூதிரியின் காலடியில் கிடந்து பந்தாக உருண்டது. கடைந்தெடுத்த சங்கு போன்றிருந்த அந்தக் கழுத்தில் அந்த நிலையிலும் நாடித் துடிப்பு இருந்தது; அங்கே இறுகக் கட்டியிருந்த தாலி துடித்தது; 'என்னைப்பார், என்னைப் பார்' என்று அது சொல்வதுபோல் இருந்தது. அதைப் பார்த்த போது, ஒரு சூத்திரன் கட்டித் தழுவிய அந்தக் கழுத்தை நோக்கியபோது நம்பூதிரிக்கு மீண்டும் வெறி கிளம்பிற்று.

"நாசமாப் போ..." அவர் காலெடுத்து அந்த நெஞ்சின்மேல் வைத்தார். கழுத்துக் குழியில் பெருவிரலை ஊன்றினார். ஒரு துடித்தல், கைகால் உதறல், க்ள க்ள என்று தொண்டையிலிருந்து ஒரு சத்தம்; அதற்குப் பிறகு ஒன்றுமில்லை. நம்பூதிரிப்பாடு பாப்பியின் பூணுலைச் சரிப்படுத்திக்கொண்டு அவர் வெளியேறியபோது, பதைப்புடன் முணு முணுத்தார்: "ஒரு தரம் குளிக்கணும்."

அன்று நள்ளிரவில் வீட்டுப் பின்புறம் வடக்கு மூலையில் மண் தோண்டலும் குழி வெட்டலும் நடந்ததாகச் சொல்லிக் கொண்டார்கள். சோர்ந்துபோன அந்த அற்ப வாழ்க்கையின் முடிவைப் பற்றி எந்தக் கேள்வியும் எழவில்லை. கேட்பதற்கு யாரிருந்தார்கள்?

"அங்கே போலீசும் சர்க்காரும் எல்லாமும் நம்பூதிரி ஐயா தான்" என்று அகமதுண்ணி சொன்னார்.

ராரிச்சன் நேரே மேற்கே போனான். ஒரு வாரம் பிச்சை எடுத்து அலைந்து திரிந்தான். அடுத்த வாரம் எங்கேயோ போய் முஸ்லீமாக மாறி தொப்பியும் அணிந்து கொண்டான்.

"இஸ்மாயில்னு அவன் பேரு மாத்திக்கிட்டான். இங்கே நின்னா அங்கே தொடும். அவ்வளவு உயரம். ராத்திரியில் தனியாப் பார்த்தா குடல் அறுந்துபோகும்!" என்பதுதான் அகமதுண்ணியின் விளக்கம்.

இஸ்மாயிலுக்கு பாப்பியோடு முன்பு தொடர்பு இருந்ததா என்பது தெரியாதுதான். ஆனால் நம்பூதிரிப்பாடு அவளைக் கொன்றுவிட்டார் என்று அறிந்தது முதல் ஆக்ரோஷமான பிடிப்பு அவள் மீது உண்டாயிற்று. இறந்த பெண்மணியின் ஆத்மாவினோடுள்ள அனுதாபத்தினால், அது கூர்மையான தாகவும் இருந்தது. அந்தப் பிடிப்பு வளர்வதற்கு ஏற்ப நம்பூதிரிப்பாடு மீது பகையும் வளர்ந்து வந்தது. அவன் பல தடவை கிழக்கே மலைமேல் வந்து நின்றுகொண்டு அவருடைய வீட்டின் முகட்டைப் பார்த்துக்கொண்டிருப்பான். முரட்டுக் காட்டுக் கொடியைப் பிடுங்கி ஒடித்து, கடித்துத் துப்பிவிட்டுத் திரும்பிப் போவான். இவ்வாறு நாட்கள் கழிந்தன. எல்லாம் அமைதியா யிற்று; சமாதானமாயிற்று.

ஒருநாள் இரவு நம்பூதிரிப்பாடு குளியலறைக்கு லாந்தர் விளக்குடன் சென்றார். நள்ளிரவு கடந்தும் திரும்பி வரவில்லை. அதற்குப் பிறகுதான் தேடிப் பார்த்தார்கள். வேலைக்காரர்கள் நாலாபுறமும் தேடிச் சென்றார்கள்.

குளியலறையிலிருந்து பத்து கஜதூரத்தில் நம்பூதிரி விழுந்து கிடந்தார். "சத்தமும் இல்லே, அசைவும் இல்லே. பூத்திருக்கு. துடிப்பு நினனிடுச்சி. இனிமே நடக்க வேண்டியது என்ன இருக்கு!" என்று தான் அந்தச் சம்பவத்தைக் குறித்து அகமதுண்ணி விவரித்தது.

"கேசு விசாரணை எல்லாம் நடந்திச்சி. ஆனா தும்பும் இல்லை. என்ன? அந்த இஸ்மாயில் இந்த மாயனோடே தாத்தாவுக்குத் தாத்தாவாக்கும்."

இஸ்மாயில் அதற்குப் பிறகு கடல் கொள்ளைக்காரர்கள் கூட்டத்தில் சேர்ந்துவிட்டான் என்றும், அவனுடைய மகன் குன்னம்குளத்தில் நடந்த ஒரு பெரிய கொள்ளையில் பங்காளியாக இருந்தான் என்றும் நிறைய கதைகள் உண்டு.

ஆனால் மாயனின் அப்பா ஒரு கொள்ளைகூட நடத்தியதில்லை; கொலை பாதகமும் செய்ததில்லை. மிளகு வியாபாரம் செய்து கொஞ்சம் பணம் சம்பாதித்து, அதை வைத்து ஒரு நிலம் வாங்கினான். அதையும் யாரோ ஏமாற்றிப் பறித்துக் கொண் டார்கள். அப்படி எல்லாமே இழந்த நிலையில் இருக்கும் போதுதான் மாயன் பிறந்தான். பிறந்து அதிக காலம் ஆவதற்கு முன்னாலேயே அம்மாவும் அப்பாவும் இறந்துபோனார்கள். ஒரு

பெண்ணும் பிறந்திருந்தாள்; அவளைக் கட்டிக் கொடுத்தி விட்டிருந்தார்கள். ஒரு குடிசையில் மாயன் மட்டும் தனிந்திருந்தான். மேலே பார்த்தால் ஆகாசம், கீழே பார்த்தால் பூமி. உழுவயலில் தொழு அடிப்பதிலும், தெம்மாங்கு பாடுவதிலும் மாயன் கெட்டிக்காரனாக இருந்தான். மாயனைப் பொருத்தவரை வாழ்க்கை சோம்பலாகவும், சித்தம் போக்கு சிவம் போக்காகவும் கழிந்திருக்க வேண்டியது. அப்போதுதான் உம்மாச்சு மீது மாயனுக்கு காதல் ஏற்பட்டது. அப்போது அவன் நினைத்துக் கொண்டான்: "இப்போ பணம் சேர்த்தாகணுமே!"

இந்த நெடுங்கதை முழுவதும் அகமதுண்ணியின் அந்த ஒரு வசவில் அடங்கிவிட்டதாக மாயனுக்குத் தோன்றிற்று. உம்மாச் சுவை இழந்ததனால் ஏற்பட்ட இதயப் புண்ணில் உப்புநீர் தெளித்ததுபோல் இருந்தது அகமதுண்ணியின் பேச்சு. அவனுடைய நாசித் துவாரம் விடைத்தது; புருவம் நெளிந்தது; நெஞ்சு நிமிர்ந்தது; காற்றும் ஒதுங்கி வழிவிட்டு வீசியதாகத் தோன்றிற்று.

"நாக்கை அடக்கிக்கோ!" மாயன் கர்ஜித்தான்.

"அடக்கலேண்ணா?"

"அடக்கி வைப்பேன்!"

"அது உன்னாலே முடியாது."

"முடியாது?"

"நீ இல்லே, உன் அப்பன் இல்லே, அப்பனுக்கு அப்பன் அந்த நம்பூரச்சனைக் கொன்னவன் வந்தாலும் இந்த அகமதுண் ணியை அடக்க முடியாது..."

"படார்..." --- மாயனின் முரட்டுக் கை நரைத்த தாடி மீசை வளர்த்த அகமதுண்ணியின் முகத்தைத் தாக்கிற்று.

"ஹூயின்றே றப்பே!..!..." என்ற அலறலோடு கிழவர் ஆடியாடி கரையின் மீது மோதிச் சரிந்தார்; அங்கிருந்து தரையில் சரிந்து விழுந்தார். மூக்கில் பாதி மண்ணில் புதைந்தது. நெற்றியில் இரத்தம் கசிந்தது. தொண்டையிலிருந்து ஒரு கனைப்பு.

"ஒன் கொழுப்பை அடக்கணும்." மாயன் அலறினான். "என் அப்பன் தாத்தாவைப் பத்திப் பேசறதுக்கு நீ ஆளில்லே..!" வெறுப்புடன் கிழவரை ஒரு தடவை முறைத்துப் பார்த்துவிட்டு மாயன் அழுத்தமாக மிதித்து நடந்தான். சட்டென்று காலில்

ஏதோ தட்டுப்பட்டது. கிழவரின் தலையிலிருந்து நழுவி விழுந்த தொப்பியும் துண்டும். மாயன் அவற்றை எடுத்து, பிய்த்துக் கிழித்து கிழவர் மேலேயே விட்டெறிந்துவிட்டு நடந்தான். "ஹம்க்கு, காலிப்பய, சைத்தான்!"

சரித்திரக்காரர் அப்போதும் அங்கேயே கிடந்து முனகிக் கொண்டும் அழுதுகொண்டும் இருந்தார்: "உன் கதையும் தெரியும்.... உன் தாத்தாவோடே கதையும் எனக்குத் தெரியும்..."

கரையின் மேலிருந்து பொன்னரளிப் பூக்கள் ஒன்றுகூடி மலர்ந்தன.

# 4. மூப்பில் நாயர்

சாப்புண்ணி பிறந்தது ஒரு பழைய நெல் களஞ்சிய அறையில். அவனுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து அந்த வீடு பாழடைந்து தான் இருந்தது. வீட்டின் உத்தரக்கட்டைகள் அனைத்தும் கறையான் அரித்து இற்றுப் போயிருந்தன. அந்த இடங்களில் பாக்கு மரத் தப்பைகள் வைத்து, கொச்சைக் கயிற்றால் கட்டியிருந்தது. ஓடுகள் அனைத்தும் உடைந்திருந்ததனால் மழை ஒழுக்கைத் தடுப்பதற்குக் கமுகு மட்டைகள் தடுப்பாகச் செருகப் பட்டிருந்தன. அதையும் மீறி ஒழுகிய மழைத் தாரைகள் முற்றத்திலும், இடைகழியிலும் உருவாக்கிய பள்ளங்களில் சாப்புண்ணி கோலிக்குண்டு விளையாடுவான். அந்தக் குழிகளை அவனுடைய விருப்பத்திற்கு மாறாக அவனுடைய அம்மா மண்ணும் சாணமும் குழைத்துப் பூசிய காலம் சாப்புண்ணிக்கு நினைவிலிருந்தது.

மூன்று அறைகளும் இடைகழி ஒன்றும் முற்றம் ஒன்றுமாகச் சேர்ந்ததுதான் அந்த வீடு. எல்லா அறைகளுக்கும் மரப்பலகைத் தட்டி இருந்தது; அவற்றின் மீது கல்லால் கட்டியது போல குளவிக் கூடுகள். குளவிக் கூடுகள் செல்வச் செழிப்பைச் சுட்டிக் காட்டும் என்பது சாப்புண்ணியின் அம்மாவின் நம்பிக்கை. அந்தி வேளையானதும் திறந்த ஜன்னல் வழியே வந்துபோகும் வௌவால்களைக் குறித்து அவனுடைய அம்மா குஞ்சுக்குட்டியம் மைக்கு நல்ல அபிப்பிராயம் இல்லை. ஆனால் அவற்றைத் தடுத்து நிறுத்த வழிவகையும் ஏதுமில்லை. சில ஜன்னல் பலகைகள் கறையான் அரித்தும், சீல்கள் உடைந்தும் போயிருந்தன. ஆனாலும் ஒரு தற்காலிக முறை என்ற நிலைக்கு, அவர்கள் முடைந்த ஓலைகொண்டு அந்த ஜன்னல்களை அடைத்துக் கட்டிவிட்டார்கள். இப்படித்தான் இருந்தது என்றாலும் குஞ்சுக்குட்டியம்மைக்கு தன் வீட்டைப் பற்றி ரொம்பப் பெருமைதான்; அதைக் குறித்து ரொம்பவும் மதிப்பு.

ஒரு பெருமூச்சுடன் அந்தப் பெண்மணி சொல்லிக்கொள்வதைப் பல முறை கேட்கலாம்: "என்னவெல்லாமோ நடந்த ஒரு இடமாக்கும் இது!"

அந்தக் களஞ்சிய அறை எப்படி உண்டானது என்று தெரிந்தால் அப்படிச் சொன்னது சரிதான் என்று தோன்றும்.

"இந்த ஊர்லே ஒரு பெரிய குடும்பமாக்கும் இது." குஞ்சுக்குட்டியம்மை அந்த அறையைக் காண்பித்துக்கொண்டு பல தடவை அதையே சொன்னதுண்டு.

அப்போதெல்லாம் சாப்புண்ணி எதுவும் புரியாமல், அந்த மண் தரையை விழித்துப் பார்த்துக்கொண்டு நிற்பது வழக்கம்.

இன்று கற்களையும் சேர்த்துத் தோண்டி எடுத்து விற்று முடித்த பின் அந்த அறைத் தளத்தின் ஒரு மூலையில் சில நீல ஊமத்தைச் செடிகள் பூத்துக் கிடந்தன. சுற்றுவட்டாரத்திலிருந்த ஓரிரண்டு காசநோய்க்காரர்கள் காய்ந்த நிலையிலான நீல ஊமத்தம் பூக்களை புகைபிடிப்பதற்காகப் பறித்துச் செல்வதுண்டு. மற்றொரு மூலையில் குஞ்சுக்குட்டியம்மை கொஞ்சம் குருத்தோலைப் பயறும் வெண்டையும் நட்டு வைத்திருந்தாள். இரண்டும் செழித்து வளர்ந்தன. வடக்கே இருந்த அறைத் தளத்தில் அரிப்பூச் செடிகள் புன்னகை பரப்பிக் கொண்டிருந்தன. மேலடுக்களையில் நாணம் குலுங்க தொட்டாற்சுருங்கிச் செடிகள் குடியேறியிருந்தன.

"நான் சமைஞ்சதுக்கு அங்கே வச்சிதான் விருந்துக்கு புழுக்கல் கறி படைச்சது!" குஞ்சுக்குட்டியம்மை ஒரு பெருமூச்சு விட்டுக் கொள்வாள்.

ஆடலோடகம் என்ற மூலிகைச் செடி இப்போது வளர்ந்திருக்கும் தெற்கு வாசல்புறம்தான் கண்டுண்ணி மாமனின் படுக்கையறை. அம்மாடி! கண்டுண்ணி மாமனைப் பற்றி நினைக்கும்போது குஞ்சுக்குட்டியம்மைக்கு இன்றும் தொடை நடுக்கம்! அவ்வளவு பயங்கரமானவர்.

"வெளுத்தும் தடித்தும் வட்ட முகமும் கொண்டிருந்த ஒரு சூர புருஷனல்லவா அவர்! ஒன்றரைச் சாண் மூக்கு! இரண்டு சாண் காது! குகையிலிருந்து புறப்படுவது போல 'பூம் பூம்' என்றொரு சத்தம்! அவருக்கு எதிரில் சாதாரணப்பட்டவர்கள் நிற்பதில்லை. கிடுகிடுவென்று நடுங்குவார்கள்! அவருக்கு மூத்தவர் அதைவிடப் பெரிய ஆள்னு சொல்லணும்... எல்லாம் போயிரிச்சி!"

கடந்த காலத்துப் பிரதாபங்களையும் பெருமைகளையும் பற்றிச் சொல்லத் தொடங்கினால், குஞ்சுக்குட்டியம்மைக்கு அதற்குப் பிறகு உணர்வில்லாத மாதிரி ஆகிவிடும். அவள் அந்தக் கால கட்டத்திற்கே சென்று வாழ்வதாக பிரமை தோன்றும். முக்கியமான சுவடுகள் பதித்த ஒரு குடும்பம் அது. சாவுக்கு அஞ்சாத தற்கொலைப் படைகொண்ட வள்ளுவக்கோனாதிரிப் படையை நடத்திச் சென்றவர்கள் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். வீராதி வீரர்களான நாயர்களைப் பெற்றெடுத்த குடும்பம் அது. சாமூதிரியின் நிலபாடு விளக்கை மையமாக வைத்து, சற்றும் சளைத்துப் பின்வாங்காமல் ஒற்றைக்கு ஒற்றை நின்று சண்டை செய்து மரணம் அடைந்தவர்கள் அந்தப் பரம்பரையில் பிறந்ததுண்டு. குஞ்சுக் குட்டியம்மையின் சின்ன வயதுக் காலத்தில்கூட துருப்பிடித்த சில வாள்களும், கேடயங்களும் அந்த வீட்டின் மாடியில் வைத்துப் பூஜிக்கப்பட்டதுண்டு. மாடியை இடித்தபோது அவையெல்லாம் போய்விட்டன போலும். பிற்காலத்தில் சேரிக்கல்லு காரியஸ்தர்களாகவும், அரண்மனையில் தலையாரிகளாகவும் நல்ல பெயர் எடுத்தவர்கள் இருந்தார்கள். அப்படிப்பட்டவர்களில் ஒருவர்தான் தலவெட்டத்து மூப்பில் நாயர். அவர் பல நியாயங்களை எடுத்துரைத்து ஊர்க்காரர்களைக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார். அவரென்றால் எல்லோருக்கும் பயம்தான். அதனால் அவருக்கும் எல்லோர் மீதும் ஆதிக்கம் செலுத்த முடிந்தது.

"அந்தக் காலத்திலே நெலமை எப்படி இருந்திச்சு தெரியுமா, மகனே! கோலோத்து வீட்டுப் பெரியவரும் மீசான்பள்ளி நம்பூதிரியும் மட்டும்தான் இந்தப் படிக்கட்டைத் தாண்டி உள்கட்டுக்கு வருவாங்க."

"மத்தவங்க வந்தா என்னம்மா?" - சாப்புண்ணி ஆர்வத்துடன் கேட்டான்.

"படி ஏறினாலா? ஒரு தடவை கொடுங்கலூர்க்காரன் - ஒரு மகமதியன் பெரிய வீட்டுக்குள் ஏறி, சட்டைபண்ணாமல் இந்தப் படிக்கட்டைத் தாண்டி உள்ளே வந்தான். அப்போ கண்டுண்ணி மாமனின் அண்ணன் சாப்புண்ணி மாமன்தான் குடும்பத் தலைவனான கரணவர். அவருக்கு இது பொறுக்கலே. பின்னாலேயே போய் மகமதியனைப் பிடிச்சிக் கீழே தள்ளி நாலு சாத்து சாத்தினார். ஒரு மாசத்துக்கு அந்த மகமதியனை எண்ணெய்ப்

பாத்தியிலே கிடத்தி வைத்தியம் பண்ண வேண்டியிருந்திச்சி. அந்தச் சாப்புண்ணி மாமன் பேரைத்தான் உனக்கு வச்சிருக்கு, மகனே."

தன்மானம் கொண்ட அந்த மூதாதையைப் பற்றி சாப்புண்ணி கொஞ்ச நேரம் கற்பனையில் மூழ்கியிருந்தான். அவருக்கும் ஒன்றரைச் சாண் நீள மூக்கும், இரண்டு சாண் காதுகளும், வட்ட முகமும், நீண்ட கைகளும் இருந்திருக்க வேண்டும். அவரைப் பற்றிக் கொஞ்ச நேரம் அப்படி சிந்தனையில் ஆழ்ந்திருந்தபோது, சாப்புண்ணியும் தன் மூக்கைத் தடவிப் பார்த்துக்கொண்டான். கஷ்டம்! அது ஒரு சின்ன புளியங்காய் அளவே இருந்தது. தலவெட்டத்து நாயருக்கு இவ்வளவு சின்ன மூக்கா!

சாப்புண்ணியின் பிறப்பைப் பற்றிச் சொல்வதற்கும் குஞ்சுக்குட்டியம்மைக்கு நிறைய விஷயங்கள் இருந்தன. "கல்யாணம் ஆகி ஒரு வருஷத்துள்ளாகவே கணவனைப் பிரித்துவிட்டாங்க. என்மேலே ஒரு தப்பும் இல்லே. வீட்டுப் பெரியவங்களோடே அகம்பாவம்!"

அந்தப் பெண்மணி கணவனைப் பற்றிக் கொஞ்சம் விவரித்தாள். பின்னர் தொடர்ந்தாள்: "அப்படி இருக்கும்போது ரெண்டாவதா நம்ம சங்குண்ணியார் சம்பந்தம் பேச ஆரம்பிச்சாங்க."

"எந்த சங்குண்ணியார்?" சாப்புண்ணி வினவினான்.

"தயிரின்குடத்து சங்குண்ணியார். பணமும் நெல்லும் தாராளமா இருந்திச்சு. ஆனா ஜாதி ஒரு மாதிரி. கண்டுண்ணி மாமனுக்கு கோபம்."

"எதுக்கு?"

"ஜாதியைச் சேராத சம்பந்தம் பேசலாமா? அவரு கோபமாச் சொன்னாரு: ஆனை மெலிஞ்சாலும் தொழுவத்திலே கட்ட மாட்டாங்க - என்னைக்கும், அப்படீன்னு. சங்குண்ணியார் வேறே இடத்திலே சம்பந்தம் பார்க்கவும் ஆரம்பிச்சாரு. அதிலே வந்தவங்கதான் அந்த இன்ஸ்பெக்டர் ராமன் குட்டியும் தரசர் மாதவனும்."

"அவங்க பாக்கியம்!"

"அது ஏன்? இன்ஸ்பெக்டரும் தரசரும் ஆயிட்டா ஜாதி சரியாயிருமா?... அதிருக்கட்டும். அதுக்குப் பிறகுதான் உங்க அப்பா

சம்மதிச்சி என்னைக் கட்டிக்கிட்டது; அவரு எனக்கு ரெண்டாவது கணவனா அமைஞ்சது. அப்போ அப்பாவுக்கு சிப்பாய் உத்தி யோகம் இல்லே. கறுத்து, உருண்ட, கடைஞ்செடுத்த தேக்கு மாதிரியான சரீரம். காதில் சிகப்புக் கல் வைத்த கடுக்கன். தலை நிறையக் குடுமி. குடும்ப நெலமை அப்பவும் ரொம்ப மோசந்தான். இருந்தாலும் ஒசந்தவங்க நாயர்தான்; பழைய பரம்பரைக் காரங்க."

அந்தக் காவல்காரச் சிப்பாயை இரண்டாம் முறையாகத் திருமணம் செய்து கொண்டதன் மூலமாக குஞ்சுக்குட்டியம்மைக்கு மூன்று குழந்தைகள் பிறந்தன. முதல் இரண்டு பிள்ளைகளும் இறந்துபோனார்கள். கடைசிப் பிள்ளைதான் சாப்புண்ணி. அவனுக்கு நினைவு தெரிந்தவரை அந்த வீட்டில் ஆண் என்ற முறையில் ஒருவர்தான்; ஒரு தாய்மாமன். அவர்தான் தலவெட்டத்து மூப்பில் நாயர். அரண்மனையில் நெல் அளப்பதுதான் அவருக்கு வேலை. குத்தகையும், வாரமுமாக அனேக மரக்கால் நெல்லை அவர் அளந்து தர வேண்டும். அதற்கு மாதத்திற்கு மூன்று மரக்கால் நெல்லும் ஐந்து பணமும் சம்பளமாகக் கிடைக்கும். அத்துடன் குத்தகைக்காரர்களிடமிருந்து காய்கறியும் கையூட்டும் 'அற்ப சொற்பம்' தட்டிக்கொள்வார். அரண்மனைக்காரர்களுக்கு இதில் ஏதும் அபிப்பிராய பேதமில்லை. இதையெல்லாம் சேர்த்து அந்தக் குடும்பம் சேதமில்லாமல் நடந்துகொண்டிருந்தது. ஒருநேரம் சோறு, ஒரு நேரம் கஞ்சி – அப்படி.

"ஏம்மா, நம்ம வீட்டிலே ரெண்டு நேரமும் சோறு சமைக்கல?" சாப்புண்ணி அம்மாவிடம் கேட்பதுண்டு. இப்படிக் கேட்கும் போது குஞ்சுக்குட்டியம்மையின் கண்கள் நிறைந்துவிடும்.

"அடுக்களையில் சோறு குறையாத குடும்பமா இருந்ததுதான் மகனே, இது!" அவள் அந்தப் பழைய சௌபாக்கியங்களைச் சொல்லிப் புலம்புவாள். "எத்தனை ஆளுங்களுக்கு சோறு பொங்கிப் போட்ட வீடு இது, தெரியுமா?" அந்த சமையற்கூடத்தைச் சுட்டிக் காட்டி குஞ்சுக்குட்டியம்மை சொன்னாள். உண்மைதான்! கண்டுண்ணி மாமனின் காலத்தில் பல கல்யாணங்களும் சடங்குகளும் செய்து வைத்த குடும்பம்தான் அது. பத்துப் பேருக்காவது சாப்பாடு போடாமல் ஒரு பிறந்த நாள் அந்தக் குடும்பத்தில் கழிந்ததில்லை. மற்றும் பகவதி பூஜையான தாலப் பொலி, பறயெடுக்கல் முதலிய உற்சவங்களிலெல்லாம் முதல்

மரியாதை தலவெட்டத்து நாயர்களுக்குத்தான் என்றிருந்தது. அதற்காக வாரி இறைத்துப் பணத்தைச் செலவு செய்வதுண்டு.

"அப்போவெல்லாம் சுண்டுண்ணி மாமனுக்கு என்ன வேலை?" சாப்புண்ணி கேட்டான்.

"வேலையா!" அந்த அம்மா ஒரு கசப்பான புன்னகையோடு தொடர்ந்தாள்: "அந்தக் காலத்திலே நம்ம வீட்டிலே இருந்தவங்க யாரும் வேலை செய்றதில்லே; செய்யணுமா? இந்தக் குடும்பத்த வங்க வேலை செய்ற அவசியம் ஏற்படட்டதில்லே. வேலை ஏவுறதுதான் அவங்க வேலை, மகனே. கதிகெட்டுத்தான் அந்த மாமன் அரண்மனையில் நெல் அளக்கப் போனது? என்னவா னாலும் அரண்மனை உத்தியோகம் அல்லவா, அதில் அவமரியாதை எதுவும் இல்லை என்றும் நினைப்பு."

ருது சடங்குகளுக்காகவும் வளைகாப்புகளுக்காகவும் பணத்தை வாரி வாரிச் செலவு செய்ததால் அதை ஈடு செய்ய நிலங்களையும் தோட்டங்களையும் விலைக்கு விற்றதாலும் அடமானம் வைத்ததாலும் பிறர் கைகளுக்கு மாறிவிட்டன. சில ஒத்திக்கு வைக்கப்பட்டன. சுண்டுண்ணி மாமன் இறக்கும்போது வீடும் வீட்டு நிலமும் மட்டும் எஞ்சின. அந்தக் கரணவர் இறந்தபோது வீடு பிரிக்கப்பட்டது; குடும்பம் பிரிந்துவிட்டது. களஞ்சியக் கூடமும் அதைச் சுற்றி இருந்த இடங்களும் குஞ்சுக்குட்டியம் மைக்கு தாய்வழிச் சொத்தாகக் கிடைத்தன. அந்தப் பகுதியில் நான்கு வெற்றிலைத் தோட்டங்களும் ஒரு மண்டபமும் இருந்தன.

"குலதெய்வம் நம்ம இடத்துக்கு வந்திருக்கா" என்று மண்டபத்தைக் குறித்து குஞ்சுக்குட்டியம்மைக்கு மகிழ்ச்சி. குஞ்சுக்குட்டியம்மையின் தங்கைமார்களுக்கு அதில் கொஞ்சம் பொறாமை உண்டாகாமலில்லை.

"பெண் குழந்தைகள் இருக்கிறவங்களோட பொறுப்பிலேதான் குலதெய்வத்தை வைக்கணும். கூப்பிடு தூரத்திலேதான் அந்த அம்மன் மண்டபம்!" குலதெய்வத்தைக் குறித்ததான கர்வத்தைக் காட்டிலும், அந்தக் குலதெய்வத்தினால் குஞ்சுக்குட்டியம்மைக்கு சௌபாக்கியங்கள் வந்து குவிந்துவிடுமோ என்றுதான் தங்கை மார்க்கு பயம். ஆனால் குலதெய்வத்திற்கு பட்சபாதமில்லை. குஞ்சுக் குட்டியம்மையையும் தரித்திரத்தில்தான் வைத்திருந்தாள். ஆனாலும் அந்தப் பெண்மணி மாலைநேரத்தில், மண்டபத்தின்

முற்றம் பெருக்கவும், விளக்கேற்றி வைக்கவும் என்றைக்கும் மறந்ததில்லை.

"என்னம்மா, நமக்கு இப்படி ஆச்சு?" என்று சாப்புண்ணி வளரத் தொடங்கியதும் கேட்கத் தொடங்கினான்.

"பாண்டவங்க வனவாசம் செய்யலியா, மகனே? அதைவிடப் பெரிசா நம்ம கஷ்டம்? உயர்வும் தாழ்வும் உலகத்திலே சகஜந்தானே? ஒரு சாப்புண்ணி மாமன் காலத்திலே ஓசத்தியா இருந்தோம். நீயும் ஒரு சாப்புண்ணிதானே?..." அந்த அம்மா மகனை சமதானப்படுத்துவாள்.

தனக்கும் உயர்வதற்கு வழி இருப்பதாக சாப்புண்ணி நம்பினான். படிப்பில் அவன் கெட்டிக்காரனாக இருந்தான். குருநாதரான தாச்சு எழுத்தச்சனும் அவனைப் பெரியவனாக்கு வதில் அக்கறை காட்டினார். இராமாயணமும், பாரதமும், கிருஷ்ணப்பாட்டும் மட்டுமல்லாமல், அமரகோசமும், ஸ்ரீராமோதந்தமும், கிருஷ்ண விலாசத்தில் சில பகுதிகளையும் அவர் அவனுக்குப் படிப்பித்து வைத்தார். கணக்கிலும் கெட்டிக்காரனாக இருந்தான். எல்லாமே அவனுக்கு அத்துப்படி.

"பெரியவனாகிப் பேரெடுக்கிறதுக்கு இவ்வளவு போதும்" என்று தாச்சு எழுத்தச்சன் சொல்லிவிட்டார்.

ஊர்க்காரர்கள் அந்த இளைஞனை புத்திசாலிப் பையன் என்று பேசிக் கொண்டார்கள். குஞ்சுக்குட்டியம்மையும் அவனை நெஞ்சில் வைத்துத்தான் வளர்த்தாள். மகனின் பத்தாம் வயதிலும்கூட அந்த அம்மா குறத்தியைக்கொண்டு திருஷ்டிப் பரிகாரப் பாட்டுப் பாட வைப்பாள். தன் மகன் அவ்வளவு அழகனென்று அவளுடைய நம்பிக்கை.

"அப்பாவுக்குப் பொன்னு, அம்மாவுக்கு கண்ணு, பாட்டிமார்க்குச் செல்லம் -" என்று புள்ளுவக் குறத்தி நீட்டி முழக்கிப் பாடும்போது குஞ்சுக்குட்டியம்மைக்கு முகம் தங்கத் தட்டாக ஒளிரும்; மகனின் தலையில் அவள் கைவைத்துக் கோதிவிடுவாள்: "என் மகன் எல்லாருக்கும் அப்படித்தான்."

படிப்பு முடிந்து அவன் பத்திரங்கள் எழுதும் உணிச்சுண்டன் நம்பியாருடன் சேர்ந்து கொண்டான். அழகான கையெழுத்து அவனுக்கு இருந்ததனால் உணிச்சுண்டன் நம்பியாருக்கு அது உதவியாகத்தான் இருந்தது. பத்திரம் எழுதுவதற்கான நெளிவு

சுளிவுகளைக் கற்றுக் கொண்டதும் அவன் சுயமாக சம்பாதிக்கத் தொடங்கினான். பெரும்பாலான நாட்களில் எட்டணாவோ ஒரு ரூபாயோ சமயம் போலக் கிடைக்கும்.

இதற்கிடையில் அந்தப் பெரிய இழப்பு வந்துவிட்டது. நெல்லளக்கும் தாய்மாமன் இறந்துபோனார்; தந்தையும் இறந்தார். குடும்பப் பொறுப்பு முழுவதும் சாப்புண்ணி நாயரின் மேல் விழுந்தது. அதற்காக மருளவில்லை. அம்மாவும் அவனும் தானே!

காலப் போக்கில் சாப்புண்ணி நாயர் சொந்தக் காலில் நிற்கக் கற்றுக் கொண்டார்.

உணிச்சுண்டன் நம்பியாரும் இதற்கு உதவினார்: "சாப்புண்ணி புத்திசாலி. அவன் என்னோடே சிஷ்யன். எனக்கடுத்து அவன்தான் இந்தத் தொழிலைச் செய்யணும்! சின்னவங்க கூட்டத்திலே குறையில்லாமே பத்திரம் எழுத அவனாலேதான் முடியும்.!"

இந்த முடிவு ஊரெல்லாம் பரவிற்று. அப்படியே சாப்புண்ணி நாயருக்கு நேரடியாகவே சில கேசுகள் தேடி வந்தன. கறுத்த, வாட்ட சாட்டமான சரீரம், தலை நிறைந்த குடுமி, வெற்றிலை போட்டுச் சிவந்த உதடு, சுறுசுறுப்பான நடை, காது மடிப்பில் ஒரு பேனா - இதெல்லாமாகச் சேர்ந்து 'அவர் தகுதியானவர்தான்' என்று எல்லோருக்கும் தெரியச் செய்தன.

சாப்புண்ணியின் களஞ்சியக்கூடத்தில் ஜன்னல்களுக்குக் கதவுகள் வந்தன; கறையான் அரித்துத் தின்ற உத்திரக் கட்டைகள் மாற்றப்பட்டன; பாளைகள் பிய்த்தெறியப்பட்டு ஓடுகள் கொண்டு முகப்பு வேயப்பட்டது. வயலில் தோண்டலும் கிளறலும் தொடங்கின- கூடத்தைச் சுற்றி பித்தம் பிடித்து உறங்கிக் கொண்டிருந்த தென்னைகள் கண்விழிக்கத் தொடங்கின. ஒரு சலனம், ஒரு சிலிர்ப்பு. இதையெல்லாம் பார்த்தபோது குஞ்சுக் குட்டியம்மை பெருமூச்சு விட்டாள்: தலவெட்டத்து மூப்பில் நாயரின் பிரதாபங்கள் திரும்பி வருகின்றனவோ?

சாப்புண்ணியும் தன் பரம்பரை குறித்து மிகவும் பெருமை கொண்டு சாப்புண்ணி நாயராக கௌரவம் பெறும் காலம் வந்தது. ஏதோ ஒரு பத்திரமெழுதுபவன் ஒரு சமயம் எழுதியிருந்த பத்திரத்தில் முதலாம் சாட்சி நாயர் என்பதாக இருந்தது. அந்தப் பத்திர எழுத்தாளன் தலவெட்டத்து களஞ்சியக்கூடத்து சாப்புண்ணி நாயர் என்றுதான் எழுதியிருந்தான். சாப்புண்ணி

நாயர் சிந்தித்துப் பார்த்தார். அதைத் தொடர்ந்து, காது மடிப்பிலிருந்து பேனாவை எடுப்பதும், மையில் முக்கி எடுப்பதும், அந்தப் பெயரை அடித்து மறைத்தலும் ஒரு நொடியில் முடிந்தன. அதன் மீதே தலவெட்டத்து சாப்புண்ணி நாயர் என்ற மூப்பில் நாயர் என்றெழுதி, குறிப்புக்காக ஒரு தாமரையின் படம் வரைந்து கையெழுத்திட்டார். எல்லாம் முடிந்து பத்திரம் எழுதியவனைத் தனிமையில் சந்தித்துச் சொன்னார்: "அடேய், யானை மெலிஞ்சாலும் தொழுவத்திலே கட்ட மாட்டாங்க, நெனச்சிக்கோ."

"சரி." அந்தப் பத்திரம் எழுதுபவனும் சம்மதித்தான். அதைத் தொடர்ந்து, வெட்டியதிலும் திருத்தியதிலும் ஒரு விவரக் குறிப்பையும் எழுதிச் சேர்த்தார்.

சாப்புண்ணி நாயர் அன்று பத்திரம் எழுதி முடித்து வீட்டுக்குத் திரும்பும்போது இடைவழியில் ஒரு முனகல் கேட்டது. செவி மடுத்தார். "ஹா... ஹய்யோ...முரட்டுப் பயலே, நான் உன்னை விடப்போறதில்லே... " என்பதுதான் அந்த முனகல். அவர் சுற்றிலும் பார்த்தார். அதோ, கரையை அடுத்து ஒரு மனிதன் சரிந்து கிடந்தான். பக்கத்தில் போய்ப் பார்த்தபோது சரித்திரக்கார அகமதுண்ணி.

"என்னாச்சு அகமதுண்ணி?"

"நம்மளை ஏமாத்திட்டானில்ல."

"யாரு?"

"அந்த சைத்தான்."

"ஏதாச்சும் பார்த்து பயந்திட்டீங்களா?"

"இல்லே..ஹாவ்....அந்த மாயன் செஞ்ச போக்கிரித்தனமில்ல?"

மாயன் தன்னைத் தாக்கியதும் உதைத்ததுமான கதையை அகமதுண்ணி தீனக் குரலில் விவரித்தார்.

"அகமதுண்ணி இந்த இளவட்டப் பசங்களோடே வம்புக்குப் போகலாமா?.—போகட்டும், எழுந்திருங்க. நான் கையைப் பிடிச்சிக்கிறேன்."

மூப்பில் நாயரின் தோளில் கைபோட்டு சரித்திரக்காரர் நொண்டிக் குதித்து நடக்கலானார். அப்போதும் அவர் இடைவிடாமல் திட்டிக்கொண்டே இருந்தார்: "அந்த ஹம்க்கினை ஒரு வழி பண்றேன். பண்ணிப்பய!... ஹாவ்... அவனை நான் கோர்ட்லே நிறுத்தலே.. ஹய்யோ!... உன்னோடே

தாத்தாவோடே அப்பன் நம்பூரச்சனைக் கொன்ன கதை, வக்கீலைக்கொண்டு கேக்க வச்சி, கோர்ட்டு மத்தியிலே வச்சி நான் மானத்தை வாங்கலே!_ ஹாவ்- என் ஆண்டவனே!.. உன்னோட அப்பன், தாத்தாமார் எப்படி இருந்தாங்கன்னு எனக்கில்ல தெரியும்! ஹாவ்!" அப்படிச் சொல்லிக்கொண்டே நடந்தார். அகமதுண்ணிக்கு பீரானின் வீட்டுக்குப் போக வேண்டும் போலிருந்தது.

"சேக்குட்டி முதலாளியை ஒரு தரம் பார்த்திட்டுப் போகணும். இந்த மாயனுக்கு மட்டும்தானா ஊரு உலகம்?"

அவர்கள் பீரானின் வீட்டுக்குச் சென்றபோது அங்கே சேக்குட்டி முதலாளி இல்லை. யாரோ உறவினர் வீட்டிற்குச் சென்றிருந்தார். பீரான் முற்றத்தில் உட்கார்ந்து கொண்டு புருவத்தின் மேலிருந்து பாலுண்ணியைத் தடவிக்கொண்டிருந் தான். உம்மாச்சு ஒரு சிங்காரச் சிரிப்புடன் குத்துவிளக்கு ஏற்றி வைத்தாற்போல் வாசற்படியில் நின்றிருந்தாள்.

"யாரோ வர்றாங்க!" என்று சொல்லிவிட்டு அவள் திரை மறைவில் சென்று நின்றாள். சாப்புண்ணி நாயரின் தோளில் சாய்ந்தபடி அகமதுண்ணி வந்தார். அந்தப் படிக்கட்டில் ஏறிய போதுதான் அகமதுண்ணிக்கு இயலாமை அதிகமாயிற்று. முனகலும் அதிகமாயிற்று.

"என்ன ஆச்சுது அகமதுண்ணி அண்ணனுக்கு?"

"பார்த்தீங்களா? எனக்கு வந்த நெலமையைப் பார்த்தீங்களா? கேக்கறதுக்கு யாரு இருக்காங்க?.. சொல்றதுக்கு யாரு இருக்காங்க?.. உங்களைப் பத்தி நாலு நல்ல வார்த்தை சொன்னதுக்கு எனக்குக் கிடைச்சிருக்கிறதைப் பார்த்தீங்களா?"

"என்னாச்சுது? வெவரத்தைச் சொல்லுங்க."

சாப்புண்ணி நாயர் நடந்ததை விவரித்தார். அந்த விவகாரத்தில் ஒருவர் எடுக்க வேண்டிய நீதி நியாயப்படியான நடவடிக்கைகளுக்கான யோசனைகளும் அவரது விளக்கத்தில் இருந்தன.

"நிசம்மாவா? கேக்கறதெல்லாம் உண்மைதானா?" பீரான் வியப்பிலாழ்ந்தான்.

"ராஜ்யம் உங்களுக்காயிடிச்சில்லே..." அகமதுண்ணி தீனக் குரலில் தொடர்ந்தார்: "இதுக்கு ஒரு மாத்து மருந்து கண்டுபிடிக்காமே இந்த விவகாரத்தை விடறதா?"

"இப்போ என்ன செய்யணும், சாப்புண்ணியாரே?"

"அதெல்லாம் முதலாளி இஷ்டம்."

"பெரியவருக்கு இப்போ வேண்டியதைச் செய்யுங்க." - திரைக்குப் பின்னாலிருந்து ஒரு மதுர நாதம் வந்தது. அத்தரின் மணம் அங்கே பரவும் என்று சாப்புண்ணி நாயர் முன்கூட்டியே நினைத்துதான்.

"சொல்றது சரிதான். மருந்துத் தைலம் தேய்ச்சிக் குளிப்பாட்டவாவது செய்யணும்."

பீரான் ஓர் ஆளைக் கூப்பிட்டு அகமதுண்ணியை வைத்தியனிடம் கூட்டிப் போக ஏற்பாடு செய்தான்.

"இதுக்கு என்ன வழி?" - அகமதுண்ணி.

"நானும் சாப்புண்ணியாரும் சேர்ந்து ஆலோசனை பண்ணி வழி கண்டுபிடிக்கிறோம். அண்ணே இப்போ போய்ட்டு வாங்க." ஒரு ரூபாயை எடுத்து கையில் கொடுத்து பீரான் சரித்திரக்காரரைப் புறப்படச் செய்தான்.

"சாப்புண்ணியாரே, என்ன வழி?"

"கேசு போடறதா?"

"வெவகாரத்தை இப்போ பெரிசாக்க வேணாம்." - திரைக்குப் பின்னாலிருந்து அந்த முறையீடு வந்தது.

"அதென்ன, ஒனக்குத் தோணினபடிதான் எல்லாம் நடக்கணுமோ? உதைப்பட்டது கெழவனில்ல?"- பீரான் கேட்டான்.

"கெழவன் வாயிலே நாக்கை உள்ளடக்கி நடக்கணும்." திரைக்குப் பின்னாலிருந்து.

"நடந்ததெல்லாம் சுத்த மோசம்தான். அதை நானும் சொல்லுவேன்." சாப்புண்ணி நாயர் ஒத்தூதினார்.

"சமாச்சாரத்தை முழுக்கச் சொல்லணும். வயசானவங்க எளவட்டங்களோடே சண்டை சச்சரவுக்குப் போகக் கூடாது. போயி வாங்கிக் கட்டிக்கிட்டா, தொடச்சிட்டு குடிசைக்குப் போயி குந்திக்கணும். என்ன நாயரே?" மீண்டும் திரைக்குப் பின்னாலிருந்து கேள்வி வந்தது.

"அது சரிதான். இது மாதிரியெல்லாம் வம்புச் சண்டைக்குப் போறது மானக்கேடு, முதலாளி."

"நல்ல புத்தி சொல்லிக் குடுங்க, சாப்புண்ணியாரே!"

பீரான் தொடர்ந்து ஆலோசித்தான். பிறகு கேட்டான்: "அப்போ, என்னதான் செய்யச் சொல்றே?"

"காசு பணம் கொடுத்து சரிபண்ணிடலாம்."

"அதுதான் சரி." - உம்மாச்சு உள்ளே இருந்து உடனே சம்மதித்தாள்.

"அப்படீன்னா, என்னைக் காட்டிலும் நம்ம வீட்டுக் காரங்களுக்கு ஏத்தாப்பிலே புத்தி சொல்லிட்டீங்கல்லே, சாப்புண்ணியாரே?"

சாப்புண்ணி நாயர் ஒரு நமுட்டுச் சிரிப்பு சிரித்தார்.

"ஆகட்டும், நெறயவே குடுத்திருவோம்" என்று பீரானும் சம்மதித்தான். சாப்புண்ணி நாயர் விடைபெற்றுச் சென்றார்.

அப்போது திரை விலக்கி உம்மாச்சு நேரில் வந்தாள். அவள் சொன்னாள்:

"அவரு நாயரா இருந்தாலும் புத்திசாலி, இல்லே?"

"ஏன்?"

"நல்லவரும்தான்! அவரு இல்லாட்ட நீங்க இப்போ வம்பிலே மாட்டிக்கிட்டிருப்பீங்க."

"நீயும்தான் இருக்கேயில்ல, உபதேசம் பண்றதுக்கு?" பீரான் சிரித்தான். உம்மாச்சுவும் சிரித்தாள்.

"இல்லாட்டி, கூட்டாளிங்களுக்குள்ளே சண்டை மூட்டிவிடச் சொல்றீங்களா? ஒங்களோடே ஒரு கூட்டாளிதானே அந்த மாயனும்?"

"ஆமா."

"அப்போ நாயர் சொன்னதுதானே புத்திசாலித்தனம்?"

"...நீ... சொன்னதும் அதைவிட புத்திசாலித்தனம்தான்! அவரு ஒரு ஒசந்த நாயரு. நீ ஒரு ஒசந்த பொம்பிளே!"

"கிண்டல் ஒண்ணும் பண்ண வேணாம்... சாப்பாடு வைக்கிறேன், எந்திரிச்சி வாங்க!"

அவள் ஒரு சிருங்காரச் சிரிப்புடன் திரைச்சீலைக்குப் பின்னால் போனாள். பீரான் அவளைத் தொடர்ந்தான்.

# 5. பூ நிறைந்த முள்செடி

கல்யாணம் நடக்கக்கூடாது என்று உம்மாச்சு ரொம்பவும் ஆசைப்பட்டாள். அம்மாவும் அப்பாவுமாக நிச்சயிக்கும் கல்யாணத்தை மீறுவதற்கு கன்னிப் பெண்ணுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? அவள் அந்தக் கல்யாண ஏற்பாட்டை எப்படியோ சகித்துக் கொண்டாள். சகித்துக் கொள்வதற்காகத்தானே பெண்ணாகப் பிறப்பது என்றும் நினைத்தாள். தலையை நுழைக்க இடர்ப்பாடான ஒரு குப்பாயம் இட்டுக்கொள்வது போல, வளைத்து நெளித்து அணிந்து முடிந்தால் அதற்கு அப்புறமும் தொந்திரவுதான். அது அங்கேயே கிடக்கட்டும் என்று விட்டுவிடுவதுதான் நல்லது.

"எப்படியானாலும் ஒருத்தன் கட்டத்தான் போறான், அது இந்த வெள்ளிக்கோலாயிட்டான்." என்று ஒரு வழியாய் சமாதானமானாள்.

ஆனால் மாயனை நினைக்கும்போது உம்மாச்சுவின் இருதயம் பொசுங்கிச் சாம்பலாயிற்று. அவனுடைய வலிமையும் தைரியமும் விடாப்பிடியும் அவளுடைய இருதயத்தில் இடம் பிடித்தன. ரோமம் நிறைந்து, கறுத்து, விரிந்த அந்த மார்பின் மீது அவளுடைய நீலக்கண்கள் பரவிக் களித்ததுண்டு. அப்போ தெல்லாம் வாழ்க்கை ஒரு மைதானப் பரப்பு போல விசாலமான தென்று அவளுக்குத் தோன்றும். திடீரென்று வாழ்க்கை குறுகிப்போய் விட்டது. அது மறக்க முடியாததொரு அடியா யிருந்தது. எந்த அடியையும் தாங்கும் வலிமை பெற்றிருந்தது உம்மாச்சுவின் இதயம்.

"படைச்சவன் கட்டளைப்படி நமக்கு இது வந்து சேர்ந்திருக்கு." தித்தய்யக்குட்டியம்மை சொல்லித் தேற்றினாள்.

"சரிம்மா." அவள் கூச்சப்படாமல் சம்மதித்தாள்.

"இனிமே எல்லாம் ஒன் தைரியத்தைப் பொருத்து இருக்கும்."

"சரிம்மா."

"அதை எப்பவும் மனசிலே வச்சிக்கோ."

"சரிம்மா."

பீரானைக் கட்டிக் கொள்வதில் உள்ள மறுப்பை ஒரு போதும் அவள் வெளியே சொன்னதில்லை. வெளியே சொல்லி சுற்றுச் சூழலைக் குழப்புவதில் ஒரு பயனும் இல்லை என்று காரியவாதியான உம்மாச்சுவுக்குத் தெரிந்துதான் இருந்தது. ஆனால் உள்ளே வேதனை அரித்தபோதும் வெளியே உற்சாகமாகவே தென்பட்டாள். பள்ளிவாசல் போகத் தொடங்கிய காலத்திலிருந்து இப்போது நடந்து முடிந்ததான எல்லாமே அந்த இருபத்துக்குள் நிழலாடின. வெள்ளிக்கோலை மாயன் அடித்து நொறுக்கியது நேற்றுத்தான நடந்ததுபோலத் தோன்றிற்று. உள்ளுக்குள் எழுந்த நினைவுகள் ஒரு பொருமலைச் வெளிப்படுத்தின. ஆனாலும் அவள் அழவில்லை; கண்கள் நனைந்ததாகவும் தெரியவில்லை. துக்கம் பல தோற்றங்களில் அல்லவா வெளிப்படுகிறது - கண்ணீர், வசவு, சண்டித்தனம், இறுமாப்பு; உம்மாச்சுவுக்கு இறுமாப்பு மேலிட்டது. அவள் தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள்: "கட்டிக்கிடக் கட்டுமே! அவனே கட்டிக்கிடட்டும்! பணக்கொழுப்புத்தானே. கட்டிக்கிடட்டும்!"

திருமணம் முடிந்தது. ஆனால் அவ்வளவு சீக்கிரம் கணவனின் வீட்டுக்குப் போக வேண்டியிருக்குமென்று உம்மாச்சு நினைத்ததில்லை.

அப்படி, சேக்குட்டி முதலாளியின் வீட்டுக்கு உம்மாச்சு திடீரென்று போக நேர்ந்தது. அங்கே சுற்றுச் சுவரும் வாசல்படியும் மொத்தத்தில் உம்மாச்சுவை கலவரப்படுத்தியிருக்க வேண்டும். ஆனால் அப்படி நடக்கவில்லை. இங்கே இதுதான் நடைமுறை யாக்கும் என்று மட்டும் நினைத்துக் கொண்டாள்.

பீரானின் அம்மா மட்டுமே வேலைகளைக் கவனித்துக்கொண்டு வீட்டிலிருந்தாள். அவள் வாழ்க்கையிலிருந்து விலகிக்கொள்ள ஆயத்தமாகிக் கொண்டிருந்தாள். அந்தப் பெண்மணி எரிந்து முடிந்த ஒரு கனல் கட்டை; புதிய கனல் இப்போது ஒளிர அவள் இடம் ஒதுக்கிக் கொடுத்தாள்.

"இனிமே நீயாச்சி, உன் புருசனாச்சி, உன்னோட வீடாச்சி - எல்லாத்தையும் பாத்துக்கோ. கேட்டுக்கிட்டியா, உம்மாச்சு?"

"சரி."

"நல்லது வந்தாலும் கெடுதல் வந்தாலும் உனக்கும் உன்னோடே புருசனுக்கும்தான். கேட்டுக்கிட்டியா உம்மாச்சு?"

"சரி."

"இந்தக் குடும்பத்துப் பேரை நீதான் காப்பாத்தணும். அது மாத்திரம் எப்பவும் மறந்திராதே. கேட்டுக்கிட்டியா உம்மாச்சு"?

"கேட்டுக்கிட்டேன்."

ஆண்டு முடிந்த அந்த அம்மா பொறுப்பைக் கைமாற்றிக் கொடுத்தாள். உம்மாச்சு சுற்றிலும் பார்த்தாள். உண்மையில் அங்கே பொறுப்பேற்றுக்கொள்ள நிறையவே இருந்தன. நெல், தேங்காய், பசு, ஆடு, மிளகு, வேலைக்காரர்கள். அங்கே தன் கண் செல்லவேண்டிய இடங்கள் பல இருந்தன. அந்த நெடிய கண்கள் எல்லா இடத்திற்கும் சென்றன. ஒட்டியாணமும் வளையல்களும் குலுங்க அத்தரின் மணம் பரப்பிக்கொண்டு அவள் எல்லா இடத்திற்கும் சென்றாள்.

"சைனபே, மாடுகளுக்குத் தண்ணி காட்டினியா? காளி, அந்த வைக்கோலை அடிக்கலே? கதீஜா, ஆட்டுக்கு எல பறிச்சிப்போட மறந்திடாதே. அந்த சாத்தப்பன் எப்போ போனான்? அவன் அசைந்து அசைந்து நடந்தானே." - இப்படி உம்மாச்சுவின் கட்டளைகளும் எச்சரிப்புகளும் அந்த வீட்டில் முழக்கமிடத் தொடங்கின. சேக்குட்டி முதலாளிக்கும் அவருடைய மனைவிக்கும் உம்மாச்சுவின் மீது பெரும் மதிப்பு உண்டாயிற்று.

"பொண்ணு தங்கம்தான். குடும்பம் தளைக்கும்" - சேக்குட்டி முதலாளி சொன்னார்.

"இந்த வீட்டுக்குக் கிடைச்ச புதையல்னு நெனைச்சிக்கிடுங்க", மனைவி மேலும் தெளிவுபடுத்தினாள்.

பீரான் உம்மாச்சுவை விட்டுப் பிரிவதே இல்லை. நெய்க்குடத்து விளிம்பில் திரியும் எறும்புபோல அவன் எப்போதும் அவளையே வட்டமிட்டுத் திரிவான். மதுரமான பெருந்தன்மையான வார்த்தைகளினால் உம்மாச்சுவை ஆராதிப்பான். உம்மாச்சுவோ அதில் அவ்வளவு அதிகமாக ஈடுபாட்டை வெளிப்படுத்திக் கொள்ளவில்லை. இது எதுவும் இல்லையானாலும் தனக்குத் திருப்திதான் என்பதாக அவளுடைய போக்கு இருந்தது.

"நீங்க என்ன குட்டிபோட்ட பூனை மாதிரி என்னையே சுத்திச் சுத்தி வாரீங்க?"

"நீ பழுத்த பழம் மாதிரி இருக்கே. எனக்கு உன்மேலே கொள்ளை ஆசை."

"கொஞ்சினது போதும். வேலையைப் பாருங்க."

இருந்தாலும் பீரான் கொஞ்சினான். உம்மாச்சுவைப் பார்க்கும்போது உள்ளுக்குள் அவனுக்குள் ஒரு அக்னி சுடர் விடும். கிடைக்க முடியாதது கிடைத்து விட்டது போலத்தான். எப்படியெல்லாம் அவளைச் சீராட்டிப் பாராட்டுவது என்பதில் திக்குமுக்காடினான். புதிய நகைகள், புதிய இடுப்பு அணிகள், புதிய முட்டாக்குகள் எல்லாம் வாங்கினான்.

ஒவ்வொன்றைக் கொண்டுபோய்க் கொடுக்கும் போதும் பீரான் கேட்பான்: "எப்படி இருக்கு உம்மாச்சு?"

"பரவாயில்லே." - அவள் ஒரு தரம் பார்த்துவிட்டு பெட்டியில் கொண்டுபோய் வைத்துவிடுவாள். அவள் சிரிக்க வேண்டும், தன்னோடு சேர்ந்து உல்லாசம் காட்டவேண்டும். இதுதான் பீரானின் ஆசையாக இருந்தது. ஆனால் அவள் பெரிய காரியக்காரியாக இருந்தாள். எதிர்பார்த்தது எல்லாமே பீரானுக்குக் கிடைத்ததாகக் கொள்வதற்கில்லை. ஆனால் அதை உம்மாச்சுவிடம் நேரடியாகச் சொல்லும் தைரியம் பீரானுக்கு இல்லை. அவள் ஒரு தடவை பலமாகத் தும்மினால் போதும், அவன் ஒதுங்கிவிடுவான்.

"உம்மாச்சு, உனக்கு என்னைப் பிடிக்கலியா?"

"இப்பவா அதைக் கேக்கறீங்க?"

"உம்."

"ரொம்ப பிடிச்சிருக்கா?"

"என்னமோ!" உம்மாச்சு நீலக் கண்களைச் சுழற்றி ஒரு வெட்டு வெட்டிவிட்டு நடந்து விடுவாள்.

கடந்த தலைமுறை மெள்ள ஒதுங்கிக் கொள்ளத் தொடங்கியது. சேக்குட்டி முதலாளி காரியங்கள் எல்லாவற்றையும் மகனையே ஏற்கச் செய்துவிட்டார். அவர் ஐந்து நேரமும் தொழுகை நடத்தினார். சாப்பிடுவார். நேர்த்தியான புகையிலை சேர்த்து வெற்றிலை போடுவார். வயது மிகுந்த கிழவர்களுடன் உட்கார்ந்து கொண்டு அரட்டையடிப்பார். மக்காவும் மதினாவும் பற்றி தியானக் கதைகளைச் சொல்லித் தன்னை நாடிவரும் கிழவர்களுக்கு அள்ளிக் கொடுப்பார். வழிபாடுகளுக்காகப் பள்ளிவாசலுக்குப்

செல்வார். அப்படி இகலோகத்திலிருந்து மெதுவாக ஒதுங்க ஆரம்பித்தார்.

"ஆண்டவனுக்குப் பக்கத்திலே, போக வழிபிடிச்சாகணும். நமக்கு இனிமே அதுதான் வேண்டியது. என்னம்மா?..." அவர் சொல்லுவார்.

"சரிப்பா," உம்மாச்சு அதற்கு இணக்கம் தெரிவிப்பாள்.

அந்த முதிய தம்பதிகளின் எந்த அபிப்பிராயமானாலும் அவள் அனுசரித்து நடப்பாள். பீரானுக்குச் சம்மதமில்லாத காரியங் களுக்கும்கூட அவள் சம்மதிப்பாள். அந்தப் போக்கு பீரானுக்கு விருப்பமில்லை. ஆனால் வெளியே சொல்ல பயம்.

அந்தப் புதிய தம்பதிகள் அவ்வப்போது ஊடுவார்கள். முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு நடமாடுவார்கள். அப்படியானதொரு ஊடலுக்கு ஒரு காரணம் சரித்திரக்காரரான அகம்மதுண்ணிக்குப் பணம் கொடுப்பது பற்றியதாகும். கிழவனுக்குக் காயம் ஆறிவிட்டது. ஆனாலும் பீரானுக்காக வேண்டி படைவீரர்களை எதிர்த்து உயிருக்கு ஆபத்து விளை வித்துக்கொண்ட ஒரு மகா வீரனைப்போல மகனிடம் சொல்வார்:

"அந்த மொதலாளிக்காகப் போனதால்தான் எனக்கு இந்த நெலமை வந்தது. அஞ்சு ரூபா தரச்சொல்லு, பின்னத்தைலம் வாங்கணும்."

ஐந்து ரூபாய் பீரான் கொடுத்தான். அது பல தடவை திரும்பத் திரும்ப நடந்தபோது உம்மாச்சுவுக்குக் கோபம் வந்தது. உள்ளுக்குள் அவளுக்கு அந்தக் கிழவன் மீது வெறுப்பாயிருந்தது. அந்த மனுஷன்தான் தன் வாழ்க்கை முழுவதையும் கெடுத்துக் குட்டிச்சுவராக்கியது என்பது அவளுடைய நம்பிக்கை. கிழவனைப் பற்றிக் கேள்விப்படும்போதெல்லாம் அவள் முணுமுணுப்பாள்.

"கள்ளப் பறங்கி! வெடி வச்சிக் கொல்லணும்!"

மாயனுடன் அடிதடி ஏற்பட்டது இந்தச் சிந்தனையை மேலும் கூர்மைப்படுத்தியது. இதற்கும் காரணம் உண்டு: கிழவனை அடித்த அன்றுதான் மாயன் ஊரை விட்டுப் போனான். அதைத் தொடர்பு படுத்தி பல பிரஸ்தாபங்கள் கிளம்பின. காரணம் யாருக்கும் திட்டவட்டமாகத் தெரியவில்லை. கிழவனை அடித்த தால் போலீஸ் பிடிக்குமென்று பயத்தில்தான் என்று சிலர்

கூறினார்கள். அவன் கொழும்புவுக்கு "பணம் சம்பாதிப்பதற்காகப் போய்விட்டான்" என்று சிலர் சொன்னார்கள். வேறு சிலருடைய கணக்குப்படி மாயன் சென்றது ரங்கூனுக்கு. சிங்கப்பூருக்குப் போய்விட்டான் என்றும் கணிசமாகச் சிலர் வாதிட்டார்கள். கோலார் தங்கச் சுரங்கத்தில் வேலையில் சேர்ந்து விட்டதாகச் சிலர் முழுக்க நம்பினார்கள். யார் சொன்னதிலும் தெளிவில்லை. சாப்புண்ணி நாயர் சொன்னதுதான் சரி என்று உம்மாச்சுவுக்குத் தோன்றிற்று. "மாயன் காரியமாகத்தான் ஏதோ ஒரு இடத்துக்குப் போயிருக்கணும்."

"எங்கேயாம்?" உம்மாச்சு திரைச்சீலைக்குப் பின்னாலிருந்து கேட்டாள்.

"யாருக்குத் தெரியும்! என்னவானாலும் சிறப்போடே வரட்டும். ஊரு தாண்டிப் போனா நாலு காசு சேரும்." சாப்புண்ணி நாயர் கருத்தைத் தெரிவித்தார்.

"எதுக்காக அவன் ஊரைவிட்டுப் போனது?" பீரான் குறுக்கே கேட்டான்.

"என்னவோ!" சாப்புண்ணி நாயர் கையை விரித்தார். எதற்காக ஊரை விட்டுப் போனான்? அந்தக் கேள்வி ஐந்து தலை நாகமாகப் படமெடுத்து உம்மாச்சுவின் இதயத்தில் நின்றாடிற்று. அந்த ஒவ்வொரு படத்திலிருந்தும் சூடான காற்று சீறி வெளிப்பட்டு இதயத்தைத் தாக்கிற்று. எதற்காகப் போனான்? – எதற்காகப் போனான்? அந்தக் கேள்வி நாண் ஏற்றிய அம்பு போல அவளுடைய உள்மனத்துக்குள் பாய்ந்து சென்று தாக்கியது. ஆபத்தைத் தாங்கிய அந்தக் கேள்வி எங்கிருந்து பாய்ந்து வந்தது? ஆட்கள் எந்தெந்தத் தேவைகளுக்காக ஊரைவிட்டுச் செல்வார்கள்? எத்தனை பேர் இதற்கு முன்பு ஊர்விட்டுப் போயிருக்கிறார்கள்? இனி எத்தனை பேர் போவார்கள்? அதைப் பற்றி இவ்வளவு அதிகமாகக் கேட்பதும் பேசுவதும் எதற்காக?

இருப்பினும் ஏகாந்த சாந்தமான இரவின் நடுச் சாமத்தில், நிலவில் குளித்த தென்னை ஓலை விளிம்புகளிலிருந்து பனித் துளிகள் கண்ணீர்த் துளிகளைப் போல இற்று விழும்போது, பூமியும் ஆகாயமும் ஓர் ஒற்றை ஒளியசைவில் கலந்து இணைந்து இருக்கும்போது, அவளுடைய இதயத்தின் அடி ஆழத்தில் அந்தக் கேள்வி படம் விரித்து ஆடி வரும்: "எதற்காகப் போனான்?"

பனைமட்டைகளிலிருந்து ஓசையிட்டுச் சிலிர்த்துக்கொண்டு ஆந்தைகள் திடீரென்று பறந்து போவது எதற்காக? தொலைவில் களகள இரைச்சலுடன் நீரோட்டம் புரண்டோடுவது எதற்காக? சந்திரன் அடிவானம் நோக்கி மெல்ல மெல்லக் கடந்து செல்வது எதற்காக? எதற்காக? பதில் கிடைக்காமல் உம்மாச்சு அந்தக் கேள்வியைப் பல தடவை மீண்டும் மீண்டும் கேட்டுக்கொண்டாள். இந்த உலகத்திற்கு வந்து சேர்ந்தது எதற்காக என்று யாரும் கேள்வி கேட்பதில்லை. போவது எதற்காக என்று மட்டும் எல்லோரும் கேட்கிறார்கள்... போனவர்கள் யாரும் திரும்பி வருவதில்லையா? மாயனும் திரும்பி வரமாட்டானோ? அவளுடைய இதயத்தில் ஒரு குளவி கொட்டியது போல நடுக்கம் ஏற்பட்டது.

அடுத்துப் படுத்திருந்த பீரான் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். அந்த மூக்கில் ஒரு இடிஇடிக்க வேண்டுமென்று அவளுக்குத் தோன்றிற்று. ஆனால் இடிக்கவில்லை.

அடுத்த நிமிடம் அவள் நினைத்தாள்: 'அவர் என் வீட்டுக்காரர் அல்லவா!'

தான் அந்த மூக்கில் இடித்துவிட்டோமோ என்ற சந்தேகம். இல்லை. இடித்துவிட்டிருந்தால் பீரான் விழித்திருக்க வேண்டும். ஆனாலும் அந்த மூக்கைத் தடவிக்கொடுக்க வேண்டுமென்று தோன்றிற்று. ஆனால் தடவி விடவில்லை.

உம்மாச்சு எல்லாவற்றையும் மறக்க முயன்றாள். எத்தனை பேர் எதற்காகவெல்லாம் எங்கெல்லாம் போகிறார்கள்! அவற்றைப் பற்றி தான் எதற்காக அங்கலாய்த்துக் கொள்ள வேண்டும்?

"எல்லாமே நாசமாய்ப் போகட்டும்."

ஹே? - உள்ளுக்குள்ளிருந்து முழக்கத்தோடு கூடிய ஒரு கேள்வி. மீண்டும் அந்தக் குரல் தொடர்ந்தது: ஏன் போனான்? அந்தக் குரல் இதயத்தில் முழங்கிப் பொங்கிற்று. அது உள்ளுக்குள் குழப்பத்தை உண்டாக்கிற்று. தான் படுத்துக் கிடந்த கட்டிலைப் பற்றியும், அந்தப் படுக்கையறை முகட்டின் மேல் வேய்ந்த மரக் கட்டைகளைப் பற்றியும், திருமண நாளன்று தான் அணிந்திருந்த அலங்காரத் துணியின் வெள்ளிச் சரிகை வேலைப்பாடு பற்றியும் ஒரு முறை நினைத்துப் பார்க்க முயன்றாள். ஆனால் எல்லாச் சிந்தனைகளும் சென்று முடிவது அந்தக் கேள்வியாகவே இருந்தது: ஏன் போனான்?... எதற்காக?... எதற்காக?...

"அது என் இஷ்டம்! இதென்ன தொந்திரவு? யாரு என்னைக் கேக்கறது!" - மாயன் தன்னிடம் சொல்வதுபோல் உம்மாச்சு முணுமுணுத்தாள்.

யாரும் கேட்கவில்லை. ஆனாலும் ஓராயிரம் நாவுகள் சுற்றி நின்று அந்தக் கேள்வியைக் கேட்பது போல ஒரு பிரமை. யாரது அந்த ஆபத்தான கேள்வியை முதலில் கேட்டது? அவள் நினைத்துப் பார்த்தாள்: பீரான்தான். எதற்காக அதைக் கேட்டார்? எல்லாக் குழப்பங்களையும் உருவாக்கிவிட்டு இப்போது அடுத்தாற்போல் படுத்துக் கொண்டு அமைதியாகக் குறட்டை விட்டுக் கொண்டிருக்கிறார். அவருக்கு ஒரு அல்லலும் இல்லை. தான் உறக்கம் வராமல் இப்படிக் கிடக்கும்போது குறட்டைவிட்டுத் தூங்க முடிந்த பீரானைப் பற்றி உம்மாச்சுவுக்கு அருவருப்பு ஏற்பட்டது. தன்னுடைய வாழ்க்கை முழுவதையும் உருப்படியில்லாமல் செய்தது இந்த மனிதர்தானே? ஆனாலும் அது நடந்துவிட்டதே! அவர்தானே அதற்குப் பொறுப்பு? இல்லையா? இல்லவே இல்லை. 'அழகான பொண்ணுங்களைக் கண்டா இளவட்டங்களுக்கு கட்டிக்கத் தோணுமில்லே? அவர் கட்டிக்கிட்டாரு. இதிலே என்ன இருக்கு?' பின்னே யார்தான் இதற்குப் பொறுப்பு? எப்படியாவது ஒரு பொறுப்பாளனைக் கண்டுபிடித்து விட்டால் போதுமென்றிருந்தது அவளுக்கு. அப்படிக் கண்டுபிடித்துவிட்டால் இந்தக் கேள்வியை அந்த ஆளை நோக்கி விட்டெறியலாம் அல்லவா! அவள் தீவிரமாய்ச் சிந்தித்தாள். அம்மாவா? அப்பாவா? தானேதானா? பீரானின் அம்மாவும் அப்பாவுமா? இவரில் யாரையும் குறிப்பிட்டுச் சொல்ல முடியவில்லையே! அப்படியானால் யார்? திடீரென்று சரித்திரக் காரரான அகமதுண்ணி அவளுடைய மனதில் நிழலாடினார். ஆ–ஆமாம்... அந்தக் கிழவரல்லவா தன்னை இந்த நிலைக்கு ஆளாக்கினது? அவர் மத்தியஸ்தத்திற்கு வர வேண்டிய அவசியம் என்ன ஏற்பட்டது? 'ஒலகத்திலே இருக்கிற பொண்ணுங்களுக் கெல்லாம் கல்யாணம் பண்ணி வைக்க இந்தக் கழுதைகிட்ட யாரு பொறுப்பு ஒப்படைச்சாங்க?'

உம்மாச்சுவுகக்கு கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது. சந்தேகப்பட்ட குற்றவாளியைப் பிடித்துவிட்ட ஒரு போலீஸ்காரனுக்கு ஏற்படும் நிம்மதி. ஒருவனைக் குற்றவாளியாக்கலாம், விசாரிக்கலாம். வேண்டுமானால் தண்டிக்கலாம்... அப்பாடா! அவள் தலை

யணையைச் சரிப்படுத்திக் கொண்டு உறங்க முயன்றாள். ஒரு நிமிடம். மீண்டும் கேள்வி கிளம்பியது! எதற்காகப் போனான்?

இந்தத் தடவை உம்மாச்சுவினால் தாங்க முடியவில்லை. அவள் தலையணையில் முகம் புதைத்து அழுதாள். பீரானின் குறட்டைச் சத்தம் நின்றது. அவன் முழிப்புத் தட்டிக் கண்விழித்துக் கேட்டான்: "உம்மாச்சு, அழறியா என்ன?"

"இல்லே."

"எதுக்காக அழறே?"

"நீங்க தூங்குங்க."

"நான் தூங்கறேங்கிறதுக்காகவா அழறே?"

"ம்"

"என் கண்ணு!" பீரானின் கை பாம்பு படர்ந்து சுற்றுவதுபோல் அவளுடைய கழுத்தை வளைத்துப் பிடித்தது. அதில் குளிர்ச்சி இருந்தது.

முகம் முகத்தோடு அடுத்திருக்க பலவற்றை முணுமுணுத்தார்கள். இரகசியமான துயரத்தை மாற்றும் ஆறுதல் வார்த்தைகள். ஆனால் உம்மாச்சு அதை எதையும் கேட்டுக் கொள்ளவில்லை. கடந்த காலத்தில் அவளுடைய வீட்டுக்கு முன்பாக ஒற்றையடிப் பாதையினூடே பல தடவைகள் இழைந்து பரவிய மாயனின் பாட்டு அவளுடைய செவியில் ஓசையிட்டது:

மனமுவந்து அரும்பவிழ்ந்து
காற்று வீசி பூ விரிந்து
எப்போதுதான் காய் முதிர்ந்து
நான் சுவைப்பதோ...
தக்கத்தரிகிட திக்கிதம்ருதக
எப்போதுதான் நான் சுவைப்பதோ....

அந்த கனகம்பீரமான குரல் உள்ளுக்குள்ளிருந்து அலையெறிந்த போது அவளுடைய நரம்புகள் உயிர்த்தன. ஆவேசமான ஏதோ ஒன்று சரீரம் முழுவதும் ஊளியிட்டுக் களிக்கூத்தாடியது. வாழ்க்கை ஒரே ஒரு துளிக்காகச் சுரந்து சுருங்கிக் கூடுவது போலத் தோன்றியது. ஜன்னல் வழியே நிலவொளி தள்ளித் தள்ளி வந்து அத்தரின் மணத்தோடு இணைந்து லயித்தது. வாழ்க்கை முழுவதும் ஓர் ஊசி முனையில் நிற்பது போல! அப்போதும் உம்மாச்சுவின் காதில் அந்தப் பாட்டு முழங்கிக் கொண்டிருந்தது: "மனமுவந்து..."

அது மெள்ள மெள்ள தொலைவிலான ஒரு குகைமுகத்தின் உள்நோக்கிக் கரைவது போல அகன்று தாழ்ந்து ஒடுங்கிற்று.

பீரான் தளர்ந்த கைகளைத் தன் கழுத்திலிருந்து மெள்ள விலக்கி எடுத்துக்கொண்ட போதுதான் உம்மாச்சு நிலைமையை உணர்ந்தாள். அவள் சுற்றும் நோக்கினாள். இதயம் கரிந்து போயிற்று. யார் முகத்திலோ நேருக்கு நேர் நின்று காறித் துப்ப வேண்டும்போல் இருந்தது. யார் முகத்தில்? சரித்திரக்காரரான அகமதுண்ணி மனதில் வந்து நின்றார்.

மறுநாள் காலையில் எழுந்தபோது இந்த உலகத்தில் அவளுடைய பரமவிரோதி அகமதுண்ணிதான் என்று உம்மாச்சுவுக்குத் தென்பட்டது. அந்தப் பகையுணர்ச்சி நாள்தோறும் வளர்ந்தது. அப்போதுதான் பணத்திற்காக வேண்டி ஹஸ்ஸன் சென்றது.

"உங்களுக்கென்ன பைத்தியமா? அந்தக் கிழடு உங்களை ஏமாத்தறான்" உம்மாச்சு திட்டினாள்.

"ஆனாலும் ஒரு கெழவனில்லே?"

"அதுக்காக?"

"அவரு செத்துப் போயிட்டா..."

"என்னாகும்? தூக்கிப் போட வேண்டியதுதானே?"

"இப்போதைக்குக் கொடுப்போம்."

"கொடுக்க வேணாம்."

"கொடுத்திருவோம், உம்மாச்சு."

"கொடுக்க வேணாம்."

"பாவம், ரொம்ப ஏழை"

"எனக்கில்லாத பாவம் உங்களுக்கு மட்டும் என்ன வந்திச்சி? நான் உங்களுக்கு யாரு?"

"என்னோடே வீட்டுக்காரி! என்னோடே இதயம்!"

"ஓலக்கை!......நான் சொல்றதைக் கேப்பீங்களா?"

"சரி."

"கொடுக்க வேணாம்."

"சரி."

உம்மாச்சுவுக்கு ஒரு வஞ்சம் தீர்த்த சுகம் ஏற்பட்டது. இனிமேல் காலணாகூடக் கொடுக்கக் கூடாதென்று பீரானுக்கு கட்டளையிட்டாள். அவள் அந்தச் சுகத்தை முழுமையாக்கிக்கொண்டாள்.

"ஆனாலும், அந்தக் கெழவன் உதவியாலேதான் உம்மாச்சுவை நான் கட்டிக்கிட முடிஞ்சது!"

"என்ன! அப்போ, நீங்க என்னைப் பார்த்துக் கட்டிக்கிடலியா? சும்மா இருங்க! இந்தக் கெழவனை வச்சித்தானோ ஊர்லே இருக்கிற பொண்ணுங்களுக்கு கட்டி முடிக்குது....தூ!"

அதற்குப் பிறகு பீரான் எதுவும் பேசவில்லை. உம்மாச்சுவும் பேசவில்லை. பகையினால் இருதயம் நிலைகுலைந்திருந்தது. அவளுடைய வாழ்க்கை, பூக்கள் நிறைந்த ஒரு முள்செடியாக இருந்தது. கட்டிப் பிடித்தால் முள் குத்தும்; இனிய மணத்தினால் பிரிந்து போகவும் தோன்றவில்லை. அவள் அந்தச் செடியின் அடியில் அமர்ந்திருந்தாள். பீரானும் நினைத்துப் பார்த்தான். அகமதுண்ணியைப் பற்றி உம்மாச்சு சொன்னது முழுவதும் சரிதான் என்று அவனுக்கு நம்பிக்கையில்லை. ஆனால், சொன்னது உம்மாச்சுவாக இருந்ததனால் சரியில்லையென்று மறுக்கவும் முடியவில்லை.

அந்தத் தம்பதிகள் இப்படிக் கலக்கத்திலிருக்கும்போது, வாசல்படியிலிருந்து ஒரு கேள்வி : "என்ன முதலாளி, இன்னிக்கு யோசனையிலே இறங்கிட்டீங்க?"

உம்மாச்சுவும் பீரானும் அங்கே பார்த்தார்கள். சாப்புண்ணி நாயர் வேட்டித் தலைப்பைப் பிடித்து வியர்வையைத் துடைத்துக் கொண்டு நின்றிருந்தார். உம்மாச்சு திரைமறைவில் சென்று நின்றுகொண்டாள்.

"ஓ! நாயரா? விசேஷமா ஒண்ணுமில்லையே?"

"வரச் சொன்னீங்களாமே?"

"அதா? நான் ஒரு சிக்கல்லே மாட்டிக்கிட்டேன்."

"என்னது?"

"நமக்கு இங்கே கொஞ்சம் நஞ்சம் இருக்கில்லே?"

"கொஞ்ச நஞ்சமென்ன, நெறயவே இருக்கு. இப்ப என்ன?"

"அதை ஒழுங்குமுறையாப் பார்க்கிறதுக்கு ஆளில்லே. நம்ம காரியம் ஒன்னையை நீங்கதான் பார்க்கணும். அதைச் சொல்லத்தான் கூப்பிட்டனுப்பிச்சேன்."

"ஆனா..."

"ஆனா கீனான்னு ஒண்ணும் சொல்ல வேணாம். நீங்க இதைச் செய்தே ஆகணும்." திரைக்குப் பின்னாலிருந்து உம்மாச்சு

சொன்னாள் : "இல்லேன்னா இன்னும் கொஞ்ச நாள்லே இங்கே ஒண்ணும் மிஞ்சாது. கண்டவங்க தட்டித் தின்னுட்டுப் போயிரு வாங்க. மாமாவைப் போல ஒண்ணும் இவராலே கொண்டு செலுத்த முடியாது. ஆனாலும், வேணும்ங்கிறவங்ககிட்டத்தானே உதவி கேக்க முடியும்."

"அது சரிங்க. என்னாலே முடிஞ்சதை நான் செய்றேன்."

"எல்லாமே நீங்கதான் செய்யணும்." - உம்மாச்சு.

"அதான். அவ சொன்னதுதான் சரி."

"முதலாளி ஒண்ணு சொன்னா முடியாதுன்னு சொல்ல முடியாதில்ல. சரி." - சாப்புண்ணி நாயர் சம்மதித்தார்.

"அப்போ நாளைக்கே வாங்க. வர வேண்டிய பாக்கி நெறய இருக்கு. வசூல் பண்ணணும்." - பீரான்.

"அப்போ, கொடுக்க வேண்டியதையும் நிறுத்திடணும்னு தெரிஞ்சிக்குங்க." -- உம்மாச்சு முடித்தாள்.

"ஆகட்டும். வழி செய்றேன்."

"சரி."

"நான் வர்றேன்."

"ஒரு எளநீர் குடிச்சிட்டுப் போங்க. கொஞ்சம் அவலும் இருக்கு."

"வேண்டாம்."

"நில்லுங்க."

சாப்புண்ணி நாயர் இளநீரும் அவலும் சாப்பிட்டு முடித்துப் படியிறங்கிப் போகும் போது யோசித்தார் : "இந்த வேலை நமக்கு உகந்ததுதானா?....காலம் ரொம்ப மாறிப் போச்சு. இனிமே அதையெல்லாம் யோசிக்க வேணாம்."

சாப்புண்ணி நாயர் கண்ணிலிருந்து மறைந்த பிறகு உம்மாச்சு வெளியில் வந்தாள் : "நல்லவர்தான், இல்லே?"

"ஒசந்த குடும்பத்துக்காரரில்ல!"

"அப்போ, நம்பலாம்."

"ஆமா."

மீண்டும் மௌனம். புருவத்தின் பாலுண்ணியைத் தடவிக் கொண்டு பீரான் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தான்.

உம்மாச்சுவும் ஏதோ யோசிக்கலானாள்.

# 6. அயல் நாட்டு வாசம்

பயத்தைப் போல குரூரமான ஒரு வேட்டை நாய் வேறில்லை. எந்த வலுவான கோட்டைக்குள்ளும் அது பின்தொடரும். ஆபத்து குதிகாலைத் தொட்டுவிட்டதாக எப்போதும் நினைக்கச் செய்யும். மாயனும் வேகமாகத் தான் நடந்தான். அகம்மதுண்ணியை அடித்து உருட்டியபோது ஒரு காட்டெருமையின் வெற்றிக் களிப்புத்தான் ஏற்பட்டது. குளம்படி ஓசையும் கனைப்பும் வெளிப்பட்டன. ஆனால், பத்தடி எடுத்து வைத்தபின், இரத்தத்தின் சூடு ஆறத் தொடங்கியதும் ஒரு நினைப்பு: "அந்தப் பெரியவர் செத்திருந்தால்!" எண்ணப் போக்கின் மாற்றம் முயலைப் போலத் துள்ளித் துள்ளிச் சென்றது; விவேகம் ஓர் ஆமையைப் போல் நகரத்தான் செய்தது. அதுதான் குழப்பம்.

அகம்மதுண்ணி அப்போது இறந்தால் அது ஒரு அகால மரணமாகிவிடுமே என்று மாயன் கவலைப்படவில்லை; ஆனால் அது தனக்கு அகால மரணத்தைத் தந்துவிடுமோ என்பதுதான் அவனுக்கு பயம். சாதாரண நிலையில் அப்படி ஒரு கிழவனை ஒரு குத்து விட்டால் அது அவ்வளவு முக்கியமான ஒரு சங்கதியல்ல. அதனால் இறந்து போனாலும் பெரியதொரு அசம்பாவிதமாக ஊர்க்காரர்கள் அதைப் பொருட்படுத்தவும் மாட்டார்கள். ஆனால், இங்கே கிழவனுக்குப் பின்னால் பண மூட்டைகளும், அதற்குப் பின்னால் போலீஸ் படையெடுக்கும்; துப்புத் தேடி அலையும். அடி, இடி, உதை என்று ஸ்டேஷன் நடவடிக்கையெல்லாம் நடக்கும். லாடமிட்ட பூட்ஸ் காலால் ஸ்டேஷன் மூலையில் தன்னை தனித்து நிறுத்தி மிதித்துத் துவைக்கும் ஒரு காட்சி மாயனின் நெஞ்சுக்குள் பாய்ந்தது. அதன் விளைவாக, அவன் அந்த மலைச்சரிவில் வேகவேகமாக நடந்தான். அவன் ஒரு மரக்கிளை மேல் ஏறி உட்கார்ந்தான்.

எங்கே போவது? என்ன செய்வது? இந்த எண்ணங்கள் மாயனின் மூளையில் கிடந்து உழன்றன. எதற்காகப் போக வேண்டுமென்று ஒரு போதும் அவனுக்குக் கேட்கத் தோன்றவில்லை. மாயனைப் பொருத்தவரை இந்த ஊரில்

இருப்பது நல்லதல்ல. போக வேண்டியதுதான். எங்கே? - அதுதான் கேள்வி. அவனுடைய பார்வை மலைச்சிகர உச்சிகளைத் தாண்டி ஆகாயத்தின் எல்லையையும் மீறிச் சென்றது. சே! ஏன் இதெல்லாம் செய்ய நேர்ந்தது? அந்தக் கிழவனின் முகத்தைப் பார்த்து ஒரு தட்டு திட்டிவிட்டு நிறுத்தியிருக்கலாம். அது ஒரு எதிர் நடவடிக்கையாக முடிந்திருக்கும். குழப்பம் எதுவும் நடந்திருக்காது. அதைப் பற்றி இனிப் பேசிப் பயனில்லை. எப்படியானாலும் போயாக வேண்டும். தான் எதற்காக இனி ஊரில் தங்கியிருக்க வேண்டும்? ஊரில் இருப்பதற்கான ஒரே ஒரு காரணமும் மடிந்து விட்டது. உம்மாச்சு என்றென்றைக்கும் இன்னொருவனுக்கு உரியவளாகிவிட்டாள். இனி மாயனுக்கு அவள்மீது எந்த உரிமையுமில்லை. இனி அவளைப் பார்க்க முடியாது. "பார்க்க முடியாதா?" கொஞ்சம் உரக்கவே மாயன் கேட்டுக் கொண்டான். மின்னல் ஒன்று இதயத்ினூடே பாய்ந்து சென்றது.

கடந்த கால நினைவுக் காட்சிகள் ஒவ்வொன்றாக மனதில் வந்து போயின. உம்மாச்சுவின் உருண்ட கன்னக் கதுப்புகளை அவன் ஒரு தடவை தொட்டுப் பார்த்ததுண்டு. அப்போது அவள் கையைத் தட்டிவிட்டுச் சொன்னாள்: "கொஞ்சமோ நில்லுங்க" அவளுடைய கன்னத்தைத் தொட்ட விரல் நுனியை அவன் தடவிப் பார்த்துக்கொண்டான்; ஒரு பெருமூச்சு விட்டான்.

அவளும் பீரானும் ஒன்றாய் இருப்பார்கள். பீரான் அவளைத் தொடுவான். தழுவுவான். ஹா! என்னவெல்லாம் நடக்கும்! பீரான் தன்னைப் பார்த்து ஏளனம் செய்வான். வெள்ளிக்கோலின் முகமும் அவளுடைய முகமும் நெருங்கி உரசும். அதை நினைத்தபோது மாயனின் இதயத்தில் காட்டெருமை விழித்தெழுந்தது. 'இல்லை நாம போகக்கூடாது அந்த ஹம்கினைத் தீர்த்துக் கட்டிட்டுத் தான் போகணும்,' மாயன் தனக்குத்தானே பேசியபடி பல்லைக் கடித்தான்.

திடீரென்று மலைச்சரிவிலிருந்து ஒரு சத்தம். பூட்சின் சத்தமோ? மாயன் இலைக் குவியலினூடே பார்த்தான். ஒன்றும் தென்படவில்லை. ஆனாலும் சத்தம் மட்டும் அப்போதும் வந்து கொண்டிருந்தது. க்ட...பட்...க்ட...ப்ட...

அவர்கள் வருகிறார்கள்! அவர்கள் காட்டை வளையமிட்டுச் சுற்றுகிறார்களோ? ஒரு காட்டுப் பன்றியைப் பொறி வைத்துப்

பிடிப்பது போலத் தன்னையும் பொறிவைத்துப் பிடிப்பார்களோ? எல்லாமே இவ்வளவு சீக்கிரம் முடிந்து விடுமோ? தப்பிப்பதற்கு வழியே இல்லையா? அந்தச் சத்தம் அடுத்தடுத்து வருகிறது. போலீஸ் தன்னைக் கண்டுபிடிக்கும். விலங்கு மாட்டும். முதுகில் நாலு மொத்துக் கொடுத்து நடக்கச் சொல்லும். ஸ்டேஷனுக்குக் கொண்டு போகும். லாடம் பதித்த பூட்சினால் மிதித்து வதைக்கும். ஹௌ!...மாயனின் கண்கள் மூடிக்கொண்டன. செவி மடுத்தான். "சர்வ வல்லமையுள்ள கடவுளே....."

சத்தம் நின்றது. மாயன் கண் விழித்து சுற்றிலும் பார்த்தான். போலீஸ்காரரில்லை. மலைப் பகுதிகளில் பாறைகளினூடே கடந்து போகும் மேய்ச்சல் எருமைகள். அம்மாடி! சுவாசம் சீராக வந்தது.

சூரியன் மெள்ளக் கீழே இறங்கினான். அடிவாரங்களில் இருட்டு படிப்படியாக ஏறிக்கொண்டிருந்தது. இனி அங்கே இருக்கக் கூடாது. ஆனால் எங்கே போவது? பீரானையும் உம்மாச்சுவையும் அப்படியே விட்டுவிட்டுப் போவதா? இல்லையேல் வேறே என்ன செய்ய? போலீஸ் அவனை மோப்பம் பிடிக்கும். "இல்லாவிட்டால்..." மாயனின் நெஞ்சில் புதியதொரு யோசனை. "எப்படியானாலும் போலீஸின் கையில் பிடிபடத்தான் நேரும்; அப்படியென்றால் அந்த வெள்ளிக்கோலை ஒரேயடியாய்த் தீர்த்துவிட்டால் அல்லவா நல்லது?"

அது தெளிவானதொரு யோசனையாக இருந்தது. செய்ய முடிந்தால் நல்லதுதான். அதற்கு முன்பே தன்னைப் பிடித்துக் கொண்டு போய்விட்டால்? அந்த மலையின் அடிவாரங்கள் முழுதும் தன்னைத் தேடிக்கொண்டு போலீஸார் ரோந்து சுற்றுவதாயும் பதுங்கியிருப்பதாயும் மாயனுக்குத் தோன்றிற்று. அவன் சிறிது நேரம் தீவிரமாகச் சிந்தித்தான். முடிவில் ஒரு தீர்மானத்திற்கு வந்தான்.

"ஆண்டவன் துணையிருந்தா ஒரு நாளில் திரும்பிடலாம். அண்ணைக்கு...அண்ணைக்கு... அண்ணைக்கு...ம்!" அவன் பற்களை நறநறத்துக்கொண்டு காட்டிற்குள்ளே செடிகொடிகள் உரசியபடி இறங்கி நடந்தான்.

சொந்த நிழல் பின்தொடர அந்த மனித ஆத்மா குன்றுகளும் பள்ளங்களுமாக ஏறவும் இறங்கவும் செய்தது. பல காட்டு மிருகங்களுக்கு அடைக்கலம் கொடுக்கும் நிலம்பூர்க்காடு அந்தக்

காட்டெருமையையும் மார்பில் இணைத்துக்கொண்டது. காட்டுக்குள் இருட்டு மெள்ள மெள்ள வரவில்லை; எங்கிருந்தோ இங்கு வழிந்து இறங்கியதுபோலத் தோன்றிற்று. எல்லாத் திக்கிலும் இருட்டு. இனி ஓர் அடிகூட நடக்கமுடியாது. அந்தக் காட்டில் எப்படி இரவைக் கழிப்பது? மனிதனின் கையிலிருந்து தப்பி காட்டில் எப்படி இரவைக் கழிப்பது? மனிதனின் கையிலிருந்து தப்பி காட்டு மிருகங்களின் வாயில் இரையாகவா ஓடி வந்தது? மனிதர்களின் கையில் அகப்பட்டால் ஒரு விசாரணை யாவது எதிர்பார்க்கலாம். காட்டு மிருகங்கள் கொல்வதற்கு முன்பு விசாரணை நடத்துவதில்லை. மிருகங்கள் எல்லா இடங்களிலும் இருப்பதில்லை என்று மாயன் நிம்மதியடைந்தான். ஆனால் இல்லாத இடம் எது என்று யாருக்குத் தெரியும்? இனி பின் நோக்கிப் போக முடியாது; முன் நோக்கி நடக்கவும் அயர்வு.

தூரத்தில் ஒரு குள்ளநரி ஊளையிட்டது. மாயன் ஒரு முறை நடுங்கினான். ஒரு குள்ளநரியின் ஊளை கேட்டால் நடுங்கத்தான் வேண்டுமோ என்று அவன் தனக்குத் தானே கேட்டுக் கொண்டான். ஆனாலும் நெஞ்சு வேகமாகப் படபடத்தது. பத்தடி தூரத்தில் ஒரு சிறகடிப்பு. என்ன அது? நெஞ்சு படபடக்க செவிமடுத்தான். அதற்குப் பிறகு ஓசை எதுவும் உண்டாகவில்லை.

என்னவானாலும் இனி முடியாது. ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது. அவன் ஒரு மரத்தின் கிளையில் தாவி ஏறினான். "உலகத்திலுள்ள ஆபத்துக்களே, நீங்கள் என்னைத் தின்று கொள்வீர்களாக!" என்பது போல ஒரு சாய்மானம், ஆதாரம் எதுவுமின்றி பாதிக்கண்கள் மூடிய மயங்கிய நிலையில் அப்படியே இருந்தான் இளம் பருவத்து நினைவுகள் ஒவ்வொன்றாக இதயத்தினூடே கடந்து போயின. அம்மா சுட்டுத் தரும் அரிசி ரொட்டியின் வாசனை இப்போதும் மூக்கைத் துளைக்கிறது.

"வேணுமட்டும் சாப்பிடடா, மாயனே!" என்ற அம்மாவின் கட்டளை; "நீ பெரியவனாகணும்" என்ற அவளுடைய ஆசை; மிளகுச் சாக்கை ஏற்றிக்கொண்டு தளர்ந்து முன்வாசலில் வந்திருக்கும் அப்பாவின் குரல்...அப்படி அந்தக் காலப்பகுதி கழிந்தது...அப்பாவின் மரணம், அம்மாவின் மரணம், சகோதரிகளின் கல்யாணம் - அப்படி ஒவ்வொன்றும், அதற்குப் பிறகு உம்மாச்சு வருகிறாள். அத்தரின் மணம் பரவுகிறது. இந்த உலகம் முழுவதும் அந்த நறுமணமாகவே தோன்றுகிறது. அவள் கூறுகிறாள். "என்னாலே மறக்க முடியலே, மாயனே!"

"உம்மாச்சு!" மாயன் கொஞ்சம் உரக்கவே கூப்பிட்டுவிட்டான், எங்கே உம்மாச்சு? சுற்றிலும் காடுதான். அவன் மீண்டும் கற்பனைகளில் மூழ்க முயன்றான்.

வடக்கே கடைக்கோடியிலிருந்து இலைப் பரப்புக்களினூடே ஒரு நட்சத்திரம் பளிச்சிட்டது. அது மேலும் மேலும் கண் சிமிட்டிக்கொண்டிருந்தது. அவன் அதைப் பார்த்தபடி அங்கேயே அப்படியே இருந்தான்.

தூரத்திலிருந்து சில மிருகங்களின் சலசலப்புக்களும் பறவை களின் கரைச்சல் ஒலிகளும் கேட்டன. கேட்கட்டுமென்று அவன் பொருட்படுத்தாமலிருந்தான். அவன் அந்த நட்சத்திரத்தை மட்டும் பார்த்தபடியே இருந்தான். கண்கள் மயங்கிச் சோர்ந்தன. நட்சத்திரம் ஒளி வட்டம் போடுகிறது. அது படிப்படியாய்ப் பெரிதாகிப் பெரிதாகி இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் உள்ளடக்கும் ஒரு தோணியாக மாறுகிறது. அந்தத் தோணி அலைகளினூடே நீந்தி நீந்திப் போகிறது. அந்தக் கடலில் இடமும் வலமுமாய் ஏராளமான நிழல்கள் பதிகின்றன. எதனுடைய நிழலென்று எதுவும் புரியவில்லை. சில குள்ளநரியின் சாயல் கொண்டிருக்கின்றன. சில நரியின் சாயல். ஓநாயின் சாயல் கொண்ட நிழல்களுமுண்டு. இந்த நிழல்களைத் தாண்டிக் கொண்டுதான் தோணி முன்னேறுகிறது. அந்தத் தோணியில் தானும் உம்மாச்சுவும் மட்டுமே உண்டு. தோணியும் ஒரு நிழலை உருவாக்குகிறது.

அதில் ஒரு கொடூர உருவம் இருக்கிறது. சிறிய தலை, பெரிய உடல் - அப்படி ஒரு நிழல். அந்த நிழலின் முகத்தில் ஒரு கறுத்த பாலுண்ணி இருக்கிறதோ? மாயன் ஒரு முறை அயர்ந்தான். தோணியை வேகமாகச் செலுத்தினான். அவன் பாடுகிறான், உம்மாச்சுவும் பாடுகிறாள். தோணி அப்படியே போய்க் கொண்டிருக்கிறது.

கிக்கீ.. கிக்கீ...என்று தலைக்கு மேலிருந்து செவி துளைக்கும் சத்தம் பறவையின் கரைச்சல் கேட்டு மாயன் விழித்தான். இளவெய்யில் காடு முழுவதும் தோரணம் கட்டியிருந்தது. அவன் ஒரு முறை பெருமூச்சு விட்டுவிட்டு நிமிர்ந்து நின்றான். முதுகில் சன்னமாக வேதனையுண்டு. பரவாயில்லை. அவ்வளவுக்கு உற்சாகமான காலைப் பொழுதை அதற்கு முன்பு பார்த் ததுண்டோ என்ற சந்தேகம் அவனுள் எழுந்தது. அந்த மரக்

கிளையின் இரு புறத்திலும் காலைத் தூக்கிப்போட்டு ஆட்டிக்கொண்டு அவன் ஒரு முறை சீட்டி அடித்தான். உலகம் புன்னகை புரிந்தபடி நிற்கிறது.

தலையிலிருந்த மயக்கம் முழுவதுமாக நீங்கிய பின்பு அந்தப் புன்சிரிப்பு மாயனுக்கு பயங்கரமாகத் தோன்றிற்று. இதுவரை அவன் பயந்துகொண்டிருந்தது இருட்டுக்குத்தான். இப்போது வெளிச்சத்தை வெறுக்கத் தொடங்கினான். இருட்டில் எங்கே வேண்டுமானாலும் ஒளிந்து கொள்ளலாம், வெளிச்சத்திலோ? போலீசாருக்கு எந்த நேரத்திலும் அவனை அடையாளம் காட்டிவிடும். அதோ அகம்மதுண்ணியைக் கொன்ற மாயன்.

மாயன் எழுந்து காட்டினூடே நடந்தான். காலில் அகப்பட்ட சரளைக் கற்களைப் பொறுக்கி பெருமரங்களுக்கு நேராக வீசி எறிந்தான். அன்று பகலில் பெரும் பகுதியும் அவன் நடந்தான். அந்தி நேரம் நெருங்கிய போதுதான் கணவாய்ப் பகுதியை அடைந்தான். அங்கே நின்றபடி மேற்கும் கிழக்குமாக ஒரு முறை நோட்டம் விட்டான். கிழக்குப் பக்கமாக இறங்கினால் தான் பிறந்து வளர்ந்த ஊரை அடையலாம்; மேற்குப் பக்கமாகப் போனாலோ? எங்கே வேண்டுமானாலும் போகலாம். அவன் மேற்குப் பக்கமாக நடந்தான். அகலம் குறைந்து சுற்றிப் போகும் அந்தப் பாதை வழியாக அப்படியே நடந்தபோது மாயன் குறிப்பாக எதையும் ஆலோசிக்கவில்லை. அப்போதும் காலில் அகப்பட்ட கற்களை உதைத்து பள்ளத்தை நோக்கி எட்டித் தள்ள மட்டும் மறக்கவில்லை.

சிறிது நேரம் கழிந்ததும், ரோட்டிலிருந்து ஒரு கரகர சத்தம் கேட்டு மாயன் திடுக்கிட்டான். திரும்பிப் பார்த்தான். பலசரக்கு ஏற்றிப் போகும் ஒரு மாட்டுவண்டி. அதை ஓட்டிச் சென்றவன் ஒரு கிழட்டு முஸ்லீம். அந்த மாடுகளைவிட அமைதியானதொரு வாழ்க்கை அவனுடையதென்று தோன்றிற்று. பாதி அடைந்த கண்களோடு அவன் வண்டியில் போய்க்கொண்டிருந்தான். வருவது வரட்டும் என்று மாயன் அருகில் சென்றான்.

"அண்ணே!"

மூக்கணாங்கயிற்றைப் பிடித்தான் கிழவன்; வண்டி நின்றது.

"யாரு?"

"ரொம்பத் தூரமா நடக்கிறேன், அண்ணே." - மாயன் சொன்னான்.

"எங்கே?"

"மேற்கே."

"வய நாட்டுக்கா?"

"ஆமாம்"

"ஏறிக் குந்திக்கோ".

மாயன் ஏறிக்கொண்டான். வண்டி நகர்ந்தது. கிழவன் அவன் ஊரும் பேரும் கேட்டான். மாயன் ஏற்றாற்போல் பொய் சொன்னான்.

"அப்படீன்னா தோட்ட வேலைக்கு போறாப்பிலியா?"

"ஆமாம்." - அப்படியொரு யோசனையே அதுவரை மாயனின் மூளையில் எட்டியதில்லை. கிழவனின் அந்தக் கேள்வி ஒரு நல்ல உருப்படியான வழிதான் என்று மாயன் கருதினான்.

"ஒரு நல்ல வேலை தோட்டத்திலே கிடைக்குமா, அண்ணே?"

"வேலையெல்லாம் கிடைக்கும்." - மாடுகளை ஒரு தடவை இணக்கமாக முறைப்படுத்திக்கொண்டு கிழவன் தொடர்ந்தான்: "ஆனால், அது ஒரு செத்துப் பொழைக்கிற வேலை."

"ஏன்?"

"அந்தக் கங்காணிமார் வலையிலே விழுந்திட்டா பின்னே மனிசன் திரும்ப மாட்டான். ஆனையாகலாம் சேனையாகலாம்னு எல்லாம் சொல்லுவாங்க. ஆனால் பொறியிலே ஆப்ட்டுகிட்டா பின்னே ஆனையாகவும் முடியாது, சேனையாகவும் முடியாது!"

"அப்படீன்னா என்ன செய்யலாம், அண்ணே?"

"வாட்ட சாட்டமான ஆளில்ல நீ! சரியான வேலை கிடைக்காமயா போயிடும்? பார்க்கலாம் வா."

கிழவனின் மாட்டுவண்டியில் அவன் சவாரி தொடர்ந்தது. இரவு பத்து நாழிகை கழிந்தபோது, கிழவன் ஓரிடத்தில் வண்டியை நிறுத்தினான். நல்ல குளிர். அடுத்திருந்த ஒரு குடிசைக்குச் சென்று வயிறு நிறையச் சாப்பிட்டான். மாயனுக்கும் கொடுத்தான். அவன் ஆவலோடு வாரித் தின்றான்.

"காக்கா கூப்பிட்டதும் நாம பொறப்படுவோம்" என்று சொல்லிவிட்டு கிழவன் படுத்து குறட்டை விடத் தொடங்கினான்.

மாயன் கண் விழித்தபடி படுத்துக்கொண்டே ஆலோசித்தான். அவன் எங்கே போகிறான்? எதற்காகப் போகிறான்? பனி உறைந்து கிடக்கின்ற மலை அடிவாரத்தை நோக்கி எடுத் தெறியப்பட்ட உருண்டைக் கல்லைப்போலத்தான் வாழ்க்கையும். எதுவும் பிடிபடாமல் அங்கு மூழ்கிப் போக வேண்டியதுதான்!

விடிகாலையிலேயே ஒரு கடுங்காப்பியைக் குடித்துவிட்டு அவர்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள். அன்று சாயங்காலம் வண்டியிலிருந்து இறங்கியபடி கிழவன் சொன்னான்:

"நமக்கு இங்கேதான் எறங்கணும்....இதுதான் ஹாஜியின் கடை."

மாயனும் இறங்கினான். அது இரண்டு அறைகள் கொண்ட கடையாக இருந்தது. பலசரக்கு வியாபாரம். மாயன் சுற்றிலும் பார்த்தான். சுற்றிலும் பச்சைப் பசேலென்று குன்றுகள். எங்கும் தேயிலைக் காடுகள்.

"எறக்கி வையி." - வீட்டு முற்றத்திலிருந்து செம்பைத் தேய்ப்பது போன்ற ஒரு குரல் வந்தது. கொழுத்துத் தடித்த ஒரு சரீரம், வட்டத் தாடி, தலையில் பெரிதாகக் கட்டு, பட்டுக் குப்பாயம், பச்சை பெல்ட். காலில் தடித்த மிதியடி.

அத்த முரட்டுக் குரல் உயர்ந்து கட்டளையிட்டது: "எறக்குங்க."

சாமான்களை இறக்கி வைப்பதில் மாயன் கிழவனுக்கு உதவினான். அவன் இரண்டு மூன்று கட்டுக்களை ஒரே சமயத்தில் பூப்போல எடுத்து கடைக்குள் வைத்தான்.

வேலை முடிந்ததும் ஹாஜியார் தன் முரட்டுக் குரலில் கேட்டார்: "எங்கேருந்து கெடச்சான், பாறாங்கல்லுப் போலிருக்கிற எளவட்டம்?"

"வழியிலே வந்து சேர்ந்தான்." வண்டிக்காரக் கிழவன் சொன்னான்: "அவனுக்கு ஏதாச்சும் ஒரு வேலை..."

"திருடுவானா?" - ஹாஜியார்.

"அவன் நல்லவனாத்தான் தோணுது." - வண்டிக்காரன்.

"ஒன்னோடே நெனப்பினாலே என் பணம் நஸ்ட்டப்பட்டா?" - ஹாஜியார் சந்தேகத்தை வெளிப்படுத்தினார்.

"ஒரு முஸ்லீமில்ல?" - கிழவன் சாதகமாக நினைவுபடுத்தினான்.

"இந்தக் காலத்திலே எதையும் நம்ப முடியலே." ஹாஜியார் சொன்னார். அதைத் தொடர்ந்து மாயன் பக்கம் திரும்பிக் கேட்டார்:

"வேலை செய்வியா?"

"செய்றேன், ஹாஜி."

"சண்டித்தனம் பண்ணினா நான் வெரட்டிப்பிடுவேன். என்ன? பாடு படாமே சாப்பிட முடியாது. இனிமே வேலையைப் பத்திச் சொல்றேன்: சில சமயம் காட்டுக்குப் போக வேண்டியிருக்கும். சில சமயம் கடையிலே நிக்க வேண்டியிருக்கும். அப்படி எல்லாம்தான் செய்யணும், என்ன?"

"இருந்துக்கிடறேன்."

"அப்படீன்னா இருந்துக்கோ!"

கிழவன் மறுநாள் மலைச்சரக்கை வண்டியில் ஏற்றிக்கொண்டு திரும்பிப் போகும் போது மாயனுக்கு நல்ல புத்திமதி சொன்னான். ஹாஜி நல்ல பணக்காரர் என்றும், அவருடன் கூடச் சேர்ந்தவர்கள் பலர் பெரும் பணக்காரர்களாக ஆகியிருக்கிறார்களென்றும், உண்மையையும் மரியாதையையும் கடைப்பிடிக்க வேண்டுமென்றும், கடவுளை நம்பியே பிழைக்க வேண்டுமென்றும் எல்லாமாகச் சொன்னான். அந்த மாட்டு வண்டி அந்த இடத்தை விட்டு நகரும்போது மாயன் அரவமில்லாமல் நின்று பார்த்துக் கொண்டிருந்தான். அந்த வண்டி போவது தன்னுடைய பிறந்த ஊருக்குத்தான்; உம்மாச்சுவும் பீரானும் சுகமாய் இருக்கும் ஊருக்குத்தான்: "-ம்.. இருக்கட்டும்..."

ஹாஜி சொன்னது சரியாகத்தான் இருந்தது. மாயனுக்கான வேலை பலதரப்பட்டதாக இருந்தது. காரணம், பல போக்குகளோடு கூடிய ஒரு வியாபாரமாயிருந்தது ஹாஜியினுடையது. உப்பும் மிளகும் புகையிலையும் கருவாடும் கொடுத்து, பதிலுக்கு ஏலம், குறுமிளகு, தீவட்டி, தேன் முதலியன அவர் வாங்குவார். தேயிலைத் தோட்ட வியாபாரமும் அவருக்குத்தான். ஓரளவு சிறிய அளவில் தொடங்கியிருந்த அந்த வியாபாரம் இப்போது தழைத்துப் பெருகியிருக்கிறது. ஹாஜி அங்கே ஒரு பெரியதனக்காரர். அவரைக் கண்டால் எல்லோரும் எழுந்து நிற்பார்கள். தேயிலைத் தோட்டத்தில் வெள்ளைக்கார துரையைக் கண்டால் மட்டுமே அவர் எழுந்து நிற்பார்.

காட்டில் தேனீக்கள் கூடு கட்டும்; தேன் கொண்டு வந்து சேர்க்கும்; வேடுவர்கள் அதைச் சேகரிப்பார்கள். கொஞ்சம் புகையிலையோ கருவாடோ கொடுத்து ஹாஜி அதை வாங்குவார்.

காட்டு ஏலத்தையும் தீவட்டியையும் வாங்குவது இப்படித்தான். சிறு குடுக்கைகளில் தேனுடன் வரும் வேடுவர்களை வழியில் வைத்துப் பிடித்தால்தான் உண்டு. அது மாயனின் முக்கியமான தொரு வேலையாகிவிட்டது. காட்டில் ஏலம் காய்த்தால் அதை அறுத்துக் காய வைத்து கடைக்குக் கொண்டு வரவேண்டியதும் அவனுடைய கடமையாயிற்று. மாயன் எல்லாவற்றையும் ஒழுங்காகவும் கௌரவம் குலையாமலும் செய்து வந்தான்.

"எளவட்டம் மோசமில்லே." ஹாஜியும் தெரிந்துகொண்டார். கடைக்கு அடுத்துத்தான் ஹாஜியின் வீடு. அதை அடுத்தாற்போல ஒரு பள்ளிவாசல். மாயன் அவருடைய வீட்டிலேயே சாப்பிட்டுக் கொள்வான், தொழுகை செய்வான், காட்டுக்கோ கடைக்கோ போவான். ஹாஜியார் ஒரு ரூபாய் விலை கொடுத்து வாங்கத் தயாராக இருக்கும் மலைச் சரக்குகளை மாயன் பதினான்கு அணா விலையிலேயே பேரம் முடித்துக்கொண்டு வருவான். முன்பணம் வாங்கிக்கொண்டு வேடுவர்கள் தேன்குடுக்கைகளையோ தீவட்டி களையோ மற்றொரு பாதையில் வேறு யாருக்காவது விற்பதற்குக் கொண்டு போனால், அவர்களை இடைமறித்து நாலு சாத்து சாத்தி ஹாஜியின் முன்பாக அவர்களைக் கொண்டு நிறுத்துவதில் மாயன் மகா கெட்டிக்காரன்.

"அடிக்காமே கொள்ளாமே அவனை ஏம்ப்பா கொண்டு வந்தே?" ஹாஜியார் மாயனிடம் சொல்வார்.

"அடிச்சிக் கொண்ணுப்புட்டாருங்க." வேடுவன் முறையிடுவான்.

"ஒன்னெக் கொண்ணாக்கூடப் பத்தாதுடா, திருட்டுப் பயலே." ஹாஜியார் மீண்டும் கோபத்தைக் காட்டுவார். மாயன் அப்படிச் செய்ததுதான் சரியென்று உள்ளுக்குள் நினைத்துக்கொள்வார்.

மாயன் காட்டில் நடந்தால் யானை நடந்தது போலிருக்கும். வேடுவர்கள் ஒதுங்கி நிற்பார்கள். அப்படி காட்டில் ஒரு தலைவனாக அவன் வாழ்ந்தான். அதில்தான் மாயனுக்கும் விருப்பமாக இருந்தது. கடையில் உட்கார்ந்திருப்பது அவனுக்கு அவஸ்தையாக இருந்தது. யாராவது போலீஸ்காரர்கள்கூட அங்கே வர நேரலாம். எல்லா ரகசியங்களும் வெட்ட வெளிச்ச மாகிவிடும். ஒரு நாள் அப்படி ஓர் ஆபத்து நடக்கவும் நேர்ந்தது. திடீரென்று ஒரு போலீஸ்காரர் கடைக்கு வந்து விசாரித்தார்: "ஹாஜியார் இல்லே இங்கே?"

"இருக்காரு...இல்லே...."

"என்னடா ஒளிக்கிறே?"

"வெளியே போயிருக்காரு."

"எப்போ வருவாரு?"

"நாளைக்கு...இல்லே..இண்ணைக்கு..."

"இவன் யார்ரா ஒருத்தன்! எப்போ வருவாரு?"

"சாயந்திரம்."

"அதைச் சொல்ல வேண்டியதுதானே? ஏன் தடுமாறுறே?" - போலீஸ்காரர் இறங்கி நடந்தார். மாயன் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். ஹாவ்! ஒன்றும் நடக்கவில்லை!

காட்டில் இந்த மாதிரியான ஆபத்துக்கள் எதுவுமில்லையாதலால் கை வீசி நடக்கலாமல்லவா!

"அவன் காட்டுக்குத்தான் லாயக்கு." - ஹாஜியும் சொல்வதுண்டு.

மாயன் ஏகாந்தமான காட்டில் கட்டிப் பிணைந்து கிடக்கும் காட்டுவள்ளிக்கொடியில் உட்காந்து ஊஞ்சலாடியபடி பகல் கனவுகள் காண்பதுண்டு. இனிமையும் கசப்புமான நினைவுகள். அவனுடைய மனதில் மாறி மாறி வரும். மலர்ந்து நிற்கும் காட்டுப் பூக்களை உம்மாச்சுவின் கண்களைப் பார்ப்பதுபோல் பார்த்துக் கொண்டு அவன் கேட்பான்: "என்னெ மறந்திட்டேல்ல...என்னெ மறந்திட்டே...ம்...மறந்திரு..."

சிறிது நேரம் அவன் மௌனமாக நின்றுகொண்டிருப்பான். அப்போது பல் நறநறப்பு கேட்கும்: "இந்த ஒறக்கத்துக்கு பொழுது விடியாது, பார்த்துக்கோ!"

அப்போது மாயனின் கண்கள் கட்டாரி முனையைப்போல் மின்னின. அவன் சரளைக் கற்களைப் பொறுக்கி மரத்தடிகளை நோக்கி பலத்துடன் எறிந்தான். இந்த நிலையில் மாதங்கள் கடந்தன.

# 7. நாயர் பிடித்த பூங்கொம்பு

"எதுக்குடா சிரிக்கிறே?... ஒனக்கு வாளப்பளம் வேணுமா?... சீனிச் சக்கரை வேணுமா?... முறுக்கு வேணுமா?....ஒனக்கு பொண்ணு கட்டணுமா? ....... ஓ ..... பொண்டாட்டி கொண்டாரட்டா? .... எங்கண்ணு ..... கத்தாதேடா..." பீரானின் அம்மா உம்மாச்சுவின் மகனை எடுத்துக் கொஞ்சினாள். பல்லில்லாத அந்த இரண்டு வாய்களும், மேலும் மேலும் இணைந்து தொட்டு வாழ்க்கையின் இரண்டு எல்லைகளையும் தம்மில் இணக்கமாகச் சேர்த்துக் கொண்டன. ஒன்று மறைந்து மறைந்து போகிறது; ஒன்று தெளிந்து தெளிந்து வருகிறது. புதியதனூடே பழையது வாழத் துடிக்கிறது. தன்னிடமிருந்து புறப்பட்ட ஜீவனின் சக்திக்கு கண்ணிகள் வளர்வது கண்டு கிழவி மகிழ்ந்து திளைத்தாள். அடுத்தாற்போல் அரிசி அளந்துகொண்டிருந்த உம்மாச்சுவைப் பார்த்து அவள் சொன்னாள்:

"இவன் பெரிய ஆளா வருவான். இந்தக் குடும்பத்தை இவன் துலங்க வைப்பான், உம்மாச்சு!"

"...உம்..." உம்மாச்சு குரல் கொடுத்தாள்.

"இவன் இவனோடே தாத்தா ஜாடை, உம்மாச்சு."

"...உம்..."

"வளக்க வேண்டியவங்களை வளக்கறதுக்கும், அடக்க வேண்டியவங்களை அடக்கறதுக்கும் இவனாலே முடியும், உம்மாச்சு."

உம்மாச்சு ஒரு முறை சிரித்தாள்.

"நீ சிரிக்காதேடி உம்மாச்சு. கடவுள் அனுக்கிரகத்தினாலேயும் புண்ணியாத்மாக்களோடே ஆசிகளோடேயும் அவன் செழிப்பா வளருவான், உம்மாச்சு!"

உம்மாச்சு குலுங்கிச் சிரித்தாள்.

தன் மகன் அந்த மாதிரி ஆக வேண்டுமென்று உம்மாச்சுவுக்கும் ஆசைதான். அவன் தாத்தா மாதிரி என்று சொன்னதில்

மாத்திரமே அவளுக்குக் கொஞ்சம் வருத்தம். ஆனால் அப்படிச் சொல்வதற்கு வயதானவர்களுக்கு உரிமை உண்டென்று தெரிந்திருந்த அவள் ஏதும் பேசவில்லை.

"அவன் ஒரு கில்லாடியா வருவான்! பாத்துக்கோ, உம்மாச்சு." கிழவி மீண்டும் சொன்னாள்.

"அது போதும்." உம்மாச்சுவும் மன நிறைவுடன் ஒப்புக் கொண்டாள். தன் மகனைக் கண்டால் எல்லோரும் நடுங்கும் ஒரு நிலை வரவேண்டுமென்று உம்மாச்சுவும் ஆசைப்பட்டாள்.

"ஆனா எனக்கு ஒரு குறைதான் இருக்கு." - கிழவி தழுதழுத்து இதைச் சொன்னாள்.

"என்ன அது?" உம்மாச்சு தலையுயர்த்திக் கேட்டாள்.

"இவனோடே தாத்தா இவனைப் பாக்க முடியாமப் போனதுதான் எனக்கு வருத்தம். எவ்வளவு ஆசைப்பட்டாரு, மகனுக்கு ஒரு மகன் பிறக்கிறதைப் பாக்கணுமின்னு. ஆனா ஆண்டவன் அதுக்கு விடல்லே." கிழவி கண்ணீர் வடித்தாள். உண்மைதான். சேக்குட்டி முதலாளி ரொம்பவும் ஆசை கொண்டிருந்தார். ஆனால் மரணம் அவர்மீது பாய்ந்து மேலேறிக் கொண்டுவிட்டது. சேக்குட்டி முதலாளி இறந்த பின் மூன்று மாதம் கழித்துத்தான் உம்மாச்சு பிரசவித்தாள்.

உம்மாச்சு உண்டாயிருப்பதாக நிச்சயமான போதிலிருந்தே கிழவர் தன் கற்பனைகளை வெளிப்படையாகச் சொல்லலானார். தன் மனைவியிடம் கேட்பார்: "ஆணோ பெண்ணோ?"

"ஆண்டவன் கையிலிருக்கிற காரியம்!"

"ஆனாலும் பாரு, ஆண்தான்."

"அது ஒங்க கையிலேயா இருக்கு?"

"ஆமாண்டி. நான் இதுவரைக்கும் நெனச்சதெல்லாம் நடந்திருக்கு. என்ன சொல்றே? ஒன்னைக் கட்டிக்கிடுறதுக்கு எத்தனை எதிராளிங்க வந்தாங்க! இருந்தாலும் நான்தான் கட்டிக் கிட்டேன். பீரான் வயித்திலே இருந்தப்போ நான் சொன்னேன், பையன்தான்னிட்டு; பையன்தான். உம்மாச்சுவை பீரானுக்கு கட்டிவைக்கணும்னு நான் அகமதுண்ணி கிட்ட இதே வீட்லே வச்சி சொன்னேன்; கட்டி முடிச்சேன். என்ன? இப்போ பையன் பொறக்கப் போறதையும் நான் பாக்கத்தான் போறேன். என்ன?"

"பொண்ணா இருந்தா என்னவாம்?" - மனைவி கேட்டாள்.

"பையன்தான். அவனை ஸ்கூலுக்கு அனுப்பி வச்சி பெரிய படிப்பா படிக்க வைக்கணும். பட்டுக் குடை பிடிச்சி, வாலிபனாகி, இங்கிலீசெல்லாம் பேசி அவன் வளர்றதைப் பாக்கத்தான் போறேன். என்ன?"

"நீங்க ஆண்டவனைக் குறை சொல்லாம சும்மா இருங்க."

கிழவர் மௌனமாக இருந்தார். தாடியை நீவிக்கொண்டு ஏதேதோ யோசித்தார். அந்தத் தளர்ந்த பார்வைகள் எதிர் காலத்தில் தட்டுத் தடுமாறி நடந்தன. ஆனால், உம்மாச்சு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்ததைக் காண கிழவர் இருக்கவில்லை. அந்த துக்கம் பீரானின் அம்மாவுக்கு நிறையவே உண்டு. சிசுவின் அழுகைக் குரலைக் கேட்ட போது அந்தப் பல்லில்லாத வாய் மலர்ந்து சிரித்தது. ஆனாலும் கண்கள் பனித்திருந்தன. அந்த மூதாட்டி தன் கணவனின் உருவம் முழுவதையும் இன்று இந்தச் சின்னக் குழந்தையிடம் காண்கிறாள்.

"நெனச்சது போல எல்லாம் நடத்தின மனிசன்தான்." - கிழவி முக்காட்டுத் தலைப்பினால் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

"ஆண்டவன் நெனப்பை நம்மாலே தடுக்க முடியுமா?" - உம்மாச்சு சமாதானப்படுத்தினாள். அவள் அரிசிப் பெட்டியை ஒதுக்கி வைத்தாள்.

"யாரும் இல்லியா?" - திடீரென்று வெளியிலிருந்து ஒரு குரல் கேட்டது.

"யாரோ கூப்பிடுறாங்க!" என்று சொல்லிக்கொண்டு கிழவி குழந்தையை இடுப்பில் எடுத்து வைத்துக்கொண்டு உள்ளே போனாள். உம்மாச்சு திரைக்குப் பின்னால் சென்று கேட்டாள்:

"யாரது?"

"நான்தான்."

"சாப்புண்ணியாரா?"

"முதலாளியில்லே?"

"வெளியிலே போயிருக்காங்க. இப்போ வந்திருவாங்க. அந்த முக்காலியிலே இருங்க. விசேசமா..."

"அப்படி ஒண்ணுமில்லே."

"அந்த சேரிக்காரங்க எடத்தைக் காலிபண்ணச் சொல்லி கொடுத்த கேஸ் என்னாச்சி? காசு இவ்வளவு ஆயிருச்சே!"

"வேலை நடந்துக்கிட்டிருக்கு."

"எல்லாம் நீங்க பார்த்தாப் போதும்."

"நான் வந்தது ஒரு சின்னக் காரியம் சொல்றதுக்கு."

"என்னவாம்?"

சாப்புண்ணி நாணப்படுவதாய் நடித்து சிறிது நேரம் அரவமில்லாமல் இருந்தார்.

"என்ன சாப்புண்ணி நாயரே?"

"நான்....ஒரு சம்பந்தம் பேச யோசிச்சிட்டிருக்கேன்."

"பேஷ்! இப்பவாச்சும் இப்பிடியொரு யோசனை வந்திச்சே! ஒங்கம்மா இதைத்தான் ரொம்ப ஆசைப்பட்டாங்க. பார்க்கிற போதெல்லாம் சொல்லுவாங்க. ஆனா அப்பவெல்லாம் நீங்க கவனிக்கலே. இப்போ அம்மா போன பெறகு குடும்பம் கதிகெட்டுப் போச்சு. இருக்கட்டும், எந்த ஊரு?"

"பக்கம்தான்."

"லட்சுமியம்மையா?"

"அவதான்."

"அப்பாடி! நாயர் பிடிச்ச கொம்பு பூங்கொம்புதான்!"

இருவரும் வெடித்துச் சிரித்தார்கள். உம்மாச்சு சொன்னது சரியாகத்தான் இருந்தது. குஞ்சுக்குட்டியம்மை வற்புறுத்தினாலும், குடும்பம் ஒரு நிலைக்கு வந்த பிறகுதான் தான் திருமணம் செய்துகொள்ளப் போவதாக உறுதியாக இருந்தார் சாப்புண்ணி நாயர். களஞ்சிய அறையைப் பழுது பார்த்து புதுப்பித்தார். வீட்டு முன்புறத்தில் அழகானதொரு முகப்பைச் சேர்த்துக் கட்டினார். ஒரு சுற்றுமதிலும் எழுப்பினார். கொஞ்சம் குத்தகை நிலம் கைவசம் இருந்ததனால் தென்னங்கன்றுகள் தேவைப்பட்டன; அதோடு சேர்த்து ஒரு நாலு அறைத் தொழுவமும். வயல் உழுது தயாராக இருந்தது. தழைத்த தென்னைகள்; வளர்ந்த வாழைத் தோப்பு. பழுது பார்த்து வெள்ளையடித்த பகவதி மண்டபம் நின்றபடி புன்னகைத்துக்கொண்டிருந்தது. செல்வம் வந்து கூடிற்று.

நிறைய காரியங்களை சாப்புண்ணி நாயர் மனதில் நினைத்திருந்தார். அவையெல்லாம் நடத்து முடிந்த பின்னர்தான்

கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று தீர்மானித்திருந்தார். ஆனால் அதற்கிடையில் அம்மா இறந்துபோனாள். ஈமக்கிரி யைகள் முடிந்து உறவினர்கள் விடைபெற்றுச் சென்ற பின்னர் தான் வீட்டில் ஆளில்லாத குறை சாப்புண்ணி நாயருக்குப் புரிந்தது. வேலைக்காரர்களின் உதவியோடு நாட்களைத் தள்ளி வந்தார். ஆனால் செலவுதான் அதிகம். ஒன்றும் சரிப்பட்டு வரவில்லை. ஆனாலும் ஆறு மாதம் பொறுத்தார். அதற்குப் பிறகுதான், வேலைக்காரியைக் காட்டிலும் லாபம் ஒரு மனைவி தானென்று சாப்புண்ணி நாயருக்கு விளங்கிற்று. பலருக்குத் தன் மீது ஒரு கண் உண்டென்று சாப்புண்ணி நாயருக்குத் தெரியும். ஆனாலும் குடும்பமும் தரமும் பார்க்காமல் கல்யாணம் பேசக் கூடாது. தலவெட்டத்து மூப்பில் நாயராக்கும் அவன்! அதை மறக்கலாமா?

யானை மெலிந்தாலும் அதைத் தொழுவத்தில் கட்டுவதில்லை என்ற கண்டுண்ணி மாமனின் பழைய வாக்கு எப்போதும் அவனுடைய செவியில் ஒலித்துக்கொண்டே இருந்தது. அந்த வாக்குதான் என்ன செய்தாவது மறுபடியும் யானையாக வேண்டுமென்ற முனைப்பை அவனில் வளர்த்தது. அந்த நிலையை அடைய வேண்டுமென்பதற்காக எங்கேயாவது போய் ஒட்டிக் கொள்ளக் கூடாதல்லவா? பல சம்பந்தங்கள் வந்து போயின. சொத்து உள்ள இடத்தில் ஜாதி மோசம்.

"ஜாதிக்குப் புறம்பான சம்பந்தம் மட்டும் வேண்டாம்" என்றுதான் சாப்புண்ணி நாயர் நினைத்தார். ஜாதி நல்லதாக இருந்தால் வசதியான பெண்ணாக இல்லை. அப்படி அரித்துச் சலித்து லட்சுமியம்மையைத் தேர்ந்தெடுத்தார். அவள் ஒரு நாள் குளித்து முடித்து ஈரம் துடைத்து, கோயில் பூசை முடித்து வரும்போதுதான் சாப்புண்ணி நாயருக்கு ஒரு நோக்கம் ஏற்பட்டது.

"இவள் பரவாயில்லையே!" தன்னைப் போல பெயரெடுத்த நாயர் குடும்பமில்லையென்றாலும் உயர்ந்த ஜாதிதான். அவளுக்கு இருபத்தொரு வயது தாண்டிவிட்டாலும்கூட இன்னமும் கல்யாணம் ஆகவில்லை. அரண்மனையில் ஒரு இளைய தம்பு ரானும் அவளுமாய் தொடர்புகொண்டிருந்ததாக சாப்புண்ணி நாயரும் கேள்விப்பட்டிருந்தார். அவன் கொஞ்சம் காசும் கொடுத்ததுண்டு. தொடர்பு எப்படியிருந்தாலும் கல்யாணம் ஆகவில்லை அல்லவா? தம்புரானுக்கும் வேறே ஒரு பணக்கார

மேனன் குடும்பத்தில் பெண் பார்த்து கல்யாணம் ஆகிவிட்டது. அந்த நிலையில் இவளுக்கு என்ன தரக் குறைவு? அப்படித்தான் 'பூங்கொத்துப் போலிருந்த' லட்சுமியின் பாக்கியம் மலர்ந்தது.

"எண்ணிக்கு நிச்சயமாயிருக்கு?"

"மேட மாசம் பதினாலாம் தேதி."

"அப்பிடீன்னா அடுத்த வாரமில்ல?"

"ஆமாம். முதலாளிகிட்ட ஒண்ணு சொல்லணும்."

"தடபுடலா நடத்தணும்."

"அப்படியெல்லாமில்லே!"

"அதை நீங்களா நிச்சயம் பண்றது? இவங்க வரட்டும். நானே சொல்றேன்."

"ஒண்ணும் வேணாம்."

"வேணும்."

கல்யாணம் செய்துகொள்வதிலுள்ள குணவிசேஷங்களைப் பற்றி உம்மாச்சு கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தாள். குடும்பத்திலுடைய ஐஸ்வரியம், அபிவிருத்தி - இவையெல்லாம் திருமணத்துடன் தொடர்பு கொண்டிருக்கின்றனவென்றும், அது ஆண்டவனின் நிச்சயத்தில் நடக்கிறது என்றும் அவர்கள் பேசிக்கொண்டார்கள்.

கடைசியில் உம்மாச்சு கேட்டாள்: "அப்போ லட்சுமிக்கு ஒங்களைப் பிடிச்சிருக்கில்லை?"

"பிடிச்சிருக்காம்."

சிறிது நேரம் உம்மாச்சு மௌனமாக இருந்தாள். திரைச் சீலையைப் பற்றிக்கொண்டிருந்த அந்தக் கைகளில் வளையல்களின் மினுமினுப்பு சாப்புண்ணி நாயருக்குத் தென்பட்டது. ஒரு பாம்பின் மினுமினுப்புடன் அது அந்தத் திரையின் விளிம்பில் ஏறுவதும் இறங்குவதுமாக இருந்தது.

"ஏன் கேக்கறீங்க?"

"சும்மாத்தான்."

"அதில்லே. அந்தக் கேள்வியிலே ஏதோ ஒண்ணு இருக்கே!" சாப்புண்ணி நாயர் விடாமல் கேட்டார்.

"ஆண்டவனறிய சத்தியம்; எனக்கொண்ணும் தெரியாது. ஆனா இஸ்ட்டமில்லாத கல்யாணமும் உப்பில்லாத கறியும் நல்லா இருக்காதில்ல. அதனாலேதான் கேட்டேன்.... பின்னே, நீங்க வாட்ட சாட்டமான ஆம்பிளையா இருக்கிறதனாலே லட்சுமிக்குப் பிடிக்காமே இருக்காது."

"...ம்..." சாப்புண்ணி நாயர் அர்த்தம் பொதிய ஒரு முறை செருமினான்.

சட்டென்று வாசற்படியில் செருப்பின் ஓசை கேட்டது. பீரான்தான்.

"நீங்க எங்கேதான் போயிருந்தீங்க? நாயரு எவ்வளவு நேரமா காத்திருக்காரு!" - உம்மாச்சு கேட்டாள்.

"பிள்ளை எங்கே?" பீரான் தேடினான்.

"உம்மா கிட்ட இருக்கான்."

"எந்த ஹஸ்ஸன்?" சாப்புண்ணி நாயர் கேட்டார்.

"நம்ம அகமதுண்ணியோடே மகன்."

"அப்பன் செத்த பெறகு மகனாக்கும்? பழசைச் சொல்லி காசு பிடுங்க வாரானாக்கும்?" - உம்மாச்சு ஆத்திரத்துடன் சொன்னாள்.

"நீ சும்மா இரு. அகமதுண்ணி செத்த பிறகு அவன்பாடு திண்டாட்டம்தான்."

பீரான் புருவத்தின் மேலிருந்த பாலுண்ணியைத் தடவிக் கொண்டு தொடர்ந்தான்: "அவன் எங்கேயாச்சும் போறேங் கிறான்."

"அதுக்கும் காசு வேணும், அப்பிடித்தானே?" - உம்மாச்சு.

"போயிட்டுப் போகட்டும். எங்கேயாவது போயி நல்லா இருந்தாச் சரிதான்."

"அதுவும் சரிதான்." - சாப்புண்ணி நாயரும் சேர்ந்து கொண்டார்.

உம்மாச்சு அதற்குப் பிறகு எதுவும் பேசவில்லை. அகமதுண்ணி இறந்து போன பின்பும் அவளுக்கு அவர் மீதிருந்த பகை தீராது போலிருந்தது. தன் வாழ்க்கையின் எல்லாச் சுகங்களையும் அழித்துப் பாழாக்கியது அந்தக் கிழவன்தான் என்று இன்றைக்கும் அவளுடைய நம்பிக்கை. அப்படியான ஒரு மனிதனின் பரம்பரைக்குக்கூட உதவக் கூடாதோ?

"சேரியைக் காலி பண்ணச் சொன்ன கேஸ் என்னாச்சி, சாப்புண்ணியாரே?" - என்று பீரான் கேட்கத் தொடங்கியபோதே உம்மாச்சு குறுக்கே பேசினாள்.

"நம்ம சாப்புண்ணியாரும் இப்போ குடிசை போடத்தான் போறாரு."

"என்னது?"

கல்யாண விஷயத்தை உம்மாச்சுதான் தெரிவித்தாள். இது எதுவும் தன்னைப் பற்றியதல்ல என்ற பாவனையில் சாப்புண்ணி நாயர் தலைகுனிந்திருந்தார்.

"தடபுடலா நடத்தணும்." - உம்மாச்சு அபிப்பிராயம் சொன்னாள்.

"நடத்தினாப் போச்சி." - பீரானும் சம்மதித்தான்.

இப்படி, தலவெட்டத்து மூப்பில் நாயரின் கல்யாணம் அமோகமாக நடந்து முடிந்தது. அடுத்த நாளே லட்சுமியம்மையை சாப்புண்ணி நாயரின் வீட்டிற்கு அழைத்து வந்து குடும்பத் தலைவியாய்ச் செய்தார்கள்.

"லட்சுமீ..."

"...ஓ..."

"இனிமே லட்சுமிதான் எல்லாத்தையும் பார்த்துக்கிடணும்."

"...ஓ..."

"மண்டபத்திலே விளக்கு ஏத்தறதும், வீட்டு வாசல் தெளிக்கிறதும் தவறக்கூடாது."

"...ஓ..."

"அப்புறம், இந்தக் குடும்பத்தோடே நிலைமையெ நினைச்சிப் பார்க்கணும்."

"நினைச்சிக்கிறேன்."

இப்படிச் சில சில்லரை ஒப்பந்தங்களின் பேரில்தான் அந்தத் தாம்பத்தியம் தொடங்கியது. ஆனால், மெதுவாக சாப்புண்ணி நாயரின் வாழ்க்கையில் எல்லா மண்டலங்களிலும் லட்சுமி வியாபித்துவிட்டாள். கணவனுக்கும், குடும்பத்துக்கும் வேண்டியதெல்லாம் கண்டறிந்து செய்வதற்கு அந்தப் பெண்ணுக்குச்

சாமர்த்தியமுண்டு. வேலைக்காரர் முதல் குலதெய்வம் வரை எல்லோரையும் அவள் கட்டியாண்டாள்.

"இவள் கிடைச்சது ஒரு பாக்கியம்தான்!" - சாப்புண்ணி நாயர் உள்ளுக்குள் நினைத்துக்கொண்டார். ஆனாலும் வெளியில் இவளொரு வெறும் மனைவிதானே என்று நடிக்கவும் செய்தார்.

உம்மாச்சு அலங்கரித்துக்கொண்டு, அத்தர் பூசிக்கொண்டு, பட்டுக் குடை பிடித்துக்கொண்டு லட்சுமியம்மையைக் காணச் சென்றாள். சாப்புண்ணி நாயர் அவளை முற்றத்துக்கு அழைத்துப் போய் ஒரு கோரம்பாயில் உட்காரச் செய்தார்.

"ஓங்க வீட்டுக்காரம்மா எங்கே, நாயரே?" உம்மாச்சு முக்காட்டைச் சரிபடுத்திக்கொண்டு கேட்டாள்.

"கூப்பிடறேன்."

லட்சுமியம்மையை அங்கே அனுப்பி வைத்துவிட்டு சாப்புண்ணி நாயர் வெளியே போனார்.

"இப்பதான் எனக்குத் தெரியுது." உம்மாச்சு சொன்னாள்.

"என்னங்க, உம்மாச்சம்மா?"

"நம்ம சாப்புண்ணி நாயரு வெக்கப்பட்ட சங்கதி. அண்ணாச்சி புடிச்ச கொம்பு பூங்கொம்புதான்!"

லட்சுமியம்மை நாணப்பட்டுத் தலைகுனிந்தாள். உம்மாச்சு குரலைத் தாழ்த்திக் கேட்டாள்: "ஒனக்கு நாயரைப் பிடிச்சிருக்கா?"

"ஆமாம்."

"மறைச்சிப் பேச வேணாம். நான் இன்னொருத்தார் கிட்டப் போயி இதை ஒண்ணும் சொல்லப் போறதில்லே." வெற்றிலையில் சுண்ணாம்பைத் தடவிக்கொண்டு உம்மாச்சு தொடர்ந்தாள்.

"கடவுளே! தங்கமான மனிசராக்கும். உம்மாச்சம்மா, இவ்வளவு சுமுகமா நடக்கும்னு நான் நினைக்கவே இல்லே."

"அடி சக்கை! அதைச் சொல்றப்போ தேன் சொட்டுது." இருவரும் வாய்விட்டுச் சிரித்தார்கள். அந்த இரண்டு பெண்களும் நீண்ட காலத் தோழிகளைப் போலப் பேசிக்கொண்டார்கள். உப்பு முதல் கற்பூரம் வரையிலான எல்லாவற்றைப் பற்றியும் அவர்கள் பேச்சு தொட்டது. லட்சுமியம்மையின் பேச்சுக்கு மையம் கணவன்தான்; உம்மாச்சு எது பேசினாலும் கடைசியில் சென்று முடிவடைந்து மகனின் குறும்புத்தனங்களில்தான்.

"ஏன் குழந்தையை எடுத்து வரலே?" லட்சுமியம்மை கேட்டாள்.

"அவன் பலே போக்கிரி. ரெண்டரை வயசுதான் ஆகுது. ஆனா அஞ்சு வயசுக்கான குறும்பெல்லாம் இருக்கு அவனுக்கு. இங்கே வந்தால் அவன் இருக்க விடமாட்டான்."

"ஆண் குழந்தைகளுக்கு சுட்டித்தனம் வேண்டியதுதானே!"

இப்படியாக இரண்டு வீட்டுத் தலைவிகளும் தங்கள் தங்களுடைய வாழ்க்கை மண்டலங்களின் அனுபவச் சிறப்புக் களைப் பற்றி தாராளமாகப் பேசிக்கொண்டார்கள். உம்மாச்சு இன்னொரு தடவை வெற்றிலை போட்டுக்கொண்டாள். முக்காட்டை எடுத்து தலையிலிட்டுக்கொண்டு, குடையும் எடுத்துக் கொண்டு எழுந்தாள்: "நான் வர்றேன். பையன் ரகளை பண்ணுவான்."

"சரி. போய்ட்டு வாங்க."

"நீங்க சாப்புண்ணி நாயரோடே அங்கே வாங்க."

"ஓ."

"இனிமே நீங்க என்ன செய்யணும் தெரியுமா?"

"என்ன?"

"சீக்கிரமா ஒண்ணைப் பெத்துக்கணும். ஒரு ஆம்பிளைக் குழந்தையைப் பெத்துக்கிடுங்க."

லட்சுமியம்மை புன்னகைத்துக்கொண்டாள். அந்தக் கண்களில் ஓர் ஒளிக்கற்றை மின்னியது.

உம்மாச்சு படியிறங்கியபோது லட்சுமியம்மை நினைத்துக் கொண்டாள்: 'நல்ல அம்மா!'

உம்மாச்சுவும் நினைத்தாள்: 'பாக்கியம் செய்த பொண்ணு! மனசுக்குப் பிடிச்சவன் கிடைச்சிருக்கான்!'

வழிநெடுக உம்மாச்சு தன்னையும் லட்சுமியம்மையையும் ஒப்பிட்டுப் பார்த்தாள். பணமும் செல்வாக்கும் உம்மாச்சுவுக்குத் தான் அதிகம்; எனினும் மன நிறைவு லட்சுமியம்மைக்குத்தான். கணவனைப் பற்றிப் பேசும்போது அவளுடைய முகம் பூரிக்கிறது. அந்த வார்த்தைகளில் அபிமானம் அலைபாய்கிறது. உணர்வு முழுவதையும் அவர்கள் தம்வசப்படுத்தி வைத்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. கணவனைப் பற்றிய செய்திகளைப் பற்றிப்

பேசினால் முடிவே இல்லை. ஓ, இதையெல்லாம் சொல்லி என்ன செய்ய? சாப்புண்ணி நாயர் நல்லவர்.

'ஆசைக்கேத்த கணவன் வந்தா அதோடே சொகமே தனிதான்!' - உம்மாச்சு பெருமூச்சு விட்டாள்: 'காசிருந்தா மட்டும் எல்லாம் ஆயிடாது!'

கடந்து போனதையெல்லாம் நினைத்தபோது மனதில் ஒரு நெருடல். எதையோ ஒன்றை இடித்துத் தகர்க்க ஓர் ஆசை. அப்படி ஒவ்வொன்றாக நினைவுப்படுத்திக்கொண்டு படியேறியபோது பீரான் அவளுக்காக வாசற்படியில் காத்துக்கொண்டு சிரித்தபடி நின்றிருந்தான். அந்தச் சிரிப்பைக் கண்டபோது உம்மாச்சுவுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது.

"சாப்புண்ணி நாயரோடே வீட்டுக்காரி எப்படி இருக்கா?"

"என்னமோ, நீங்களே போய் பாத்துக்கிடுங்க."

"அதுக்குள்ளே கோவிச்சுக்கிறியே?"

"கொஞ்சாமே நில்லுங்க."

"என்ன ஆச்சி, உம்மாச்சு?"

"ஒலக்கை!"

அவள் குடையை மடக்கிக்கொண்டு கையை வீசி வீசி நடந்தபடி வீட்டுக்குள் போனாள். பீரான் அவளைப் பின்தொடர்ந்தான். அப்போது, பீரானின் அம்மா குழந்தையுடன் கொஞ்சியது கேட்டது: "என்னடா வேணும்? என் பேராண்டிக்கு என்ன வேணும்? பொண்ணு வேணுமா?...சீனிச் சக்கரை வேணுமா?.... முறுக்கு வேணுமா?..."

உம்மாச்சுவின் கனத்த முகம் மலர்ந்தது. அவளுடைய காலடிகளின் வேகம் குறைந்தது.

# 8. பூமி தோண்டும் பூதங்கள்

சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் வயநாடன் மலைப்பகுதிகளைக் குழப்பத்தில் ஆழ்த்திய ஒரு நிகழ்ச்சி நடந்தது. அதைத் தொடர்புபடுத்தி பழங்கதைகள் பலவற்றைத் தலைமுறையாகப் பாட்டிமார்கள் கைமாற்றிக் கொடுத்திருக்கிறார்கள். அது ஒரு பேய்க்கதை. காட்டுக்குப் போன சில வேடுவர்கள்தான் அந்தச் செய்தியைக் கொண்டு வந்தார்கள்.

பத்திருபது பூதங்கள் ஒன்றாகச் சேர்ந்து பூமியைத் தோண்டிக்கொண்டிருந்தன! செய்தி பயங்கரமானதல்லவா? பூமி முழுவதையும் பூதங்கள் தோண்ட ஆரம்பித்தால் சங்கடமல்லவா? ஊர்க்காவல் இருந்தவர்கள் உஷாரானார்கள். கவுண்டர்களும் உஷாரானார்கள். ஆனால் பூதங்களுடன் என்ன செய்ய முடியும்? அந்த பூதங்கள், பிசாசுகளுக்கு ஒரு விசேஷம் இருந்தது. அவை பகலில்தான் நடமாடின, பூமியைத் தோண்டின. அவற்றின் உருவங்களைப் பற்றிப் பல கதைகள் வெளிவந்தன. கிரீடமுண்டு; தங்க ஆபரணங்களுண்டு; நீலக்கண்கள் உண்டு - இப்படிப் பல. பகலில் நடமாடும் பூதங்களாயிருந்ததனால், ஒரு முறை போய்ப் பார்த்து வந்தால் என்னவென்று சில தைரியசாலிகளுக்குத் தோன்றிற்று. அவர்கள் மலை உச்சியில் மரக்குடில்களின் உள்ளிருந்தவாறே கவனித்தார்கள். தெளிவாகத் தெரிந்தது: பேய்கள் நின்ற நிலையிலேயே குழி தோண்டின! தளர்ந்த நடையுடன் அவர்கள் வீடு திரும்பினார்கள்; அந்தச் சம்பவத்திற்கு காலும் கையும் வைத்துப் பேசினார்கள். கேட்டவர்கள் நடுங்கினார்கள். தாங்களும் பூதங்களும் அடுத்தடுத்து இருக்க நேர்ந்தால் யாருக்கும் நிம்மதியிருக்காதல்லவா?

அதைப் பற்றி மேலும் அதிக விவரங்களைத் தெரிந்து வர இரண்டாவதொரு கூட்டம் நாயர்களும் கவுண்டர்களுமாகச் சென்றது. ஆனால் ஏமாற்றம்தான் மிஞ்சியது! சில குழிகள் மட்டும் அங்குமிங்குமாக இருந்தன. ஆழமான குழிகள். எல்லோரும் சீக்கிரத்திலேயே வாசற்கதவை மூடிக்கொண்டு படுத்து

விட்டார்கள். சிலர் நடுக்கமுற்று அலறினார்கள். ஆழமான குழிகளுக்குத் தங்களை பூதங்கள் இழுத்துக்கொண்டு போகின்றன - கனவில் வந்த இந்தக் காட்சிகள் கதைகளாக உலவத் தொடங்கின. எல்லோரும் நினைத்தது, பூமி தோண்டும் இந்த பூதங்கள் ஒரு நாள் தங்களுடைய வீட்டிற்கே வந்துவிடும் என்பதுதான். பலரும் பல வகையான எதிர்நடவடிக்கைகளைத் தற்காப்புக்காக எடுத்திருப்பதாகப் பேசிக் கொண்டார்கள். ஒரு கவுண்டச்சிக் கிழவி இரவில் வாசல் கதவை அடைத்து, இரண்டு அம்மிகளும் ஓர் உரலும் அதனோடு சேர்த்து முட்டுக் கொடுத்து வைத்தாள். கதவுத் துவாரங்களுக்கு அடுத்து எலிப்பொறிகளை வைத்ததாகவும் பேச்சு உண்டு. இதில் எதுவும் பூதங்கள் வருவதைத் தடுக்க முடியாதுதான். ஆனாலும் ஏதாவது செய்தாக வேண்டுமே!

எல்லா முயற்சிகளும் தோற்றுவிடுமானால் கடவுள் விட்ட வழிதான். அவர்கள் கடவுளிடம் முறையிட்டுக் கொண்டார்கள். கோயிலில் பூஜையும் பிரார்த்தனையும் நடந்தன. குத்துவிளக்குகள் தொடர்ந்து எரிந்தன. தீப்பந்தங்கள், ஆரவாரக் கூச்சல்கள், சிலம்பொலிகள், ஆட்ட பாட்டங்களின் போது ஒலிக்கும் இடையணிக் குலுங்கல்கள், மஞ்சளும் ரத்தமும் சேர்ந்த வாசனை - எல்லாமாக வானவெளியில் உயர்ந்து கலந்தன. புகை போல மேலெழும்பும் பனிப்படலம் பல உருவங்களாக மாறி பள்ளத் தாக்குகளில் அலைபாய்ந்தன. கவுண்டர்கள் அவற்றை ஓரக் கண்ணால் அச்சத்துடன் நோக்கினார்கள்.

அதைத் தொடர்ந்து பகவதி கோயில் வாசலில் பலி கொடுத்தார்கள். ஏழாம் நாள் பூஜை முதலியன முடிந்ததும், சாமியாடி மூலம் பகவதி ஊர்ப் பெரியர்களிடம் பேசினாள்: தன் ஊரைப் பாதுகாக்க தானே போதுமென்றும், பூதகணங்களை விரட்டியடித்துவிடுவதாகவும், மலை போல வந்த துன்பத்தைப் பனி போல அகற்றிவிடுவதாகவும் பகவதி சொன்னாள். அதைக் கேட்டதும் ஊர்க்காரர்களுக்கு ஒரு நிம்மதி பிறந்தது. தங்களைக் காப்பாற்றுவதற்கு ஒரு தெய்வீக சக்தி இருக்கிறதல்லவா?

பகவதியின் ஆற்றலை பிரத்யட்சமாக அவர்கள் அனுபவித் தார்கள். பின்னர் பூதங்கள் அந்த வழியில் சஞ்சரிக்கவில்லை. அவை தோண்டிய குழிகள் மட்டும் அங்கங்கு கிடந்து போயின.

பூதங்கள் அந்தப் பிரதேசத்தை விட்டகன்றன. ஆனாலும் அவை மற்ற பிரதேசங்களில் சஞ்சரிப்பதாக அடிக்கடி செய்திகள்

வந்துகொண்டிருந்தன. கடைசியாக அவை சென்று கூடியது சேரங்கோட்டு மலையடிவாரத்தில். பூதங்கள் சேரங்கோட்டு மலையின் உச்சிக்கு ஏறிச் சென்றன என்றும், அங்கேயுள்ள கோயிலிலுள்ள அறுபத்தி நான்கு நாயன்மார்களின் பீடத்தைச் சுற்றிச் சுற்றி நடனமாடின என்றும் கதைகள் பரவின.

வெள்ளைக்காரனை எதிர்த்து நின்ற பழஸ்ஸிராஜாவின் காரிய ஆலோசனை மண்டபமாக அந்த அறுபத்து நான்கு நாயன்மார் பீடம் இருந்தது. அன்றைக்கு அது குள்ள நரிகளின் பாது காப்பிடமாக மாறியிருந்தது. வெள்ளரி மலையின் அடிவாரத்தி லிருந்து புறப்பட்ட பூதங்கள் பூமியைத் தோண்டித் தோண்டி வந்து சேர்ந்தது சேரங்கோட்டு மலையின் அடிவாரம்தான். வயது முதிர்ந்த ஊர்ப் பெரியவர்கள் இவற்றுக்கும் தமக்கும் ஒரு பிணைப்பை ஏற்படுத்திக் கொண்டார்கள். வெள்ளரி மலை உச்சியில் இடிந்து தகரத் தொடங்கிய கோட்டை பழஸ்ஸி யினுடையது; சேரங்கோட்டு மலையும் பழஸ்ஸியின் ஆதிக்கத்தி லிருந்தது - அப்போது வெள்ளரி மலையிலிருந்து சேரங் கோட்டைக்குப் போன இந்த பூதங்கள் படைவீரர்களான குறிச்சன்மார்களுடைய ஆவிகள்தான். அதனால் பயப்படத் தேவையில்லை. பழஸ்ஸியின் துணையாட்களாக இருந்த குறிச்சன்மார் தங்களுக்கும் துணையாகவே இருப்பார்கள். நாயர் குடும்பங்களில் ஒரு நிம்மதி ஏறபட்டது. அந்த நிம்மதி மெதுவாக கவுண்டர்களின் குடியிருப்புகளிலும் படர்ந்தது. அப்படி அந்த பூமி தோண்டும் பூதங்கள் அதற்குப் பிறகு உதாசீன பாவத்துடன் பார்க்கப்பட்டன.

இதற்கிடையில் பூதங்கள் மலையிலிருந்து நிலத்திற்கு இறங்கின. சேரங்கோட்டிலிருந்து நான்கு கல் தொலைவில் இருக்கும் குண்டன் பந்தலூர் அடுத்து அவற்றின் பூமி தோண்டல். தோண்டிக் கொள்ளட்டுமே, நம்முடைய குறிச்சர்களின் ஆவிகள்தானே - கரணவன்மார் அப்படித்தான் நினைத்தார்கள்.

பூதங்களின் பூமி தோண்டல் தொடர்ந்து நடந்தது. அவற்றின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்தது. சில இயந்திரங்கள் வரத் தொடங்கின. எல்லோரும் வைத்த கண் வாங்காமல் ஆர்வத்துடன் பார்த்தார்கள். அப்போதுதான் விஷயம் புரிந்தது. அங்கே ஒ தங்கச் சுரங்கம் உருவாகிக்கொண்டிருந்தது!

வெள்ளைக்கார துரைகள் வந்து தங்கம் வெட்டியெடுக்கிறார்கள் போலிருக்கிறது. இந்தச் செய்தி ஊரெங்கும் பரவிற்று. பலரும்

பழைய பூதங்களின் அருகில் வந்து கூடினார்கள். தங்கமல்லவா? ஓர் ஆசைதான்.

அதற்குப் பிறகு தங்கம் தோண்டி எடுப்பதைப் பற்றிப் பல கட்டுக்கதைகள் பரவத் தொடங்கின. அந்தப் பெரிய குகையைக் கடந்து சென்றால் சிவலிங்கங்களைப் போல கற்கள் அங்கே நிற்பதாகவும், அவற்றை அடித்து உடைத்தால் பலாப் பழத்தில் சுளைகளைப் போல தங்கச் சில்லுகள் கொட்டிக் கிடப்பதைக் காணலாமென்றும், அவற்றைப் பெருக்கி எடுத்துக் கழுவி வைத்தால் சுத்தத் தங்கமாகிறது என்றும் ஊரார் அவரவர் கற்பனைக்கு ஏற்ப கதைகளைப் பரப்பினார்கள். அந்த இயந்திரத்தை உருவாக்கியது ஏழு நரபலி கொடுத்துத்தான் என்றும் பாடபேதம் உண்டு. இயந்திரம் உருவானது நரபலி கொடுத்துத்தான் என்ற கருத்தில் எல்லோரும் ஒன்றானார்கள். நரபலி கொடுக்காமல் எந்த இயந்திரமாவது இயங்க முடியுமா, என்ன?

தங்கச் சுரங்கம் அப்படி வளரத் தொடங்கியபோது அதைச் சுற்றிப் பல மாற்றங்கள் ஏற்பட்டன. வீடுகள், கடைகள், களியாட்டக் கூடங்கள், குதிரைப் பந்தயத் திடல் ஆகியன உருவாயின. நெல் வயல்களாய் இன்று காட்சியளிக்கும் அந்தக் குதிரைப் பந்தய மைதானம் மார்கழியின் மூடுபனியால் நிறையும்போது நெற்பயிர்களின் மீது குதிரைகளுடையதும் ஆட்களுடையதுமான நிழல்கள் பாய்ந்து போவது போல பிரமை தோன்றுமென்று கிழவர்கள் சொல்வார்கள். உண்மையாகத்தான் இருக்கும்!

அந்தத் தங்கச் சுரங்கத்தைச் சுற்றிலும் வெள்ளைக்காரர்களின் பிரதாபங்கள் பல நடந்தன. மெதுவாக, குண்டம்பந்தலூர் தலையெடுத்து ஒரு சந்தைக்கூடமாக மாறிற்று. ஆனால் அந்த சுடர்விட்ட திரி அதிக வேகத்தில் அணைந்தும் விட்டது. எண்ணெய் வற்றிவிட்டது. எதிர்பார்த்த அளவுக்கு அங்கே தங்கம் அதிகம் கிடைக்கவில்லை. மூன்று, மூன்றரை வராகன் எடையான தங்கம் கிடைப்பதற்குக் கூட அந்த இயந்திரசாலைக்குக் கட்டி வரவில்லை. ஒரு நாள் எல்லாமே நின்று போயின. விளக்கு அணைந்தது; எங்கும் இருள் கவிந்தது. கடைகள் பூட்டப்பட்டன. வீடுகள் காலியாயின. களியாட்டக்கூடம் உறங்கத் தொடங்கியது. குதிரைப் பந்தய மைதானம் கடந்த காலத்து மேன்மைகளை நினைத்துக்கொண்டு மல்லாந்து கிடந்தது.

வெள்ளைக்கார துரை குகையையும் கனத்த இயந்திரங்களையும் அப்படியப்படியே விட்டுச் சென்றார். அதிகத் தங்கம் கிடைக்கும் இடத்தைத் தேடி நடந்தார். அது நல்லதாகப் போயிற்று. இரும்புச் சட்டித் துண்டம்கூட விலையாகிப் போன முதல் உலக மகா யுத்தத்தின்போது அந்த இயந்திரப் பகுதிகளைக் கூடுதல் விலைக்கு விற்று ஆட்கள் அவரவர்க்கு காசு சேர்த்துக் கொள்ள முடிந்தது!

துரை திறந்துவிட்ட அந்த பூமியின் வயிறு அப்படியே திறந்தபடியே இருந்தது. தங்கச் சுரங்கத்தின் சுற்றுப்புறம் முழுவதும் திருவிழா பூஜை முடிந்து கதவு அடைத்த கோயில் போலாயிற்று. அரவமோ அசைவோ இல்லை. பாதைகளில் புல் முளைக்கத் தொடங்கிவிட்டது. எருக்கஞ் செடியும் தும்பையும் கண்டங்கத்திரியுமாக மீண்டும் காடாக மண்டின. மரக் கிளைகளில் கிளிகளும், புதர்களில் நரிகளும் வந்து கூடத் தொடங்கின.

ஊரார் சிறிது காலத்துக்கு அந்தச் சுரங்கத்தின் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. பயங்கரமான கதைகள்தான் அதைப் பற்றிப் பரவத் தொடங்கின. நரபலிக்குள்ளானவர்களின் ஆவிகள் அந்தக் குகைக்குள்ளே கூட்டம் கூட்டமாய் நாட்டியம் ஆடுவதாகவும், பிசாசுகளாகி அட்டகாசம் புரிவதாகவும் சொல்லப்பட்டன. உச்சிப் பகலிலும்கூட மூக்கில்லாத சில மனித உருவங்கள் அங்கிருந்த பாறைப் பகுதிகளில் ஏறி நின்றுகொண்டு தங்களுடைய அகலமான காதுகளை ஆட்டுவது வழக்கமாகி விட்டதாம். விறகு வெட்டுவதற்கும் தேன் சேகரிப்பதற்கும் காட்டுக்குப் போகிறவர்கள் வேறு வழி பிடித்து உச்சி வேளையில் சென்றாலும்கூட அப்படிப் போகின்றவர்களுக்கு ஒரு கூச்சல் கேட்கும். திரும்பிப் பார்த்தால் கதை முடிந்தது. கூச்சல் கேட்பது பின்னால்; சதை இல்லாத விரல்கள் நெஞ்சில் பதிவதோ முன்னால். அதற்குப் பிறகு குகைக்குள் இழுத்துக்கொண்டு போகும். மறுநாள் சில எலும்புத் துண்டுகள் வழி நெடுக சிதறிக் கிடக்கும். இத்தகைய கதைகள் நெடுங்காலமாக ஊராரை பாதித்தன. அடுத்த தலைமுறைக்கும்கூட அந்தக் கதைகள் பரவின என்றாலும் அவற்றின் சக்தி குறைந்துவிட்டிருந்தது. தங்கம ்வைா அங்கே கொட்டிக் கிடக்கிறது!

ஒரு சமயம் ஒரு நாயர் - அவர் தாமரஸ்ஸேரிக் கணவாய் வழியாக வந்த ஒரு குறும்ப்ரநாட்டுக்காரன் என்றும், நாடுகாணிக் கணவாயைக் கடந்து வந்த நிலம்பூர்க்காரன் என்றும் மாறுபட்ட

கருத்துக்கள் உண்டு - சுட்ட கோழியைக்கூடப் பிழைக்க வைக்கும் சக்தி படைத்த ஒரு மந்திரவாதியுடன் அந்தக் குகையை அடைந்தாராம். அதற்குப் பிறகு அவர் தமது கூட்டாளிகளுடன் அவ்வப்போது போய் வரத் தொடங்கினார். வெட்டி, பொடித்து, அரித்து கொஞ்சம் தங்கம் சேகரித்துக்கொண்டார் என்று சொல்வதுண்டு. மந்திரவாதி தவிர, ஒரு தட்டானும் ஒரு முஸ்லீமும் அவருடைய கூட்டாளிகளாக இருந்தார்கள். அந்த மந்திர வாதியின் பிரதாபத்தைப் பற்றி வியாபாரி ஹாஜி சில விவரங்கள் சொல்வதுண்டு: "கெட்டிக்கார நாயர்தான்! அவர் கூப்பிட்டா காத்தும் கறுப்பும்கூட என்னங்கண்ணு கேக்கும்!"

ஹாஜிக்கு இதைப் பற்றித் தெளிவான விவரங்களைத் தர முடியும். இந்தக் கள்ளத் தங்க வியாபாரம் நடப்பது தன் மூலமாகத்தான் என்று அவர் ஒருபோதும் வெளிப்படுத்தியதில்லை யென்றாலும், அதைப் பற்றி யாராவது கேட்டால் ஹாஜி சொல்லும் பதில் இதுதான்: "அப்படித்தான் கேள்விப் பட்டிருக்கேன். எனக்கு அதைப் பத்தித் தெரியாது. ஆனா சும்மா பேச்சுக்குச் சொல்றதாவும் இருக்கலாமில்ல?"

எப்படியானாலும் வாய் பிளந்து கிடக்கும் அந்தக் குகைக்குள் இருட்டினூடே தீர்த்த யாத்திரைகள் நடந்தன. ஒரு நாள் ஏகாந்தமான அந்தக் குகைக்குள் பெட்ரோமாக்ஸ் வெளிச்சம் ஒளிர்ந்தபோது, சில வெட்டுகளும் குத்துகளும் அதன் உட்புறத் திலிருந்து முழங்கியபோது, நிழற்புறத்திலிருந்து ஒரு தலை எட்டிப் பார்த்து உரத்த குரலில் கேட்டது: "யாரு! நீங்களா?"

"யாரு?" எதிரொலியுடன் கூடிய பதில்.

"மாயன் அண்ணாச்சியில்ல இது?"

"யாருப்பா?" அப்போதும் குரலில் நடுக்கமிருந்தது.

"நான்தான்."

"தெரியலியே."

"ஹஸ்ஸன். அகமதுண்ணியார் மகன்."

மாயனின் கையிலிருந்த சம்மட்டி கீழே நழுவி விழுந்தது. ஒரு நிமிடம் நிசப்தம். இவ்வளவு காலத்திற்குப் பிறகு, பகையாளி அல்லவா தன்னைப் பின்தொடர்ந்து இந்தக் காட்டுக்கு மத்தியிலே குகையில் வந்து சேர்ந்திருக்கிறான்! தன்னுடன் சம்பந்தப்பட்ட தெல்லாம் இனி அஸ்தமித்துவிடும். விதி இந்தக் குகையில் வைத்து

தன்னைப் பிடிக்கப் போவதாக மாயன் எண்ணினான். பிடிபடுவதா திமிறுவதா? ஒரு நிமிடத்தில் எதுவும் ஆலோசித்து முடிவெடுக்க முடியவில்லை. நாலாவிதமான காட்சிகள் இதயத்தினூடே பாய்ந்து சென்றன: ஊரில் இடைவழிகள், அவற்றினூடே கடந்து போகும் தான், முன்னால் நடக்கும் உம்மாச்சு, பின்னால் பீரான், அடிபட்டுக் கீழே விழுந்து கிடக்கும் அகமதுண்ணி. எல்லாச் சித்திரங்களும் சேர்ந்து குழம்பியும் தனித்தனியாகவும் வரவும் போகவுமாக இருந்தன.

"அண்ணே, என்ன யோசிக்கிறீங்க?" - ஹஸ்ஸன் கேட்டான்.

"...ம்...?" என்ன பேசுவதென்று மாயனுக்கு அப்போதும் தெரியவில்லை.

"அப்பா செத்த பெறகு நாங்க சீரழிஞ்சிட்டோம்." - ஹஸ்ஸன் சொன்னான். அகமதுண்ணி இறந்துவிட்டார்! அப்படியானால் தான் ஒரு கொலைகாரன்தான் என்பது உறுதியாகிவிட்டது. அந்த இருட்டுக் குகையில் நிழல்கள் கிடந்து துடிப்பதாக மாயனுக்குத் தோன்றிற்று. அவை வேட்டை நாய்களைப் போல தன்னைத் துரத்திச் சீறிப் பாய்கின்றனவோ? அந்த தடித்த சரீரம் அதிகமாகவே வியர்த்தது.

"என்னண்ணே, ஒண்ணும் பேசாமே இருக்கீங்க?" - ஹஸ்ஸன் மீண்டும் கேட்டான்.

"ஒண்ணுமில்லே." மாயன் ஒப்பிப்பது போல் பேசினான். அவனுடைய குரல் அப்போதும் நடுங்கிக் கொண்டிருந்தது: "நீ இப்போ எங்கேருந்து வர்றே?"

"எனக்கும் இப்போ இதான் வேலை." தணிந்த குரலில் ஹஸ்ஸன் சொன்னான். "பொளப்பு நடக்கணுமில்ல, அண்ணே?"

"இப்ப ஏன் இங்கே வந்தே?"

"போய்க்கிட்டே இருந்தேன்; இங்கே வந்திட்டேன். அவ்வளவுதான்."

"இங்கே வந்ததோடே உத்தேசம்?" - மாயனின் குரல் உரத்து வந்தது. அவனிடமிருந்து விடைபெற்றிருந்த ஆத்திரம் திரும்பி வந்தது. அவன் மீண்டும் காட்டெருமையாகிக் கொண்டிருந்தான்.

"என்னண்ணே, இப்படியெல்லாம் கேக்கறீங்க? எத்தனை நாளைக்குத்தான் பட்டினி கெடக்கிறது? அண்ணன் கிளம்பி வந்த மாதிரி நானும் கிளம்பிட்டேன்."

மாயனுக்கு நம்ப முடியவில்லை. அவன் தன்னைப் பின்தொடர்ந்து வந்து பகை தீர்த்துக்கொள்ள மாட்டான் என்று யார் கண்டது? அப்படியானால் எல்லாவற்றையும் இப்போதே முடிவு கட்டிவிடுவதல்லவா நல்லது? ஹஸ்ஸன் உயிரோடிருப்பது என்பது ஆபத்துக்கு வாசற்கதவை எப்போதும் திறந்து வைத்திருப்பது போலத்தான். அந்த வாசற்கதவை அடைத்துவிட்டாலென்ன? மாயன் சம்மட்டியைக் காலால் நெட்டித் தள்ளி கையிலெடுத்தான்.

மங்கிய பெட்ரோமாக்ஸ் வெளிச்சம் அப்போதும் நிழல்களை உருவாக்கிக் கொண்டிருந்தது. வெளிச்சம் வந்துகொண்டிருந்தது மாயனுக்குப் பின்புறமிருந்துதான். அதனால் அவனுடைய தடித்த நிழல் ஹஸ்ஸனின் மீது விழுந்தது. இருட்டுக் கோட்டையின் வாசற்படி போல ஹஸ்ஸனுக்கு முன்னால் மாயன் நின்றிருந்தான். முகத்தின் பாவங்கள் தெளிவாய்த் தெரிய வழியில்லை. அதுவே நல்லதாகப் போயிற்று. மரணம் எதிரில் நின்றுகொண்டிருப்பதைப் பார்க்க யாராவது விரும்புவார்களா? மாயனுக்குள்ளே காட்டெருமை ஓசைப்படாமல் குளம்படிகொண்டு புறப்பட்டது. சம்மட்டிப் பிடியின் மீது அவனுடைய கை சஞ்சரித்தது. அந்தப் பிடி இறுகிற்று.

"அண்ணன் கிளம்பி வந்த பெறகு ஊர்ப்பக்கம் வரவே இல்லியே?" - ஹஸ்ஸன் தன் சம்பாஷணையைத் தொடர்ந்தான்: "ஒங்களைப் பார்க்கணும்னு நெனக்கிறவங்க கூட இருக்க மாட்டாங்களா?"

அந்த வார்த்தை மாயனின் நெஞ்சில் ஓர் இடிபோல் விழுந்தது. அவனைப் பார்க்க வேண்டுமென்று விரும்புகிறவர்கள் ஊரில் இருக்கிறார்களா? உம்மாச்சு இப்போது என்ன நினைத்துக் கொண்டிருப்பாள்? அவள் இப்போது இருக்கும் நிலை என்ன? அவள் தன் பொருட்டு அழுகிறாளா? இல்லை, எல்லாவற்றையும் மறந்துவிட்டு சுகமாக வாழ்க்கை நடத்துகிறாளா? அவள் இப்போது எங்கிருக்கிறாள்? 'நான் ஒங்களை மறக்க மாட்டேன்ங்கிறதை மறந்திராதீங்க' - உம்மாச்சுவின் அந்த இனிமையான குரல் மாயனின் காதில் வந்து மோதிற்று. சம்மட்டிப் பிடியில் கைப்பிடி தளர்ந்தது. இந்த ஹஸ்ஸனிடம் கேட்டால், ஒரு வேளை, எல்லாம் தெரியும். எல்லாவற்றையும் தெரிந்துகொண்ட பிறகு அவனைக் கொல்வதுதானே நல்லது? மாயன் தாழ்ந்த குரலில் கேட்டான்: "நீ எங்கே தங்கியிருக்கிறே?"

"ஒரு வீட்டுத் திண்ணையிலே தங்கியிருக்கேன். அவரு மஞ்சேரிக்காரர். தோட்ட வேலை செய்றாரு. அவரோட வீட்டு ஓலைச் சாய்ப்பிலே குடியிருக்கேன்."

"நீ சொகமா இருக்கியா?"

"சொகத்தோடே தரம் ஒங்களுக்கும் தெரியுமில்ல. ஆனா இந்த வேலை கெடச்ச பெறகு கொஞ்சம் பரவாயில்லே."

"ஊர்லே நெலவரமெல்லாம் எப்பிடியிருக்கு? பீரான் இப்போ இருக்காரில்ல?"

"இருக்காரு. சேக்குட்டி மொதலாளி செத்திட்டாரில்ல?"

"அப்பிடியா? வீட்லே யாரெல்லாம்?"

"பீரானும் குடும்பமும்."

"உம்மாச்சு அவரோடே வீட்லேதானே?"

"ஆமா. அது முன்னாலேயே அப்பிடித்தானே?"

"அப்பிடீன்னா இப்போ அவங்க வீட்லே யாரெல்லாம்? அத்தராலி இருக்காரில்ல?"

"அவரும் பெண்டாட்டியும் காலமாயிட்டாங்கல்ல? பணம் பணத்தோடதானே சேரும்! இப்போ பீரான் பணக்காரரா யிட்டாரில்ல?" இதைக் கேட்ட மாயன் ஒரு முறை பல்லைக் கடித்தான். ஒரு நிமிட நேரம் மௌனம். மீண்டும் சாந்தமாகிக் கேட்டான்: "எல்லாரும் சொகம்தானே?"

"அப்பிடித்தான். உம்மாச்சுவுக்கு ஒரு குழந்தை."

"அப்பிடியா!"

"ஆமா."

"என்ன குழந்தை?"

"பையன்."

ஒரு முறை காறித் துப்புவதை மாயனால் தவிர்க்க முடியவில்லை. அது ஒரு எருமையின் கனைப்புப்போல் இருந்தது.

"என்னண்ணே?"

"...ம்..ம்..ஒண்ணுமில்லே, வாய்க்குள்ளே ஒரு ஈ நொளைஞ்சிருச்சி" என்று மாயன் மழுப்பினான். "இருக்கட்டும், நீ என்னோடே வர்றியா?"

"அண்ணனுக்கு....."

"எனக்கொண்ணும் தொந்திரவில்லே. எங்கூட வந்திரு."

"சரி."

பகையாளியைக் கண்பார்வையிலிருந்து விட்டுவிடக் கூடா தென்று மாயனுக்குத் தோன்றிற்று. அன்று வேலை முடிந்து திரும்பும்போது ஹஸ்ஸனின் ஸ்கையைப் பிடித்துக் கொண்டுதான் மாயன் நடந்தான் - ஒரு பலி கோழியைப் பிடித்துக்கொண்டு போவது போல.

வழி நெடுக அவர்கள் பேசிக்கொண்டு போனார்கள். ஹஸ்ஸன் தன்னுடைய பரிதாப நிலையை விவரித்துக்கொண்டு நடந்தான்.

"வாப்பா இவ்வளவு சீக்கிரம் செத்துப் போவார்னு நெனக்கவே இல்லே."

"...ம்..."

"ரெண்டு நாள் காய்ச்சல்லே முடிஞ்சி போச்சி."

"என்ன!"

"ரெண்டே நாள் காய்ச்சல்தான். நல்லா ஓடித் திரிஞ்சிக்கிட்டிருந்த மனிசன்தானே!"

மாயனுக்கு உள்ளூர ஒரு சிலிர்ப்பு. அவன் திரும்பிப் பார்த்துக் கேட்டான்:

"அப்பிடீன்னா, வாப்பா செத்தது எப்படீங்கறே?"

"அந்த நாசமாப் போற காய்ச்சல்தானே கொண்டு போய்ட்டது!"

"காய்ச்சல் வந்துதான் செத்தாரா?" - மாயன் மீண்டும் கேட்டான்.

"ஆமா."

"எப்போப்பா?"

"நீங்க ஊரைவிட்டுப் போயி ரெண்டு வருசம் கழிச்சி இருக்கும்."

மாயன் ஒரு தடவை நிதானமாய் மூச்சுவிட்டான். ஹஸ்ஸனை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்தான். ஒரு தேவனின் பொலிவு அவனுக்கு இருந்தது! மாயனுக்கு அந்த இளைஞனைக் கட்டிப் பிடித்துத் தழுவ வேண்டுமென்று தோன்றிற்று. ஆனாலும் பிடித்திருந்த பிடியை விடவில்லை.

"நீ ஒரு நன்றியுள்ளவனா இருக்கே, ஹஸ்ஸன்!"

"என்னது?"

"அப்பிடித்தான்."

"வாப்பா எப்பவும் அதைத்தான் செல்லுவாரு. வாப்பா எனக்குத் தந்த சொத்து மன தைரியந்தான்."

"அதுதான் சரின்னு வச்சிக்கோ."

மாயன் அந்த ஜன்மப் பகையாளியின் தோளில் கைபோட்டு அணைத்தபடி வீட்டுக்குள் நுழைந்தான். மாயன் புதிதாக அந்த வீட்டைக் கட்டியிருந்தான். வேலை இன்னும் முடியவில்லை. ஒரு சிறிய வீடுதான். ஆனாலும் அன்றைக்கு அது விசாலமான அரண்மனை போலத் தோன்றியது. மாயன் திண்ணையில் ஏறி உட்கார்ந்துகொண்டு கடவுளைக் கும்பிட்டபடி சொன்னான்: "மாலிக்கல் ஐப்பாராய தம்புரானே...ஹஸ்ஸன், நீயும் உக்காரு."

"இருக்கிறேன், அண்ணே."

"இருக்கிறதை வச்சி நாம ரெண்டு பேருமே சாப்பிடலாம்."

அந்த பூமி தோண்டும் புதிய பூதங்கள் அன்று ஒரே தட்டில் சாப்பிட்டு முடித்தன.

# 9. சிவப்பு நிலா

இரவு பத்து நாழிகை கழிந்திருக்கும். ஆனாலும் உம்மாச்சு இன்னும் உறங்கவில்லை. அவள் ஏதோ ஒரு சஞ்சலத்தில் இருக்கிறாள். அவள் அடிக்கடி கட்டிலிலிருந்து எழுந்து உட்கார்ந்து கொண்டாள். படுத்தாள். மீண்டும் எழுந்தாள். அவளுடைய மகன் அதே அறையின் ஓர் ஓரத்தில் உறங்கிக் கொண்டிருந்தான். அப்துவுக்கு ஆறு வயதாகிவிட்டது. ஆனாலும் அவன் அம்மாவின் பக்கத்தில்தான் படுத்துக் கிடப்பான். பல தடவை பீரானின் அம்மா அவனைத் தன்னுடன் உறங்கச் செய்ய முயன்றதுண்டு. அப்போதெல்லாம் அவன் பயங்கரமாக அழுவான்.

"எனக்கு எங்கம்மா பக்கத்திலேதான் படுத்துக்கணும் - இங்கே படுத்துக்க மாட்டேன்.......என்னெக் கொல்லாதீங்க...." அலறல் இணைந்த இந்த அழுகைக்கு பயந்து அவனைப் படுக்கை யறையிலேயே கிடத்திவிடுவார்கள்.

உம்மாச்சு அந்தக் குழந்தையைப் பார்த்தபடியே இருந்தாள். ஜன்னல் வழியே, பழுத்து நிறம் மாறிய வாழைக்குலை போல, ஒரு மங்கிய நிலவொளி கடந்து வந்து அந்தக் குழந்தையின் தேகத்தில் நிழல் பரப்பியது. பீரான் அடுத்தொரு கட்டிலில் ஆழ்ந்த தூக்கத்திலிருந்தான். அவனுடைய குறட்டையொலி அந்த அறையின் மச்சுப்பலகையை எட்டி அதிரச் செய்தது.

அப்து நடுநடுவே பயந்து விழித்து அழுதான்: "அம்மா.. அம்மா..அம்மா.."

"ஏண்டா? கண்ணு, அங்கே படுத்துக்கோ. அம்மா பக்கத்திலே தான் இருக்கேன், படுத்துக்கோ." அவன் அன்று மூன்று நான்கு தடவை இதே போல பயந்து எழுந்து அழுதான்.

"கெட்ட கனவு கண்டு பயந்திருப்பான்." - பீரானின் அம்மா சொன்னாள். "நாளைக்கு மௌல்யாரைக் கூப்பிடுவோம்; ஒரு தரம் மந்திரிச்சா சரியாயிரும்."

அப்படி அமைதியற்றிருந்து அந்த இரவு. உம்மாச்சுவின் இதயம் அதைவிட அமைதியற்றதாக இருந்தது. ஒரு வாரமாகிவிட்டது மாயன் ஊருக்குத் திரும்பி வந்து. அவன் இதற்குள்ளாக பல தடவை உம்மாச்சுவின் வாசற்படியைக் கடந்து சென்றுவிட்டான். வேலி அருகில் இருந்தபடி மீன் அறுத்துக்கொண்டிருந்த போதுதான் அங்கு கடந்து போய்க் கொண்டிருந்த மாயனை முதலில் அவள் பார்த்தது. பயந்துவிட்டாள். ஹோஜராஜாவான தம்புரானே!... ஒரு நிமிட நேரத்திற்கு எதுவும் பேசத் தோன்றவில்லை.

அதற்கிடையில் மாயன் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டுக் கேட்டான்: "என்ன?"

உம்மாச்சு பிரமித்து நின்றாள்.

"என்ன பேசமாட்டேங்கிறே?"

"எப்ப....வந்தது -"

"நேத்து."

இவ்வளவும் முடிந்த பிறகுதான் உம்மாச்சுவுக்கு சுவாசம் வந்தது. அவள் வேலியருகே மேலும் ஒட்டிச் சென்று கேட்டாள்: "இப்போ எங்கே?"

"எங்கேயானால் இப்போ ஒனக்கென்னாச்சி? நம்மளைத் தள்ளியாச்சில்ல?"

"நெலமையெல்லாம் தெரியாதாக்கும்? பின்னே எதுக்கு இப்பிடிக் குத்தலாப் பேசறீங்க?"

"நான் இப்போ முள்ளாயிட்டேன். புருசன் பெரிசாப் போச்சி. அப்பிடித்தானே? ....ம்...." - மாயனின் குரல் சீறியது.

அது ஒரு குகையிலிருந்து புறப்பட்டதுபோல் முழங்கியது. மாயனுக்குத் தொண்டை இடறிற்று. அவன் உம்மாச்சுவை ஏற இறங்கப் பார்த்தான். காலம் அவளில் சில்லறை மாற்றங்களை ஏற்படுத்தியிருந்தது. கொஞ்சம் அதிகமாகப் பருத்துவிட்டாளோ? அந்த மார்பு கொஞ்சம் ஒடுங்கிவிட்டதோ? இருந்தாலும் இப்போதும் அவள் ஓர் அழகிதான். வேலியோரத்துத் தென்னையில் சாய்ந்து நிற்கும் அவள் ஒரு திராட்சைக் குலைதான் - காகம் உட்கார்ந்ததனால் தாழ்ந்துவிட்ட திராட்சைக் குலை!

"அப்போ நான் வரட்டுமா?"

"போகணுமாக்கும்?"

"நிண்ணுக்கிட்டிருந்து என்ன பண்ண? நீ ஒசரத்திலே, நான் பள்ளத்திலே. ஆகட்டும், ஒனக்கு சொகம் கெடச்சாச்சில்ல..."

உம்மாச்சுவின் கண்கள் நிறைந்து தளும்பி நின்றன. அவள் மௌனமாக மீன் நறுக்கும் கத்தியைத் தடவினாள். அவளுடைய விரல்கள் சஞ்சரித்ததை ஒட்டி மாயனின் கண்களும் சஞ்சரித்தன. அவை காட்டெருமையின் கண்களைப் போல தீட்சண்யம் பெற்றிருந்தன.

"இப்போ எங்கே?" உம்மாச்சு தொண்டை இடறக் கேட்டாள்.

"எங்கேயோ வயநாடன் மலையிலே பனியும் குளிரும் அட்டைக் கடியும் சமாளிச்சாச்சி. இப்போ எங்கே தங்கினாத்தான் என்ன?"

"எம்மேலே கோபப்பட வேணாம்."

"கோபமா? எனக்கா? எதுக்காக? வேண்டாம்ங்கிறதுக்கும் வேணும்ங்கிறதுக்கும் என்ன உரிமை இருக்கு?"

"நான் வேணாம்னு வெறுக்கலே!"

"பின்னே? ஒன்மேலே தானா வந்து விழுந்திச்சா? போனதைப் பத்தி தேவையில்லாமே பேச வேணாம்."

"ஆமா. அது எம்மேலே தானாத்தான் வந்து விழுந்தது."

"அப்போ நீயே தட்டிக் கழிச்சிருக்கலாமில்ல?"

"பொண்ணாப் பொறந்தாச்சில்ல!..." உம்மாச்சுவின் கண்களிலிருந்து இரண்டு மூன்று துளி கண்ணீர் நழுவி விழுந்தது. அது மாயனின் பற்றிப் படர்கின்ற கோபத்தில் வழியும் நெய்த் துளிகளாக அமைந்தன.

"இப்போ வெறுமனே அழறது எதுக்கு? கிளி பறந்து போன பிற்பாடு கூட்டை அடைச்சி என்ன பண்ண?"

"இப்பிடியெல்லாம் ஆகுமுண்ணு நான் நெனக்கவே இல்லை."

"நெனச்சிருக்கணுமில்ல?"

"நெனச்சி என்ன பண்ண? நான் ஒரு பெண்ணாச்சே! உம்மாவும் வாப்பாவும் நிச்சயம் பண்ணின பெறகு எதிர்த்துப் பேச முடியுமா?"

"ஒனக்கு தூக்குப்போட்டுச் சாகணும்னு தோணலியா?"

அந்தக் கேள்விக்கு உம்மாச்சுவிடமிருந்து பதிலில்லை. மரணம் எல்லோருடைய எதிரிலும் வாசற்படிக் கதவை அகலமாய்த் திறந்து வைத்துக்கொண்டுதான் இருக்கிறது. யாரும் அதைக் கண்டுகொண்டதாக வெளிக்காட்டிக்கொள்ளவோ, அதற்கு அருகில் போகவோ விருப்பப்படவில்லை என்பதுதான் உண்மை. மரணத்திற்குள்ள ஒற்றையடிப் பாதைதான் நிரூபிக்கப்பட்ட நேரான வழி. வாழ்வதற்கான வழியோ வளைந்து நெளிந்து செல்வதும், முள் நிறைந்ததுமாகும். ஆனாலும் உம்மாச்சு முட்களைக் கட்டிப் பிடித்துக்கொண்டு அந்த வழியில் ஊர்ந்து சென்றுகொண்டிருக்கிறாள். எதற்காக? ஒரு ஆசை. ஒரு நல்ல நாள் விடிந்து வராதா?

"என்ன பேசலே?" மாயன் மறுபடியும் கேட்டான்.

"தூக்குப்போட்டுச் செத்திருந்தா சொகமா இருந்திருக்கும். சந்தோசம் எல்லாமே போயிட்டது! ஆனா ஒங்களைப் பார்க்கணும்ங்கிற ஆசை மட்டும் இருந்திச்சி..." இவ்வளவும் சொல்லிவிட்டு உம்மாச்சு ஒரு முறை தேம்பினாள். அந்தத் தேம்பல் மாயனின் நெஞ்சத்தில் ஒரு வாளைச் செருகித் திருகியதுபோல் இருந்தது. ஒரு வலி, ஒரு கோபம், ஒரு பகை - இவையெல்லாம் இருதயத்தில் பரவிப் பற்றுகின்றன. அவன் பேச்சின்றி நின்றான். அலைகள் அவனுடைய இதயத்தில் அடுத்தடுத்து வருகின்றன. அந்த விசாலமான மார்பு உயர்வதும் தாழ்வதுமாய் இருந்ததை உம்மாச்சு கண்ணீருக்கிடையே நோக்கி நின்றாள்.

"இங்கே வழியிலே இப்பிடி நிண்ணுக்கிட்டு..."

"ஒண்ணோடே அருமைப் புருசன் பார்த்திருவான், இல்லே?" மாயன் படபடத்தான்.

"என்னைக் கொண்ணு போட்டிருங்க."

"உன்னை இல்லே கொல்ல வேண்டியது....நான் வர்றேன்."

"எப்போ திரும்பறீங்க?"

"இன்னும் நிச்சயம் பண்ணலே."

"மறுபடியும் பார்க்கலாமில்ல?"

"...ம்..."

அப்படித்தான் அந்த மறுசந்திப்பு நிகழ்ந்தது. இந்தச் சந்திப்பு உம்மாச்சுவை மொத்தத்தில் கலக்கியது. அவள் மிதித்து அமுக்கி

வைத்திருந்த பல வேதனைகள் மீண்டும் தலை தூக்கின. நட்டநடுவில் முறிக்கப்பட்ட ஒரு தடிமனான நாவல் மரம் போல் அவளுடைய இதயம் மாறியது. ஒரு மழை பெய்து நிறைய தளிர்கள் முளைத்து தழைத்து வளர்கின்றன. இளங்காற்றின் ஸ்பரிசத்தில் அந்தச் சிவந்த நாவல் மரத் தளிர்கள் ஆடிக் களிக்கின்றன. அழகாகவும், அதே சமயத்தில் பயமுறுத்துவதாகவும் இருந்தது அந்தப் புதிய தளிர்களின் நடனம். ஒடுக்கி வைக்கப்பட்ட உணர்ச்சிகள் வெளிப்பட்டால் அவை பயங்கரமாகத்தானே இருக்கும்! அங்கே பலவும் தட்டித் தகர்க்கப்படுகின்றன. உம்மாச்சுவின் இதயத்திலும் சில மாற்றங்கள் நிகழ்கின்றன. என்ன நிகழ்கிறது என்று அவளால்கூட அறிந்துகொள்ள முடியவில்லை. தலைக்கு முன்பாக கருகம்புல் கட்டித் தூக்கிய கலைமான்கள் இழுக்கும் ஒரு வண்டி போலிருந்தது அவளுடைய இதயம். முள்ளுள்ள கடிவாளம் மான்களின் கடைவாய்களைக் கிழித்தது. என்றாலும் கண்ணுக்கு முன்னால் ஊசலிடும் கருகம்புல் கட்டைப் பார்த்து மான்கள் முன்னோக்கி ஓடின.

"உம்ம...உம்மா...உம்மா..." அப்து திடீரென்று பயந்து விழித்துக் கொண்டு அலறினான். அது உம்மாச்சுவை கற்பனையிலிருந்து மீளச் செய்தது. அவள் குழந்தைக்குப் பக்கத்தில் சென்று படுத்து, அவனைத் தட்டிக் கொடுத்துத் தூங்க வைத்தாள். மீண்டும் நிசப்தம். பீரானின் குறட்டைச் சத்தம் மட்டும் முன்னிலும் அதிகமாகக் கேட்டுக்கொண்டிருந்தது.

உம்மாச்சு ஜன்னல் அருகே போய் நின்றுகொண்டு வெளியில் பார்த்தாள். மேகம் மூடிய நிலா. இருட்டு கூனிக் குறுகி இருப்பது போல காட்டுப் புதர்கள் அங்கங்கே நின்றிருந்தன. எந்த நிமிடத்திலும் அவை நெட்டி முறித்து நிமிர்ந்து ஒரு நிழல் போல நீண்டு வரலாம் என்று தோன்றிற்று. தொலைவிலிருந்து ஒரு நாய் அலட்சியமாக ஓரிரு முறை குரைத்தது. மீண்டும் நிசப்தம். காற்றுக்கு கனம் குறைந்துவிட்டதா? சுவாசிக்க கஷ்டமாக இருந்தது. உம்மாச்சு கட்டிலுக்கு வந்து குப்புறப் படுத்துக் கொண்டாள். அவள் அழுகிறாளோ?

அவளுடைய இதயம் மாயனைக்கொண்டு நிறைந்திருக்கிறது. எதற்காக இப்படிக் காலம் கடந்து ஓடி வந்திருக்கிறான்? எதற்காகத் தன்னுடைய கூட்டை நோக்கிக் கல்லெறிகிறான்? ஆனால்...ஆனால்...திரும்பி வந்ததனால் ஒரு முறை பார்க்கவாவது முடிந்ததே! என்றாலும் அவன் எதற்காக வந்தான்? இத்தனை

காலம் கடந்த பின்னும் ஆசைப்படுகிறானோ? இனி ஆசைப்பட்டு என்ன செய்ய? அப்படியானால், என்ன நோக்கத்தில் வந்திருக்கிறான்? எந்த நோக்கத்தோடு தன்னுடன் அப்படியெல்லாம் பேசினான்?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடை கண்டுபிடிக்க முடியவில்லை. சந்திப்பின் போது மாயனிடமிருந்து அந்தக் கேள்விக்கு விடை வரவில்லை. அணை உடைந்து வெளியேறுகிறது என்பது மட்டும் உண்மை. பயம் அவளை அணைகட்டி நிறுத்தியிருந்தது. ஹஸ்ஸன்தான் அந்த அணையை உடைத்தது - மாயனின் வாழ்க்கை முழுவதையும் சீரழித்தவனென்று கருதப்பட்ட அந்த அகமதுண்ணியின் மகன்.

தங்கச் சுரங்கத்தில் ஹஸ்ஸனைச் சந்தித்திருக்காவிட்டால் மாயனின் வாழ்க்கை எங்கே போய் முடிந்திருக்குமென்று சொல்வதற்கில்லை. சற்றும் எதிர்பார்க்காத ஓர் இடத்தில் விதி வாழ்க்கையின் திறவுகோலை மாயனின் கையில் கொடுத்தது. ஹஸ்ஸன் நடந்ததையெல்லாம் விவரித்தற்கு மறுநாள் முதல் அவனுடைய இதயம் துள்ளத் தொடங்கிவிட்டது. ஆனாலும் தற்போதைக்கு அதை அடக்கி வைத்து, தன் வேலைகளைத் தொடர்ந்து பார்த்து வந்தான்.

மாயன் சிறிது காலமாக ஹாஜியுடன் இருப்பதில் அலுத்துப் போயிருந்தான். பகைத்துக்கொள்ளவுமில்லை. மெள்ள மெள்ள விலகிக் கொள்வது என்றிருந்தான். "கையிலே கொஞ்சம் துட்டு சேர்ந்ததும் அவன் போயிட்டான்!" என்று ஹாஜியார் எண்ணுவதுண்டு. ஆனாலும் மாயனுக்கு நேராக முரண்பட்டுக் கொள்ளவில்லை. இருந்தாலும், இன்றும்கூட தனக்கொரு தேவை ஏற்படுமானால் மாயன் தன்னை நோக்கித் தாவி வருவான் என்று அவர் நம்பியிருந்தார். இன்றைய நிலைக்கு இந்த அளவு உறவு போதுமென்பதுதான் ஹாஜியாரின் எண்ணமாகவும் இருந்தது.

"அப்போ ஹாஜியாரே, உங்க காரியஸ்தன் நன்றி கெட்டவன் ஆயிட்டான், இல்லே? என்று ஏதோ ஒரு தேயிலைத் தோட்ட குமாஸ்தா ஒரு தடவை அவரைக் கேட்டார்.

"அய்யோ! அது மாத்திரம் சொல்லாதீங்க. அவன் நம்மகிட்ட ஒரு நன்றிக்கேடும் காட்டினதில்லே. அதோடே மட்டுமில்லே, அவனாலேதான் நமக்குக் கொஞ்சம் துட்டும் சேர்ந்திருக்கு. இப்பவும் நாம நொடிச்சிட்டோம்னு தெரிஞ்சா ஓடி வந்திருவான்.

இல்லாததையெல்லாம் சொன்னா ஆண்டவனுக்கே பொறுக்காது." ஹாஜியார் தன் நெற்றியிலிருந்த தொழுகைத் தழும்பில் வியர்வையை ஒத்திக்கொண்டு சொன்னார்.

"பின்னே எதுக்காக அவனை விட்டீங்க?"

ஹாஜியார் சாவகாசமாக ஒரு முறை சிரித்துக்கொண்டார். வட்டத் தாடியைத் தடவிக்கொண்டார். பின்னர் கூறினார்: "அது வியாபார ரகசியம்."

"என்ன?"

"ரைட்டரே, சொந்தமா வியாபாரம் பண்ணி காசு சம்பாதிக்கணும்னு ஒமக்கு எப்போ தோணுதோ அப்போ கம்பெனி வேலைக்கு நீரு லாயக்கில்லே. செந்தமா காசு பண்ற காரியத்திலே மனசு போயிரும். தெரிஞ்சிக்கிட்டீரா?"

"அது சரிதான்."

"புரிஞ்சுதா? அவனுக்குப் பணம் சம்பாதிக்கணும்ங்கிற நெனப்பு வந்திருச்சி; நம்மளை விட்டுப் போயிட்டான். என்ன? எப்போ இருந்தாலும் அவன் சொந்தமா தொழில் செய்ய வேண்டியவன் தானே!"

"சரிதான்."

அப்படி விட்டுப் போன மாயன் தேன், மலைச்சரக்கு ஆகிய வற்றில் சில்லறை வியாபாரம் செய்து தங்கச் சுரங்கத்தில் போய் விழுந்தான். இக்காரியத்தில் ஒரு தட்டானும் ஒரு நாயரும் அவனுடன் கூட்டுச் சேர்ந்திருந்தார்கள். தங்கத்தை மாயன் கொண்டு வருவான்; தட்டான் அதை உருக்கி சாமானாகச் செய்வான்; நாயர் அதற்கு உரியதான கிராக்கியைப் பிடிப்பான். மூவருக்கும் குறிக்கோள் வெவ்வேறாக இருந்தது. தேனும் தீவட்டியும் வாங்குவது மாயனின் நோக்கம்; தோட்டத்திலுள்ள பெண்களுக்கேற்ற நகைகளைச் செய்வது தட்டானுடையது; நாயருக்கு தேயிலைத் தூள் ஏஜென்சி. மாயன் நன்றாகக் கொழுந்து விட்டான். அவன் விரைவிலேயே ஒரு மனையிடம் வாங்கினான். வீடு கட்டவும் தொடங்கினான்.

வீடு மேலே எழும்பி வரும்போதெல்லாம் அவன் நினைப்பான்: 'எதற்காக இதெல்லாம்? ஒரு கிளி இல்லாத கூடுதானே?' என்றாலும் வீட்டு வேலை தொடர்ந்தது. 'இருக்கிறதுக்கு ஒரு எடம் வேணுமில்ல!'

தான் அந்த இடத்திலிருந்து ஒரு நாள் ஓடிப் போக நேர்ந்தால் என்ன ஆகும் என்று அடிக்கடி அவன் பயப்பட்டான். ஆனால் அப்போதே வேறு விதமாகவும் சிந்திப்பான்: 'காலம் மாறிப் போயிடிச்சில்ல? எந்தக் காட்டான் இனி இந்த மலைக்காட்டுக்கு வரப் போறான்?'

ஆனால் ஒரு காட்டான் அந்தத் தங்கச் சுரங்கத்திற்குள் வந்து சேர்ந்தபோது, மாயனின் வாழ்க்கை எதிர்பார்க்காத ஒரு திருப்பத்தைக் கண்டது. அன்று முதல் தொடங்கியது ஊருக்குத் திரும்பிச் செல்ல வேண்டுமென்ற ஆர்வம். ஒரு நாள் அவன் ஹஸ்ஸனிடம் சொன்னான்: "ஹஸ்ஸனே, நான் ஒரு தடவை ஊருக்குப் போய் வந்தா என்ன?'

"அண்ணே போய்ட்டு வாங்க."

"அப்போ, இங்கே இருக்கிற வேலைகளை எப்படி?"

"அண்ணன் போய்ட்டுத் திரும்பற வரைக்கும் நான் எல்லாத்தையும் பார்த்துக்கிடுறேன்."

"எதுக்காகப் போகணும்னு கேட்டா சொல்லத் தெரியலே. ஆனா ஒரு ஆசை."

"பொறந்து வளந்த எடமில்ல!"

"அதான்."

மாயன் மூன்று புதிய சட்டைகளும் இரண்டு கைலிகளும் வாங்கினான். அவற்றோடு செருப்பும். எல்லாவற்றையும் போர்வை விரிப்புக்குள் வைத்துக் கட்டி எடுத்துக்கொண்டு பெரு மிதத்துடன் நடந்தான். வந்து சேர்ந்த மறுநாளே உம்மாச்சுவைக் காணவும் செய்தான். இதையெல்லாம் ஏன் செய்தான் என்று கேட்டால் மாயனுக்கு பதில் சொல்ல முடியவில்லை. அப்படியிருக்க உம்மாச்சு என்ன பேச முடியும்?

அவளுடைய சிந்தனைகள் கூடிப் பிணைந்து மேலும் மேலும் அதிகமாயின. அப்போதும் பீரான் அமைதியாகப் படுத்து உறங்கிக்கொண்டிருந்தான். குறட்டை ஒலி உயர்ந்தும் தாழ்ந்தும் வந்துகொண்டிருந்தது. அதைக் கண்டபோது உம்மாச்சுவுக்கு வெறுப்பு மூண்டது.

'சைத்தான்! சொகமாத், தூங்குது.' எதற்காகவோ அவள் மனதுக்குள் திட்டினாள். மூன்று , ான்கு நாட்களாக உம்மாச்சு மிகவும் மாறியிருந்தாள். பீரானிடமிருந்து வெகு தூரம் விலகிப்

போயிருந்தது அவளுடைய மனம். அந்தச் செடியின் பூக்களெல்லாம் உதிர்ந்து போயின. முட்கள் மட்டும் அவளுடைய இதயத்தைக் குத்திக் கிழித்துக் கொண்டிருந்தன. பீரான் பக்கத்தில் நெருங்கிப் போகும்போது அவள் விலகிப் போனாள்; அவன் பேச்சுக் கொடுத்த போது அவள் முகம் திருப்பிக்கொண்டாள்.

"ஒனக்கென்னாச்சி?" - பீரான் கேட்டான்.

"ஒலக்கை!" - அவள் உடனே பதில் சொன்னாள்.

உலக்கை என்பது உம்மாச்சுவின் முடிவு வாக்கியம் என்பதை அறிந்த பீரான் அதற்குப் பிறகு எதுவும் பேசவில்லை. இத்தகைய ஊடல்கள் முன்பும் உண்டுதான். இரண்டு மூன்று நாட்கள் போனால் எல்லாம் சரியாகிவிடுமென்று அவன் நம்பினான். இம்மாதிரியான ஊடல் சமயங்களில் தொந்திரவு செய்யாமலிருப்பதே பாதுகாப்பானது என்ற அனுபவத்தில் அவன் அடுத்த கட்டிலுக்குப் போய்ப் படுத்து அமைதியாய் உறங்கிப்போனான்.

மங்கிய நிலவொளி மேலும் மங்கிற்று. குழந்தையின் உடலில் விழும் நிழலும் அடர்ந்தது. உம்மாச்சு அந்தக் குழந்தையைப் பார்த்தபடி அப்படியே அசையாது படுத்திருந்தாள். அவளுடைய கண்கள் நிறைந்து வழிந்து கொண்டிருந்தன. அப்படிப் படுத்திருந்தவள் சற்று நேரத்தில் கண்ணயர்ந்து உறக்கத்தில் ஆழ்ந்தாள். வாடிப் போன வாழ்க்கையில் ஒரு நம்பிக்கை துளிர்விட்டது. சிதறிக் கிடக்கும் பலவற்றையும் ஒரு கவிஞனின் லாகவத்தோடு கனவுகளாகக் கொண்டு வந்து சேர்க்கிறது. நீண்டு நீண்டு போகும் நெல் வயல்கள். அவை சென்றடைவது உயர்ந்த மலைகளில். அந்த மலைகளின் சிகரங்கள் பனிப்படலங்களால் மூடிக் கிடக்கின்றன. பனிமூட்டத்தினூடே அத்தராலியின் வீடு தெரியும். அங்கேயிருந்து பள்ளத்தில் இறங்கினால் பள்ளிவாசல். நன்கு பழக்கமான பள்ளிவாசல். அங்கேதான் பீரானும் உம்மாச்சுவும் மாயனும் குரான் வேதம் படித்தது. அந்த வயற்காட்டின் ஒரு மூலையில் பழைய குளம் உண்டு. குளக்கரையில் ஏராளமான கொடிகள் படர்ந்து நிற்கிற பிரும்மாண்டமான ஒரு பலா மரம். அந்தப் பலாவின் அடியில் மாயன் அகன்ற மார்பைக் காட்டிக்கொண்டு நிற்கிறான். உம்மாச்சு அவனுக்கு அருகில் செல்கிறாள். நாலு எட்டு வைத்துவிட்டு சட்டென்று நின்றுகொள்கிறாள். அவர்கள் இருவருக்கும் இடையே ஒரு பாம்பு ஊர்ந்து சென்றதா? பனிமூட்டத்தில் எதுவும் தெளிவாகத்

தெரியவில்லை. அது புகை போல மோதி மோதி வருகிறது. அவள் கூர்ந்து கவனித்தாள். இல்லை, பாம்பில்லை. அவள் மாயனுக்கு நேராகக் கை நீட்டினாள். அவள் அந்தக் கையைப் பற்றினாள்.

"அய்யோ! உம்மா!.." குழந்தையின் பலமான அலறலைக் கேட்டுத்தான் உம்மாச்சு திடுக்கிட்டு விழித்துக்கொண்டாள். அப்து அடிபட்டது போல அழுதான். அவள் குழந்தையின் பக்கம் தாவினாள். அப்து எழுந்து நின்றுகொண்டான். அவள் அவனைக் கட்டிப் பிடித்து இடுப்பில் எடுத்துக்கொண்டு திரும்பிய போது அறையில் ஏதோ ஒன்று பதுங்கியது - ஒரு கறுத்த உருவம். "அய்யோ, கடவுளே!..." உம்மாச்சுவின் கூச்சல் கேட்டு அந்த வீடு முழுவதும் திடுக்கிட்டெழுந்தது. சட்டென்று அந்த உருவம் வாசல் பக்கம் கடந்து சென்றது.

"யாரது?" - உம்மாச்சு திடுக்கிட்டு கேட்டாள்.

அந்த உருவம் தயங்கிப் பதுங்கி திறந்து கிடந்த வாசல் வழியே வெளியே ஓடியது. திரும்பிப் பார்த்துவிட்டு ஓடியதில் ஜன்னலினூடே வந்துகொண்டிருந்த மங்கிய நிலவொளியில் அந்த முகத்தை உம்மாச்சுவினால் மங்கலாகப் பார்க்க முடிந்தது.

"அம்மாடி! ஹோஜராஜாவான தம்புரானே!.." இவ்வளவு சந்தடி நடந்தும்கூட பீரான் விழித்துக்கொள்ளவில்லை. அவள் அந்தக் கட்டிலருகில் சென்று அவனைத் தட்டி எழுப்பவும் இல்லை. ஒரு முனகல் சத்தம் அந்தக் கட்டிலிலிருந்து வந்தது. அது குழந்தையின் அழுகுரலால் தெளிவாகக் கேட்கவுமில்லை. அவள் சக்தியெல்லாம் திரட்டி உரக்கக் கூவினாள்: "உம்மா...உம்மா!.. ஓடி வாங்க!"

பத்து விநாடிகளில் அந்த அறைக்குள் வேலைக்காரர்களும் வெளிச்சமும் அம்மாவும் எல்லோரும் ஓடி வந்தார்கள். உம்மாச்சு பீரானின் கட்டிலை ஒரு முறை பார்த்தாள்: இரத்த வெள்ளம்!....

"கடவுளே!" மயங்கி விழப் போன உம்மாச்சுவை யாரோ தாங்கிப் பிடித்து படுக்க வைத்தார்கள்.

"அய்யோ மகனே!..." திடீரென்று கிழவி துள்ளி விழுந்தாள். யாருக்கும் தாங்கிப் பிடிக்க முடியவில்லை. அதற்குப் பிறகு கிழவியிடமிருந்து எந்த அரவமும் இல்லை. கூச்சலோடு கூச்சல். அயலில் இருந்தவர்களெல்லாம் விரைந்தோடி வந்தார்கள். ஒவ்வொரு பார்வை. அதற்குப் பிறகு பார்க்க முடியவில்லை. அத்த

இரத்தக்களத்திலிருந்து கண்ணெடுத்து அடுத்தாற்போல் பார்த்த போது நிலாகூட அவர்களுக்கு சிவப்பாகத் தெரிந்தது.

சற்று கழிந்ததும் அந்த அறையிலிருந்து இரண்டு பிணங்களை வெளியே எடுத்துப் போனார்கள். இரத்தம் துவைந்ததும் இரத்தக் கறை இல்லாததும். அந்தத் தாயையும் மகளையும் அடுத்தடுத்துக் கிடத்தி மூடினார்கள். சூரியன் கிழக்கே மலைச்சரிவினூடே அப்போது எட்டிப் பார்த்தான்.

## 10. சாட்சி இல்லாத வழக்கு

"அப்பா.....அப்பா.....!" சின்னம்மு சாப்புண்ணி நாயரை நச்சரித்துக் கொண்டிருந்தாள். சாப்புண்ணி ஏதோ வீட்டுமனைப் பத்திரங்களைப் படிப்பதில் மூழ்கியிருந்தார். மகள் கூப்பிட்டதைக் கவனிக்காமல் காகிதங்களைப் புரட்டிப் பார்த்துக் குறிப்புகள் எடுத்துக்கொண்டிருந்தார்.

"அப்பா....அப்பா.......அப்பாவுக்குக் காது கேக்காதா?"

"என்னடீ வேணும்?"

பத்திரங்களிலிருந்து கண்ணெடுக்காமலேயே சாப்புண்ணி நாயர் கேட்டார்.

"அப்பா, கொஞ்சம் பாருங்களேன்!"

"சொல்லு"

"என் மொகத்தைப் பார்த்தாத்தான் சொல்லுவேன்."

"சீச்சீ! இந்தப் பொண்ணு சும்மா இருக்க விடமாட்டாளே! இந்தா பார்த்திட்டேன், என்ன வேணும்?"

"ஒண்ணும் வேணாம்." --சின்னம்மு முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டாள்.

"என்னம்மா வேணும்ங்கிறே?"

"நான் தொந்திரவு பண்றேன்னுதானே நினைக்கிறே, எனக்கொண்ணும் வேண்டாம்."

"வேணாம்னா வேணாம்." சாப்புண்ணி நாயர் மீண்டும் மூக்குக் கண்ணாடியை மாட்டிக்கொன்டு பத்திரக் கட்டுக்களில் பார்வையைச் செலுத்தினார். ஐந்து தலைமுறைகள் கை மாறி வந்த வீட்டு மனை. அதில் மூன்றாவது தலைமுறைக்காரன் மைனராக இருந்தபோது அவனுடைய கார்டியன் மூலமாக மனை கைமாற்றப்பட்டுள்ளது. ஆனால் அதிலிருந்து கிடைத்த ரொக்கம் ஒழுங்காக மைனருடைய உபயோகத்திற்குத்தான் கிடைத்தது என்பதற்கு ஆதாரம் உண்டு. மைனர் இப்போது மேஜராயிருக்

கிறான். மைனராயிருந்தபோது செய்த விலைப்பத்திரம் செல்லுபடி ஆகாதென்று இப்போது நிருபிக்க வேண்டும். இப்போதைய நிலைமை அப்படி. மைனராக இருந்து இப்போது மேஜராகிவிட்டிருந்த அந்த நபரை விட, அன்றும் இன்றும் அவனுடைய கார்டியனாக இருந்த காரியஸ்தனுக்குத்தான் கைமாறிய அந்த இடத்தை மீண்டும் பெற வேண்டும் என்ற ஆவல் மேலிட்டது.

"நீங்கதான் வித்து முடிச்சிட்டீங்கள்ள?" - சாப்புண்ணி நாயர் கேட்டார்.

"ஆமாம்."

"அப்படியானா..."

"நீதிமன்றம்ங்கிறது நீதியை மட்டும்தான் பார்க்கும்; சத்தியத்தைப் பார்க்காது" என்பது அந்த மனிதரின் வாதம். சரிதானே? சட்டத்தின் தெளிவுகளில்லாமல், உண்மையை மட்டும் சொல்வதனால் ஒரு நீதிமன்றம் ஏற்றுக்கொள்ளாதல்லவா? சாப்புண்ணி நாயரும் ஒப்புக்கொண்டார். இருக்கட்டும், கேசுகளும் வரவேண்டும்தானே! இருந்தாலும் பத்திரமும் பழுதில்லாமல் எழுதப்பட்டதுதான். தன் குருநாதரான உன்னிச்சுண்டன் நம்பியார்தான் அதை எழுதியது. ஒரு தப்போ தவறோ எதையும் யானையை நுழையச் செய்யும் அளவுக்குச் செய்துவிடலாம். அப்படி ஒரு பழுதுக்காகத் துழாவிக்கொண்டிருக்கும் போதுதான் சின்னம்முவின் குரல். எரிச்சல் வராமல் இருக்குமா? சாப்புண்ணி நாயர் மும்முரமாக பத்திர வாசகங்களில் கண்களை ஓட்டிக் கொண்டிருந்தார். திடீரென்று பக்கத்திலிருந்து ஒரு சிணுங்கல்-தாளக் கிரமத்தில் உயரும் ஒரு தேம்பல். அது அதிகமாகி அதிகமாகி அழுகையாகப் பரிணமித்தபோது சாப்புண்ணி நாயர் கண்ணாடியை கழற்றிவிட்டு அங்கே ஒரு தடவை பார்த்தார். ஒருவரல்ல, இருவர்! சின்னம்முவும், அவளுக்குப் பின்னால் லட்சுமியம்மையும்.

"எவ்வளவு நெஞ்சழுத்தம் பாரு, இந்தக் குழந்தை இப்படித் தேம்பி அழுறதைப் பார்த்தும், என்னங்க?" லட்சுமியம்மை ஆத்திரமாகத்தான் பேசினாள்.

"அவளுக்கென்ன வேணுமாம்?" சாப்புண்ணி நாயர் கேட்டார். "கேட்டா சொல்ல மாட்டேங்கிறா, கேக்கலேன்னா அழவும் செய்றா!"

"அப்பா தொந்திரவு பண்றதாச் சொன்னாங்கல்ல?

"நான் அப்பிடிச் சொன்னேனா?"

"இல்லியா பின்னே! - அந்த நீலக் கண்களிலிருந்து மளமள வென்று கண்ணீர்த் துளிகள் விழுந்தன. அப்போது சாப்புண்ணி நாயருக்கும் மனம் உருகிவிட்டது. ரிகார்டு கட்டைத் தள்ளி வைத்துவிட்டு மகளைப் பிடித்திழுத்து மடியிலிருத்திக் கொண்டார். தனது மேல்துண்டு கொண்டு அவளுடைய கண்ணும் மூக்கும் துடைத்தார். "சின்னம்மு, என்ன வேணும், என் கண்ணுக்கு?"

"ஒண்ணும் வேணாம்."

"அழக் கூடாதும்மா. அப்பா இன்னிக்கு சாயங்காலம் வர்றப்போ பேரீச்சம்பழம் வாங்கியாறேன்." இன்னும் ஏதேதோ சமாதான வார்த்தைகளை சாப்புண்ணி நாயர் சொன்னார். பேரீச்சம்பழம் என்ற வார்த்தையைக் கேட்டவுடன் சின்னம்மு விடமிருந்து தேம்பல் நின்றது. இவ்வளவும் ஆன பிறகு ஒரு முறுவலோடு லட்சுமியம்மை உள்ளே போனாள்.

"இப்போ சொல்லு, உனக்கு என்ன வேணும்?"

"அப்பா...அப்பா.." அந்த ஆறு வயது குட்டிப்பெண் உற்சாகத் தோடு கையையும் காலையும் ஆட்டிக்கொண்டு தொடங்கினாள்: "அப்து சொல்றான், அவனோட அப்பாவை யாரோ குத்திக் கொன்னுப்புட்டாங்களாம். குத்திக் கொல்லாட்டா அவனுக்கும் அப்பா இருந்திருப்பாரு. அவனோடே அப்பா அவன் மேலே ரொம்பப் பிரியமா இருந்தாராம்ப்பா. அப்பிடியாப்பா?"

"...ம்...அதெல்லாம் குழந்தைங்க பேசப்படாது."

"யாருப்பா அப்து அப்பாவைக் குத்திக் கொன்னது?"

"யாரோ என்னமோ?... அதையெல்லாம் எதுக்காகம்மா கேக்கறே?"

"கேட்டா என்னவாம்?"

"கொழந்தைங்க அதெல்லாம் கேக்கக் கூடாது."

"பெரியவங்களானப்புறம் கேக்கலாமாப்பா?"

"கேக்கலாம்."

"நான் இப்போ பெரியவளாயிட்டேன்ப்பா."

"இன்னும் பெரியவளாகணும்."

"அம்மா மாதிரி ஆகணுமா?"

"ஆமாம்."

"அப்போ அப்து அப்பாவைக் குத்திக் கொன்னது யார்னு கேக்கலாமா?"

"...ம்...அப்புறம் பாரு..." சாப்புண்ணி நாயர் அவளுடைய கவனத்தை திசைதிருப்பப் பார்த்தார்.

"அப்பா!" - சின்னம்மு குறுக்கே புகுந்து பேசினாள்: "ஸ்கூலுக்குப் போறப்போ அப்து சொல்றான், அவனோட அப்பாவைக் கொண்ணதை அவன் பாத்திருக்கானாம்!"

"சீ! முட்டாத்தனமாவெல்லாம் பேசப்படாது." - சாப்புண்ணி நாயர் அதட்டினார்.

"இல்லேப்பா, ஜன்னல் வழியா நிலா வெளிச்சம் அடிக்கிறப்போ அவன் அந்த ஆளோட மொகத்த நல்லாப் பார்த்துட்டானாம்."

"நீ இந்த மாதிரி தேவை இல்லாததைப் பேசிக்கிட்டு திரியக் கூடாது. வாத்தியாரு இதைக் கேட்டார்னா உதைச்சிப்பிடுவாரு."

"அப்பிடியா"

"ஆமாம்."

"அப்பிடீன்னா நான் இனிமே அப்பிடியெல்லாம் பேச மாட்டேன். அப்பா, பேரீச்சம்பழம் எப்போ வாங்கிட்டு வருவீங்க?"

"சாயங்காலம்."

"ஏன், இப்போ வாங்கிட்டு வந்தா?"

"இப்போ கடை தெறந்திருக்காது."

"எப்போ தெறப்பாங்க?"

"ஸ்கூல் விடுற நேரத்துக்குத்தான் தெறப்பாங்க."

"வாங்கியாரணும்.."

"சரி!"

"மறக்கக் கூடாது." - போகிற போக்கில் அவள் ஒரு தரம் நினைவுபடுத்திப் போனாள். சாப்புண்ணி நாயர் சம்மதித்தார். அவருடைய மனதில் அலட்டிக் கொண்டிருந்தவை வேறு சிந்தனைகள். குழந்தைகளின் இந்த வரம்பு மீறிய உரையாடல்களில் ஆபத்தான விவரங்கள் ஒளிந்திருக்கின்றன.

அப்து ஆளைப் பார்த்துவிட்டதாகச் சொல்கிறான். அது நல்லதல்ல. உண்மை என்பது ஒளிரும் மாணிக்கக் கல். அதன் மீது மூடியிருக்கும் தூசுப் படலம் காலத்தின் பெருமூச்சில் மெள்ள மெள்ள அகன்றுவிடும். கடைசியில் ஒரு பளபளப்பு தலைகாட்டும், "இதோ நான் இங்கே இருக்கிறேன்!" என்று. பீரானின் மரணத்தின் தொடர்பான காட்சிகள் சாப்புண்ணி நாயரின் நெஞ்சினூடே கடந்து போயின. இரத்த வெள்ளத்தில் மிதந்த அந்த உருவத்தை ஒரு முறைதான் அவர் பார்த்தார். அடுத்தாற்போல் பீரானின் அம்மா அமைதியாகக் கிடந்தாள். மயக்கம் தெளிந்த உம்மாச்சு பக்கத்து அறையில் குப்புறப் படுத்துத் தேம்பிக் கொண்டிருந்தாள். யார்? எப்படி? - என்பவற்றைக் குறித்து யாருக்கும் ஒரு துப்பும் கிடைக்கவில்லை. சற்றும் எதிர்பாராமல் எல்லாம் நடந்து முடிந்தது. அடுத்து போலீஸ் வந்தது; சோதனைகள் நடந்தன, முடிவில்லாத சோதனைகள். பெட்டி, கூடை, ஜாடி, அடுப்புச் சாம்பல் கூட - எல்லாவற்றையும் சோதித்தார்கள். வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த பக்கத்து வீட்டார்கள் தலைகளை உள்ளுக்குள் இழுத்துக்கொண்டார்கள். இந்தப் பரந்த உலகத்தில் எதுவும் நடக்கவில்லை என்பது போல, பெண்கள் பலாக் காயை நறுக்குவதும், சோறு சமைப்பதும், குழந்தைகளை அழாமல் பேணுவதுமாக இருந்தார்கள். ஆனால், பீரான் வீட்டிலிருந்து ஏதேனும் ஓர் சின்ன சந்தடி கேட்டால்கூட எல்லோரும் காதைத் தீட்டிக்கொண்டு கேட்பார்கள். ஊரே நடுங்கிற்று. போலீஸ்! போலீஸ்! எல்லாம் சோதித்து முடிந்தபோது போலீஸ் கேள்விகளைத் தொடங்கியது. முதலில் உம்மாச்சுவைத்தான் கேட்டார்கள். அதுவும் கொம்பு மீசையுள்ள ஒரு இன்ஸ்பெக்டர். எலுமிச்சம் பழத்தைக் குத்தி நிறுத்தலாம் என்பது போன்ற அந்த மீசை நுனிகளை இரு கன்னங்களிலும் தேளின் கொடுக்குப் போல முறுக்கி வைத்துக்கொண்டு விசாரித்தார்: "எப்போ படுக்கப் போனது?"

உம்மாச்சு அழுதாள்.

"சொல்லணும். இது சர்க்கார் சமாச்சாரம்."

"சாயந்திரத்துக்குப் பெறகு கொஞ்ச நேரம் கழிச்சி."

"பத்து மணி இருக்குமா?"

"....ம்...."

"நீங்க படுத்த உடனேயே தூங்கிட்டீங்களா?"

"...ம்..."

"எப்போ முழிச்சீங்க?"

"சத்தம் கேட்டு."

"ஆளைப் பாத்தீங்களா?"

உம்மாச்சு பேசவில்லை. இன்ஸ்பெக்டர் மீண்டும் மீண்டும் துருவித் துருவிக் கேட்டார். அவள் தேம்பித் தேம்பி அழுது கொண்டே இருந்தாள். அப்படி அன்றைய விசாரணை முடிந்தது. பிணங்களின் போஸ்ட்மார்ட்டத்திற்குப் பிறகு அடக்கம் செய்வதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு சாப்புண்ணி நாயர் வெளியில் நின்றுகொண்டிருந்தார். பிணங்களை எடுத்துச் செல்வதற்கான சப்பரங்களுக்கும் பிறவற்றுக்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. பிணங்களைத் தூக்கும்போது உம்மாச்சு நெஞ்சு வெடித்து விடும்படியாக வாய்விட்டு அழுதாள்: "போறீங்களா... இனிமே வரமாட்டீங்களே... எம் மகனுக்கு அப்பா இல்லாமப் போயிடுச்சே... என் கடவுளே!..."

இடைவிடாத அந்த அழுகுரலைக் கேட்க அப்து அங்கே இருக்கவில்லை. அந்தக் குழந்தையை சாப்புண்ணி நாயர் தன் வீட்டுக்கு இட்டுச் சென்றிருந்தார். மதச் சார்பான எல்லாச் சடங்குகளோடும்தான் பீரானையும் அவன் அம்மாவையும் அடக்கம் செய்தது.

மறுநாள் முதல் போலீஸ் அங்கே சுற்றி வரத் தொடங்கியது. பலரையும் கூப்பிட்டு விசாரித்தது. கொல்லன் குஞ்சு, ஆசாரி காரி, அப்பளக்கார பவுலோஸ், எண்ணெய்க்கார அகமது - இப்படிப் பலரையும் கூப்பிட்டார்கள். வந்ததும் வராததுமாக இன்ஸ்பெக்டர் அடிவயிற்றில் ஒரு குத்து விடுவார்! அதற்குப் பிறகு விசாரணை தொடங்கும். அப்பளக்காரன் பவுலோசின் குடவயிற்றில் ஒரு குத்து விழுந்தது; அவன் அப்படியே சுருண்டு குந்திக்கொண்டான். அதைப் பார்த்துக்கொண்டிருந்த சாப்புண்ணி நாயருக்கு சொந்த வயிற்றில் ஒரு புரட்டல். என்ன சொல்வது! போலீஸ் அல்லவா குத்துகிறது!

விசாரணையிலிருந்து தப்புவதற்காகப் பலரும் ஊரைவிட்டுப் போயிருந்தார்கள். காசு இருந்தவர்களுக்கு கடவுள் நம்பிக்கை அதிகமாயிற்று. அவர்கள் ராமேஸ்வரத்திற்கும் கோகர்ணத்திற்கும்

வழிபடச் சென்றிருந்தார்கள். இல்லாதவர்கள் தொலைவிலுள்ள சுற்றத்தார் வீடுகளுக்கு விருந்து சாப்பிட தக்க சமயம் இதுதான் என்று முடிவு செய்தார்கள். எங்கேயும் போக முடியாதவர்கள் "கடவுளே!" என்று கண்களை மூடிக்கொண்டு அங்கேயே இருந்தார்கள்.

தெளிவான துப்பு எதுவும் கிடைக்கவில்லை. போலீசார் மீண்டும் உம்மாச்சுவைத்தான் அணுகினார்கள். அந்தக் காட்சி இன்றும் சாப்புண்ணி நாயருக்கு நினைவிருக்கிறது. அது என்றைக்கும் மறக்கக் கூடியதுமல்ல.

"ஓடினதை நீங்க பாத்தீங்கள்ள?"

"பார்த்தேன்."

"ஆள் எப்படி இருப்பான்?"

உம்மாச்சு மௌனமானாள்.

"இது பிரிட்டிஷ் கவர்மெண்டு சமாச்சாரமாக்கும். சொல்ல லேன்னா குழப்பந்தான்." இன்ஸ்பெக்டர் அமைதியாகத் தொடர்ந் தார்: "ஆள் எப்படி இருந்தான்? முரட்டு ஆளா?"

"இல்லே."

"பின்னே?"

"பின்னே...பின்னே ஒரு குள்ளன்."

"தடிச்சவனா?"

"மெலிஞ்சவனா?"

"அப்படித்தான்...மெலிஞ்சவன்தான்."

"முடி இருந்திச்சா?"

"இருந்தது."

"ம் எந்த வழியா ஓடினான்?"

"அது ஒண்ணும் சொல்ல முடியலே. அதுக்குள்ளே எனக்கு மயக்கம் வந்திருச்சி..."

சாப்புண்ணி நாயர் எல்லாம் கேட்டு கண்மூடி நின்று பிரார்த்தித்தான்: "பகவானே..."

அடுத்த நாள் சாப்புண்ணி நாயரிடம் விசாரணை ஆரம்பித்தது: "பீரானுக்கு யாரெல்லாம் எதிரிங்க?"

"அப்படி ஒரு எதிரியுமில்லே." சாப்புண்ணி நாயர் அமைதியாகச் சொன்னார்.

"நீ என்ன நாயருடா? மனுசன்னு இருந்தா எதிரிங்க இல்லாம இருப்பாங்களா?"

"ஒண்ணும் தோணலியே."

"அப்படீன்னா நீயாத்தானிருக்கும்."

"அய்யோ! நான் ஒண்ணும்..."

"அப்படீன்னா சொல்லு. யார் கூடவாவது கேசு வழக்குன்னு அவருக்கு ஏதாவது உண்டா?"

"அப்படியானா...சோழி என்கிறவன் மேலே கேஸ் போட்டு வீட்டைவிட்டுப் போகச் சொன்னதுண்டு."

சோழியின் வீட்டை அப்புறப்படுத்துவதான கேஸிலிருந்துதான் சாப்புண்ணி நாயர் பீரானின் காரியஸ்தனாக வேலையை ஆரம்பித்தது. அந்தக் கேஸ் கொஞ்சம் தடபுடலாகத் தான் நடந்தது. பணமும் நிறையச் செலவாயிற்று. சோழி ஒரு பிடிவாதக் காரனாயிருந்தான். அவனுடைய தந்தை தாமி நிலத்தைக் குத்தகைக்கு வாங்கிச் சரிப்படுத்தி உண்டாக்கின வீட்டுப் பகுதி. தென்னையும் கமுகும் வாழையும் நிறைந்து நிற்கும் ஒரு சின்னத் தோட்டம் உருவாயிற்று. தாமி அந்த இடத்தில் ஒரு எண்ணெய்ச் செக்கும் வைத்தான். எப்போதும் அந்த வீட்டிலிருந்து செக்கு சுற்றும் சத்தம் கேட்டுக்கொண்டே இருக்கும். எள், தேங்காய், புன்னைக்காய், நீரட்டிக்காய் முதலியவற்றை அந்தச் செக்கில் மாற்றி மாற்றி ஆட்டினான். தாமியின் எண்ணெய்ச் செக்கு எல்லோருக்குமே தேவைப்பட்டது. பிண்ணாக்கும் கொஞ்சம் எண்ணெயும் கூலியாகக் கொடுத்தால் யாருக்கும் அங்கே கொண்டுபோய் ஆட்டிக்கொண்டு வரலாம். அப்படி அந்த இடம் ஒரு வீடாகவும் ஒரு வியாபார ஸ்தலமாகவும் இருந்தது. தாமிக்குப் பிறகு அவனுடைய மகன் சோழியின் காலத்தில்தான் சேக்குட்டி முதலாளி நிலத்தின் சொத்துரிமை கைமாறியது.

சேக்குட்டி முதலாளி மேலும் மேலும் நெருக்கினார்: "அதை என்கிட்ட ஒப்படைச்சிட்டு இடத்தைக் காலி பண்ணு."

"அதை மட்டும் சொல்லாதீங்க, முதலாளி." - சோழியும் கெஞ்சினான். தொடர்ந்து ஒன்றோ இரண்டோ கோழிகளைப் பரிசாகக் கொடுத்தான். அந்த விஷயம் அப்படி நின்றது. போகப்

போக சோழிக்கு சோர்வு ஏற்பட்டது. அவன் காலிசெய்ய மாட்டானென்று முடிவாகச் சொல்லிவிட்டான்

"என்னோட மூதாதைங்க உண்டாக்கின தோட்டம், அந்தத் துலுக்கனுக்கு திங்கிறதுக்குக் குடுக்க மாட்டேன்."

அத்துடன் கோபமும் மூண்டெழுந்தது; கேசும் தலையெடுத்தது. சோழியின் கையில் கொஞ்சம் பணமும் சேர்ந்திருந்ததனால் அவனும் விடவில்லை. கேஸ் நடந்துகொண்டிருந்த போதுதான் சேக்குட்டி முதலாளி இறந்தது. அதைத் தொடர்ந்து நடத்த பீரான் சாப்புண்ணி நாயரை ஏற்பாடு செய்தான். இரண்டு கோர்ட்டுகள் ஏறி வழக்கு நடந்தது. இரண்டு இடங்களிலும் சோழி தோற்றான். கையிலிருந்த காசும் தீர்ந்தது. ஐந்து குழந்தைகள், மனைவி, சில வீட்டுச் சாமான்கள், இரண்டு வெள்ளாடுகள், இடத்தைக் காலிசெய்வதற்குப் பலனாகக் கிடைத்த எழுநூறு ரூபாய் ஆகிய இவற்றுடன் அவன் பிறந்து வளர்ந்த வீட்டை விட்டு வெளியேற நேர்ந்தது. சாப்புண்ணி நாயர் இந்தக் கதையை விரிவாக இன்ஸ்பெக்டருக்குச் சொன்னான்.

"அப்படி வா." இன்ஸ்பெக்டர் யோசனை செய்தவாறே தொடர்ந்தார்: "அவன் குள்ளந்தானே?"

"ஆமாம்."

"மெலிஞ்சிருப்பானில்ல?"

"ஆமாம்."

"முடியுண்டில்ல?"

"ஆமாம்."

"அவனோடச் சேந்தவங்க யாரு?"

"யாரும் இருக்கிறதாத் தெரியலே."

"யாருடைய உதவியும் இல்லாமே அவனுக்கு இந்தத் தைரியம் வந்திருக்காது."

"எப்படிச் சொல்றதுங்க?"

"சொல்லணும்."

இன்ஸ்பெக்டர் யோசித்தார். கேள்விகளும் கிளைக் கேள்விகளும் கேட்கக் கேட்க ஒரு தேங்காய் வியாபாரி சோழியுடன் சம்பந்தப்பட்டவனென்று தெரிய வந்தது. அந்த வியாபாரி பணக்காரன்.

"அப்படி வா." - இன்ஸ்பெக்டர் கொம்பு மீசையைத் தடவிக்கொண்டு, தொப்பியையும் மாட்டிக்கொண்டு நடந்தார்.

இந்தக் காட்சிகளெல்லாம் நேற்றுத்தான் நடந்தது போல சாப்புண்ணி நாயருக்குத் தோன்றியது. எந்தச் சனி பிடித்த நிமிஷத்தில் அந்த வியாபாரியின் பெயர் சொல்லத் தோன்றிய தென்று சாப்புண்ணி நாயர் இன்று வருத்தப்பட்டார். அந்த ஆளிடம் மூன்று நாட்கள் விசாரணை நடந்தது. நான்காம் நாள் அவன் குற்றவாளி இல்லை என்று தெரிந்தது. அத்துடன், இரண்டாயிரத்துச் சில்லரை ரூபாய்களுக்கு அவன் கடன்கார னானான். மெள்ள வியாபாரத்தை முடித்துக்கொண்டு ஊரை விட்டே போக நேர்ந்தது. இப்போது கொழும்பிலோ வேறெங்கோ அந்த மனிசன் இருப்பது.

"கஷ்டம்! நான்தான் அந்த ஆளை விரட்டிப்பிட்டேன்!" சாப்புண்ணி நாயர் பெருமூச்சு விட்டார்: "கடவுளே, நான் தெரிஞ்சு செய்யலே!

அவ்வளவும் முடிந்து குற்றவாளியை சீக்கிரமே கண்டுபிடித்து விட்டார்கள் - சோழியைத்தான். அவனைப் பிடித்துக்கொண்டு போனபோது ஐந்து குழந்தைகளும் வாய்விட்டு அழுதன: "அப்பா.." சோழிக்கு ஒன்றும் பேச முடியவில்லை. அவன் சஞ்சலத்துடன் பார்த்தபடி உமிழ்நீர் மட்டும் மென்று விழுங்கினான். தாங்கள் சொன்னதையெல்லாம் ஒப்புக் கொண்டால், கீழ்க் கோர்ட் தண்டித்தாலும் மேல் கோர்ட் அவனை விட்டுவிடுமென்று இன்ஸ்பெக்டர் அறிவுறுத்தினார். சோழிக்கு ஏதாவது புரிந்தால் தானே? கோர்ட்டில் கேட்ட ஒவ்வொரு கேள்விக்கும் அவன் தலையாட்டவும் 'உம்' கொட்டவும் மட்டுமே செய்தான். அந்தக் காட்சி பரிதாபத்திற்கு உரியதாக சாப்புண்ணி நாயருக்குத் தோன்றிற்று.

அவர் உம்மாச்சுவிடம் சொன்னார்: "எதுக்காக அவனை மாட்டி விட்டீங்க?"

"நாம என்ன செய்றது?"

"அவன் இல்லேன்னு சொல்லிருங்க."

அதற்கு உம்மாச்சு பதில் பேசவில்லை. அப்போதுதான் அப்து கூப்பிட்டான். உம்மாச்சு உள்ளே போனாள். "என்னடா கண்ணு?"

இதில் ஏதோ ஒரு குழப்பம் ஒளிந்திருக்கிறது என்பதாக சாப்புண்ணி நாயருக்குப் புலப்பட்டது. ஆனால், ஒரு கொலைக்

குற்றத்தின் சுற்றிலுமுள்ள ரகசியங்களைத் தோண்டித் துழாவ முடியாது. அது எந்தப் பக்கம் வெடிக்குமென்று சொல்வதற்கில்லை. ஆனாலும் ஐந்து குழந்தைகள் அந்தச் சோழிக்கென்று நினைத்த போது சாப்புண்ணி நாயருக்கு மனம் இளகிற்று. அவர் மறுநாளும் உம்மாச்சுவிடம் கேட்டார்: "என்ன நினைக்கிறீங்க?"

"வர்ரது வரட்டுமே."

"அவன் இதைச் செய்யலே இல்லியா?"

"எனக்கொண்ணும் தெரியலே. உங்களை நான் வேற்று ஆளா நெனக்கலே, சாப்புண்ணியாரே! நான் என்ன நெனச்சாலும் உங்களுக்கு அது புலப்பட்டுடும். பின்னே எதுக்காக...." உம்மாச்சுவின் குரல் தடுமாற்றத்தால் இடறிற்று.

"நான் உங்களை வேதனைப்படுத்தறதுக்காக இதைச் சொல்லலே."

"அது எனக்கும் தெரியும். உங்களை வருத்தப்படும்படி நான் விடமாட்டேன். இருந்தாலும் எனக்கும் ஒரு மனிசனுக்கான இருதயத்தைக் கொடுத்திருக்கான் ஆண்டவன்."

அப்படிச் சொன்னதன் அர்த்தம் சாப்புண்ணியாருக்கு அன்று புரியவில்லை. என்னவானாலும் ஆகட்டும். முடிவில் இதை மட்டும் சொன்னார்: "என் உயிர் இருக்கிற காலம் வரைக்கும் உங்களுக்கு நல்லது மட்டும்தான் செய்வேன். நானும் ஒரு நல்ல குடும்பத்தில் பெறந்தவன்தான் என்கிறதை மட்டும் மறந்திடாதீங்க."

"அதுதான் என் நம்பிக்கையும்."

அதற்குப் பிறகு இருவரும் ஏதும் பேசவில்லை. சாப்புண்ணி நாயர் அந்த வாக்குறுதியில் நிலைகுலையாமல் இருந்தார். உம்மாச்சு என்ன சொன்னாலும் அதற்குச் சம்மதம் கொடுத்தார். அப்துவின் காரியங்களில் அவர் தனிப்பட்ட கவனம் செலுத்தி னார். தந்தை இல்லாத குறை தெரியாமலே இதுவரை வளர்த்தாயிற்று. அவனுடைய எல்லாச் சேட்டைகளுக்கும் சாப்புண்ணி நாயர் ஈடு கொடுத்தார். உம்மாச்சுவே அதைப் பற்றிச் சொல்வதுண்டு: "இந்தப் பய பாடாப் படுத்தறான்!"

"பரவாயில்லே." - சாப்புண்ணி நாயர் சொல்வார். இதற் கிடையில் கொலைக்கேஸ் விசாரணை நடந்தது. சாட்சிகளுக்குப் பின் சாட்சிகளாக கேள்வியும் பதிலும், வாதமும் பிரதிவாதமும் எல்லாம் முடிந்து முடிவில் தீர்ப்பும் வழங்கப்பட்டது: சோழி

குற்றவாளிதான். ஆயுள் முழுவதும் சிறைச்சாலை! சோமி மயங்கி விழுந்துவிடுவான் என்றுதான் சாப்புண்ணி நாயர் எதிர்பார்த்தார். ஆனால் அவனோ எதுவும் புரியாதது போல விழித்துக்கொண்டு நின்றான். அவன் நின்றிருந்தது இப்போதும் அடிக்கடி சாப்புண்ணி நாயரின் மனதில் நிழலிடுகிறது. இப்போது அது ஒரு தடவை பிரதிபிம்பமாகிறது.

"என் குருவாயூரப்பா!..." சாப்புண்ணி நாயர் ஒரு முறை பெருமூச்சு விட்டார். இந்தக் குறுகிய காலத்திற்குள் எப்படியெல்லாம் சம்பவங்கள் நடந்துவிட்டன! எதிர்பாராத அடிகள்! எல்லாம் தெரிந்துகொண்டு எதுவும் தெரியாததுபோல நிற்கும் பயங்கரமான விதி. தேக்கி வைக்காமல் மனதின் அடைப்பை ஒரு தடவை திறந்துவிட்டால் என்னவெல்லாம் வெளியே ஓடி வரும்!

"கூப்பிடுறா" - பின்னாலிருந்து சன்னமான குரல். சாப்புண்ணி நாயர் திரும்பிப் பார்த்தார். அப்து.

"என்னடா அப்து?"

"அம்மா கூப்பிடுறா. இப்பவே அங்கே ஒரு தரம் வரச் சொன்னா."

"இந்தா வர்றேன்."

"சின்னம்மு எங்கே, சாப்புண்ணியாரே?" - அப்து தயக்கத்துடன் கேட்டான்.

"இங்கே எங்கேயாச்சும் இருப்பா."

உடனே மனைவியைக் கூப்பிட்டார். சட்டையும் துண்டும் கொண்டுவரச் சொன்னார்.

"எங்கேயாம்?" - லட்சுமியம்மை.

"இந்தக் குழந்தை கூப்பிட வந்திருக்குது."

சட்டையும் துண்டும் எடுத்து வந்துகொண்டிருந்த லட்சுமி யம்மைக்குப் பின்னால் சின்னம்முவும் வந்தாள்.

"அப்து!"

"என்னடீ!"

"வா." இரண்டு குழந்தைகளும் வாய்விட்டுச் சிரித்தார்கள். கண்களாலும் கைகளாலும் ஏதோ சாடை காட்டிக் கொண்டார்கள். சில செய்திகள் பரிமாறிக் கொள்ளப்பட்டன.

இதற்கிடையில் தயாராகிப் புறப்பட்ட சாப்புண்ணி நாயர் அப்துவைக் கூப்பிட்டார்.

"நீங்க போங்க. நான் அப்புறமா வர்றேன்."

"சரி." - சாப்புண்ணி நாயர் வெளியே புறப்பட்டபோது சின்னம்மு கிசுகிசுத்தாள்:

"இன்னிக்கு எங்கப்பா பேரீச்சம்பழம் வாங்கி வருவாங்க."

"நிசம்மாவா?"

"அப்துவுக்கும் தர்றேன்."

"சரி!... எங்கப்பாவும் இருந்திருந்தார்னா எனக்கும் நிறைய வாங்கி வருவாரு!"

சின்னம்மு அப்போது ஏதோ யோசித்தபடி மௌனமாக நின்றாள்.

## 11. ஆவலும் ஆசையும்

"மாலை மணிமாலை, முத்துமணிமாலை,
கைவிரல் பத்திலும் மோதிரம் அணிஞ்சவளே,
காதில் வளையணிந்து கொம்பனும் பூண்டவளே,
அரையில் அரைஞாணும் பொன்னால் ஒட்டியானம்...
மங்கை உம்மாச்சு மனைக்கு வந்தாளே...
மன்மதன் கைப்பிடிக்க மனைக்கு வந்தாளே..."

பல பெண்குரல்களினூடே, கையடித் தாளத்தோடு புறப்பட்ட இந்தப் பாட்டின் அலைகள் அந்த வீட்டின் உள்ளே முழங்கின. எல்லோரும் அதைக் கேட்பதும் தலையாட்டுவதுமாக இருந்தார்கள். உம்மாச்சுவும் கேட்டாள். வெகு தொலைவிலிருந்து புறப்படுகின்ற ஒரு முழக்கம் போல அவள் எல்லாம் கேட்டிருந்தாள்; ஆனால் எதுவும் புரியவில்லை. எல்லாவற்றையும் பார்க்க முடிகிறது; ஆனால் ஏதும் புரியவில்லை. அவள் உட்கார்ந்தாள் - உட்கார்ந்தவள் உட்கார்ந்தவள்தான்!

அந்த வீட்டில் அன்று ஒரே ஓர் ஆளைத் தவிர எல்லோருக்கும் பரபரப்புதான். பரபரப்பில்லாத அந்த ஓர் ஆள் உம்மாச்சுதான். அவள் உடுத்து ஆயத்தமாகி நகைகள் அணிந்திருந்தாள். அத்தரின் மணம் சுற்றிலும் கமழ்ந்தது. அவளை அப்படி அழகாய் அலங்கரித்து எல்லோரும் கூடி ஒரு கட்டிலில் உட்கார வைத்திருந் தார்கள். அப்து ஒரு ஜன்னல் படியில் உட்கார்ந்துகொண்டு சுற்றிலும் நடந்த கோலாகலத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். கோலாகலம் என்று சொன்னால், ஒரு பெரிய கல்யாணத்தி லிருக்கிற கோலாகலம் ஒன்றுமில்லை. ஆனாலும் சிலர் அந்த வீட்டில் முட்டி மோதித் திரிந்தார்கள். பித்தளைத் தாம்பாளங் களில் வெற்றிலை குவிந்து கிடந்தது. அதைச் சுற்றிலும் பெரியவர்கள் பேசிக் கொண்டும், கோபம் கொண்டிருப்பதுபோல் வெற்றிலையை அடைத்து மென்றுகொண்டும் இருந்தார்கள். குரல்

அடக்கிச் சொல்லும் அனுராகக் கவிதை போல இருந்தது கொஞ்சமாவது கலகலப்பு இருக்கத்தான் செய்தது. ஒரு பாத்திரத்தை நகர்த்தும் சத்தம், ஒரு கட்டளை பிறப்பித்தல் - இப்படிச் சில. சில ஆட்கள் சேர்ந்துவிட்டால் எப்படியானாலும் கொஞ்சமாவது இரைச்சல் கிளம்பாமலிருக்குமா?

உம்மாச்சுவின் சித்தப்பாவும், சித்தியும், ஒன்பது குழந்தைகளும், பதினான்கு தோழிகளும் வந்திருந்தார்கள். அவர்கள் எல்லோருடைய தேகங்களிலும் பூட்டியிருந்த நகைகள் குலுங்கும் சத்தமே ஒரு கோலாகலத்தை உருவாக்கியது. ஒவ்வொரு உறவினர் வீட்டிலிருந்தும் பெண்கள் வந்திருந்தார்கள். ஒவ்வொருவருடனும் ஐந்து முதல் பதினொன்று வரையிலான தோழிமாரும் வந்திருந்தார்கள். வீடு முழுவதும் சண்பகமும் முள்முருங்கை மலரும் இடைகலந்து பூத்தது போலிருந்தது. கண்ணைப் பறிக்கும் ஆடைகள், ஜரிகை வேலைப்பாடமைந்த முக்காட்டுத் துணிகள், காதணிகளின் கனம் தாங்காமல் மடிந்த காதுகள், அரைஞான் கிடந்து புரளும் அடிவயிறுகள், நிறங்கள், ஓசைகள், நறுமணங்கள். பல்வேறு வண்ணங்களைக் கட்டிக் கலந்தாற் போன்ற மனித உள்ளங்கள்!

வெளிமுற்றத்திலும் நெருக்கடிதான். அங்கெல்லாம் தலைப்பாக்கள் நிறைந்திருந்தன. நடுநடுவே சில துருக்கித் தொப்பிகளும். கத்திரித்து ஒழுங்காக்கிய கறுத்த தாடிகள், கொம்பு மீசைகள், ஒளிர்ந்து மினுக்கும் தொழுகைத் தழும்புகள், கடிகாரங்களின் தங்கச் சங்கிலிகள் புரளும் மார்புகள், மிதியடிகளின் கடபட சத்தங்கள், செருப்புகளின் கிர்கிர் ஓசைகள். அந்தக் கூட்டத்தில் சட்டை போடாதவர்களும் உண்டு; அதற்கு பதிலீடு செய்வது போல் ஒருவரே மூன்று நான்கு சட்டைகளும், இரண்டு மூன்று துவாலைகளும், ஒரு தலைப்பாகைக் கட்டும் அணிந்தவர்களும் உண்டு. குறுமிளகு, மரத்தின் தடிகள் ஆகியவற்றின் விலைகளில் வந்த ஏற்றத்தையும் இறக்கத்தையும் குறித்து ஒரு மூலையில் சர்ச்சை நடந்து கொண்டிருந்தது. மற்றொரு மூலையில் மெக்காவுக்குப் போகும் வழியில் எதிர்ப்படும் விசேஷங்களை வர்ணித்துக்கொண்டிருந்தார்கள். லௌகீகமும் ஆன்மீகமும் ஆன சிந்தனைப் போக்குகள் அங்கே பரவியிருந்தன. அதற்கிடையே அன்றுவரை நடந்த கல்யாணங்களில் ஏற்பட்ட சிக்கல்கள் பற்றிப் பிரசங்கம் நடத்தினார்கள் சிலர்.

"படைச்சவன் நெனச்சபடிதான் நடக்கும்." - ஒரு கிழவர் தலையிலிருந்து தொப்பி எடுத்து, வியர்வையைத் துடைத்துக் கொண்டு சொன்னார்.

"ஆனாலும், மனிசனோடே முயற்சியும் வேணும்." - ஒரு துருக்கித் தொப்பிக்காரன் குறுக்கிட்டுச் சொன்னான்.

"நீ சும்மா இரு, உண்ணி. இந்தக் கல்யாணத்தோடே சங்கதியை நெனச்சிப் பாரு."

"அது சரிதான்!" மூன்றாவது ஆள் ஒருவர். "இப்படி வரும்னு யாரும் நெனக்கலே."

"இதிலே இப்போ இப்படியெல்லாம் வர்றதுக்கு ஏதாச்சும் மர்மம் இருக்கா? ஆனா வந்திரிச்சி. இந்த மாயனோடே கதையைத் தான் பாருங்களேன். ஊரைவிட்டுத்தான் போனான். போனவன் நல்லாயிட்டான். அதோடே கையிலே நாலு காசு சேத்துக்கிட்டான்."

"அப்போ, பெரியவருக்கு வயநாட்டிலே என்னதான் வேலை?" துருக்கித் தொப்பிக்காரன் ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தான்.

"வியாபாரந்தான்."

"என்ன வியாபாரம்?"

"மலைச்சரக்கு." கிழவர் சுருட்டை ஒரு தரம் மூச்சிழுத்துவிட்டு, பின் சாம்பலைத் தட்டிக்கொண்டு தொடர்ந்தார்: "கெட்டிக்காரன் தான், இல்லே? காசு சேர்க்கிறதிலேயும் கெட்டிக்காரன்தான்!"

"நல்ல வாட்டசாட்டம்!"

"நல்ல அழகும்தான்!"

"அழகுங்கிற கதையெல்லாம் ஒண்ணுதான். காசிருந்தா அழகு தானா வரும்."

"அது மாத்திரம் இல்லேண்ணே, பணக்காரங்க பணக்காரங்கதான்"

"நீ சொல்றதுதான் சரி!" கிழவர் சுருட்டை இறுக்கிப் பிடித்த விரல்களை உயர்த்திக்கொண்டு தொடர்ந்தார்: "பெரிய குடும்ப முல்ல." அவன் பரம்பரையைப் பத்தி என்கிட்ட அகம்மதுண்ணி யண்ணன் இருந்த காலத்திலே சொல்லியிருக்காரு."

"ஒசந்த பரம்பரையா?"

"ஊரை ஆண்டவங்க இல்லே!"

"அப்படியா?"

"ஆமா, பின்னாலே கொஞ்சம் நொடிச்சிட்டாங்கன்னு வச்சிக்கோ. ஆனா இப்போ முன்னுக்கு வந்திட்டாங்க அதுவும் கடவுளோட கிருபைதான். அப்போ என்னதான் சொல்றது? இந்தக் கல்யாணத்தைப் பத்தி யாரும் நெனச்சிக்கூடப் பார்க்கலே; ஆனா அவனுக்குத் தெரியும்." - கிழவன் கையை மேலே உயர்த்திக் காட்டினார்.

"அப்படியா!" - எல்லோரும் அந்தப் பேச்சுக்கு சம்மதம் தெரிவித்தார்கள்.

மாயன் அந்த ஊரில் ஒரு பெரிய பணக்காரனாக இன்று பெயரெடுத்திருந்தான். உண்மையில் அவ்வளவுக்குப் பணம் இருக்கிறதா? ஆனாலும் வெளிப்பகட்டைப் பார்த்தவுடனேயே நம்பக்கூடியவர்கள் அதையும் ஒப்புக்கொண்டார்கள். அதுவும் நல்லதாகவே போயிற்று. மாயன் பாராட்டப்பட்டான். பணமுள்ளவன் என்றும், எங்கேயும் ஆதரவுள்ளவனாகிவிடுவான் அல்லவா!

ஆறு மாதம் முன்பு வரை மாயனை யாரும் அந்த ஊரில் பொருட்படுத்தவில்லை. அவன் ஒரு தடவை வயநாட்டிலிருந்து ஊருக்கு வந்து போயிருந்தான்; யாருக்கும் தெரியாது. தெரிந்து கொள்ள ஆர்வப்படவுமில்லை. பீரான் கொலையானதற்கு முந்தின நாள்தான் அவன் வீட்டிலிருந்து புறப்பட்டுப் போயிருந்தான். புறப்பட்டதிலிருந்து ஆறாம் நாள் அவன் வயநாட்டில் சொந்த வீட்டைச் சென்றடைந்தபோது ஹஸ்ஸன் கேட்டான்: "என்னண்ணே?"

"விசேசமா ஒண்ணுமில்லே."

"ஏதாச்சும் ஒடம்பு சரியில்லியா?"

"அதெல்லாமில்லே."

"பின்னே அண்ணனுக்கு என்னதான் ஆச்சி? கூடையிலே போட்டுக் குலுக்கின மாதிரி இருக்கே பார்க்கிறதுக்கு!"

மாயனின் முகம் முழுதும் கறுத்தது. அதை விரும்பாதவனாக அவன் சொன்னான்: "ஒனக்கு சும்மா அப்பிடித் தோணுது!"

"இல்லேண்ணே!" ஹஸ்ஸன் பதற்றத்துடன் சொன்னான் : "பார்த்தா சைத்தான் பிடிச்சி அறைஞ்ச மாதிரி இருக்குது!"

"ஒன் கண்ணிலே கோளாறு. எனக்கு அப்பிடி ஒண்ணுமில்லே."

"அப்படீன்னா ரொம்ப தூரம் நடந்து களைச்சதா இருக்கும்."

"அப்பிடித்தானிருக்கும்."

அப்படி அந்த உரையாடல் முடிவடைந்தது. ஆனால் மாயனின் இயல்பான போக்கில் ஒரு மாற்றம் தெரிந்தது. அவன் எப்போதும் சிந்தனை வசப்பட்டிருந்தான். கைகளாலும் கண்களாலும் ஏதேதோ சாடைகள் காண்பித்தான். அப்புறம் திடீரென்று அதை நிறுத்தி விடுவான். அடிக்கடி இடுப்பில் எதையோ தேடிப் பார்ப்பான். அதிகமாக எதுவும் பேசுவதில்லை. ஹஸ்ஸனுடன்கூட அவன் தேவைக்கு அதிகமாக எதுவும் பேசவில்லை. இரண்டு நாட்கள் கழிந்த பிறகு ஹஸ்ஸன் இரகசியமாகக் கேட்டான்: "ஊருக்குப் போய் வரணுமே!"

"என்னாலே வர முடியாது. நீ மட்டும் போய்ட்டு வா."

"ஏண்ணே, ஒங்களுக்கு என்னதான் ஆயிடிச்சி?"

"ஒண்ணுமில்லே, ஹஸ்ஸனே!" சோகம் நிறைந்திருந்தது அந்தப் பேச்சில்.

"இல்லே, ஒங்க மனசிலே என்னமோ இருக்கு."

"நீ ஒன்பாட்டுக்கு இரு."

அதற்குப் பிறகு ஹஸ்ஸன் ஒன்றும் கேட்கவில்லை. அவன் தன்னுடைய கூட்டாளிகளைக் கூட்டிக்கொண்டு அன்றும் தங்கச் சுரங்கத்திற்குப் போனான். இரண்டு நாட்கள் கழித்துத்தான் திரும்பினான். அந்தி நெருங்கிக்கொண்டிருந்தது. வெளித் திண்ணையில் மாயனைக் காணவில்லை. ஒரு சத்தமோ அசைவோ இல்லை. இந்த நேரத்திலே எங்கே போயிருக்க முடியும்? சுற்றுப்புறம் முழுவதையும் பார்த்துவிட்டு ஹஸ்ஸன் வீட்டுக் கதவைத் தட்டினான்.

"யாரது?" பதற்றக் குரலில் உள்ளேயிருந்து மாயன் கேட்டான்.

"நான்தாண்ணே, கதவைத் தெறங்க!"

வாசல் திறந்தது.

"என்னண்ணே, ஒறங்கிட்டிருந்தீங்களா?"

"உம்.."

இரண்டு வாரங்களாக மாயன் வேலைக்குப் போகவில்லை. எதற்காகப் போகவில்லையென்று ஹஸ்ஸனும் கேட்கவில்லை. ஊருக்குப் போயி வந்த பெறகு அண்ணனுக்குக் கவலை போலிருக்கு! என்று அவன் சமாதானப்படுத்திக் கொண்டான். ஊர் பற்றின செய்திகள் பலவற்றைப் பற்றி ஹஸ்ஸன் மாயனைக் கேட்டான். மாயனும் எப்படியோ பதில்களும் சொல்லிக் கொண்டிருந்தான்.

"நீ இந்தத் திண்ணையிலே என்கூடவே படுத்துக்கோ, ஹஸ்ஸனே!" மாயன் ஒரு நாள் ஹஸ்ஸனிடம் சொன்னான்.

"என்ன, ஒங்களுக்கு பயமா இருக்கா?"

"பயமா! என்னத்துக்கு? ஏதாச்சும் பேசிக்கிட்டே படுத்திருக்கலாமில்லன்னு நெனச்சேன்."

"அப்படியா!" அன்று முதல் மாயன் படுத்திருந்த திண்ணையிலேயே ஹஸ்ஸனின் படுக்கையும். ஆனால் மாயன் சொன்ன காரணத்தில் ஹஸ்ஸனுக்கு நம்பிக்கையில்லை. பாயின் வாசனை பட்டாலே போதும், உடனே தூங்கிப் போகும் ஒருவன்தான் மாயன். அப்படியானால், உறக்கம் வரும்வரை பேசிக்கொண்டிருப்பதற்கு ஓர் ஆள் தேவைப்பட்டதன் காரணம்? ஹஸ்ஸன் அதைப் பற்றித் தீவிரமாக யோசனை செய்தான். அவன் தானே ஒரு விடாக்கண்டன்; அட்டை பிடித்த மாதிரி. ஒரு தலை விட்டால் இன்னொரு தலை பிடிக்கும். மாயன் விலகிச் செல்லும் அளவுக்கு அவன் மேலும் மேலும் ஒட்டிக்கொண்டான். ஒரு நாள் படுத்த சிறிது நேரத்தில் அவன் மெதுவாக ஒரு தடவை கூப்பிட்டுப் பார்த்தான்.

"என்ன... என்ன?" திடுக்கிட்டு மாயன் கேட்டான்.

"இல்லே, ஒண்ணுமில்லே; அண்ணன் தூங்கியாச்சாண்ணு பார்த்தேன்."

"தூக்கம் வரல்லே."

"ஏன்?"

"ரொம்பச் சூடு!"

"இன்னும் குளிரே அடங்கலே; அதுக்குள்ளே சூடு தொடங்கிருச்சோ?"

"ஆமா, இன்னிக்கு ரொம்பச் சூடு!"

"அண்ணனுக்கு உள்ளுக்குள்ளேதான் சூடு!"

"என்ன! என்னப்பா நீ சொல்றது?" மாயன் கோபம் கொண்டது போலக் கேட்டான்.

"நான் ஒண்ணு கேட்டா அண்ணன் கோவிச்சிக்குவீங்களா?"

"என்னப்பா?"

"கோபப்படுவீங்களா?"

"இல்லே."

"ஒங்க மனசிலே ஒரு கிளி கூடு கட்டியிருக்கு; இல்லே?"

"எம்மனசிலே ஒலக்கையெச் சாத்தி வச்சிருக்கு! சும்மா கெடந்து தூங்கு."

அதற்குப் பிறகு ஹஸ்ஸன் ஒன்றும் பேசவில்லை; மாயனும் பேசவில்லை. ஆனால் இருவரும் வெகு நேரம் வரை உறங்கவும் இல்லை. இருவருடைய மனங்களும் வெவ்வேறான வழிகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. ஹஸ்ஸனுக்கு தெரிந்துகொள்ள வேண்டியது தெரியவில்லையே என்ற மனக்குறை; மாயனுக்கு அவன் வரம்புக்கு மேலாகத் தெரிந்துகொண்டு விட்டானோ என்ற பயம். இரவு நடுச்சாமத்தில்தான் இருவரும் உறங்கினார்கள்.

அடுத்த நாள் முதல் மாயன் கொஞ்சம் அதிகமாகவே உஷாராகக் காணப்பட்டான். அவன் வழக்கம்போல் வேலைக்குப் போனான். அடிக்கடி உரக்கச் சிரித்து செய்திகளைப் பேசினான். உற்சாகம் காட்டுவதான எந்த சந்தர்ப்பத்தையும் நழுவ விடவில்லை. ஆனாலும், இந்த எல்லா உற்சாகத்திற்கும் உரத்த சிரிப்புகளுக்கும் மேலாக மூடுபனி போல ஒரு சோகம் பதிந்து கிடப்பதை ஹஸ்ஸன் கவனிக்கத் தவறவில்லை. என்றாலும் அவன் அதைப் பற்றி எதுவும் பேசவில்லை.

"படைச்சவனை விட்டுத் தள்ளு, எனக்குத் தெரியும்." அவன் தானாகவே சொல்லிக் கொண்டான். சில நாட்கள் கழித்து மாயன் ஹஸ்ஸனைக் கேட்டான்: "ஏன்டா ஹஸ்ஸனே, ஒனக்கு ஊருக்குப் போகணும்னு இல்லே?"

"எதுக்காக அண்ணே?"

"சும்மாத்தான். பெறந்து வளந்த எடமில்லியா?"

"ஆனா யாரைப் பார்க்கிறதுக்காக?"

"நம்ம ஆளுங்க எல்லாரையும் ஒரு தரம் பார்க்கத்தான். அதொரு சொகமில்லியா?"

"ஆமாம்." ஹஸ்ஸன் ஏதோ யோசித்தபடி சொன்னான். "பெரியவருக்கு ஏதோ தேவை ஏற்பட்டிருக்கு ...உம்.. " என்று உள்ளுக்குள் நினைத்துக்கொண்டான்.

"அப்போ ஒனக்கு போகணும்னு இருக்கில்ல?"

"அப்படீன்னா அண்ணனுக்கு ஒத்தாசைக்கு?"

"எனக்கு என்னப்பா? வேணுமானா போய்க்கோ. பிறகு.." மாயன் கொஞ்ச நேரம் யோசித்தான். பிறகு கேட்டான்: "நீ எப்போ திரும்பி வருவே?"

"எப்போ வரட்டும்?"

"ரெண்டு வாரம் கழிச்சாச்சும் வர முடியுமா?"

"வர்றேன்."

"வர்றப்போ ஊர்லே நடக்கிற வெவரம் எல்லாத்தையும் தெரிஞ்சி வரணும்."

"விசாரிச்சி வர்றேன்."

"அப்புறம்... நம்மளைப் பத்தி யார்கிட்டேயும் எதுவும் சொல்லக் கூடாது!"

"அது ஏனண்ணே?"

"அது...பின்னே...கண்ட பசங்களெல்லாம் இங்கே வந்து மொச்சிருவாங்க. வந்த பிற்பாடு போகச் சொல்ல முடியாது. அப்போ ஒனக்கும் எனக்கும் எடஞ்சலாப் போகும்."

"அதான் வேண்டியது."

மாயன் அந்த விஷயத்தை மீண்டும் மீண்டும் சொல்லி உறுதிப்படுத்தினான். ஹஸ்ஸனுக்கு புதிய லுங்கியும் சட்டையும் தொப்பியும் வாங்கிக் கொடுத்து அவனைப் பயணப்படவும் வைத்தான். ஹஸ்ஸன் மாட்டு வண்டியில் ஏறி உட்கார்ந்தபோது மாயன் மீண்டும் ஒருமுறை நினைவுப்படுத்தினான்: "சொன்னது ஞாபகம் இருக்கில்ல?"

"ஞாபகம் இருக்கு. இங்கே திரும்பி வந்த பிறகுதான் நம்மளைப் பத்தித் தெரியும். போதுமில்ல?"

"போதும். நல்லா எல்லா வெவகாரமும் தெரிஞ்சி வா."

"சரி."

வண்டி புறப்பட்டுப் போனபோது மாயன் மரக்கட்டை போல நின்று பார்த்துக் கொண்டிருந்தான். வண்டி அந்த இடத்தை விட்டுப் போனதும் அவனுடைய முகத்தில் ஒரு நிழல் படர்ந்து படர்ந்து முகம் முழுவதும் பரவியது. அப்போது அந்த முகம் பகல் போன்றோ இரவு போன்றோ இல்லாமல் அடர்ந்த அந்தி போன்றிருந்தது.

ஹஸ்ஸன் போன பிறகு மாயனின் உற்சாகம் முற்றாக நின்றது. அவன் முற்றத்துத் தூணில் சாய்ந்தவாறே கற்பனையில் மூழ்கினான். எதைப்பற்றி? கடந்த கால நிகழ்ச்சிகள் அனைத்தும் ஒரு புகைவண்டியின் வேகத்துடன் பாய்ந்து வந்தன. எல்லாமாகச் சேர்ந்து வந்து மேலே ஏறுவது போல் தோன்றிற்று. மாயனில் நடுக்கம் தென்பட்டது.

"இந்தப் பய எப்போ வருவான்?" - மாயன் அடிக்கடி தன்னைத் தானே கேட்டுக்கொண்டான்.

கறுத்த கம்பளியினூடே சோகை படர்ந்த முகம் காட்டி தேயிலை பறிக்கும் பெண்கள் கடந்து போனார்கள். எவ்வளவு அலங்கோலமான முகங்கள் என்று மாயன் யோசித்தான். அத்துடன்கூட ஒரு சுந்தரமான முகம் அவனுடைய முகத்தில் நிழலாடவும் செய்தது. அந்த முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்த படி பகல்களும் இரவுகளும் போக்கியதுண்டு. மனதிலிருந்து எல்லாவற்றையும் ஒதுக்கித் தள்ள வேண்டுமென்று தோன்றிற்று. ஆனால் முடியவில்லை அவன் போர்வையினால் தலைவரைக்கும் மூடி மறைத்துப் படுத்துக் கிடப்பான். நிம்மதியாகத் தூங்க முடிந்தால்! சட்டென்று அந்த அழகு முகம் மனதுக்குள் தலை நீட்டிக் கேட்கும்: "இவ்வளவும் செய்திட்டு மறந்திட்டீங்கல்ல?.."

எழுந்து உட்கார்ந்தான். யோசனை செய்தான்: எங்கிருந்து தொடங்கியது? பள்ளிவாசலிலிருந்தா?

'எத்தனை பேர் அந்தப் பள்ளிவாசல்லே வேதம் படிச்சாங்க! அவங்களுக்கெல்லாம் எந்த அல்லலும் இல்லாம, என் மனசிலே மட்டும் இப்படி ஒரு சிக்கலை ஆண்டவன் ஏன் படைச்சான்? அதற்காக வேண்டி என்னெல்லாம் செய்தேன்! திடீரென்று ஒரு கொடுங்காற்று மூண்டெழும் சத்தம் கேட்கும். கல் தடங்களினூடே கூட்டம் கூட்டமாய்ப் பாய்ந்து போகும் காட்டெருமைகளின் குளம்படிச் சத்தம் செவியில் வந்து மோதும். சத்தம் மேலே மேலே

வருகிறது. மூர்த்தண்யத்தை எட்டும்போது, ஒரு பெண்ணின் வெடித்த அழுகைக் குரல். மாயனும் வெடித்து அழுது தீர்ப்பான். 'ஓ! என் ஆண்டவனே.. என்னையும் கொண்டு போயிடு!'

அப்படிப் பல தடவை முறையிட்டும் ஆண்டவன் அந்தக் கோரிக்கையை ஏற்றுக் கொள்ளவில்லை. ஒரு நாள் தோன்றிற்று, ஏன் தனக்குத்தானே முடிவைத் தேடிக் கொள்ளக் கூடாதென்று. வாலில் சரவெடி கட்டிவிட்ட நாயினுடையது போன்ற இந்த வாழ்க்கையை ஏன் முடித்துக் கொள்ளக் கூடாது? அத்தோடு எல்லாத் துன்பங்களும் முடிவடைந்துவிடும்.

மாயன் ஜன்னலினூடே வெளியே பார்த்தான். அங்கே கும்மிருட்டு. உள்ளும் புறமும் இருட்டு. தொலைவிலிருந்து கேட்ட நரியின் ஊளைகள் பிரபஞ்சத்தின் இருதயத்தைக் குத்திக் கிழித்தன. மலை இடுக்குகளினூடே இரைந்து இரைந்து செல்லும் காற்று உலகத்தின் உயிர்ப்பை உறிஞ்சிக் குடிப்பதாகத் தோன்றிற்று. ஒவ்வொரு சத்தமும் நடுங்கச் செய்வதாக இருந்தது. இடையிடையே உண்டான நிசப்தம்கூட நடுங்கச் செய்தது. அப்போதும் மாயனின் காதில் காட்டெருமையின் குளம்படிச் சத்தம் மும்முரமாக மோதிக் கொண்டுதான் இருந்தது.

'என் ஆண்டவனே!' என்னாலே இதைத் தாங்க முடியாது! - அவன் தனது நீண்ட தலைக்கட்டுத் துணியை அவிழ்த்துப் பிரித்து ஒரு கயிறு போலத் திரித்தான். வீட்டு முகட்டின் உத்தரக் கட்டையை ஒரு முறை அண்ணாந்து பார்த்தான். பின்னர் கயிற்றுக் கட்டிலின் சட்டகத்தில் ஏறி நின்றான். நிலவொளியில் உயரவும் தாழவும் செய்யும் கடல் போல, விசாலமான அந்த மார்பு மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க அலைபுரண்டது. மாயன் ஒரு நிமிடம் கண்மூடி நின்றான். திரித்த வேட்டியை மெல்ல கையில் எடுத்தான்.

"அண்ணே... அண்ணே... அண்ணே..." கதவைத் தொடர்ந்து தட்டும் சத்தம். மாயன் எதுவும் குரல் கொடுக்காமல் ஒரு நிமிடம் நின்றான்.

"அண்ணே...அண்ணே...கதவைத் தெறங்க." மீண்டும் கதவு தட்டும் சத்தம்.

'ஓ! என் அல்லாவே!..... மாயனின் கையிலிருந்த வேட்டித் திரி நழுவி கட்டிலில் விழுந்தது.

"தெறங்க. தூங்குறீங்களாண்ணே?"

"இல்லே...வர்றேன்." மாயன் தளர்ந்த குரலில் சொன்னான். ஒரு நிமிடநேரம் நிசப்தம். கதவைத் திறந்தபோது ஹஸ்ஸன் சிரித்துக்கொண்டு துணி மூட்டையுடன் எதிரில் நின்றான்.

'இந்தக் கழுதை எதுக்காக இப்போ வந்தான்?' என்றுதான் மாயனுக்கு மனதில் தோன்றிற்று. ஆனாலும் எதுவும் சொல்லாமல் பதற்றத்துடன் காலடிகள் எடுத்து வைத்து அவன் கட்டிலில் போய்ப் படுத்தான்.

"என்னண்ணே?"

"ஒண்ணுமில்லே." மாயன் மறுப்பதுபோல் தலையை ஆட்டினான்.

"நல்லா வேர்த்திருக்குதே! காச்சல் அடிச்சதா?"

"இல்லே."

ஹஸ்ஸன் குசலப்ரசன்னங்களுக்குப் பிறகு சமையற்கட்டுக்குச் சென்றான். அங்கே அடுப்பில் ஆறித் தணிந்த சாம்பல் மட்டுமே இருந்தது.

"இன்னிக்கு ஒண்ணும் செய்யலியா?"

"இல்லே."

"அப்படீன்னா நான் போன பிறகு நீங்க சாப்பாடு தண்ணி எல்லாத்தையுமே கொறச்சிட்டீங்களா? பின்னே மனிசன் தேயாம இருப்பானா?"

அவன் சீக்கிரமே அடுப்பு மூட்டினான். சோறும் கறியும் சமைத்தான். சோற்றைத் தட்டில் எடுத்து வைத்தான். மயங்கிக் கிடந்த மாயனையும் கூப்பிட்டான்.

"வேணாம்."

"சாப்பிடணும்."

"நீ சாப்பிடு."

"நீங்களும் சாப்பிடணும்."

கடைசியில் இருவரும் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு சாப்பிடத் தொடங்கியபோது மாயன் கேட்டான்: "என்ன விசேசம்?"

ஹஸ்ஸன் சளசளவென்று பேச்சில் இறங்கினான். முந்தின பருவத்தில் நெல் விளைச்சலின் அமோகம், நடப்புப் பருவத்தில்

குறைவு; தேங்காய்களின் விலை இறக்கம்; குறுமிளகுத் தோட்டங்களுக்குப் பிடித்த கெட்ட காலம்- அப்படிப் பலவற்றைப் பற்றியும். மாயன் மௌனமாக எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தான். எதையும் தெரிந்து கொள்ள ஆர்வப்படவில்லை.

"ஆளுங்கள்ளாம் எப்பிடி இருக்காங்க?" - மாயன் கடைசியில் கேட்டான்.

"ஒரு வேடிக்கை கேக்கறீங்களா?"

"என்ன?"

"பீரான் அண்ணனைக் குத்திக் கொண்ணுட்டாங்க."

"உ...ம்." மாயன் சோற்றுருண்டையைத் தாழத்தில் வைத்துவிட்டு கண் இமைக்காமல் இருந்தான்.

"யாருன்னு தெரியுமா? நம்ம சோழி."

"யாரு?"

"எண்ணெக்காரச் சோழி. அவனைத் தண்டிச்சிட்டாங்க. இருபது வருசம் ஜெயில்."

"நெசம்மாவா?"

"ஆமாம்."

"பெறகு?"

"மகனைக் குத்திக் கொன்னதைப் பார்த்து அம்மாவும் செத்திட்டாங்க. இப்போ அந்த உம்மாச்சுவும் பையனும் மட்டுந்தான் இருக்காங்க. அவங்க கெட்ட காலம்!"

"உ..ம்!" மாயன் சாப்பிட்டு முடித்து எழுந்து கை கழுவிக்கொண்டு போர்வையிட்டு மூடிப்படுத்தான்; ஆனால் உறங்கவில்லை.

உறக்கம் வராமலும் மூச்சுத் திணறலோடும் மூன்று மாதங்கள் கழிந்தன. அப்போதுதான் மாயன் ஹஸ்ஸனிடம் சொன்னான்: "நான் ஒரு தடவை ஊருக்குப் போய்ட்டு வர்றேன்."

"போய்ட்டு வாங்க."

"ஆனா திரும்பி வர கொஞ்சம் தாமதமாகும்."

மறுநாளே மாயன் புறப்பட்டான். அவன் ஊருக்குள் வந்த பின்பும் அவனை யாரும் கவனிக்கவில்லை. யாரோ ஒருவன் என்ற நோக்குத்தான்.

"எப்போ வந்தே?"

"நேத்து."

"விசேஷமா ஒண்ணுமில்லியே?"

"இல்லே."

"சொகந்தானே?"

"ஆமா."

அப்படி சில குசலப்ரஸ்னம் நடத்திவிட்டு ஆட்கள் கடந்து போனார்கள். மழையினால் சீர்கெட்டு, வௌவால் குடியேறிய தன் வீட்டில் குடியேறியபோது மாயனுக்கு ஏனோ குமுறி அழத் தோன்றியது. எப்படியோ அவன் அடக்கிக்கொண்டான். புதர் மண்டியிருந்த முன்புறத்தை நன்றாகச் செதுக்கிச் சரிப்படுத்தி னான். மேல் முகடு வேய்ந்து வீட்டுக்கு வெள்ளையடித்தான். நிலத்தைப் பண்படுத்தினான். ஒரு வேலைக்காரனையும் அமர்த்திக்கொண்டான்.

"அப்படீன்னா இங்கேயே இருக்கப் போறாப்பிலேயா?" சிலர் கேட்டார்கள்.

"அப்படி ஒண்ணுமில்லே. ஆனாலும் வீடும் வாசலும் வேணுமில்ல?"

"சரிதான்."

இப்போது மாயனும் கிராமத்தில் ஓர் ஆளானான். கூட்டத்தில் எல்லோருடனும் அவனும் ஒருவனானான். இதற்கிடையில் பள்ளிவாசலின் தொழுகைக்கூடத்தைப் புதுப்பிக்க வேண்டு மென்று ஒரு யோசனை வந்தது. அதன் பொருட்டு மாயன் ஒரு கணிசமான தொகையை நன்கொடையாகக் கொடுத்தான். அதுவும் தவிர நோன்புக் காலத்தில் ஏழை முஸ்லீம்களுக்கு நல்லதொரு கஞ்சி வார்ப்பு நடத்தினான். இதனால் பத்துப் பேர் மாயனைத் தெரிந்துகொள்ள நேர்ந்தது. தெரிய நேர்ந்ததும் அதைத் தொடர்ந்து கதைகளும் பரவலாயின. அவனுடைய கைவசம் ஏராளம் பணம் உண்டென்றும் அதைப் பல இடங்களில் பதுக்கி வைத்திருப்பதாகவும் - இப்படிப் பல பல. ஆறு மாதம் கழிந்தபோது ஹஸ்ஸன் ஊருக்கு வந்தான். அத்துடன் மாயனின் சம்பாத்தியங்களைக் குறித்து மேலும் அதிக கதைகளைப் பரப்பினான்.

"பெரியவரோட நெலமை எப்படி? நீயும் வயநாட்லேதானே இருந்தே?" ஹஸ்ஸனிடம் சிலர் கேட்டார்கள்.

"பெரியவரோட நெலமை ரொம்ப ஒசந்திருச்சில்லே!" ஹஸ்ஸன் குரலைக் கொஞ்சம் தாழ்த்திச் சொன்னான் : "ரூல்தடி அளவுக்கு தங்கத்தை உருட்டி உருட்டி வச்சிருக்காரு!"

"என் ஆண்டவனே!"

"நான் சொன்னேன்னு சொல்லிப்பிடாதீங்க!"

"இல்லே."

அப்படியான பேச்சுக்கள் கதை வடிவாயின. மாயனின் கைவசமுள்ள தங்கத்தினாலான ரூல்தடிகளைப் பற்றிப் பல கதைகள் பரவின. தங்கக் கட்டிகளைப் பற்றிப் பேச்சுக்கள் பரவத் தொடங்கியபோது கல்யாண யோசனைகளும் கிளம்பின.

"இனி நமக்கு எங்கேயாவது ஒண்ணு பார்க்கணும், என்னப்பா?" கிழவர்கள் நமட்டுச் சிரிப்புடன் அணுகினார்கள். மாயன் எதுவும் பேசவில்லை. பலரும் வந்தார்கள். யாரோடும் அவன் பதில் எதுவும் சொல்லவில்லை. ஒரு கழுகுப் பார்வையுடன் எல்லோரையும் பார்க்க மட்டும் செய்தான்.

"இதுக்கு என்னப்பா அர்த்தம்?" ஒவ்வொருவரும் பரஸ்பரம் கேட்டுக்கொண்டார்கள். "கல்யாணம் பண்ணி முடிச்சிருப் பானோ?"

"வாயைத் தெறந்து சொன்னாத்தானே தெரியும்!"

பலர் தோற்றுப் பின்வாங்கினார்கள்; புதிதாகச் சிலர் முயற்சி செய்யவும் தொடங்கினார்கள். அப்படி இருக்கும்போது ஹஸ்ஸன் ஒரு நாள் சாப்புண்ணி நாயரை அணுகினான்.

"என்ன ஹஸ்ஸா, வயநாட்டுக்கு ஒண்ணும் போகலியா?"

"போகணும். இங்கே கொஞ்சம் வேலை இருக்கு. நான் இப்போ வந்ததும் ஒரு காரியமாத்தான்."

"என்ன?"

"நம்ம மொதலாளிக்கு ஒரு கல்யாணம் கட்டணும்."

"யாருக்கு?"

"மாயன் அண்ணனுக்கு."

"உ...ம்.." -- சாப்புண்ணி நாயர் அனாயாசமாகச் செருமினார்.

"பீரான் கதை அப்படி ஆயிடிச்சி. உம்மாச்சுவும் சின்ன வயசுதான். அப்போ அண்ணன் அங்கே சேர்ந்துக்கிட்டா...."

"புரியுது, புரியுது." -- அதைச் சொல்லிவிட்டு சாப்புண்ணி நாயர் கௌரவமான ஒரு மௌனத்தைக் கைக்கொண்டார்.

"என்ன பேசலே?"

"நானா பேச வேண்டியது? அந்த அம்மால்ல முடிவு செய்யணும்?" கொஞ்சம் கோபத்துடன் சாப்புண்ணி நாயர் சொன்னார்.

"நீங்களும் ஒரு தரம் கேட்டுப் பாருங்க...."

"சரி, நாளைக்கு வா."

ஹஸ்ஸன் படியிறங்கிப் போவதைப் பார்த்துக்கொண்டு சாப்புண்ணி நாயர் நின்றார். அவன் கண்ணிலிருந்து மறைந்ததும் முணுமுணுத்தார் : "நீசன்!"

"என்னவாம்?" -- பின்னாலிருந்து லட்சுமியம்மைதான் கேட்டாள்.

"கல்யாணம் வேணுமாம்!"

"யாருக்கு?"

"மாயனுக்கு."

"உம்மாச்சுவோடத்தானே?"

"உம்."

"அப்போ, பாழாறது குழந்தைதான். இல்லே?"

"சாப்பாட்டு நேரமாச்சில்லே?"

"ஆமாம். வாங்க. இருந்தாலும் மனிசங்க மனசு...."

"வேதாந்தமொண்ணும் பேசாதே. சோறு போடு."

சாப்புண்ணி நாயர் அன்றைக்கே உம்மாச்சுவிடம் விவரத்தைச் சொன்னார். அவள் விசும்பி விசும்பி அழுதுகொண்டே சம்மதிக்கவும் செய்தாள். அப்படியாக இந்தக் கல்யாணம் குதிர்ந்தது.

எல்லோரும் புதிய மாப்பிள்ளையின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். 'புதிய மாப்பிள்ளையைத் தேட' ஆட்கள் போயிருந்தார்கள். அந்தக் கல்யாணச் சடங்கைத் தொடர்ந்து காளை பூட்டிய வில்வண்டியிலிருந்து மாயனும் கூட்டாளிகளும்

இறங்கினார்கள். அவர்களை மரியாதை செய்து வரவேற்க ஆட்கள் ஓடோடி வந்தார்கள்.

சாப்புண்ணி நாயர் மட்டும் முற்றத்தின் விளிம்பில் கைகட்டிய படி உலவிக்கொண்டிருந்தார், தான் எதற்கும் ஜவாப்தாரியல்ல என்றொரு பாவனையில்.

நெய்ச் சோறும் வறுத்த கோழிகளும் நிறைந்திருந்தன. எல்லாத் தாம்பாளங்களைச் சுற்றியும் ஏராளம் பேர் குழுமியிருந்தார்கள். மாயன் அரவமில்லாமல் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந் தான்; அதாவது, சாப்பிடுவதுபோல் பாசாங்கு பண்ணிக்கொண்டிருந்தான், சிரிப்பும் விளையாட்டும், கடியும், இழுப்பும், நக்கலும், உறிஞ்சலுமாக எல்லாம் முடிந்தன. வெற்றிலையும் போட்டு முடித்த பின்பு புது மாப்பிள்ளையை உள்ளே அனுப்ப வேண்டிய பிரச்னை வந்தது.

உம்மாச்சு வெற்றிலைத் தட்டுடன் அறைக்குள் காலடி எடுத்து வைத்தாள். கை நடுங்கிற்று. அவர்கள் பரஸ்பரம் பார்த்துக் கொண்டார்கள்; வெற்றிலை கொடுத்துவிட்டுத் திரும்பினாள்.

அன்று இரவு மாயனை அழைத்துக்கொண்டு போக ஆள் வந்தது. அவன் போனான். எல்லோரும் சிரித்துக் கேலி செய்து வரவேற்றார்கள். மாயனுக்கும் என்றைக்குமில்லாத குழப்பம். அவன் அறைக்குள் சென்றான். உம்மாச்சு அடிமேல் அடி வைத்துப் பின்தொடர்ந்தாள். மாயனுக்கு சுவாசம் முட்டிற்று. எங்கே இருக்கிறோமென்றுகூடத் தெரியவில்லை. என்ன நடக்கப் போகிறது என்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. வளைகள் அணிந்த ஒரு மெல்லிதான கை அவனுடைய கன்னத்தில் வந்து படிந்தது; ஒரு மனோரஞ்சகமான முகம் நெஞ்சில் படிந்தது. "என் தங்கமே..."

"என் கண்ணே..." மாயன் அவளைக் கட்டிப் பிடித்தான். வெள்ளையடித்தும் மறையாத சில கருஞ்சிவப்புக் கறைகள் சுவரிலிருந்து விழித்துப் பார்த்ததை அந்தத் தம்பதிகள் கவனிக்கவில்லை.



# 12. வெளுத்த சீன மிளகு

"பம்பரம் மாதிரியான பொண்ணு."

"சரியாச் சொன்னே. சீன வெடியிலே தீக்கொளுத்தி வச்சாப்பிலே ஒரு சுறுசுறுப்பு!"

"பாக்க நல்ல அழகும்தான்!"

"அடக்கமா பொத்தினாப்பிலே நடத்தையும்!"

"எங்கே சேர்க்கணும்னு ஈஸ்வரனுக்குத் தெரியும்! முகலட்சணம் கூடிப் போனாலும் ஆபத்துத்தான்! "

"ஆனா சாப்புண்ணி நாயர் இருக்காரில்ல பாதுகாப்பா. அவர் ஒரு பெரிய குடும்பத்துக்காரரில்ல."

"பொண்ணு துணிஞ்சிட்டா பிரம்மனும் தடுக்க முடியாது, தெரியுமாக்கும் ! "

"அதுவும் சரிதான். சொல்லலாம், ஒதைக்கலாம்; கொன்னுட முடியுமா? ராஜாங்கம் நடத்தியாகணும்தானே!"

"உம். வேலி தாண்டின கண்ணுக்குட்டி மதிலையே தாண்டத் தானே செய்யும் ?"

"உம், உம்."

தன்னைச் சுற்றி இப்படிச் சில அபிப்பிராயங்கள் கிளம்பியிருக்கின்றன என்று சின்னம்முவுக்குத் தெரியாது; சாப்புண்ணி நாயருக்கும் தெரியாது; லட்சுமியம்மைக்கும் தெரியாது. யாரும் அந்தக் குடும்பத்தின் காது கேட்க எதுவும் பேசுவதில்லை. சின்னம்மு என்றால் யாரும் எதுவும் பேசிக் கொள்ளலாம் என்றொரு நிலை. பலர் தன்னை நல்ல கணக்கில் சேர்க்கவில்லை என்று அந்தப் பருவப் பெண்ணுக்குத் தெரியாது. ஆனா, நம்ம ஊர்க்காரங்க இருக்காங்களே, அவங்களுக்கும் சிலது சொல்ல வேணாம்? என்றோர் எண்ணம் அவளுக்கு.

சின்ன வயதிலேயே சின்னம்மு பிடிவாதக்காரியாயிருந்தாள். வளர்ந்த போது பிடிவாதமும் வளர்ந்தது. மாணவியாய் இருந்த

காலத்தில் கிள்ளுவது, குட்டுவது, பிறாண்டுவது முதலிய காட்டு மிராண்டித்தனமான சேட்டைகள் எதிலும் அவள் ஈடுபடவில்லை. இரண்டோ மூன்றோ தடவைகள் வம்புச் சண்டைகள் மட்டும் போட்டதுண்டு. அதுவும் வேண்டுமென்றே போட்டதல்ல; எதிர்பாராமல் அப்படி நடந்துவிட்டது. இன்றும் அதற்காக அவள் வருத்தப்படவும் இல்லை. முதன் முதலாக அவள் அடித்து நொறுக்கியது தன் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த ஒரு சிறுவனைத்தான். அவள் அன்று படித்துக்கொண்டிருந்தது ஐந்தாம் வகுப்பில்.

சிறுவன் அவளுக்குப் பின்னால் நடந்தபடி பாடிக் கேலி செய்தான்: "வெள்ளரிப் பூவே!..."

"வேண்டாம், போயிடு." அவள் எச்சரிக்கை செய்தாள். வெளுத்து பருத்த வெள்ளரிப்பழம் போலிருந்த அந்தப் பெண்ணுக்கு அவளைக் குறித்த பட்டப் பெயர் ரொம்பவும் பொருந்தும் என்பதில் மகிழ்ச்சி கொண்டவனாகத்தான் இருந்தான் அந்த மாணவன். அவன் மீண்டும் குரல் கொடுத்தான்: "வெள்ளரிப் பூவே!"

"வம்பிழுக்காமே போயிடு. அதான் நல்லது!"

"வெள்ளரிப் பூவே!" அதற்குப் பிறகும் அவன் கூப்பிட்டான்.

படார்! அவனுடைய முகத்தைப் பார்த்து ஒரு குத்து விட்டாள். பிறகு மூச்சிரைக்கக் கேட்டாள்: "இனிமே கூப்பிடுவியா?"

"கூ...கூ...கூப்பிடுவேன். வெள்ளரி - வெள்ளரிப் பூவே!"

படார்-படார்! அவனுடைய பிடரியில் இரண்டடி அதிகமாகவே விழுந்தது. அதைத் தொடர்ந்து ஒரு சின்ன மல்யுத்தமே நடந்தது. அடியும் உதையும் மிதியும் குத்தும். அவன் வாழைப் பாத்தியில் சாய்ந்து விழுந்தான். எழுந்து நிற்க முயன்றுகொண்டிருந்தபோது அப்துவும் அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தான். விவரம் சொல்லி முடித்தாள்.

"பொம்பிளைங்க இந்த ரகளை பண்ணலாமா?" அப்து கேட்டான்.

"ஆம்பிளைங்க வாய்க்குள்ளே நாக்கை அடக்கி வச்சிருக்கணும்." சின்னம்முவும் சொன்னாள்.

அதற்குப் பிறகு அப்து எதுவும் பேசவில்லை. நண்பனைக் கூட்டிக்கொண்டு மற்றொரு வழியில் நடந்தான். அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு மாணவர்களுக்கெல்லாம் சின்னம்மு

என்றாலே கொஞ்சம் பயம்தான். அவள் என்ன செய்வாள் என்று யாருக்கும் சொல்லத் தெரியாது. ஒரு காரியத்தில் முனைந்து நின்றாளானால் எவ்வளவு நெருங்கிய நண்பர்களுக்கும் அவளை வழி திருப்புவது சாத்தியல்ல. அப்து அவளுடைய விளையாட்டுத் தோழன். அவனை அவளுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது. இருந்தாலும் பள்ளிக்கூடத்திற்குப் போகும்போது அவர்கள் தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொள்வார்கள். அவர்கள் நடந்து செல்ல வேண்டியது ஒரு வயல் வரப்பினூடேதான். வரப்பின் ஒரு புறத்திலிருந்த வயலின் குத்தகைதாரனுக்கு ஒரு யோசனை தோன்றியிருந்தது: அரையடி அளவுக்கு வரப்பைக் கொத்தி எடுத்தால் அந்த இடத்திலும்கூட நெல் விதைக்கலாம் அல்லவா! வரப்பு நெட்டுக்கு அப்படி வெட்டி எடுத்தால் ஒரு அஞ்சு மரக்கால் நெல்லாவது அதிகம் அளக்கலாம். அவன் கால் பங்கு வரப்பை அப்படிக் கொத்தி எடுத்தான். இதைப் பார்த்துக்கொண்டு மறுபுறத்து வயல்காரனுக்கு சும்மா இருக்க முடியுமா? அந்தப் பரோபகாரியும் கால் பங்கு வரப்பைக் கொத்தி எடுத்தான். வரப்பு மூக்கின் மேடு போல ஆகிவிட்டது. அதன் மீது நடந்து போக வேண்டுமானால் கம்பியின் மேல் நடந்து பழக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. அப்போது, அப்து ஒரு காப்பாளனின் குரலில் சொன்னான்: "சின்னம்மு, நீ எனக்குப் பின்னாலே பிடிச்சிக்கிட்டு நடந்து வா."

"எனக்குப் பின்னாலே நீ நடந்து வா." அவமானப்பட்ட வெறியில் அவள் பதிலுக்குச் சொன்னாள்.

"நீ விழுந்திருவே. அதனாலேதான் சொன்னேன்!"

"நீ விழுந்திட்டா?"

"விழமாட்டேன்."

"விழுந்திருவே. நான் முன்னாலே நடக்கறேன்" என்று சொல்லிவிட்டு, அப்து விழித்தபடி நின்றிருக்க, அவள் வரப்பின் மேல் அடியெடுத்து வைத்தாள். அப்து என்ன சொல்ல முடியும்! பின்னால் தொடர்ந்தான். இப்படிப் பல தடவைகள் அப்துவுக்குத் தோல்வி நேர்ந்ததுண்டு. ஆனாலும் அவன் அதை ஒரு தோல்வியாகக் கணக்கெடுக்காமல் மறு நாளும் சாப்புண்ணி நாயரின் வாசலுக்குச் சென்று கூப்பிடுவான்: "சின்னம்மு, மணி அடிச்சிருப்பாங்க; சீக்கிரமா புறப்படு."

"புறப்படும்மா." லட்சுமியம்மையும் உள்ளே இருந்து குரல் கொடுப்பாள். லட்சுமியம்மையின் வேண்டுகோளின்படிதான் அப்து சின்னம்முவைக் கூட்டிப் போகத் தொடங்கினான். உம்மாச்சுவும் வற்புறுத்திச் சொல்லியிருந்தாள்: "அந்தப் பொண்ணையும் கூட்டிப் போடா."

"உம்." அப்துவும் சம்மதப்பட்டு முனக மட்டும் செய்தான். கொஞ்ச காலமாக வெறும் முனகலும் கனைப்பும் கொண்டுதான் அவன் குடும்பத்தில் தன்னுடைய எண்ணத்தை வெளிப்படுத்துவது வழக்கமாயிற்று. சிறுவனான அப்து யாருடனும் எதுவும் பேசுவதில்லை. எல்லோரும் அவனுடைய அபிலாஷையில் ஆர்வம் கொண்டிருந்தார்கள். உம்மாச்சுவைக் காட்டிலும் அதிகம் ஆர்வம் கொண்டது மாயன்.

"ஒனக்கு என்னென்ன வேணும்?" மாயன் பல தடவை அவனிடம் கேட்டிருக்கிறான்.

"ஊகூம்." அவன் வெறுப்பு பாவனையில் தலையாட்டிவிட்டு ஒதுங்கிக் கொள்வான்.

"உண்டியல்லே போட காசு வேணுமா?"

"ஊகூம்." அப்போதும் அப்து வேண்டாமென்றுதான் தலை யாட்டுவான். அவன் மாயனின் அருகாமையைத் தவிர்த்துக் கொள்ளவே விரும்பினான். பெரும்பாலும் தனிமையில் இருந்து கற்பனையில் மூழ்கியிருப்பான். அரவமில்லாமல் சாப்பிட்டு முடிப்பான். யாரோடும் எதுவும் பேச மாட்டான். சில சமயங்களில் சாப்புண்ணி நாயரிடம் மட்டும் தன் தேவைகளைத் தெரிவிப்பான்: "எனக்கொரு பென்சில் வேணும்."

"தர்றேன்." உடனே சாப்புண்ணி நாயர் அதை நிறைவேற்றவும் செய்வார். ஒரு காரியஸ்தன் என்பதைவிட ஒரு தகப்பனின் உணர்வோடுதான் சாப்புண்ணி நாயர் எல்லாவற்றையும் நிர்வகித்தது.

இக்காரணத்தினால் அப்து மனம் திறந்து பேசுவதற்குக் கிடைத்த ஒரே ஒரு நபர் சின்னம்முதான். அதனால்தான் அவளைக் கூட்டிக்கொண்டு போவதில் அவன் இவ்வளவு உற்சாகத்தையும் கடமையுணர்வையும் காட்டியது. அப்படி பள்ளிக்கூடம் போய் வந்த சூழலில்தான் தாங்கள் அறியாமலே இருவரும் வளர்ந்தார்கள். சின்னம்மு ஏழாம் வகுப்பில்; அப்து ஒன்பதாம்

வகுப்பில். அப்போதுதான் இரண்டாவது அடிதடிச் சண்டை ஏற்பட்டது. அது பெண்ணும் பெண்ணும் தங்களுக்குள் அடித்துக் கொண்டது. சின்னம்முவின் வகுப்புத் தோழியான ஒரு நாணிக்குட்டி இருந்தாள். வம்புக்காரி. 'நான் கர்ணத்தோடே பொண்ணாக்கும்!' என்ற உணர்வு அவளுக்கு எப்போதும் உண்டு. அது உண்மைதான். ஒரே தடவையில் தொடர்ந்து பதினோரு குட்டிக்கரணம் போடவும், ஆறு நூறு எண்ணி முடிக்கும் வரை ஆற்று நீரில் முங்கிக் கிடக்கவும் முடியுமென்ற அதிவிசேஷத் தகுதி அந்தப் பெண்ணுக்கு உண்டு. கறுத்து உருண்ட ஒரு செக்குக் கட்டை மாதிரியானவள். யாரடா என்று கேட்டால் நானடா என்று பதில் சொல்லும் பெண். இந்த நாணிக்குட்டியும் சின்னம்முவும் தங்களுக்குள் மனசுக்குள்ளேயே பொருதிக் கொண்டிருந்தார்கள்.

"அவ கர்ணத்தோடே மகளா இருந்தா அதுக்காக நான் பயப்படணும்னு அவசியமில்லே." சின்னம்மு தனக்குள் நினைத்துக் கொண்டாள்.

"இத்தினி தோல் வெளுத்திருக்குங்கிறதுக்காக நான் குனிஞ்சிருக் கணும்னு தேவையில்லே." நாணிக்குட்டியும் நினைத்தாள்.

சின்னம்முதான் வகுப்புத் தோழிகளிடம் அதிக செல்வாக்கு கொண்டிருக்கிறாள் என்ற நிலைமையும் நாணிக்குட்டியின் வெறுப்பை அதிகரிக்கச் செய்தது. அந்த வெடி மருந்து கிட்டங்கியில் ஒரு சின்ன தீக் கங்கு விழுந்தது. சின்னம்முவின் வகையிலான ஏதோ ஒரு பெண்ணின் கல்யாணம் நடந்தது. வரன் மகா மோசமான ஜாதியாக்கும் என்பது நாணிக்குட்டியின் கருத்து. அப்படியல்ல என்பது சின்னம்முவின் கட்சி. கோபம் மூண்டெழுந்து சச்சரவு ஏற்பட்டது. நாணிக்குட்டி விடுவாளா? அவள் பட்டென்று சொன்னாள்: "ஒன் அப்பன் சக்கால நாயர்தானே!"

"எங்கப்பா ஒசந்த நாயராக்கும் - தலவெட்டத்து மூப்பில் நாயர்!"

"போ...டீ...! சக்காலன் !"

சொல்லி முடிக்கும் முன்பாகவே சின்னம்முவின் கை நாணிக்குட்டியின் முகத்தில் பதிந்தது. அதற்குப் பிறகு கோலாகலத்தைக் கேட்பானேன்! பரஸ்பரம் தலைமுடியைப் பற்றி இழுப்பதுவும் இடிப்பதுவும் பிறாண்டுவதும். கைகளுக்குச் சரியாக

நாக்குகளும் செயலாற்றின. துடைப்பம், முறம் முதலான வீட்டு உபகரணங்களின் பெயர்கள் பரஸ்பரம் சொல்லி முடித்த பிறகு நாய், குரங்கு முதலான மிருங்களின் பெயர்கள் வந்தன. இதற்கிடையே அடிதடியும் நடந்தது. அது அப்படியே மும்முர மாயிற்று. பள்ளி மைதானத்தில் பார்வையாளர்கள் பெருகி னார்கள். மாணவர்களும் மாணவிகளும். அந்தச் சண்டையைக் காண மாணவர்கள் கூட்டமாய்க் கூடிய தோடல்லாமல் கூச்சலும் கூக்குரலும் முழங்கின: பூய்! ஓய்...பூய்!

ஹெட்மாஸ்டர் கண்ணாடியை மேசையில் வைத்துவிட்டு வெளியில் வந்து பார்த்தார். ஓடிச் சென்று அந்த வீரப் பெண்மணிகளைப் பிரித்துவிட்டார். அப்போது நாணிக்குட்டியின் ப்ளவுசின் பின்புறத்தின் ஒரு பகுதி சின்னம்முவின் கையிலும், சின்னம்முவின் பாவாடையின் பெரும் பகுதி தரையிலும் இருந்தன.

ஹெட்மாஸ்டர் எல்லாவற்றையும் ஒருமுறை பார்த்தார். பிறகு விசாரிக்க ஆரம்பித்தார். இருவரும் ஒரு வார்த்தைக்கூடப் பேசவில்லை. கேட்டுக் கேட்டு நாக்கு வறண்டது. முடிவில் இருவருக்கும் தண்டனை. சின்னம்முவின் கையை நீட்டச் சொன்னார். பளீர்-பளீர்- வலுவாக ஐந்து அடிகள். ஒரு கண்சிமிட்டல்கூட இல்லாமல் அந்த அடி விழுந்து கழிந்ததும் கையைப் பாவாடையில் துடைத்துக்கொண்டு அவள் நடந்தாள். நாணிக்குட்டிக்கு மெதுவாக மூன்று அடிகள் கிடைத்தன. கர்ணத்தின் மகளை அதிகமாக அடிப்பது நல்லதல்லவென்று அந்த வாத்தியாருக்குத் தெரியும்.

இவ்வளவும் நடந்து முடிந்த பிறகுதான் எதேச்சையாக அப்து இதை அறிய நேர்ந்தது.

அன்று பள்ளிக் கூடத்திலிருந்து திரும்பும்போது அப்து கேட்டான்: "கையைக் காட்டு, சின்னம்மு."

"எதுக்கு ?"

"பாக்கறேன்."

அவள் கையை விரித்துக் காட்டினாள்- நீலக் கோடுகள் அங்கே தெரிந்தன. அப்துவுக்கு எரிச்சலுடன் கோபமும் வந்தது. ஆனாலும் அவன் பொறுமையுடன் கேட்டான். "ரொம்ப வலிச்சதா?"

"இல்லே."

"சும்மாச் சொல்லு. பரவாயில்லே."

அப்போதுதான் சின்னம்முவுக்கு அழுகை வந்தது. கண்களி லிருந்து சரசரவென்று கண்ணீர் பொங்கி வழிந்தது. அப்து சமாதானப்படுத்திப் பலவாறாகச் சொன்னான். கடைசியில், ஆள் யாருமில்லாத அந்த வயற்காட்டில் நின்றுகொண்டு இரண்டு பேருமாகச் சேர்ந்து அந்த ஹெட்மாஸ்டரை நன்றாகத் திட்டித் தீர்த்தார்கள்; திருப்தியான பிறகு வீடு திரும்பினார்கள்.

அதற்குப் பிறகு ஒரு போதும் சின்னம்மு நாணிக்குட்டியுடன் பேசியதே இல்லை. காலம் கழித்து நாணிக்குட்டி நடந்ததை யெல்லாம் மறந்து அவளை அணுகினாள். அப்போதும் 'சீ, மோசக்காரி!' என்றொரு பார்வை பார்த்துவிட்டு சின்னம்மு தலையைத் திருப்பிக்கொண்டு போய்விட்டாள்.

சின்னம்மு பேசவில்லை என்பது மட்டுமல்ல, தன்னோடு சேர்ந்தவர்கள் யாரும் அவளுடன் பேசக்கூடாது என்றும் தடைவிதித்தாள். அப்து அதன்படி நடந்தான். அவனுடைய இரண்டு தம்பிமார்கள் பள்ளிக்கூடத்திற்கு வரத் தொடங்கியிருந் தார்கள். அவர்களையும் அவ்வாறே நடந்துகொள்ளச் சொன்னான். மரக்காரும் ஹைத்ரோசும் அப்போதும் கீழ் வகுப்புகளில் படிக்கும் இரண்டு சிறுவர்களாயிருந்தார்கள்.

மாயனின் அந்த இரண்டு குழந்தைகளையும் உம்மாச்சு அப்துவுடன் கூட அனுப்பும்போது வழக்கமாகச் சொல்வாள்: "அண்ணங்கூட எப்பவும் இருக்கணும், கண்ணுங்களா!"

அப்து அவர்களுடைய அண்ணன் என்று சொல்வதில் தேவைக்கும் அதிகமான அக்கறையை உம்மாச்சு காட்டினாள்.

"அப்து, தம்பிமாரை கவனிச்சிக்கோ!" என்று அப்துவிடம் கூறுவாள்.

"உம்." அவன் அதற்கும் முனகுவதோடு சரி. அதைத் தொடர்ந்து குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு நடப்பான். மரக்கார் ஒரு கற்பனாவாதி. ஹைத்ரோஸ் கொஞ்சம் துடுக்கு.

"அவனை நெனச்சாத்தான் எனக்கு பயம்." உம்மாச்சு அடிக்கடி சொல்வதுண்டு. "என் பிள்ளைங்கள்ளே அவன்தான் தறுதலை!"

"அவன்தான் கெட்டிக்காரனா வருவான்." மாயன் ஒரு வருத்தம் கலந்த குரலில், எதையோ யோசித்துவிட்டு பதில் சொல்வான்.

அவர்கள் எல்லோரும் ஒன்றாகவே பள்ளிக்கூடம் போவதும் திரும்புவதும் வழக்கம். உலகத்தில் என்னவெல்லாம் நடக்குமென்று யாரும் நினைப்பதில்லை. மகாத்மாக்களாகவோ போக்கிரிகளாகவோ ஆகும்வரை மனிதர்களை கவனிக்க மாட்டார்கள் அல்லவா!

சின்னம்மு எட்டாம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்த போதுதான் ஓர் அபத்தம் நடந்தது. அவள் அப்போது ருதுவானாள். வீடு முழுதும் கோலாகலம். லட்சுமியம்மை திகைத்துப் போனாள்; எல்லா வேலைக்காரிகளும் திகைத்தார்கள்; அண்டை அயலில் இருந்தவர்களும் திகைத்தார்கள். வீட்டிற்குள் கிசுகிசுப்பும் பரபரப்பும். மாவரைத்துக் கோலமிட்டார்கள்; தென்னம் பாளையைத் தேடினார்கள். உயரமான நிலைக் கண்ணாடி எங்கே? எங்கே பூங்குலை? எங்கே வெளுத்த துணியும் போர்வையும்? - கேள்வியும் பதிலும் மோதின.

இவ்வளவு ரகளை நடந்துகொண்டிருக்க, தன்னுடைய பத்திரங்களிலிருந்து கவனத்தைத் திருப்பி தலை நிமிர்ந்து சாப்புண்ணி நாயர் உள்ளே ஒரு தடவை எட்டிப் பார்த்தார்: "என்ன லட்சுமீ அங்கே?"

"பொண்ணு வயசுக்கு வந்திட்டா." லட்சுமியம்மை மகிழ்ச்சியும் திகைப்பும் கலந்த குரலில் சொன்னாள்.

"அப்படியா !" அப்படியானால் தீவிரமாக கவனிக்கப்பட வேண்டிய விஷயம்தான் என்பதுபோல் சாப்புண்ணி நாயர் வெள்ளெழுத்துக் கண்ணாடியை மூக்கு மேலிருந்து கழற்றி எடுத்தார். இம்மாதிரியான விசேஷங்களையெல்லாம் தலவெட்டத்து மூப்பில் நாயர் குடும்பத்துக்கு ஏற்ற வகையில் கொண்டாட வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர் சாப்புண்ணி நாயர். வயது அதிகரிக்க அதிகரிக்க அந்த அபிப்பிராயத்தின் செறிவு அதிகரித்தது. ருது மங்கள காரியத்தில் தனிப்பட்ட முயற்சி எடுக்கவேண்டும்.

"விவாக விரும்பிகளான இளைஞர்களே, வாருங்கள், வாருங்கள்" என்றல்லவா இதற்கு அர்த்தம்! அப்படியானால் அது வருங்காலத்தைக் குறிக்கும் ஒரு முன்னோட்ட நிகழ்ச்சி. மொத்தத்தில் ஒரு பெண்தானே! உடனே உறவினர்கள் அறிந்தார்கள்; ஊரார் அறிந்தார்கள்; உம்மாச்சுவும் அறிந்து கொண்டாள்.

"பஷ்ட்!" மனமாரச் சிரித்துக்கொண்டு அவள் மாயனிடம் சொன்னாள். "குட்டிப் பொண்ணு! அவ இப்பிடி முன்னாலேயே உக்காருவான்னு நான் ஏற்கனவே நெனச்சதுதான். சாப்புண்ணி யாருக்கு நெறய உதவி செய்யணும்."

"என்ன வேணும்னாலும் செய்றேன் !"

அவ்வாறாக நல்ல நிலையிலேயே ஊரறிய அந்த விசேஷம் நடந்து முடிந்தது. நாணிக்குட்டி தவிர்த்து மற்றெல்லாக் கூட்டாளிகளும் சின்னம்முவைப் பார்க்க வந்திருந்தார்கள். அப்போது சின்னம்முவுக்கு ஒரே வெட்கம்.

"இனிமே ஸ்கூலுக்கெல்லாம் வர முடியாதில்லை."

"அது ஏன் ?" - சின்னம்மு.

"அது அப்படித்தான்."

"நான் வருவேன்."

அவளுடைய அந்தப் பேச்சில் லட்சுமியம்மை கொஞ்சம் பயந்து போனாள்.

"போவியோ?" அவள் கேட்டாள்.

"உம்." சின்னம்மு முனகினாள். அவள் நினைத்தால் நினைத்ததுதான். இனி அவள் படிக்கப் போக வேண்டாமென்று லட்சுமியம்மை சொன்னாள். சாப்புண்ணி நாயரும் அதற்கு உடன்பட்டார். ஆனால் சின்னம்மு அதைப் பொருட்படுத்த வில்லை.

"வெக்கக்கேடில்லே?" - லட்சுமியம்மை.

"என்ன வெக்கக்கேடு?" - சின்னம்மு.

"இனிமே போக வேணாம், கண்ணு." - சாப்புண்ணி நாயரும் சொன்னார்.

அவள் கேட்டுக்கொள்ளவில்லை. அதைத் தொடர்ந்து ஒரு சின்ன இழுபறிப் போட்டி நடந்தது. பிறகு மௌன விரதம். குளியல் இல்லை; சாப்பாடு இல்லை; காப்பி இல்லை; நடமாட்டம் இல்லை.

"இது பெரிய தொந்திரவாப் போச்சே!" - லட்சுமியம்மை சோகத்திலாழ்ந்தாள்.

"அப்படீன்னா போகட்டுமே." - சாப்புண்ணி நாயர் சம்மதம் கொடுத்தார்.

"ஒரு வகைக்கு அதுவும் சரிதான். இந்தக் காலத்திலே ஆம்பிளைப் பசங்க எல்லாம் படிச்சவங்கதான். அப்படியிருக்க படிச்சிருக்கிற பொண்ணுதான் வேணும்னு தோணுமில்ல அவங்களுக்கும்?"

மருமகனாக ஒரு தாசில்தாரைக் கனவு கண்டுகொண்டிருந்த லட்சுமியம்மைக்கு அந்த வாதம் பொருத்தமானதாகத்தான் இருந்தது. சின்னம்முவுக்கும் தொடர்ந்து படிக்க முடிந்தது.

படிப்பில் அவளுக்கு மிகவும் ஆர்வம்; படிக்க வைப்பதற்கான வசதி சாப்புண்ணி நாயருக்கும் உண்டு. அந்த நிலையில் பெரிய சச்சரவு எதுவுமின்றி காரியம் முடிந்தது.

சாப்புண்ணி நாயர் ஹெட்மாஸ்டரிடம் கேட்டுக்கொண்டார்: "சின்னம்மு எப்படி?"

"படிப்பிலே கெட்டிக்காரிதான். அதைப் பாராட்டாமே இருக்க முடியாது. ஆனா.."

"என்ன?"

"குறும்பு கொஞ்சம் ஜாஸ்தி."

சாப்புண்ணி நாயர் நமுட்டுச் சிரிப்பைத்தான் பதிலாகச் சொன்னார். தனக்கும் குறும்புத்தனம் உண்டுதானே என்று சாப்புண்ணி நாயர் நினைத்துக்கொண்டார்.

அப்துவின் படிப்பு முடிந்த பின்பும் இரண்டு ஆண்டுகள் தொடர்ந்து சின்னம்முவுக்குப் படிக்க வேண்டியிருந்தது. அந்த இரண்டு ஆண்டுகளும் உம்மாச்சுவின் இளைய பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு போக உதவியது சின்னம்முதான்.

உம்மாச்சு அடிக்கடி சொல்வாள்: "என் செல்லந்தான் என் பிள்ளைகளைப் பாத்துக்கிடுது.."

"நல்லா பார்த்துக்கிடுவேன். சேட்டை பண்ணினா போட்டுத் தள்ளிடுவேன். சரிதானே?"

இதைக் கேட்டு உம்மாச்சு வெடித்துச் சிரிப்பாள்: "சாப்புண்ணி யாரை அப்பிடியே உரிச்சி வச்சிருக்குடி, மகளே!"

சின்னம்மு சிரித்துவிட்டு குழந்தைகளைக் கூட்டிச் செல்வாள்.

வாலிபம் நெருக்கித் தள்ளிக்கொண்டு வந்தது. புது வாலிபமும் ஐப்பசி மாதத்து மழையும் ஒரே மாதிரித்தானே - கொட்டிச் சொரியும். சின்னம்முவிலும் வாழ்க்கையின் வசந்தம் தாராளம் காட்டியிருந்தது. கறுத்து, பளபளத்து, கட்டுக்குள் அடங்காத தலைமுடி; உருண்ட கன்னங்களில் எப்போதும் வாடாத புலரிச் செம்மை; பிரபஞ்சம் முழுவதையும் படையெடுக்கும் கண்கள்; ஓரிடத்தில் நிலைத்து நிற்காத செழுமையான காலடிகள்- அவள் வாழ்க்கையின் ஒரு நிறைகதிராக இருந்தாள். சலனம், சலனம், இடைவிடாச் சலனம் - அதுதான் சின்னம்மு.

அப்படி அவள் பத்தாம் வகுப்பு தேறினாள். நாணிக்குட்டியை விடத் தனக்குத்தான் மதிப்பெண்கள் அதிகமென்று அறிந்த பிறகுதான் சின்னம்முவுக்கு நிம்மதி உண்டாயிற்று.

"கர்ணத்தோட மகளா இருக்கிறதனாலே மார்க்கு அதிகம் கிடைக்கணும்னு இல்லியே!" என்று சின்னம்மு கேலியாகச் சொல்லவும் செய்தாள்.

நாணிக்குட்டியும் அதை அரைகுறையாகக் கேட்டாள். என்ன பதில் சொல்ல முடியும்? சின்னம்முவுக்கு மார்க் அதிகமிருக்கிறது!

அந்த நேரத்தில் சரசரவென்று மூன்று நான்கு திருமண ஏற்பாடுகள் தேடி வந்தன. லட்சுமியம்மைக்குச் சில பிடித்திருந்தன; தாலுக்காபீஸ் க்ளார்க்குகள் சம்பந்தம் சிறப்பாகத் தெரிந்தது. அவர்களுக்கு மெல்ல மெல்ல தாசில்தாராகும் வாய்ப்பு உண்டல்லவா! சாப்புண்ணி நாயருக்கு எதுவும் சம்மதம்தான். ஆனால் சின்னம்முவுக்கு எல்லாமே விரோதமாயிருந்தன.

"இனி என்ன, குபேரன் வரணுமா?" - லட்சுமியம்மை கேட்டாள்.

"நான் யார் வம்புக்கும் வரல்லே ! என் படிப்பு முடியட்டும்."

"அப்படீன்னா அவங்க கிட்ட அதைச் சொல்லிடவா ?"

"இப்போ எனக்கு வேணாம். அடுக்குப் பாத்திரம் மாதிரி என்னாலே இப்போ இருக்க முடியாது."

"ஏடி, ஏதாச்சும் பண்ணி அந்த அடுக்குப் பாத்திரத்தை சீக்கிரமே ஒப்புக்கொடுக்க வேணாமா?"

"அம்மா கொஞ்சம் பேசாமே இருந்தாப் போதும் !"

அந்த ஏக சந்தானத்தை அதிகம் கோபிக்க, வாத்சல்ய பொக்கிஷமான அம்மாவுக்கு முடியவில்லை; திகைப்புக் காட்டா

மலும் இருக்க முடியவில்லை. சின்னம்முவின் தோழிகள் பலருக்கு திருமணமாகி விட்டது. அண்மையில் மாதவிக்கு ஒரு டிப்போ க்ளார்க் கணவனானான். பாரதிக்கு ஒரு அமீனா. அந்தித் துணைக்கு ஓர் ஆள் கிடைத்தது. எல்லாத் தாய்மார்களுக்கும் தங்கள் மருமகன்களைப் பற்றிப் பிரசங்கம் செய்ய முடிகிறது. லட்சுமியம்மை எவ்வளவு நேரம்தான் மகளின் படிப்பைப் பற்றியே சொல்லிக்கொண்டிருப்பது ? அப்படி அங்கலாயத்துக் கொண் டிருக்கும் போதுதான் சின்னம்மு பத்தாவது வகுப்பில் தேறினாள்.

"அம்மாடி! அவளோடே ஆசையும் தீர்ந்தது; நம்ம பாரமும் கொறஞ்சது!" லட்சுமியம்மை பெருமூச்சு விட்டாள். ஆனால் சின்னம்மு அதைக் கேட்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை. அவள் குளிப்பதும், கோவிலுக்குச் செல்லுவதும், வாசிப்பதும், வீட்டு வேலை செய்வதுமாகக் கழித்தாள்.

அப்போது சென்னையில் வேலை பார்த்துக்கொண்டிருந்த ஒரு தம்புரான்- ஏதோ ஒரு வர்மா - விடுப்பு எடுத்துக்கொண்டு அரண்மனையில் வந்து தங்கினார். அழகன். காதில் ஒளிர்ந்த கடுக்கன் அந்த முக சௌபாக்கியத்தின் அளவைக் கூட்டிற்று.

தடித்து உருண்டு மைசூர் சந்தனக் கட்டை போன்றிருந்த அந்தத் தம்புரான் நடந்து செல்ல நேரும்போது கோயில் வட்டாரத்தில் பெண்கள் பேசிக்கொண்டார்கள்: "தங்கமான மனுஷன் தம்புரான்!"

"உண்மைதான். சந்தேகமே இல்லை!" அந்தத் தம்புரான் ஒரு நாள் சின்னம்முவைக் கண்டார். அதாவது, காரியார்த்தமாக நோட்டமிட்டுப் பார்த்தார். பார்த்தபோது ஏதேதோ தோன றியது. பக்கத்தில் நின்ற அடியாளிடம் கேட்கவும் கேட்டார்: "அவ யாரு?"

"மகா புத்திசாலி !"

"புத்தி வைபவத்தைப் பத்திக் கேட்கலே. அவ யாரு?"

"நம்ம சாப்புண்ணி நாயர் மக."

"உம்-" தம்புரான் பொருள்செறிவோடு ஒரு முறை கனைத்தார், நடந்தார். மறுநாள் கோயில் பிராகாரத்தில் தம்புரான் சுற்றும் முற்றும் கவனித்துவிட்டு சின்னம்முவிடம் கேட்டார்: "படிப்பெல் லாம் முடிஞ்சிருச்சி, இல்லே?"

"உம்."

"இனி மேலே படிக்கிறது - எப்படியாக்கும் ?.."

"நிச்சயம் பண்ணலே."

"அப்படியா!" மெட்ராசுக்கு வந்திட்டா உத்தியோகம் நல்லதாப் பார்த்துத் தர்றேன். தேவையானா அப்பா கிட்டவும் சொல்றேன்."

"வேண்டாம்."

"என்மேலே கோபத்தினாலேயா, இல்லாட்டி மெட்ராஸ் மேலே கோபத்தினாலேயா?" நமுட்டுச் சிரிப்புடன் வர்மா கேட்டார்.

"என்மேலே இருக்கிற பிடிமானத்தினாலே." சின்னம்முவின் பதில் அதிக வேகத்துடன் வந்தது.

நல்லதொரு நகைச்சுவத் துணுக்கைக் கேட்ட சுகத்துடன் தம்புரான் தொடர்ந்தார்: "இருக்க வேண்டியதுதான். அவனவனுக்கு மத்தவங்களைப் பிடிக்காம இருக்கிறதிலே தப்பு ஒண்ணுமில்லியே!"

"மத்தவங்க மனசைக் கட்டுப்படுத்தற அதிகாரம் எனக்குக் கிடையாதில்ல!"

"அதிகாரம் இருக்கோ இல்லையோ என்னமோ! இப்போ கட்டுப்படுத்தியும் அடிமைப்படுத்தியும் வச்சிருக்கிறே!"

சின்னம்மு வர்மாவை ஏற இறங்கப் பார்த்தாள்...கண்கொண்டு அந்தச் சந்தனத்தடி உரசிப் பார்க்கிறதோ என்று தோன்றியது.

"என்ன அப்படிப் பார்க்கிறே?" - வர்மா.

"நான் போறேன்." சின்னம்மு நடக்கத் தொடங்கியபோது வர்மா தடுத்தார்: "என்னோடே இருதயத்தையும் சுருட்டி எடுத்துக்கிட்டுப் போறேங்கிறதை தெரிஞ்சிக்கோ!"
அவள் முள்குத்தலாக ஒரு பார்வை பார்த்துவிட்டுக் கேட்டாள்: "என்ன, சாகுந்தலம் நடிக்கிறீங்களா?"

"சகுந்தலை இஷ்டப்பட்டா."

"சீ!" ஓர் அதட்டல்! தம்புரான் அதிர்ந்து போனார். அது தாங்க முடியாத ஓர் அடியாயிருந்தது. தன் ராஜபோக வாழ்க்கையில் அப்படி ஓர் அதட்டலை வாழ்க்கையில் கேட்க நேருமென்று அவர் நினைத்ததே இல்லை.

சின்னம்மு சீறிப் பாய்ந்தாள்: "விலகி நில்லுங்க. சிரிப்பு வேறே வேணுமாக்கும்!"

"மன்னிச்சிக்கோ. நான் சொன்னதைப் புரிஞ்சிக்கிடலே நீ." வம்படி எதுவும் வந்துவிடக்கூடாது என்பதில் தம்புரான் கவனமாக இருந்தார். இவ்வளவு கடூரமாகப் பெண்களால் அதட்ட முடியும் என்று இதுவரை அவர் தெரிந்துகொண்டிருக்கவில்லை.

"புரிஞ்சிக்கிட்டேன்."- சின்னம்மு உரக்கச் சொன்னாள்: "நிஜம்மாவே புரிஞ்சிக்கிட்டேன். மெட்ராசிலே இருந்திருந்து சொரணை கெட்ட தோல்தான் உடம்பிலே வளர்ந்திருக்குன்னு."

அவள் கை வீசி நடந்தாள். நின்ற நிலையில் வர்மாவுக்கு வியர்த்தது. என்ன இப்போது என்னதான் நடந்துவிட்டது? இவள் யாரப்பா? பெண்ணா பிசாசா?

வாசலில் நின்றபடி, வண்டுகள் அலையாய அசைந்தாடும் சண்பகத் தோப்பைக் கண்கொட்டாமல் வர்மா பார்த்துக் கொண்டிருந்த போதுதான் அவரை அடியாள் பார்த்தது. ஏதேனும் பேச வேண்டுமே என்ற நோக்கத்துடன் அவன் சொன்னான்: "நானும் பார்த்தேன்."

"எதை?"

"சின்னம்மு சாதா வாளப்பளம்னு நெனச்சா கதலி வாளப்பளமால்ல இருக்கா! திருமனசு மகாபாக்கியசாலி!"

"சீ, முண்டம்!" - தம்புரான் தனக்குக் கிடைத்த அதட்டலை அடியாளுக்கு மாற்றிக் கொடுத்துவிட்டுத் திரும்பி நடந்தார். அடியாளும் இடி கேட்ட நாகம் போல கோயிலுக்குள் தலையை இழுத்துக் கொண்டான்.

சின்னம்முவின் இந்த நடவடிக்கையை நல்ல காலமாக யாரும் அறியவில்லை. சாப்புண்ணி நாயருக்குத் தெரிந்தால் வீண் குழப்பந்தான் உண்டாகும். பொறுமைசாலியான வர்மா இந்த அசம்பாவிதத்தைப் பற்றி யாரிடமும் எதுவும் பேசாமல் சென்னைக்குத் திரும்பினார்.

இதற்கிடையில் சின்னம்முவின் எதிராளி ஒரு வேலை செய்தாள். நாணிக்குட்டி அடுத்தாற்போல் டீச்சர் ட்ரெய்னிங்குக்குப் போகலானாள். அப்போதிருந்து சின்னம்முவுக்கு ஓர் ஆசை. பெற்றவளிடம் தன் ஆசையைத் தெரிவித்தாள்.

"உனக்குப் பைத்தியமா! இந்தக் குடும்பம் எப்படிப்பட்டதுன்னு உனக்குத் தெரியாது?"

"குடும்பமில்லே, நானில்ல ட்ரெய்னிங்குக்குப் போறது?"

"சும்மா அடக்க ஒடுக்கமா இரு!"

"நான் போவேன்."

லட்சுமியம்மையின் நெஞ்சில் சஞ்சலம் தோன்றிற்று. உடனே சாப்புண்ணி நாயரிடம் இந்த ஆபத்துச் செய்தியைத் தெரிவித்தாள். விவகாரம் இவ்வளவு தூரம் நீடிக்குமென்று சாப்புண்ணி நாயர் எதிர்பார்க்கவில்லை.

"என்னவானாலும் அது கூடாது."

"அதைத்தானே நானும் சொல்றது?" லட்சுமியம்மை ஒத்தூதினாள்.

"நான் போய்த்தான் ஆகணும்." - சின்னம்மு சிணுங்கினாள்.

"வயசுக்கு வந்த ஒரு பொண்ணு பேசறதைக் கேட்டீங்களா?" லட்சுமியம்மை.

"வயசுக்கு வந்தவங்களைத்தானே ட்ரெய்னிங்குக்கு எடுப்பாங்க?"

"மகளே, இங்கே வா. இதுவரைக்கும் தலவெட்டத்து மூப்பில் நாயர் குடும்பத்துப் பொண்ணுங்க யாரும் டீச்சர் ஆனதில்லே."- சாப்புண்ணி நாயர் கௌரவ உணர்வுடன் சொன்னார்.

"இதுவரைக்கும் யாரும் படிச்சதும் இல்லே." - சின்னம்மு உடனுக்குடன் பதில் சொன்னாள்.

"அன்னிக்கே நான் சொன்னேன், படிக்கப் போக வேண்டாம்னு." - லட்சுமியம்மை தழுதழுத்த குரலில்.

"அது இந்தக் குடும்பத்துக்கு ஒத்துக்காது. நான் சம்மதிக்க மாட்டேன். சின்னம்மு, சும்மா முரண்டு பிடிக்காதே."

சின்னம்மு முரண்டு பிடித்தால் விடுவாளா? அவள் போராட்டத்தை ஆரம்பித்தாள். அது முற்றி முற்றி விவகாரம் உம்மாச்சு வரைக்கும் போயிற்று.

"எதுக்கு நாயரே, நீங்க அவளை டீச்சர் ஆக்க சம்மதிக்கலே?" - உம்மாச்சு கேட்டாள்.

"சே! அது எங்க குடும்பத்திலே வழக்கமில்லே."

"கர்ணம் குடும்பத்திலே வழக்கமிருக்கோ? இப்போ அந்த நாணிக்குட்டி போயிருக்கால்ல? அதனாலே இப்போ அது ஒரு பாழாப் போன குடும்பமாயிரிச்சா?"

இந்தக் கேள்விக்கு பதில் சொல்ல சாப்புண்ணி நாயருக்கு முடியவில்லை. மகா கெட்டிக்காரர்கள் பலர் பிறந்து வளர்ந்து மண் மூடிப் போன ஒரு குடும்பம் கர்ணத்தினுடையது. சாப்புண்ணி நாயர் கொஞ்சம் குழம்பினார்.

"நீங்க சாக்குப்போக்குச் சொல்லாமே அவளை அனுப்பி வைங்க. நாளை ஒங்களுக்கும் அது நல்லதா முடியும். என்ன?"?

"ஆனா அதோடே அம்மா -"

"அம்மா கிட்டவும் சும்மா இருக்கச் சொல்லுங்க. ஓ! எங்கேயும் இல்லாத குடும்ப கவுரவம்!"

"சரி." - சாப்புண்ணி நாயர் சம்மதம் தெரிவித்தார்.

"நீங்களே வேணும்னாலும் பாருங்க, அவ பெரிய ஆளா வருவா. சின்னம்மு ஒரு வெளுத்த சீன மிளகாக்கும்! அப்பிடி இருக்கணும் பெண்பிள்ளைகள்னா. இப்பிடியான சுறுசுறுப்பும் வேணும்தான்.."

"உம்-ம்."

சாப்புண்ணி நாயர் சம்மதித்தார். சின்னம்மு போரட்டத்தை நிறுத்தி ட்ரெய்னிங்குக்குப் போனாள்.

## 13. கறையான் அரிக்கும் வாளுறை

வளர வளர அப்து மௌனியானான். சிறுவனாக இருந்தபோது அது ஒரு இனம் புரியாத கவலையாக இருந்தது. ஆனால், அந்தப் புது வாலிபப் பருவத்தில் அது வஞ்ச உணர்வாக மாறத் தொடங்கியது. வீட்டில் உள்ளவர்களைப் பற்றி ஒரு நினைப்பும் இல்லை. அல்லது நினைப்பதுண்டு என்று வைத்துக்கொண்டாலும் எதைப் பற்றி என்று யாருக்கும் தெரியவில்லை. அடிக்கடி நூறோ இருநூறோ பணம் தேவைப்படும். அதை வாங்கிக் கொண்டு வெளியே போவான். மறுபடியும் திரும்பி வர சில சமயம் ஒரு வாரம்கூட ஆவதுண்டு.

"நீ எங்கேப்பா போயிருந்தே?" உம்மாச்சு கம்மிய குரலில் கேட்பாள்.

"உம், உம்." வெறுப்பு கலந்த ஒரு கனைப்பு மட்டுமே பதில்.

"இப்படி இருந்தா எப்படிப்பா?"

"பின்னே தலைகீழா நிக்கணுமா?"

"எங்கூட இப்படிப் பேசறதா? நான் ஒன்னைப் பெத்த அம்மா இல்லே?" உம்மாச்சு துக்கம் கலந்த குரலில் கேட்டாள்.

"அதுதானே கஷ்டம்?"

"நான் ஒனக்கு அம்மாவா இருக்கிறதா கஷ்டம்?"

"எனக்கு மட்டுமில்லே, எல்லாருக்கும்."

"ஓ! என் மொகத்தைப் பாத்து நீ இப்படியெல்லாம் பேசாதே. இதைக் கேக்கறப்போ இந்தப் பெத்த வயிறு பத்திக்கிட்டு எரியுது!"

"எரியட்டும். அது இன்னும் நிறைய எரிய வேண்டிய வயிறுதான்!"

"ஒனக்கு இப்போ என்ன ஆச்சுடா, அப்து?"

"கிறுக்கு!"

"இது கிறுக்குத்தாண்டா மகனே! ஒன்னை இவ்வளவுக்கு வளர்த்து ஆளாக்க எவ்வளவு கஸ்டப்பட்டிருக்கேன்?"

"எதுக்கு? கொன்னிருக்க வேண்டியதுதானே? அது உங்களுக்கு சுலபமா இருந்திருக்குமே?"

"ஓ! நெஞ்சிலே குத்தற மாதிரி பேசாதே. ஒனக்கிப்போ இங்கே என்ன கொறவாப் போச்சி?"

"ரொம்பத்தான் சுகம்!"

"என்ன சொகம் கொறஞ்சி போச்சி? ஒன்னோடே தம்பிங்க நீ சொல்றதைக் கேக்கலியா?... இல்லாட்டி சொல்லு. மரக்கார் தம்பி ஒரு மண்டுதான். ஹைத்ரோசு கொஞ்சம் துடுக்கானாலும் ஒனக்கு அடங்கிக் கெடக்கறான். திங்க, குடிக்க கஸ்டமில்லே. தாயும் தகப்பனும் வேணும்ங்கிறதைப் பாத்துச் செய்றாங்க..."

"நிறுத்துங்க! உம்மையும் வாப்பாவும்! யாருடைய வாப்பா?"

"கடவுள் நெனச்சதை நிறுத்த முடியுமா, மகனே?"

"நீங்க போங்கம்மா." அவன் எழுந்து தன்னுடைய உலகமான ஒதுக்கமான சாய்ப்பறைக்குச் சென்றான். வீட்டிலிருக்கும் போதெல்லாம் அந்தச் சாய்ப்பறையில்தான் அவனுக்கு வாசம். அங்கே இருந்து எந்த அரவமும் கேட்காது. சில சமயங்களில் புத்தகங்களைப் புரட்டிக்கொண்டிருப்பான். சில சமயங்களில் ஒரு கிராமபோனைப் பாட வைத்துக்கொண்டிருப்பான்.

"பெட்டிப் பாட்டு கேக்குதில்ல, அங்கே மூத்தவரு இருப்பாரு." வேலைக்காரிகள் தங்களுக்குள் பேசிக் கொள்வார்கள்.

"மூத்தவருக்கு என்னாச்சி?"

"ஒண்ணுமில்லே."

"இல்லே, ஏதோ இருக்கு. பேச்சும் அரவமும் இல்லாமே இப்பிடி?"

"அது முன்னாலேயே அப்பிடித்தானே?"

"ஒரு எளவட்டக்காரருக்கு இருக்கணுங்கிற கொணமோ கிணமோ ஒண்ணுமே இல்லியே, பீபாத்தோ!"

"என்ன, அவரு மேலே ஒனக்கொரு கண்ணு! அப்பிடித்தானே?"

"அடியே பீபாத்தோ, நாக்கை அடக்கிப் பேசு. நான் ஒன்னெ மாதிரி மோப்பம் பிடிச்சி அலைய மாட்டேன்."

"நான் அப்பிடி என்னடி பண்ணினேன்?"

"ஹைத்ரோசு மொதலாளி ஒனக்கென்ன பாடமா சொல்லிக் குடுத்தாரு?"

"ஓ, வாயை மூடுடி. உம்மாச்சம்மா காதிலே இது விழுந்தா செம்மையா வாங்கிக் கட்டிக்குவே, ஆமா!"

"அப்படீன்னா நீயும் அடக்கிக்கோ... பின்னே எதுக்குடி அந்த சச்சரவு?" கௌசு தாழ்ந்த குரலில் கேட்டாள்.

"யார் யாருக்கு?"

"தாய்க்கும் மகனுக்கும்தான்."

"அப்து மொதலாளியா?"

"ஆமாம்."

"எதுக்காக?"

"ஆண்டவனுக்குத்தான் தெரியும். ஆனா பொண்ணைக் கட்டிவச்சிட்டா எல்லாம் சரியாயிரும்."

அப்து பெண் கட்டிக்கொள்ளவுமில்லை; அவனுடைய இயல்பு மாறவும் இல்லை. ஒவ்வொரு நாளும் முரட்டுத்தனம் கூடிக்கொண்டேதான் இருந்தது. மாயன் அடிக்கடி உம்மாச்சுவிடம் கேட்பான்: "அவனுக்கு என்னாச்சி உம்மாச்சு?"

"ஒண்ணுமில்லே."

"பின்னே ஏன் ஆந்தை மாதிரி முழிச்சிக்கிட்டு, இப்படி?"

"அவனோடே கொணமே அப்படித்தானே!"

"உம்." மாயன் ஒரு முறை நெடுமூச்செறிந்தான். உண்மையில் மாயனும் சிந்தனை வயப்பட்டவனாக இருந்தான். வயது ஆக ஆக அவன் கவலையில் ஆழ்ந்துவிட்டதாகக் காணப்பட்டான்.

"எதைப் பத்திக் கனவு காண்றீங்க?" உம்மாச்சு கேள்வி கேட்பதுண்டு.

"ஒண்ணுமில்லே." மாயன் நெடுமூச்செறிவான்.

"இருந்தாலும்.."

"மொத்தத்திலே ஒரு சொகமும் இல்லே."

"என்ன, கோட்டையைப் பிடிக்கப் போறீங்களா?"

"ஆமாம். இந்தக் கோட்டை வசப்படாதுன்னுதான் தோணுது."

"உங்களுக்கு இப்போ என்ன ஆயிப் போச்சு!"

"அதான் எனக்கும் புரியலே. உம்மாச்சு, நான் ஒரு யோசனை பண்றேன்."

"என்னவாம்?"

"கொஞ்ச நாள் வயநாட்டுக்குப் போயி இருந்திட்டு வர்றேன். ஹஸ்ஸன் அங்கே எப்படி இருக்கான்னு பார்க்கணும்."

"அவன் அங்கே என்ன செய்யப் போறான்? கிடைக்கிற காசை இங்கே அனுப்பிச்சிக்கிட்டிருக்கானில்ல? பின்னே, நீங்க இங்கேயே குத்தவச்சிக்கிட்டு இருக்க வேண்டியதுதானே!"

"உம்மாச்சு...!" - மாயன் கெஞ்சும் குரலில் கூப்பிட்டான்.

"என்ன?"

மாயன் சிறிது நேரம் எதுவும் பேசவில்லை. அந்தத் தளர்ந்த பார்வை மேலும் மேலும் தளர்ந்ததுபோல் தோன்றிற்று. காட்டெருமையின் மதர்ப்பு அஸ்தமித்துப் போய்விட்டது. கழுகு செத்த கூடுபோல அந்தப் பருத்த சரீரம் மட்டுமே இன்று இருக்கின்றது. அதன் உள்ளில் புதிதாய்க் குடியேறிய அசௌகரியங்கள் சிறகடிக்கின்றன.

"என்னவாம்?" - உம்மாச்சு மீண்டும் கேட்டாள்.

"நான் வந்து, உன் சொகத்தைக் கெடுத்திட்டேன்."

"நீங்க வந்த பெறகுதான் எனக்கு சொகமே கெடச்சது."

"நெசம்மாவா?"

"ஆமா, ஒவ்வொண்ணையும் பத்தி நெனச்சி நெனச்சி அவஸ்தைப்படறீங்களாக்கும் நீங்க!"

"நெனக்கக்கூடாதுன்னுதான் எனக்கும் தோணுது. ஆனா நெனச்சிப் பாக்காம இருக்க முடியலே."

"வேண்டாத நெனப்புக்களையெல்லாம் விட்டுத் தள்ளுங்க."

"தள்ள முடியாதில்ல. கடல்லே அலையும் மனசிலே நெனப்பும் நிக்குமா, உம்மாச்சு!"

"என்ன இப்போ, இவ்வளவுக்கு அவஸ்தைப்பட?"

"என்ன அவஸ்தை! அதெல்லாம் ஒண்ணுமில்லே. நான் வந்தேன், ஒனக்கு ரெண்டு கொழந்தைங்க பொறந்திச்சு. இப்போ ஒனக்கும் சங்கடமா இருக்கு!"

"எனக்கிப்போ ஒரு சங்கடமும் இல்லே."

"சும்மா பொய் சொல்லாதே! ஒன் மனசிலே இருக்கிறதை என் மனசிலே பார்த்தாத் தெரியும்; என்னோடே கவலை ஒன்னோடே மனசிலும்."

"அதுதான் எனக்கு சொகம்."

"ஆனா அந்த சொகம் இப்போ கொறஞ்சி போச்சோன்னு நெனக்கிறேன் நான்."

"போனதுதான் போயாச்சே!"

"நடந்தது நடந்ததுதான். ஆனா, எப்படி அது எல்லாமே ஒண்ணா வந்து சேர்ந்ததுன்னுதான் தெரியலே!" மாயன் நட்டுக் குத்தலாக ஒரே திசையில் பார்த்தபடி இருந்தான், கண்ணுக்குப் புலப்படாததும் பயங்கரமானதுமான சில காட்சிகள் எதிரில் ஆட்டம் போடுவது போல. அந்த முகத்தில் நிறைய சுருக்கங்கள் விழுந்திருந்தன. அந்தக் கண்ணிமைத் தடங்களில் ஒரு கறுப்பு சற்றே பரவிக் கிடந்தது.

"என்னத்தைப் பத்தி நெனக்கிறீங்க?" - உம்மாச்சு கேட்டாள். "பின்னாலே திரும்பிப் பாக்காதீங்க. பார்த்தீங்களோ மனிசன் மாட்டிக்கிட்டாப்பிலேதான். அப்புறம் தூக்குப் போட்டுக்கிட்டுச் சாக வேண்டியதுதான்."

"உ-ம்." - மாயன் ஒரு தரம் நீண்டு முனகினான். தொடர்ந்து கேட்டான்: "சொகம்னு ஒண்ணு இருக்கா, உம்மாச்சு?"

"உண்டு. ஆனா நெல்லிக்கா பிஞ்சை சுவைச்சி சாப்பிட் டாப்பிலே - புளிப்பும் இனிப்பும் கலந்தபடி."

பிறகு யாரும் எதுவும் பேசவில்லை. அவர்களுக்கிடையே ஒரு சோகம் கப்பியிருந்தது. அப்படி சோகம் பெருகிப் பெருகி உடைந்துபோகாமல் இருக்க வேண்டும் என்று இருவருமே பிரார்த்தித்தார்கள். தனிமையில் இருக்கும்போது உம்மாச்சுவின் தலையிலும் கூடிப் பிணைந்த சிந்தனைகள் ஆட்டம் போட்டன. அதனால் அவள் தனிமையில் இருக்காதபடி பார்த்துக் கொண்டாள். குடும்பத்தின் எல்லா நடவடிக்கைகளிலும் அந்தக் கைகள் பங்குகொண்டன. வீட்டு விவகாரங்களைப் பற்றி எப்போதும் பேசிக்கொண்டிருப்பாள்; சின்னப் பிள்ளைகளை அரவணைப்பாள்; மூத்த மகனுக்காகக் காத்திருப்பாள். என்றாலும் அந்த நினைப்பு ஒரு மரவட்டையைப் போல

மனசுக்குள் ஊர்ந்து ஏறும். அப்போதெல்லாம் ஹைத்ரோசை உம்மாச்சு கூப்பிடுவாள்: "கண்ணே, ஹைத்ரோசே"

"என்னம்மா?"

"அண்ணே வந்தாச்சா?"

"சாய்ப்பறையிலேருந்து பாட்டுச் சத்தம் கேக்கலியேம்மா."

"பாரு"

அவன் பார்த்தான். கழற்றப்பட்ட ஒரு பட்டுச் சட்டை மட்டும் உயிரற்றதாய் அந்தக் கட்டிலில் கிடந்தது.

"இல்லேம்மா."

"உம்..ம்."

ஹைத்ரோஸ் வெளியே புறப்படக் கிளம்பும்போது உம்மாச்சு மீண்டும் கூப்பிடுவாள்: "கண்ணு, ஹைத்ரோசு!"

"என்னம்மா?"

"பாரு, அண்ணே கொஞ்சம் கோபக்காரனாக்கும்."

"இருக்கட்டுமேம்மா. ஆம்பிளைங்கன்னா கோபக்காரங்களாத் தானே இருப்பாங்க?"

"அதான், அண்ணே கோபமாப் பேசினாலும் நீங்க எதிர்த்துப் பேசக் கூடாது !"

"ஆகட்டும்! ஆனா அண்ணே பேசறதே இல்லியே!"

"அது அண்ணே கொணந்தானே!"

"ஆமாம்!"

ஹைத்ரோஸ் அவன் போக்கில் வெளியே போனான். உம்மாச்சு அப்போதும் யோசனையில் ஆழ்ந்திருந்தாள். அதற்கிடையில் தான் அப்து வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

"சோறு இருக்கில்ல?"

"மகனே, உம்மா எவ்வளவு நேரமா காத்துக்கிட்டிருக்கேன்! எங்கண்ணில்ல, குந்துப்பா."

உம்மாச்சு பரிமாறினாள்; மகன் மௌனமாகச் சாப்பிட்டான். இருவரும் எதுவும் பேசிக்கொள்ளவில்லை. கை கழுவிக்கொண்டு அப்து சாய்ப்பறைக்குப் போனான்.

"உ..ம்! கஸ்ட்டம்!-" அந்தத் தாய் தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்.

"என்னாச்சி?" - பின்னாலிருந்து ஒரு கேள்வி. உம்மாச்சு திரும்பிப் பார்த்தாள். தளர்ந்த பார்வையுடன் நிற்கும் மாயன்.

"ஒண்ணுமில்லே."

"உம்- இது எங்கே போய்ச் சேருமோ?"

"எது?"

"எல்லாம்தான். அவன் இந்த வீட்டுக்குள்ளே நுழைஞ்சி நாலு நாளாச்சில்ல. வந்தாலும் பேச மாட்டேங்கிறான், கேக்கவும் மாட்டேங்கிறான். பெத்த தாய்ட்டேகூட ஒரு அன்பில்லாமே இருக்கானே!"

"அவன் போக்கே அப்படித்தானே!"

"சரிதான்!" - மாயன் வெளியே போனான். தன் மகன் இப்படிக் கோபக்காரனாவதற்கான ஒரு காரணமும் உம்மாச்சுவுக்கு யோசித்துப் பார்த்தும் புலனாகவில்லை. அப்துவின் ஆசை எதுவோ, அதுதான் தங்களுடைய ஆசையும் என்று உம்மாச்சுவும் மாயனும் கருதினார்கள். ஆனாலும் அவன் ஏன் கோபம் கொள்கிறான்?

அடுத்த நாள் சாப்புண்ணி நாயர் அங்கே வந்தார். சில வழக்குகள் பற்றிக் கலந்தாலோசிக்க வேண்டியிருந்தது. எல்லாம் பேசி முடித்த பிறகு, உம்மாச்சு கேட்டாள்: "சாப்புண்ணியாரே, நீங்க இதெல்லாம் கண்டுக்கிடறதில்லியா?"

"எதை?"

"அப்துவோடே போக்கைப் பார்க்கலே? அவனை இப்படியே விட்டுக்கிட்டிருந்தா இந்த வீடு எங்கே போய்ச் சேரும்.?"

"சரிதான். ஆனா, சொல்லித்தான் சரிப்படுத்தணும். இந்தக் காலத்துப் பிள்ளைங்க இல்லியா? என் மக இருக்கிறதைப் பாருங்க, நான் சொன்னது எதையாவது கேட்டாளா? ட்ரெய்னிங்குக்குப் போயிட்டாளில்லை? முன்னே எப்பவாவது உண்டா இப்படி, எங்க குடும்பத்திலே?"

"இருந்தாலும் அவ நல்ல வழியையில்ல பிடிச்சிருக்கா? நாலு காசு குடும்பத்துக்கு சேர்க்கணும்தானே!"

"அது வாஸ்தவம்தான், நெலமைக்கு ஒத்து வரல்லேன்னாலும்."

"இது எதிரால்ல இருக்கு. சாப்புண்ணியாரே, ஒரு தரம் சொல்லிப் பாருங்க. நீங்க சொன்னாத்தான் அவன் ஒழுங்காக் கேப்பான்."

"சரி."

சாப்புண்ணி நாயர் அடுத்த நாள் அப்துவைக் கண்டுபிடித்தார். அவனும் இரண்டு மூன்று கூட்டாளிகளு கூடி ஒரு கடையின் மூலையில் உட்கார்ந்தபடி சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

"பதினேழு."

"பதினெட்டு!"

"ஆனேர்ஸ்"

"ப்ளஸ் ஒன்"

"அப்து!" - சாப்புண்ணி நாயர் மெல்ல வாசலுக்குள் தலை நீட்டிக் கூப்பிட்டார்.

"யாரு?"

"ஒண்ணு கேக்கணும்." - சாப்புண்ணி நாயர் அமைதியாகச் சொன்னார். சீட்டுக்கட்டு கீழே விழுந்தது. பாய் மடிப்பில் வைத்திருந்த காசை ஒவ்வொருவரும் எடுத்து பாக்கெட்டில் போட்டுத் தட்டிப் பார்த்துக்கொண்டு புறப்பட்டார்கள். அப்து ஒரு குற்றவாளியைப் போல சாப்புண்ணி நாயரின் பின்னால் நடந்தான்.

"அப்துவோடே ஒரு விஷயம் பேசணும்னுதான் நான் வந்தது."

"என்னவாம்?"

"சொல்ல வேண்டியதாப் போச்சேன்னு நெனக்கிறப்போ ரொம்ப வருத்தமாத்தான் இருக்கு. நான் அப்துவை இன்னொருத்தர் வீட்டுப் பிள்ளையா நெனச்சதில்லே."

"அது எனக்குத் தெரியாதாக்கும்? நானும் உங்களை அப்பாவுக்குச் சமமாத்தான் நெனச்சிருக்கேன்."

"சரி. இப்படி நடந்துக்கிறது நல்லா இருக்கா? ஒண்ணுக்கும் உருப்படி இல்லாமே, வீட்டிலே அவனவன் வேலையைப் பார்க்காமே சீட்டும் சூதாட்டமும் ஆடிக்கிட்டிருந்தா... "

அப்து ஒன்றும் பேசவில்லை.

"என்ன பேசலே? வீட்டிலே இருக்கக் கூடாதா?"

"எனக்கு அந்தப் பிசாசு முகத்தைப் பார்க்கப் பிடிக்கலே."

சாப்புண்ணி நாயர்தான் இப்போது மௌனமானார். அவர் மெதுவாக நடந்தார்; பின்னாலே அப்துவும்.

"அங்கே இருந்தா எனக்கு ஒரே எரிச்சல்."

"ஏதானாலும் உன்னைப் பெத்த பெண்ணில்லையா அவங்க!"

"அதை நெனச்சித்தான் நானும் அடங்கிக் கிடக்கிறேன்."

"வம்பு தும்பு ஒண்ணும் செய்ய வேண்டாம். அப்துவை நான் என் மகனாத்தான் வச்சிருக்கிறேன். அதனாலேதான் சொல்றேன்: இந்த மாதிரியான நடத்தை அப்துவோடே நெலமைக்குப் பொருத்தமில்லே. நான் சொல்றதைக் கேட்பியா?"

"கேக்கறேன்."

"அப்படீன்னா இனிமே சீட்டு விளையாட்டு வச்சிக்கக் கூடாது; வீட்லே இருக்கணும் என்ன?"

"வீட்லே இருந்தா நான் என்னாவேன்னு எனக்கே தெரியாது."

"நல்லாத்தான் இருக்கும். போய் நல்லபடியா இருக்கணும்."

"உம்."

உண்மையில் அப்து ஒரு தர்மசங்கடத்தில் மாட்டிக் கொண்டான். சாப்புண்ணி நாயரின் பேச்சை மீறி நடக்க அவனுக்கு விருப்பமில்லை; வீட்டிலிருக்கவும் விருப்பமில்லை. ஆனாலும் அவன் சாய்ப்பறையில் உட்கார்ந்திருக்கலானான். அப்போதும் யாருடனும் பேச்சு வார்த்தை இல்லை.

"சாப்புண்ணி நாயரோடே ஓபதேசம் கேட்டுக்கிட்டான்னு தோணுது." - உம்மாச்சு நினைத்தாள். அப்படி நான்கோ ஐந்தோ நாட்கள் கழிந்த பின் உம்மாச்சு ஒரு நாள் அவனிருந்த சாய்ப்பறைக்குச் சென்றாள்.

"எவ்வளவு நேரம்ப்பா இப்பிடிப் பேசாமே உக்காந்திருப்பே?"

"என்ன வேணும்?"

"நீ ஏன் இப்படி இருக்கே?"

"எப்பிடி?"

"ஒண்ணுமில்லேன்னாலும், குடும்பத்திலே தலையெடுத்திருக்கிற மூத்தவன் நீதானே?"

"அதுதானே இந்தக் குடும்பத்திலே இருக்கிற விவகாரம்!"

"அப்படியெல்லாம் பேசாதேப்பா. படைச்சவன் கேப்பான். உன்னை மகனில்லேன்னு இதுவரை நெனச்சதுண்டா?"

"அவன்... நான் ஒண்ணும் சொல்ல விரும்பலே."

"என்ன!"

அப்து இருந்த இடத்திலிருந்து எழுந்தான். அவன் முகம் சிவந்தது. நாசித் துவாரம் விடைத்தது.

"உன் கையைக் கொஞ்சம் பாரு..."

"என்னப்பா?"

"என்னவா? ரத்தம்! எங்கப்பாவோடே ரத்தம்!"

"கடவுளே! நீ என்னதாம்ப்பா சொல்றே?..." உம்மாச்சுவின் நரம்புகள் அனைத்தும் தளர்ந்து போயின; உடம்பு முழுவதும் ஒரு சூடு ஏறியது; செவியில் ஒரு இரைச்சல்.

சர்வ வல்லமை பொருந்திய கடவுளே... அந்தப் பெண்மணி அயர்ந்து தரையில் சாய்ந்துவிட்டாள்.

சில நிமிடங்கள் கழிந்தன. அப்து அம்மாவைத் தாங்கிக் கொண்டுபோய் அறையில் கிடத்தினான்.

"என்...மகனே..."

"உம்மா..."

"நான் ஒன்னைப் பெத்தவ இல்லியாடா?"

அதற்கு அப்து பதில் சொல்லவில்லை. அவள் தேம்பித் தேம்பி அழுதாள். அந்தத் தாயும் மகனும் இரண்டு பாதைகளில் பிரிந்தார்கள். அப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று அப்துவும் நினைத்திருந்ததில்லை. இறுகிப் போயிருந்த அந்த இருதயம் வெடித்துச் சிதறியது.

எல்லாவற்றையும் தன் காலடியில் ஒதுக்கி நிறுத்தி விடலாம் என்று நம்பியிருந்த உம்மாச்சுவுக்கு இது நினைத்துப் பார்க்க முடியாத ஓர் அடியாயிருந்தது. ஒரு நாளைக்கோ பத்து நாட்களுக்கோ மட்டும் நிலைத்திருக்கும் ஆபத்தல்ல இது; வாழ்க்கைக் காலம் முழுவதும் ஒரு கத்தியை நெஞ்சில் தாங்கிக்கொண்டு வெட்ட வெளியில் படுத்துத் தூங்க வேண்டும். அதை நினைத்தபோது உள்ளுக்குள் ஒரு எரிப்பு.

"கடவுளே, இது எங்கே போய் நிக்குமோ தெரியலியே?"

இதை எவரிடமாவது சொல்ல முடியுமா? மாயனிடம்கூடச் சொல்ல முடியாது. இந்த உண்மையை அறிந்தால் மாயன் எப்படித் தாங்குவான்? இனி வரும் வாழ்க்கை எப்படி இருக்கும்? சொல்லாவிட்டால் மாயனின் நிலைமை என்னாகும்? அவளை அவ்வளவு அதிகமாக நேசிக்கவும், அந்த உறவுக்காக வேண்டி வாழ்க்கையை ஆபத்துக்குள்ளாக்கிக் கொள்ளவும் செய்தவன். ஆனால்...ஆனால் அப்துவைப் பெற்றபோதுதான் அவள் பிரசவ நோவை அறிந்தது; தாய்மை உணர்வைப் புரிந்துகொண்டது. அவன் போய்விட்டால், அவனைப் புறக்கணித்துவிட்டால் அதற்கு பிறகு ஏன் உயிர்வாழ வேண்டும்?

"மாயன் காலம் முடிகிற வரைக்குமாவது அப்து பேசாமல் இருந்தாலே போதுமானது." உம்மாச்சு ரொம்பவும் ஒடுங்கி விட்டாள். எதையும் பொருட்படுத்தாமல் தன் போக்கில் இயங்கும் அந்த இயல்பு நின்றது. எப்போதும் அறுந்து விழத் தயாராக இருந்த ஓர் ஆபத்து தலைக்கு மேலே தொங்கிக் கொண்டிருந்தது. அத்துடன் மட்டுமல்ல, அதனுடைய தொங்குக் கயிற்றைக் கறையான் அரித்துக்கொண்டிருப்பதையும் அவள் கண்டாள். அதைத் தடுக்க முடியுமா? அதிலிருந்து தப்ப முடியுமா? சொந்த இருதயத்தைவிட, வலுவான விலங்கு கிடையாதென்று உம்மாச்சு புரிந்துகொண்டாள். எல்லா வசதிகளும் இருந்தாலும் தப்பித்துச் செல்ல முடியாத ஒரு கடவு அது. அவர்கள் அதிலேயே இருந்தாக வேண்டும். இருந்தே தீர வேண்டும்; மரணம் வரை.

"அதை நெனக்கிறப்போ எனக்கு ஒடம்பு நடுங்குது!"

அப்படி உடம்பு நடுங்கியபடியே நாட்கள் கழிந்தன. என்ன வழி? என்னதான் வழி? எப்போதும் இந்த யோசனைதான். நாடிக்கு கையை முட்டுக் கொடுத்து, பரந்து கிடக்கும் பிரபஞ்சத்தைப் பார்த்துக்கொண்டு உம்மாச்சு உட்கார்ந்திருந்தாள். உலகம் தன்னோடு ரொம்பவும் தாட்சண்யமின்றி நடந்துகொள்வதாக அவளுக்குத் தோன்றிற்று. எதுவும் நிகழாத மாதிரி சூரியன் உதிப்பதும் காய்வதும் அஸ்தமிப்பதுமாக இருந்தது. நிலவுக்குப் கூச்சமுமில்லை; பயமுமில்லை. 'என்ன உம்மாச்சு விசேஷம்.' என்று கேட்பதுபோல் சிரித்துக்கொண்டே உதிக்கும். 'நாளைக்கும் பார்ப்போமே' என்ற மட்டில் அஸ்தமிக்கவும் செய்யும். ஒன்றோடொன்று உரசி அழும் மூங்கில் கூட்டங்கள் நரம்பில்

வேதனை உண்டாக்குகின்றன. பாடகிகளான வண்ணத்துப் பறவைகள் வேலிக்கம்பின் மேல் வந்தமர்ந்து உதயகீதம் ஆலாபிக்கும்போது அவற்றை அடித்துக் கொல்லத் தோன்றும். செம்போத்துப் பறவைகள் அப்போதும் மோப்பம் பிடித்து நடந்தன. மண்ணெண்ணெய்க் குப்பியும் அரிசிக் கூடையுமாக அப்போதும் ஆட்கள் அந்த இடைவழி ஊடாக நடந்து கடைக்குப் போவதுண்டு; திரும்பி வருவதுண்டு. தாய்மார்கள் குழந்தைகளை அதட்டுகிறார்கள். அண்டை வீட்டுக்காரிகள் தங்களுக்குள் சண்டையிட்டுக்கொள்கிறார்கள். குளக்கரைகளில் புரளி பேசுபவர்களின் கூட்டங்களும் முன்னைப் போலவே நடந்தன. வழிபாடுகளும் உற்சவங்களும் நிறுத்தப்படவில்லை. இவற்றை யெல்லாம் கொஞ்சம் வியப்பு கலந்து உம்மாச்சு பார்த்துக் கொண்டிருந்தாள். தன்னோடு சேர்ந்து உலகம் உதிக்கவும், தன்னோடு சேர்ந்து அஸ்தமிக்கவும் செய்கிறதென்று எளிதில் தப்பர்த்தம் செய்துகொண்டாள். அவள் நெடுமூச்செறிந்தாள்: வஞ்சி எவ்வளவுதான் முங்கினாலும் அலை அதற்கும் மேலே எழும்பத்தான் செய்யும்....உம்...

அந்த வீட்டிலும் அலைகள் உயர்வதும் தாழ்வதுமாய் இருந்தன, அரவமில்லாமல். யாரும் யாருடனும் பேசவில்லை. ஹைத்ரோசின் சத்தமும் மரக்காரின் சத்தமும் மட்டும் இடையிடையே கேட்கும். ரகசியங்கள் எதுவும் அறிந்திராத அந்தப் பிஞ்சு உள்ளங்கள் மட்டும் அந்த அலைகளில் நீந்தின.

"நீ என்ன யோசனை பண்றே, உம்மாச்சு?" மாயன் கேட்டான்.

உம்மாச்சு ஏதுமில்லையென்ற பாவனையில் தலையை மட்டும் அசைத்தாள்.

"யோசிப்பாங்க, யாரும் யோசிக்கத்தான் செய்வாங்க. என்னத்தைச் செய்ய? படகு கவுந்தா நாம ஒண்ணாவே கவுருவோம்!"

"நீங்க என்ன சொல்றீங்க!"

"ஒண்ணுமில்லே."

அதற்குப் பிறகு ஒன்றும் பேசவில்லை.

அப்து அப்போதும் சாய்ப்பறையில்தான் இருந்தான். ஒன்றோ இரண்டோ தடவைகள் நண்பர்கள் அவனைப் பார்க்க வந்தார்கள். உறங்கிக் கிடக்கும் சீட்டுக் கட்டுகளைப் பற்றி அவர்கள் நினைவுபடுத்தினார்கள்.

"நீங்க போங்க, நான் வரல்லே."

"என்னப்பா? சாப்புண்ணியார் உன்னைக் கட்டிப் போட்டுட்டாராக்கும்?"

"யாரும் கட்டிப் போடலே; நானாவே கட்டிக்கிட்டேன்."

"ஏன்?"

"பெறந்திருக்கேனில்ல, அதனாலேதான்."

"அந்தக் கட்டு எல்லா மனிசங்களுக்கும் உள்ளதுதானே?"

"ஆமாம், நீங்க போங்க."

"தினமும் இல்லேல்ல. எப்பவாச்சும் ஒருநாள் நாலு தரம் கலச்சிப் போட்டா ஒரு குஷிதானே!" - மற்றொரு நண்பன் உற்சாகப்படுத்தினான்.

"எனக்கு இஷ்டமில்லே. காத்திருக்க வேணாம்."

அவர்கள் அதற்குப் பிறகு காத்திருக்கவில்லை. அப்து அறைக்குள் அங்குமிங்கும் நடந்தான். யோசனைகள் கூடிக் கலந்தன. புலப்படாததும் கூர்மையானதுமான எண்ணங்கள். எப்போதும் நெஞ்சில் நீறு பூத்த நெருப்பாக இருந்தது. அதில் என்னவெல்லாமோ எரிந்து கொண்டிருந்தது. மொத்தத்தில் அவன் தலை புகைந்தது. அவன் சட்டை மாட்டிக்கொண்டு வெளியே போனான்.

அவசரமான ஒரு காரியத்திற்காகப் போவது போல அப்து வேகமாக நடந்தான். இடைவழிகளினூடே குறுக்கும் நெடுக்குமாக நடந்து போய்ச் சேர்ந்தது சாப்புண்ணி நாயரின் வீடுதான். முற்றத்தில் யாருமில்லை. காலடிச் சத்தம் கேட்டு லட்சுமியம்மை வெளியே தலை நீட்டிப் பார்த்தாள்: "அடடே, அப்துவா? என்ன?

"இங்கே இல்லே?"

"இல்லே. கொஞ்ச நேரத்திலே வந்திருவாங்க. இருப்பா."

அப்து பெஞ்சியில் உட்கார்ந்தான். அடுத்துக் கிடந்த ஒரு புத்தகம் எடுத்துப் பார்த்தான்: 'விருதன் சங்கு.' சின்னம்மு ஓய்வுக் கால வாசிப்புக்குக் கொண்டு வந்த புத்தகம். அப்து அலட்சியமாக அந்தப் புத்தகத்தின் தாள்களைத் திருப்பிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

# 14. ஒரு வெள்ளை முயல்

பஞ்சு தண்ணீரில் மூழ்கியதுபோல் ஆனான் ஹஸ்ஸன் -- பருத்துவிட்டான். குழிந்திருந்த கன்னங்கள் உருண்டு திரண்டன. மார்பு அகலமாயிற்று. காலிலும் கையிலும் ஒரு திரட்சி. உலர்ந்து சுருங்கியிருந்த ஒரு வாழைக்கு புது மழை கிடைத்தது போல! பிழைப்பதற்கு ஒரு வழியும் இல்லாமல் வறண்டு கிடந்த அந்த இளைஞனின் வாழ்க்கையில் மாயனின் காரியஸ்த நிலை புதிய ஈரத்தைச் சேர்த்தது.

தோட்டத்தில் தேயிலை பறிக்கும் பெண்கள் பேசிக் கொண்டார்கள், 'ஐயா இப்போ வாட்டசாட்டமாயிட்டாரு' என்று.

அது சரியாகத்தான் இருந்தது. மாயனின் கிளை வியாபாரமான மலைச்சரக்கு வியாபாரம் அப்போதும் நடந்து கொண்டிருந்தது. லாபத்தில் சிறியதொரு பங்குதான் மாயனுக்கு அனுப்ப வேண்டியிருந்தது. உண்மையில் முக்கிய வியாபாரமாக இருந்தது தங்கம்தான். தங்கச் சுரங்கத்தின் இருட்டுதான் அவர்களின் மடிசீலையை நிரப்பியது. அதற்குத் தேவையான ஏற்பாட்டை மாயன் செய்து வைத்திருந்தான். அதை அனுசரித்துச் செயல்பட வேண்டியது ஒன்றுதான் ஹஸ்ஸனுக்கு வேலை. இதற்கிடையே சில மாற்றங்கள் நிகழ்ந்தன. கூட்டாளியாக இருந்த தட்டான் மலேரியா காய்ச்சலால் வாய்ப்பட்டு ஈரல் வீங்கிச் செத்தான். தேயிலைத்தூள் வியாபாரிபோல் ஏய்த்துப் பிழைத்த நாயருக்குப் புதிய பார்ட்டிகளின் தொடர்பு ஏற்பட்டது. அந்த இரகசியக் கம்பெனியைப் பொருத்தவரை அந்த மாற்றங்கள் கனத்த அடிகளாக இருந்தன. என்றாலும் ஹஸ்ஸன் அதைத் தாங்கிக்கொண்டான்.

'ஆனாலும் இதைக் கைவிட முடியாதல்லவா?' என நினைத்து அவன் புதிய கூட்டாளிகளைத் தேடிக்கொண்டான். அதன் பலனாக மஞ்சேரிக்காரனான ஒரு தட்டான் பதுங்கலாக மலை ஏறி வந்தான். நிலம்பூர்க்கார ஒரு நாயர் தேயிலைத்தூள்

வியாபாரியானான். அவ்வாறு ஹஸ்ஸன் வியாபாரத்தில் முன்னுக்கு வந்தான். இயற்கை ஒளித்து வைத்த பொன் துகள்கள் இரகசியமாக மஞ்சேரி கடைக்கும், அங்கிருந்து கோழிக் கோட்டுக்கும், அராபியர்கள் மூலமாக வெளிநாடுகளுக்கும் போக வழி ஏற்பட்டது. அப்படி தங்கம் கடல் கடந்தபோது பணம் மலை ஏறிற்று. உருவ மாற்றத்தோடு சுற்றிச் சுழலும் அந்த சக்தி இரகசியமாக இயங்கியது.

"ஆட்டம் முடிஞ்சி போச்சின்னுதான் நான் நெனச்சேன். ஆனா ஆண்டவன் ஒரு வழி காமிச்சி காப்பாத்திட்டான்!" -- ஹஸ்ஸன் மாயனிடம் சொன்னான்.

"உம்..ம்." -- மாயனும் அதை ஒப்புக்கொண்டான். ஹஸ்ஸன் நடுநடுவே மாயனைக் காண வந்துகொண்டிருந்தான். அப்போ தெல்லாம் முந்திரிப் பருப்பு, பேரீச்சம்பழம், கோழி முதலான பரிசுப் பொருட்களைக் கொண்டு வந்தான். பின்னர் தோட்டக் காரர்களை வசப்படுத்தி கொஞ்சம் தேயிலைத்தூளும். அது உம்மாச்சுவுக்கான பிரத்யேகக் காணிக்கை! காட்டமான தேநீர் குடிப்பதில் அவளுக்கு ரொம்பவும் விருப்பமிருந்தது.

"ஆம்பிளைகளுக்கு வலுவும், சாயாவுக்கு காட்டமும்தான் முக்கியம். என்ன?"

"ஆமாம்." ஹஸ்ஸன் ஒத்தூதினான். "காட்டம் இல்லாதது ஒங்களுக்குப் பிடிக்காதுன்னு எனக்குத் தெரியும்".

"அப்பிடித்தான். ஹஸ்ஸன், ஒனக்கு இந்த யோசனை வந்தது நல்லதாப் போச்சி!"

அப்படி அவன் பரிசுப் பொருட்களைக் கொண்டு வருவது உம்மாச்சுவுக்கு மிகவும் விருப்பம். அந்தப் பொருட்களின் விலை அல்ல முக்கியம். அதைப் பற்றிப் பத்துப் பேரிடம் சொல்லலாம்; மாயனுக்கு வயநாட்டில் உள்ள வியாபாரத்தைப் பற்றியும் செல்வாக்கைப் பற்றியும் பெருமை பேசிக் கொள்ளலாம். கணவனின் சமூக அங்கீகாரம் பற்றிப் பெருமை பேசாத பெண்கள் இருக்கிறார்களா? அதெல்லாம் தங்களுடைய சாமர்த்தியத்தினால் தான் என்றொரு கற்பனை செய்துகொள்ளலாம் அல்லவா? அவள் அந்தப் பேரீச்சம்பழத்திலும், முந்திரிப் பருப்பிலும் கொஞ்சம், கொஞ்சம் சில சமயங்களில் கோழியும், சாப்புண்ணி நாயருக்குக் கொடுத்தனுப்புவாள்.

"இது யாருக்கு?" -- மாயன் கேட்பான்.

"நம்ம சாப்புண்ணியாருக்கு. அவரு குடும்பத்தாட்களும் அனுபவிக்க வேணாமா?"

"உம்."

இதனால் இரண்டு பலன்களுண்டு என்று உம்மாச்சுவுக்குத் தெரியும். ஒன்று, சாப்புண்ணி நாயரை மகிழ்விக்கலாம். இரண்டு, லட்சுமியம்மை இதைப் பற்றிப் பிரசங்கம் செய்வாள். மற்ற பக்கத்து வீட்டுக்காரர்களுக்கும் கொஞ்சங் கொஞ்சம் கொடுத்துக் கொண்டுதான் இருந்தாள். ஆனால் தேயிலைத்தூளை மட்டும் எப்போதும் தரமாட்டாள். காட்டமுள்ளது தனக்கென்றும், இனிப்பும் மென்மையும் கொண்டது மற்றவர்களுக்கென்றும் பிரித்து வைப்பது அவளுடைய இயல்பாயிருந்தது.

"ஹஸ்ஸனே!" -- தலையைச் சொறிந்துகொண்டு நிற்கும் ஹஸ்ஸனிடம் மாயன் கேட்டான்: "ஏதானாலும் இப்போ தடங்கல் தட்டுப்பாடு ஒண்ணும் இல்லேல்ல?"

"இல்லேண்ணே!"

"கவனமா இருக்கணும். இப்போ இருக்கிற இன்ஸ்பெக்டரு கொஞ்சம் கெடுபிடின்னு கேள்விப்பட்டேன்."

"ஆமா."

"அதான் சொன்னேன், ஆனையைத் திருடினாலும் அடுத்த ஆளுக்குத் தெரியக்கூடாது. அதுதான் திறமை."

"நானும் கவனமாத்தான் இருக்கேன்."

அப்படி அந்தச் சந்திப்பு நேரங்கள் முடிவடைந்து திரும்பி வயநாடு போகும்போது ஹஸ்ஸன் கொஞ்சம் கூடுலாக பலம் பெற்றதுபோல் தோன்றும்; மாயனுக்கும் அவனால் சற்று கூடுதலான திருப்திதான்.

"கருத்தான எளவட்டம்தான்!" -- மாயன் சொல்வதுண்டு.

"நெசந்தான்! அந்த அகம்மதுண்ணியோட போக்கிரித்தனம் எதுவும் இவங்கிட்டே கிடையாது." - உம்மாச்சு ஒப்புக்கொண்டாள்.

ஹஸ்ஸனைப் பொருத்தவரை நல்ல முன்னேற்றம்தான். தேயிலை பறிக்கும் பெண்கள் சொன்னது போல, நினைத்துப் பார்க்க முடியாத அளவு அப்போது அவன் அங்கே பிரபலமாகி

விட்டான். பந்தலூர்ப் பகுதியில் எல்லோரும் அவனை அழைத்தார்கள். மாயனோடே ஹஸ்ஸன் நான்கு பேருடன் சமதையாகச் செல்லவும், நான்கு விஷயங்களைப் பற்றிப் பேசவும் தக்கவனென்று ஒரு பொதுஜன அபிப்பிராயம். தோட்டத்தில் வெள்ளைக்கார துரையைக் கண்டாலும் நீட்டி வளைத்து ஒரு சலாம் வைக்க இன்று அவனுக்கு தைரியமுண்டு. பதிலுக்கு சலாம் கொடுப்பதான பெருந்தன்மையும் வெள்ளைக்கார துரைக்கு இருந்தது. மடியில் கனமிருந்தாலும் அவனுக்கு வழியில் பயமில்லா திருந்தது!

மாயன் தொடக்கி வைத்த வீட்டு வேலையை ஹஸ்ஸன் முடித்து வைத்தான். செதுக்கிச் சரிசெய்து, வண்ணம் தீட்டி வராந்தாவில் போடப்பட்டிருந்த பெஞ்சியின்மேல் கால் விரித்து உட்கார்ந் திருக்கும்போது ஹஸ்ஸனுக்குத் தோன்றும்: 'இந்த வாழ்க்கை அப்படி ஒண்ணும் மோசமில்லே.'

ஒரு சிறு முயற்சி சில சமயம் பெருவெற்றியாகலாம்; சில சமயம் அதுவே தோல்வியுமாகலாம். எதிர்பாராமல்தான் இதெல்லாம் நடப்பது. அப்படி ஒன்று நடந்தது ஹஸ்ஸனின் வாழ்க்கையிலும். நல்ல நிலா காயும் இரவு. கோடைப்பனியால் சிகரங்கள் மூடி தெளிவில்லாமல் தென்படும் மலை வரிசைகளை உற்றுப் பார்த்துக்கொண்டு வராந்தாவில் அவன் உட்கார்ந்திருந்தான். சட்டென்று அவனுக்கு அந்த யோசனை தோன்றிற்று. அதாவது வேட்டையில் இறங்குவது. ஒரு சின்ன வேட்டை. நல்ல நிலா காயும்போது தலையில் ஒரு கறுத்த துணியால் மூடிக்கொண்டு, தேயிலைத் தோட்டத்தின் நடுவிலூடே போகும் வெளுத்த வழியருகில் காவல் இருப்பது. ஒரு கனத்த குறுந்தடியைக் கையில் வைத்திருக்க வேண்டும். அப்படி ஒளிந்திருக்கும்போது தெரியும், ஒரு நீளப் பருத்திப் பொதி துள்ளி ஓடுவது. ஒரு அடி. ஒரு அலறல் கேட்கும். அன்றைக்கு நீங்கள் முயல் கறியின் சுவை பார்க்கலாம்.

அன்றைய நிலவைப் பார்த்தபோது ஹஸ்ஸன் முயல் இறைச்சியைப் பற்றி யோசித்தான். சுவர்ப் பொந்தில் செருகி வைத்திருந்த குறுந்தடியைக் கையில் எடுத்தான். கறுத்ததொரு துணியை எடுத்து தலையில் கட்டிக்கொண்டு நடந்தான். ஒரு சன்னமான சீழ்க்கை ஒலியுடன் தேயிலைத் தோட்டத்தின் எல்லை நோக்கிச் சென்றபோது உலகத்தைப் பற்றி மிகவும் நல்ல அபிப்பிராயமிருந்தது ஹஸ்ஸனுக்கு. அவன் ஒற்றையடிப்

பாதையினூடே நடந்து ஒரு முச்சந்திப் பாதையை அடுத்துப் பதுங்கியிருந்தான். தேயிலைத் தோட்டத்திலிருந்து கிளம்பும் எந்த அரவத்தையும் கேட்க முடிந்த வகையில் காதைத் தீட்டிக் கொண்டான். மலைச்சரிவுகளில் குடிசைகளிலிருந்து பெண்கள் பரஸ்பரம் திட்டிக்கொள்வதுண்டு. அது அப்படி மேலே மேலே உச்சத்துக்குப் போகும்போது ஒரு முரட்டு ஆண்குரல் அதை அடக்கி வைக்கும். நடுவே ஒரு குழந்தையின் அழுகை. அது முடியும்போது ஒரு நரியின் ஊளை. இம்மாதிரிச் சத்தங்களுக்குப் பழகிப்போன ஆள்தான் ஹஸ்ஸன். அந்தச் சத்தங்களுக்கிடையில் ஒரு முயல் அசைவதைக் கண்டுபிடிப்பது கஷ்டமல்ல. அவன் காத்திருந்தான்.

"இண்ணிக்கு மொயல் குட்டிங்கள்ளாம் சீக்கிரமே பொந்துக்குள்ளே அடங்கிரிச்சா?" - சிறிது வேடிக்கையாகவே ஹஸ்ஸன் நினைத்துப் பார்த்தான். அதற்குப் பிறகும் காத்திருந்தான்; ஒண்ணு - ரெண்டு - மூணு. நிமிடங்கள் அப்படியே பறந்துகொண்டிருந்தன. திடீரென்று ஒரு முனகல்.

"ஹே!" -- ஹஸ்ஸன் திடுக்கிட்டான்.

மீண்டும் அந்த முனகல் கேட்டது. மற்று எதுவாக இருந்தாலும் அது முயலல்ல. அந்தத் தேயிலைச் செடிகளுக்கு இடையிலிருந்து அப்படி ஒரு முனகல் வருவதாக இருந்தால்? உன்னிப்பாகக் கேட்டான்.

"ஆ...அம்மா....ஆ...அய்யோ...ஆ..."

என்னது! மனிதக் குரல்? தேயிலைச் செடிகளுக்குள்ளிருந்து மனிதக் குரல்! மின்னல் வேகத்தில் பல சிந்தனைகள் அந்தச் சிறிய மூளையினூடே வந்து போயின. சைத்தான், கொல்லிப் பாவை, ஆவி, இல்லாட்டி பிசாசோ?

"ஆவ்...ஆ...அம்மா...ஆண்டவனே!..."

சைத்தானோ பிசாசோ ஆண்டவனைக் கூப்பிட்டு அலறாது. கொல்லிப்பாவையானாலும் அப்படித்தான்.

"ஓ...என் தெய்வங்களே..."

தெய்வத்தைக் கூப்பிடுகிறது! நிச்சயமாக அது ஒரு மனிதக் குரல்தான். யாரது? எங்கிருந்து வருவது? கிழக்கிலிந்தா, மேற்கிலிருந்தா?

"யாரது?" -- ஹஸ்ஸன் சற்று உரக்கவே கேட்டான்.

"ஹாவ்...என் தெய்வமே!"

அதே முனகல்தான். சிறிது நேரம் காத்திருந்தான்; பதிலில்லை.

"யாரது, கூப்டறது கேக்கலே?" -- மீண்டும் ஹஸ்ஸனின் கேள்வி. இவ்வளவு ஆன பிறகு அந்த முனகல் நின்றது.

"யாருன்னு கேட்டா வாயைத் தெறந்து சொன்னான்னே?"

நிசப்தம்.

"இதொரு அதிசயமில்ல!" ஹஸ்ஸன் இருப்பிடத்திலிந்து எழுந்து மெல்ல நடந்தான். குறுந்தடியை உயர்த்தி இறுக்கிப் பிடித்துக் கொண்டான். ஒற்றையடிப் பாதையினூடே ஓரமாக நடந்தான். பத்தடி நடந்திருக்க மாட்டான்; அதற்குள் ஒரு சலனம்; அந்த முனகலும்!..."ஹாவ்...அய்யோ!.."

"யாரது?" - கொஞ்சம் தணிவான குரலில் அந்தக் கேள்வி கேட்டான் ஹஸ்ஸன்.

"இந்தப் பக்கம் வராதீங்க!" பதில் வந்தது. வலியால் துடிக்கும் ஓர் உயிரின் குரல்!

"ஏன்?"

"வ - ரா - தீ - ங் - க!"

"ஏ?"

"ஹா...அய்யோ..."

"என்னண்ணுதான் கேட்டேன். முடிஞ்சதைச் செய்யலாம்னு நெனச்சிதான் கேக்கறேன்."

"பிரசவம்..."

ஹஸ்ஸன் நடுங்கிப்போனான். அவன் வேறெதையோ எதிர் பார்த்துக்கொண்டிருந்தான். ஒரு கொலைபாதகம் நடந்துவிட்ட தென்று சொல்லியிருந்தால்கூட இவ்வளவு பரபரப்பு ஏற்பட்டிருக் காது. ஒரு பிரசவம். தேயிலைச் செடிகளுக்கு நடுவிலா பெண்கள் பிரசவிப்பது?

"ஹா...கடவுளே...!" தேம்பி வந்த அழுகை விசித்து விசித்து வந்தது.

"யாராச்சும் பொம்பளைங்க இருந்தா கூப்பிடுறேன்."

அதற்கு பதில் ஏதும் வரவில்லை. அதற்குப் பிறகு ஹஸ்ஸன் அதிக நேரம் காத்திருக்கவில்லை. மேல்புறத்திலிருந்த சேரி நோக்கி

ஒரு ஓட்டம். அங்கே குடுமிப் பிடி சண்டை. மூன்று மனைவிமார்களும் ஒரு கணவனும் கூடியிருந்து அந்த களேபரம் உருவாகியிருந்தது.

"நிறுத்துங்க!"

யாரும் கேட்டபாடில்லை. ரகளை தொடர்ந்தது.

"நிறுத்துங்களேன்." - ஹஸ்ஸன் உரத்துக் கத்தினான். நாக்கு அறுந்து போன கண்டாமணிகள் போல ஆனார்கள் அந்தப் பெண்கள். கணவனும் ஒரு முறை தலை நிமிர்ந்து பார்த்தான்.

"என்னா?"

"பிரசவம்."

"என்ன...என்ன?...என்னது?-" மூன்று பெண்களும் ஒரே சமயத்தில் கேட்டார்கள். ஹஸ்ஸன் அவர்களிடம் விவரத்தைச் சொல்லிப் புரிய வைத்தான். பெண்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள், 'அப்படீன்னா சண்டையை நாம பின்னாலே வச்சிக்கலாம்' என்ற அர்த்தத்தில். ஹஸ்ஸன் காட்டிய வழி பின்தொடர்ந்து விளக்கெடுத்துக்கொண்டு அந்தக் கணவனும் சென்றான்.

"எங்கேய்யா?"

"இதா, இங்கேதான்."

அந்தப் பெண்கள் விளக்கும் கையுமாகத் தேயிலைச் செடிகளுக்கு ஊடாக நடந்தார்கள். ஆண்கள் தள்ளி நின்று பாரா இருந்தார்கள்.

"யாரு அவ?" ஆண் கேட்டான்.

"யாருக்குத் தெரியும்!" ஹஸ்ஸன் பதில் சொன்னான்.

"அப்போ ஒங்க ஒறவுக்காரங்க இல்லியா?"

"என்னதா? தேயிலைச் செடிக்குள்ளேயா என் பொம்பிளைங்க?"

அதற்குப் பிறகு அந்த ஆண் எதுவும் பேசவில்லை. முனகல் அதிகமாகிக்கொண்டே வந்தது : "என் தெய்வமே!.. எனக்குத் தாங்க முடியலியே!"

பெண்களில் ஒருத்தி ஓடி வந்து கேட்டாள் : "எங்கே கொண்டு போறது?"

"யாருன்னு தெரிஞ்சதா?"

"என்ன பேருன்னு சொன்னா"

"ஆமினா"

"எந்த ஆமினா?"

"மேல வீட்டுக்குக் கெழக்கே வீடிருக்கில்ல..."

"அப்படியா?" யோசித்தபடி ஆண் கேட்டான்.

"எங்கே கொண்டு போறது?" -- பெண்.

"இப்போ கொண்டு போக முடியுமா?" - ஹஸ்ஸன் இடையில் புகுந்து கேட்டான்.

"அதெல்லாம் முடியும். ஆனா, எங்கே போறது?"

ஹஸ்ஸன் ஒரு நிமிடம் ஏதும் பேசவில்லை. தன் வீட்டில் பெண்களில்லை; யாருமில்லை. அந்த நிலையில் தன் வீட்டுக்குக் கொண்டு போனால்? வந்த கேள்விக்கு யாரும் பதில் சொல்ல வில்லை. யோசித்துக் கொண்டிருக்க நேரமில்லை. ஒரு பெண்ணுக்கு பிரசவிக்க இடம் வேண்டும்.

"நம்ம வீட்டுக்கு."

"சரி." -- பெண் இதைச் சொல்லிவிட்டு தேயிலைக் குண்டுகளுக்கு ஊடாக நடந்தாள். சிறிது கழிந்த பிறகு மூன்று பெண்களும் கூடி, பிரசவிப்பதற்காக அல்லாடிக் கொண்டிருந்த அந்தப் பெண்ணைத் தாங்கி எடுத்துக்கொண்டு வந்தார்கள். ஹஸ்ஸன் முன்னால் நடந்தான்; அவர்கள் பின்னால் நடந்தார்கள்.

"யாரு இந்த ஆமினா? ...நிலம்பூராயிருக்குமோ?.... மஞ்சேரி யாயிருக்குமோ?...... இல்ல, குண்டோட்டியோ?... எந்த ஊர்க்காரியா இருந்தா நமக்கென்ன?" அவன் காலடி எட்டி எட்டி வைத்தான். மொத்தத்தில் எரிச்சலும் கோபமும் அவனை ஆட்கொண் டிருந்தன. "நாம எதுக்காக அந்த நேரத்திலே அங்க போய்ச் சேர்ந்தோம்? கர்மம்! இந்தத் தொந்திரவெல்லாம் எனக்கில்ல வந்து சேருது!"

ஆனால் இப்போது மறுப்பு தெரிவிப்பதில் பயன் ஒன்றுமில்லை. ஆமினா தன் வீட்டிற்கே வந்துவிட்டாள். ஏகாந்தமான அந்த வீட்டில் ஒரு மண்ணெண்ணெய் விளக்கு மட்டும் நடுங்கியபடி எரிந்துகொண்டிருந்தது. ஆண்கள் வராந்தாவில் நாடியில் கையை முட்டுக் கொடுத்து உட்கார்ந்திருந்தார்கள். அந்தப் பெண்களு டைய கணவன் அவ்வப்போது ஒவ்வொரு பீடியாகக் குடித்தான்.

"ஆண்டவனே! தேவதைங்களே! காப்பாத்துங்களேன்!" நரம்புங் களைக் கிழிக்கும் அந்த அழுகை ஹஸ்ஸனின் . காதில் வந்து மோதியது. எவ்வளவு நேரம்தான் இதைக் கேட்டுக் கொண் டிருப்பது! கேட்காமல் என்ன செய்ய முடியும்? அங்கிருந்து மனதைப் பறித்தெடுக்க முயன்றான். அவன் மெதுவாக அடுத்திருந் தவனிடம் கேட்டான் : "தெரியுமா?"

"தெரியும்."

"எந்த ஊர்க்காரி?"

"மஞ்சேரி."

"அப்படியா!"

"ஆமா."

"ரொம்ப நாளாச்சா இங்கே வந்தது?"

"அது ஒரு பெரிய கதையாச்சே!"

"என்னது?"

இரகசியம் சொல்லும் குரலில் அவன் கதை சொன்னான் : "அவளோடே தகப்பன் ஒரு போக்கிரியா இருந்தான். நாலு கொலை பண்ணினான். ஆனா போலீசு எவ்வளவு முயற்சி பண்ணியும் அந்தக் கொலைகளுக்கான துப்பு துலக்க முடியலே. அவ்வளவு பெரிய போக்கிரி."

"உ-ம்." -- ஹஸ்ஸன் கவனமாகக் கேட்டான்.

"அவனுக்கு மூணு பெண்ணுங்களும் ஒரு பையனும். எல்லாரும் வளந்திட்டாங்க. ரெண்டாவதுதான் பையன்."

"அவன் எங்கே?"

"கடவுளுக்குத்தான் தெரியும். அவன் சின்ன வயசிலேயே ஓடிப் போய்ட்டான். ஒரு பொண்ணைக் கட்டிப் போய்ட்டான்."

"அப்படியா?"

"இவளோடே தகப்பனுக்கு எப்பவும் ஒரு விவகாரம் இருந்துகிட்டே இருக்கும். வேலி தாண்டி மரம் வெட்டினதும், வரப்பு வெட்டினதும், அடிதடி நடத்தினதுமாக அனேகம் கேசுகள் எப்பவும் கோர்ட்லே இருந்துகிட்டே இருக்கும். அந்த மனிசன் கேசுகளோட கட்டி உருண்டான். கோர்ட்டு ஏர்றதும் எறங்கறதும் வேகவேகமா நடக்கிறதுக்கு மத்தியிலே, சொத்து ஒவ்வொண்ணா

மத்தவங்க கைக்கு மாறிடிச்சி. சுருக்கமாச் சொன்னாப் போதுமில்ல, குடும்பம் முடிஞ்சது.

"முழுசா நொடிச்சிரிச்சா?"

"தரைமட்டமாயிரிச்சி! இந்த நெலமையிலே அவனுக்கொரு தீராத வியாதியும். அதுக்கு வைத்தியம் பாத்துப் பாத்து மிச்சக் காசும் போச்சு."

"அப்புறம்"

"செத்திட்டான். ஆக மிச்சம் மீதி இருந்தது மூணு பெண்ணுங்களும் அடகு வெச்ச ஒரு வீடு மட்டும்தான். வீடும் பின்னாலே போயிரிச்சி. மூணு பெண்ணுங்களும் நடுத் தெருவிலே."

திடீரென்று உள்ளே இருந்து ஒரு நீண்ட அலறல் கேட்டது. "ஓ. என் தேவதைங்களே!...." ஹஸ்ஸனும் நண்பனும் நிசப்தமானார்கள். ஒரு வினாடி பரபரப்பு. மீண்டும் நிசப்தம்.

"என்னாச்சி?" உள்ளுக்குள் தலை நீட்டி ஒரு கேள்வி.

"ஒண்ணுமில்லே." -- உள்ளே இருந்து பதில். மீண்டும் நிசப்தம்.

"அப்படீன்னா அந்தப் பொண்ணுங்க அதுக்குப் பெறகு என்ன ஆனாங்க?" -- ஹஸ்ஸன் தாழ்ந்த குரலில் பேச்சைத் தொடர்ந்தான்.

"என்ன ஆவாங்க! ஒரு வாடகை வீட்டிலே இருந்தாங்க. எதுக்காகண்ணு தெரியலே. அந்த வீட்டுக்காரன் கொஞ்ச நாள் கழிச்சி காலி பண்ணச் சொல்லிட்டான்."

"அப்புறம்."

"நாயா அலஞ்சாங்க. இவ இளையவ. மூத்தவங்க எங்க போனாங்களோ என்னமோ!"

"எப்படி இங்கே வந்து சேந்தா?"

"கெழக்கே சேரியிலே மேஸ்திரி கூட்டி வந்தான். அவனுக்கு இது நாலாவது பொம்பிளே."

"நாலாவதா!"

"தோட்டத்துக் கதையே வேறெ! ஆரம்பத்திலே கொஞ்ச நாள் சொகமாத்தான் இருந்தது. பின்னே எல்லாருடைய கூட்டத்திலே அவளும். பெண்ணுங்கன்னா சச்சரவில்லாமே முடியுமா?"

"இல்லே. அப்புறம்?"

"அப்போ ஆணுங்களுக்கு அடிக்காமே மிதிக்காமே இருக்க முடியுமா?"

"ஆமாமாம்."

"அதெல்லாம் நடந்திச்சி. அப்படியே இருந்தாங்க. பெறகு நடந்த கதை எனக்குத் தெரியாது."

"அய்யோ...என் கடவுளே...தேவதைங்களே...ஆ!..."

....அந்த அலறலில் அறையின் முகப்புக் கூரை குலுங்கிற்று. பிறகு நிசப்தம்.

"என்ன?"

"என்னாச்சி?"

இரண்டு ஆண்களும் ஒரே சமயத்தில் கேட்டார்கள். உள்ளே இருந்து எந்த பதிலும் கிடைக்கவில்லை. பரபரப்பான நடமாட்டம். காத்திருப்பதைத் தவிர வேறு வழியில்லை.

"பெத்துட்டா!" -- திடீரென்று ஒருத்தி வெளியே தலை நீட்டிச் சொன்னாள்.

"ஹே!" - ஹஸ்ஸன்.

"ஆண் கொழந்தே!"

"ஆமினா?"

"விசேசமா ஒண்ணுமில்லே."

அப்பாடி! இரண்டு ஆண்களும் அமைதியாய் மூச்சுவிட்டார்கள். ஒரு நிமிடம் கழிந்ததும் ஒரு புதிய உயிரின் அழுகைக் குரல் கேட்டது. ஹஸ்ஸன் சுற்றிலும் பார்த்தான். நேரம் வெளுத்து விட்டதோ என்று ஒரு சந்தேகம்.

"நேரம் எத்தினியாச்சி?" -- ஹஸ்ஸன் கூட்டாளியிடம் கேட்டான்.

"பத்து நாழிக கழிஞ்சிருக்கும். மில்லிலே ராத்திரி வேலை முடிஞ்சிருக்கு."

அதற்குப் பிறகு இருவரும் எதுவும் பேசிக்கொள்ளவில்லை. ஹஸ்ஸனின் இருதயத்தில் ஓராயிரம் கேள்விகள் படம் விரித்து வந்தன. இந்தப் பெண்ணை என்ன செய்வது? எப்படி இருக்கச் சொல்வது? இல்லை, எப்படி வெளியே போகச் சொல்வது? இந்தப் பிஞ்சுக் குழந்தையையும் தூக்கிக்கொண்டு வெளியே போக

முடியுமா? இருக்கச் சொன்னால் அப்புறம் கதை என்னாகும்? இப்படி எத்தனை பெண்களைத் தேயிலைத் தோட்டத்தில் தேயிலைக் கசடு போலத் தூக்கி எறிகிறார்கள்! இதிலெல்லாம் தனக்கு என்ன பொறுப்பு? எப்படிப் பார்த்தாலும் இது பெரிய குழப்பம்தான். எதற்காக மனிதர்கள் இப்படியெல்லாம் ஆகிறார்கள்?

"ஒரு மொயல் கெடைக்குமான்னு பாக்கப் போனதுக்கு கெடச்ச பரிசு!"

இந்த சிக்கலில் மாட்டிக் கொண்ட தன் புத்திக்குறைவைக் குறித்து தனக்குத் தானே புலம்பிக் கொண்டிருந்தான் ஹஸ்ஸன். அவன் அந்த ஆளிடம் கேட்டான் :

"இனிமே இப்போதைக்கு என்ன செய்யலாம்?"

"கொஞ்சம் சூடான காப்பி போட்டுக் குடுத்தா நல்லா இருக்கும்."

ஹஸ்ஸன் ஒன்றும் பேசவில்லை. மீண்டும் அவன் சிந்தனை வசப்பட்டான்.

"பால் இல்லேன்னாலும் பரவாயில்லே; கடுங்காப்பியானாலும் போதும்."

"சும்மா இருங்க." -- அதைத் தவிர வேறு என்னதான் சொல்வதென்று ஹஸ்ஸனுக்குத் தெரியவில்லை. வருவது வரட்டுமென்று ஒரு வழியாய் அங்கேயே உட்கார்ந்துவிட்டான்.

"ஹஸ்ஸனே!..." வாசல் முற்றத்திலிருந்து ஒரு குரல். ஹஸ்ஸனின் வயிற்றில் புளியைக் கரைத்தது.

"ஹாரு?"

"நான்தான், ஹஸ்ஸனே!"

"ஹாரு? மாயன் அண்ணனா!"

மாயன் வாசற்படியில் ஏறினான். ஹஸ்ஸன் விறைத்துப் போனான். ரப்பில் ஆலமீனாய தம்பிரானே!

# 15. புயலில் சிக்கிய வீடு

வெளியிலிருந்து பார்த்தால் யாருக்கும் உம்மாச்சுவின் வீடு அழகும் அமைதியும் பொலிந்ததாகத் தோன்றும். உள்ளேயோ? சுழல் காற்றுகள் அடித்து அலைக்கழிக்கும். சாய்ப்பறையில் வைத்து அம்மாவுக்கும் மகனுக்கும் இடையே நடந்த உரையா டலுக்குப் பிறகு தாய் மகனின் முகத்தையோ, மகன் தாயின் முகத்தையோ பார்த்துக் கொள்ளவில்லை. அவள் எப்போதும் அடுக்களையிலோ தன் தனி அறையிலோ இருந்தாள். அதிகமாக யாருடனும் பேசிக்கொள்ளவில்லை. எவருடைய பேச்சு வார்த்தையும் ஆபத்தில்தான் சென்று முடியுமென்று அவளுக்குத் தோன்றிற்று. எந்த நிமிடத்திலும் ஆபத்து மேலே பாய்ந்து விழலாம். யோசித்துக்கொண்டிருப்பதிலேயே அவள் நெடு நேரத்தைக் கழித்தாள். இனி எல்லோரும் ஒன்று சேர்ந்திருப்பது என்பது சாத்தியமா? ஒன்று சேர்ந்திருக்காமல் என்ன செய்வது! கணவனைத் தவிர்ப்பதா? ஓ, என்னவெல்லாம் சகித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது! - உம்மாச்சு தனக்குத் தானே பேசிக்கொண் டாள். மகனைத் தவிர்த்துவிட்டு இருக்கமுடியுமா? அவனுடைய முகத்தைப் பார்த்த பிறகுதானே என்நெஞ்சு குளிர்ந்தது!

இப்படியெல்லாம் வந்து சேர்ந்தது யாருடைய குற்றம்? மாயன்தான் குற்றவாளி என்று ஒரு சமயம் தோன்றும். மற்றொரு சமயம் பீரான்தான் என்று தோன்றும். சரித்திரக்காரரான அகம்மதுண்ணிதான் எல்லாம் வரச் செய்தது என்று சமாதானப் படுத்திக் கொள்ள முயல்வாள். அகம்மதுண்ணியோடு அவருடைய மகன் ஹஸ்ஸன் மீதும் சிறிது நேரம் பகையுணர்வு தோன்றும். 'ஆனாலும் அவரு வேணும்னா செய்தாரு?' அடுத்த நிமிடம் வேறு விதமாக யோசிப்பாள். மகனுடைய துக்க சுபாவத்தைப் பற்றி உள்ளுக்குள் புழுங்குவாள்:

'என்ன இருந்தாலும் அவனைப் பெத்தவ இல்லியா நான்! அப்போ அவன் சொல்றதைக் கேட்டுக்க வேண்டியதுதான்..' உம்மாச்சு பெருமூச்சு விட்டாள். 'ஆனாலும் இளவட்டங்க மூளை

கெட்டுப் போய்க்கிட்டிருக்காங்க!' உடனே உள்ளே இருந்து ஒரு மறுப்புக் குரல் எழுவது கேட்கும். இளமையில் எல்லோருமே மூளை கெட்டுத்தானே போகிறார்கள்? அப்படி மூளை கெட்டுப் போனதால்தானே தனக்கு இந்த ஆபத்துக்களெல்லாம் வந்து சேர்ந்தன? 'ஆனாலும் நான் அம்மா அப்பா சொன்னதைத் தட்டி நடக்கலே. 'ஆனால்,.. கேட்க விருப்பப்படாத கேள்விகளே இருதயத்திலிருந்து பொங்கி வருகின்றன. ஆக மொத்தம் யோசித்துப் பார்க்கும்போது, யாருடனும் எதுவும் பேசாம லிருப்பதே நல்லது. நடக்கிற வரைக்கும் நடக்கட்டும். ஆனால் ஹைத்ரோசும் மரக்காரும் அம்மாவைப் பேசாதிருக்க விடுவதில்லை.

"உம்மாவுக்கு என்னாச்சி ?" - ஹைத்ரோஸ்.

"ஒண்ணுமில்லே, மகனே."

"பின்னே எதுக்காகம்மா எப்ப பார்த்தாலும் மண்ணு தின்ன கோழிக்குஞ்சு மாதிரி தூங்கித் தூங்கி விழறே?"

"ஒடம்புக்குச் சொகமில்லே."

"அப்படீன்னா வைத்தியரு கிட்ட காமிக்கணுமில்ல?"

"ஒண்ணும் வேணாம்ப்பா. நீங்கெல்லாம் சொகமா இருந்தா உம்மாவுக்கும் சொகந்தான், வாப்பாவுக்கும் சொகந்தான்."

"ஒங்களுக்கு இப்போ என்ன ஒடம்புக்கு? இப்படியெல்லாம் பேசிக்கிட்டிருக்கக் கூடாது. வைத்தியரைப் பாக்கணும்."

"வேணாம்."

"வேணும்."

அவன் வைத்தியரை அழைத்து வந்தான். பித்தம் அதிகமாகி விட்டதென்றும், அதற்கு கஷாயமும் கஷாயக் கஞ்சியும் சாப்பிட வேண்டுமென்றும், களிம்பு தடவிக் குளிக்க வேண்டுமென்றும் அந்த வைத்தியர் சொல்லிவிட்டுப் போனார். ஹைத்ரோஸ் உடனே அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான்.

'ஆனாக்க மனசை சொஸ்தப்படுத்த மருந்திருக்கா?'-என்று உம்மாச்சு நினைத்தாள். சிகிச்சை முறைப்படி நடந்தது. உம்மாச்சு எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டாள். சில நாட்கள் கழித்துத்தான் இந்த விவரமே அப்துவுக்குத் தெரிந்தது. அவன் உள்ளே சென்று கேட்டான்: "உம்மாவுக்கு என்ன?"

"ஒண்ணுமில்லே."

"ஓங்களுக்கென்ன ஒடம்புக்கு?"

உம்மாச்சு பதில் சொல்லவில்லை. மகன் மீண்டும் கேட்டான். அப்போதும் அவள் மௌனமாகவே இருந்தாள்.

"உம்மா, ஏன் பேசாம இருக்கீங்க"

"என்ன பேசணும்?" அவளுக்குத் தொண்டை இடறிற்று. "ஆண்டவன் கூப்பிட்டுக் கிடாததனாலே வந்த சுகக்கேடுதான்."

உம்மாச்சு தேம்பித் தேம்பி அழுதாள். அப்து அம்மாவின் கைகளை எடுத்து மடியில் வைத்துக்கொண்டு மௌனமாக இருந்தான்.

"உம்மாவுக்கு நான் இப்போ என்ன செய்யணும்?"

"நீ ஒண்ணும் செய்ய வேணாம். நீ சொகமா இருந்தா அதுவே போதும்."

"எனக்கு இப்போ எந்த சுகக்குறைவும் இல்லே."

"அப்பிடியா? அது போதும்."

அதைத் தொடர்ந்து அப்து அம்மா படுத்திருந்த அறைக்கு அடிக்கடி சென்று உடல்நலம் பற்றி விசாரித்துக்கொண்டான். ஏதோ சில கேட்பான், ஏதோ சிலவற்றிற்கு பதில் சொல்வான். சொல்ல வேண்டியதைச் சொல்லாமல் சொற்களை வெளியேற்றும் போது அவை நிசப்தத்தை அதிகரிக்கவே உதவின. அந்தப் பெண்மணியைச் சுற்றிலும் கனத்த நிசப்தமே சூழ்ந்திருந்தது. ஒரு மீன் தண்ணீருக்குள்ளிருந்து மேல் மட்டத்திற்கு வந்தால் காற்றுக்காக மூச்சுத் திணறுவதுபோல், அந்தப் பெண்மணி ஹைறத்ரோசின் பராமரிப்பின்போது மட்டும் அவ்வப்போது சுத்தக் காற்றை சுவாசித்தாள்.

மாயனும் உம்மாச்சுவின் விஷயங்களில் மிகவும் கவனம் செலுத்தினான். அவன் தளர்ந்த பார்வையால் அவளைப் பார்த்த படி நின்றிருப்பான். அந்தக் கண்களில் வேதனையும் துக்கமும் கலந்திருக்கும். எரிந்து முடிந்த கனல் கட்டைகளைப் போலிருந்தன அந்தக் கண்கள். எரிந்தபோது அவை சுடர்விட்டு எரிந்தன; எரிந்து முடிந்தபோது புகை மட்டுமே வெளிப்பட்டது. காட்டாற்று வெள்ளத்தில் நிலை தடுமாறும் ஒரு தோணி நீர்ச்சுழியால் அலைக்கழிக்கப்பட்டு, அந்த அலைக்கழிப்பின் போது ஆபத்தான

அறிமுகம் தாண்டிக் கடந்து, கடலை அடைந்து சுற்றிச் சுழல்வது போலிருந்தது மாயனின் வாழ்க்கை. எதிர்பார்த்ததற்கு எவ்வளவோ முன்னதாக இலக்கு எட்டப்பட்டுவிட்டது! நினைத்துப் பார்க்காத அளவு வெற்றி வந்து சேர்ந்தாலும் கவலைதான் மிஞ்சியது. கிடைத்தற்கரிய வெற்றி கிடைக்கப் பெற்றாலும்கூட அது வெற்றியாக இல்லை! இலட்சியத்தை அடைவதற்காகச் செய்த சாகச காரியங்களின் காயங்கள் மாத்திரம்தான் இன்று இருதயத்தில் குமிழியிட்டு நிற்கின்றன. காற்றில் அலையும் எந்தப் பூச்சியும் அந்தக் காயத்தில் வந்து உட்கார்ந்து அதை மேலும் மேலும் அதிகமாகச் சீழ் வடியச் செய்கிறது. பீரானின் சோர்ந்த முகம், உம்மாச்சுவின் மௌனம், வேலைக்காரிகளின் ஏளனச் சிரிப்பு, மரக்காரின் அலட்சியப் போக்கு-எல்லாம் அந்தக் காயத்தில் வந்து மோதின; நோகச் செய்தன. உரத்து அழுவதற்கு வழிவிடாத துயரங்கள்.

நினைவுகள் மலை ஈக்களைப் போல ரீங்கரித்துக்கொண்டு இருதயத்தில் மொய்க்கின்றன. முடிவில்லாத ரீங்காரம் காதில் முழங்குகிறது. எல்லாவற்றையும் தட்டித் துரத்த அவன் முயன்றான். ஆனால் அவை விலகிப் போகவில்லை. பல சமயங்களில் கோபம் வந்தது. அந்தப் பழைய காட்டெருமையின் குளம்படி ஓசைப்படாமல் மனதில் தலைதூக்கிற்று: எல்லாத்தையும் பிடிச்சி... சிந்தனை அத்துடன் நின்றது. பிடித்து என்ன செய்ய வேண்டும்? அதை நிச்சயிக்க முடியவில்லை. அத்தகைய நினைவுகளை மனதிலிருந்து களைந்துவிட்டுத் தன் வாழ்க்கையைத் தொடர அவன் விரும்பினான். இருந்தாலும் கடந்த காலத்தின் வீறாப்பும் நம்பிக்கையும் இன்றில்லை. அது மட்டுமல்ல, இப்போதுள்ள கவலைகளே போதுமல்லவா?

ஆனாலும் இந்தப் பரந்த உலகத்தில் வாழ்ந்தாக வேண்டுமே! அவன் தனக்குத் தானே குறுக்கு விசாரணை செய்துகொண்டான். பலவற்றை மனதுக்குள் பேசி முடிவெடுத்தான். தன் ஜீவரத்தம் சொரிந்து கட்டி உயர்த்திய கோட்டைகளையெல்லாம் ஒரே நாளில் இடித்துத் தகர்க்க அனுமதிக்கலாமா? கூடாது! தடங்கல்களைப் பொருட்படுத்தாமல் அப்புறப்படுத்திக்கொண்டு வாழ்ந்தே தீர வேண்டும்.

"எனக்கு இப்போ அப்பிடி ஒண்ணும் வயசாயிறலே, ஆசையும் அடங்கிப் போயிறலே. தொடங்கின வழியிலேயே நடக்க

வேண்டியதுதான். அதுதான் புத்திசாலித்தனம்!" மாயன் முடிவு கட்டினான்.

சட்டென்று உம்மாச்சுவின் முகம் மனதில் நிழலிட்டது. தன்னுடைய வழி சீராகும்போது அவள் மிகுந்திருப்பாளா? அந்தக் குடும்பத்தின் ஏதாவது ஒரு கண்ணி அறுந்துபோனால்கூட அவளுடைய நரம்புகளும் அறுந்துபடும் என்று மாயனுக்குத் தெரியும். உம்மாச்சுவைத் தவிர்த்துவிட்டு ஒரு வழியைக் காண்பது சாத்தியமல்ல. அந்த வழி உம்மாச்சுவின் விருப்பத்திற்கு மாறாக இருந்தால் பின்னே எதற்காக அந்த வழி என்று மாயனுக்குப் புரிந்துகொள்ள முடியவில்லை. உம்மாச்சு யார், அந்தக் குடும்பம் எது என்று பிரித்தறிய முடியாதபடி ஒன்றித்துவிட்டிருந்தது. அந்தக் குடும்பத்தின் விதியை உடைத்து அவளாகவே புதிதாக வார்க்கிறாள்; அவளும் அவளல்லாதவளாகத் தன்னை மாற்றிக் கொள்கிறாள்: ஓ! அதை என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை! மாயன் சிந்தித்தான். சுருக்கத்தில், தான் வேண்டுமா அல்லது உம்மாச்சு வேண்டுமா என்பதுதான் இப்போது பிரச்னை. இந்த விதமாக குத்திக் கிளறும் சிந்தனைகளிலிருந்து ஓய்வு பெறுவதற்காக மாயன் உம்மாச்சுவை அணுகினான்.

"கசாயம் குடிச்சிட்டியா, உம்மாச்சு?"

"குடிச்சிட்டேன்."

"களிம்பு தடவிக் குளிச்சியா, உம்மாச்சு?"

"குளிச்சிட்டேன்."

அதற்குப் பிறகு சிறிது நேரத்திற்கு கேள்வியோ பதிலோ இல்லை. தளர்ந்த நான்கு கண்களும் பரஸ்பரம் மோதிக் கொண்டன. இரண்டு நனைந்தன; இரண்டு மங்கின. மாயன் அவளருகில் கட்டிலில் அமர்ந்தான்.

"சோறு சாப்பிட்டீங்களா?" உம்மாச்சு துயரத்தை அடக்கிக்கொண்டு கேட்டாள்.

"இல்லே."

"ஏன்?"

"சாப்பிடணும்."

"நான் வைக்கிறேன். வாங்க."

"வேணாம்; படுத்துக்கோ."

"சாப்பிடலேண்ணா எந்திரிச்சி நடமாட முடியாதில்ல?"

"போதும் நடமாடினது."

"சும்மா எதையாவது நெனச்சிக்கிட்டு கஸ்டப்படாதீங்க."

மாயன் அவளுடைய கண்களை உற்றுப் பார்த்தான். உம்மாச்சு தலையைத் தாழ்த்திக்கொண்டாள்.

"என்ன?" - மாயன் கேட்டான்.

"ஒண்ணுமில்லே."

"நீயும் ஆரம்பிச்சிட்டியா?"

"என்னது?"

"என்கிட்டவே மூடி மறச்சிப் பேசறது!" - மாயனின் தொண்டை இடறிற்று. அந்த விசாலமான நெஞ்சிலிருந்து ஒரு தேம்பல் முட்டி உருண்டது. அது கழுத்து நோக்கித் தள்ளித் தள்ளி வரும்போது அவன் எச்சிலை விழுங்கினான். அதற்கிடையில் உடைந்து சிதறிய வார்த்தைகளினால் அவன் சொன்னான்:

"உம்மாச்சு, நான் செஞ்சதெல்லாம் பைத்தியக்காரத்தனமாவே இருக்கலாம்; ஆனாலும் அந்தப் பைத்தியக்காரத்தனத்துக்குக் காரணமே நீதான். இருந்தாலும் அது ஒன்னோட குத்தமில்லே.. என்னோடே குத்தம்தான். நான் ஒனக்காக...ஒனக்காக..சாகக்கூடத் தயாரா இருக்கேன், உம்மாச்சு!..." அதற்கு மேல் அவனால் பேச முடியவில்லை.

"ஓ... என்னோடே இப்பிடியெல்லாம் பேசாதீங்க! என் தங்கமே!.. " உம்மாச்சு மாயனின் மாரில் தலை சாய்த்தாள். இருவரும் கட்டிப் பிடித்துக்கொண்டு அழுதார்கள். நீண்ட நேரம். அந்த அழுகையை நிறுத்த உம்மாச்சுவுக்குப் பெரும்பாடாக இருந்தது. அது ஒரு அணை உடைப்புப் போலிருந்தது. பல நாட்களாக அடக்கி வைக்கப்பட்ட கண்ணீர் அது. அது அப்படி வழிந்தோடியது.

"உம்மாச்சு!"

"என்னங்க?"

"இனிமே என்ன வழி?"

இருவரும் ஆலோசித்தார்கள். மழைக்குப் பின்னர் தெளியும் ஆகாயம் போல, பொங்கி அழுததற்குப் பிறகு மனது கொஞ்சம் சுத்தமாயிற்று. எதைப் பற்றியாவது யோசிப்பதற்கு இப்போது முடிந்தது. அவள் மெதுவாகச் சொன்னாள்:

"எனக்குத் தோணுது..."

"என்ன?"

"கல்யாணம் கட்டி வச்சிருவோம்."

"யாருக்கு?"

"அப்துவுக்கு. எளவட்டமாயிட்டானில்ல! மனசுக்குப் பிடிச்ச ஒரு பெண்ணோடே ஒறவு கெடச்சிட்டா பதவிசாயிருவான்."

"என்னமோ!"

"ஆமாங்கறேன். அழகான பொண்ணா இருந்தா பயல் மயங்கிருவான். அப்புறம் அதிலேயே பைத்தியமாயிருவான்!"

"இருக்கலாம்."

"எனக்கு ஒண்ணு தோணுது. அது கொஞ்சம் சிக்கல்."

"என்னவாம்?"

"பய ஏதாவது பொண்ணைப் பாத்து வச்சிருப்பான். எளவட்டங்களில், அதை நாம ஒத்துக்குவோமான்னு தயங்கினாலும் தயங்குவான்.

"சம்மதிச்சிட்டாப் போச்சி..."

"அதான் வேண்டியது. என்ன? மனசுக்குப் பிடிச்ச பொண்ணைக் கட்டிக்கிடறதுலே நாம ஏடாகூடம் பண்ண வேணாம்."

"யாரு இப்போ ஏடாகூடம் பண்றாங்க?"

உம்மாச்சு சிறிது நேரம் யோசித்தாள். இருந்தாற்போலிருந்து திடீரென்று எழுந்து நின்று சொன்னாள்:

"இப்போ சரியாப் போச்சி."

அந்தப் பெண்மணியின் கண்கள் ஒளிர்ந்தன. வாலிபப் பருவத்துப் பிரகாசம் சட்டென்று அந்தக் கண்களில் ஒளிர்ந்தது. கோடைப் பனியால் மறைக்கப்பட்டிருந்த மலைச் சிகரங்களின் மீது திடீரென்று சூரியக் கதிர்கள் விழுந்தது போன்ற ஒரு நிலையாயிருந்தது அது. உம்மாச்சு மகிழ்ச்சி பூர்வமாக மாயனின் கைகளைப் பிடித்துக்கொண்டு கேட்டாள்:

"நமக்கு ஏன் இதுவரைக்கும் இது மாதிரியான யோசனை தோணவே இல்லை?"

"அவன் சொன்னா கேட்டுக்குவானா?"

"ஆசைப்படற பொண்ணைக் கட்டிக்கோன்னு சொன்னா கேக்காத பையன் இருக்காங்களாக்கும்?"

"உம், சொல்லிப் பாரு."

"நானா? நீங்கதான் சொல்லணும்."

"அம்மாடி, என்னாலே முடியாது."

"நீங்க அவனுக்குத் தகப்பன். அப்போ நீங்கதானே சொல்லணும்! நான் சொன்னா சரிப்படாது. ஒரு காரியம் பண்ணுவோம். நம்ம சாப்புண்ணியாரை வச்சி சொல்ல வைப்போம். என்னங்கறீங்க? ஆனா அவருகிட்டயாச்சும் நீங்கதான் சொல்லணும்."

அப்துவுக்குக் கல்யாணம் நடக்க வேண்டும் என்பதைவிட மாயனும் அப்துவும் சுமுகமாகி விடவேண்டும் என்பதில்தான் உம்மாச்சுவுக்கு அதிக ஆர்வம். அப்துவின் அபிலாஷைகளை நிறைவேற்றுவதில் மாயன்தான் முனைய வேண்டும் என்பதும் உம்மாச்சுவின் ஆசை. இந்த வியாதி குணமடைய அந்தக் கஷாயத்தை மாயனைக் கொண்டு குடிப்பிக்க வேண்டுமென்பதை உம்மாச்சு உணர்ந்தாள்: "நீங்க எதுவும் பேசாம இருந்தா அவன் என்ன நெனச்சிக்குவான்?"

"உம்மாச்சு, பேசறதுக்கு ஒண்ணும் நான் தயங்கலே. ஆனா அவன் எடக்குப் பண்ணிடக்கூடாதுங்கறதுதான் எனக்கு."

"அவனும் ஒரு மனிசன்தானே!"

"உம்."- மாயன் ஒப்புக்கொண்டான். உம்மாச்சு விடாப்பிடியாய் வற்புறுத்தினாள். மாயன் பேச்சற்றுப் போய் சிந்தனையில் ஆழ்ந்தான். அவள் இடைவிடாமல் பேசிக்கொண்டே இருந்தாள். மனித உறவுகளைப் பற்றிய அந்த நெடிய உரையாடல் முடிவடைந்தபோது மாயன் சொன்னான்: "சரி, நாளைக்குச் சொல்றேன்."

"அப்பாடியோ, நான் ஜெயிச்சிட்டேன். இப்பத்தான் என் நோய்நொடியெல்லாம் பறந்து போச்சி...நீங்க வாங்க, சேர்ந்து சாப்பிடுவோம்."

அந்தத் தம்பதிகள் ஒன்றாக அமர்ந்து சாப்பிட்டார்கள். பல நாட்களாக விட்டுப் பிரிந்திருந்த மகிழ்ச்சியும் ஆர்வமும் அவர்களிடையே திரும்பி வந்தன.

"வறுத்த மீன் இன்னும் கொஞ்சம் வேணுமா?"

"வேணாம்."

"சாப்பிடுங்க. ஓடம்பு நல்லா தேறட்டுமே! மகன் கல்யாணத்தை நடத்தி வைக்க தகப்பனுக்கும் கொஞ்சம் தெம்பு வேணுமில்ல!"

உம்மாச்சு சிரித்தாள்; மாயனும் சிரித்தான். அந்தச் சிரிப்பைக் கேட்டு ஹைத்ரோஸ் உள்ளே வந்தான். அவன் கேட்டான்: "என்னம்மா சிரிக்கிறீங்க?"

"ஒன்னைப் பாத்துத்தான். நீ சாப்பிட்டியா?"

"அதெல்லாம் எப்பவோ முடிச்சாச்சி! மறுபடியும் பசிக்க ஆரம்பிச்சிரிச்சி."

"அப்படீன்னா கொஞ்சம் சாப்பிடுப்பா."

"வேணாம்மா."

"அண்ணே சாய்ப்பறையிலே இருக்கானா?"

"இல்லேம்மா, சாப்புணிணியாரோடே வீட்டிலே உக்காந்திருக்கான்."

"அந்தக் கெழவரு கிட்டதான் பெரியவனுக்கு ரொம்ப ஒட்டுதல். கெழவருக்கும் அவன் கிட்டதான் ஒட்டுதல் அதிகம். அப்துவை முழுப் பேரு சொல்லிக்கூட கூப்பிட மாட்டாரு."

"நான் மொதல்லே நெனச்சது, அவரு ஒரு ஹம்க்கான்னு. நடந்துக்கிடறதைப் பாத்தா நாயர் நல்லவர்தான்." மாயன் சொன்னான்.

"நல்லவர்னு ஒரு தரம் சொன்னாப் போதுமா? அவரு இல்லேன்னா நான் இப்போ உயிரோடவே இருக்க மாட்டேன். நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவரு! அந்த கொணத்தைத் தான் எங்கேயும் காட்டுவாரு. கெட்டுப் போயிருந்த குடியை இவருல்ல ஒண்ணு சேர்த்தாரு! அப்புறம், அந்தச் சீன மொளகு சின்னம்மு இல்லே, அவ அடுத்தாப்பிலே வாத்திச்சி ஆனா பெரியவர் பாடு கொஞ்சம் கஸ்டம் தீரும். சூட்டிகையான பொண்ணுதான்!"- உம்மாச்சு திருப்தியோடு பேசினாள்.

"அவ ஒரு பார்வை பாத்தான்னா மனிசன் எரிஞ்சி போயிருவான்!" - ஹைத்ரோஸ் இடையே குறுக்கிட்டு அபிப்பிராயம் சொன்னான்.

"போடா அங்கிட்டு!" -உம்மாச்சு அவனைச் சாடினாள்: "நாயரிச்சி மூஞ்சியை நீ ஏண்டா பாத்துக்கிட்டுத் திரியறே? அவ ஒன்னை ஒதைச்சிப்பிடுவா, பாத்துக்கோ!"

ஹைத்ரோஸ் அரவமில்லாமல் எழுந்து போனான். அவன் போவதைப் பார்த்துக்கொண்டிருந்த மாயன் உரக்கச் சிரித்தான்: பாவம்!

"மொளையிலே கிள்ளாமே வளர விட்டா வம்புதான்."

அதற்கும் மாயன் வாய்விட்டுச் சிரித்தான். ஒரு தந்தையின் வாத்சல்யமும் ஒரு கணவனின் திருப்தியும் அந்தச் சிரிப்பில் உரத்துக் கேட்டன.

அன்று இரவு உம்மாச்சு பல கற்பனைகளில் மூழ்கி நீண்ட நேரம் உறங்காமலிருந்தாள். தனக்கு வர இருக்கும் மருமகளின் அழகு, அவளுடைய ஆபரணங்கள், அவள் அணிய இருக்கும் திருமண உடையின் ஜரிகை வேலைப்பாடுகள், அவளுடைய களிப்பும் சிரிப்பும், உம்மா என்று அவள் நீட்டி அழைக்கும் சம்பிரதாயம் - அப்படிப் பலவற்றைப் பற்றியும் கற்பனையில் ஆழ்ந்திருந்தாள். கடைசியில் ஒரு பெருமூச்சுடன் பிரார்த்தித்துக் கொண்டாள்: குடும்பத்துக்கு ஏத்த பொண்ணா இருந்தாச் சரிதான்.

காலையில் கண்விழித்தபோது புலரிப் பொழுது புன்சிரிப்பைப் பொழிந்துகொண்டு ஜன்னல் பக்கம் நின்றிருந்தது. நல்ல நாள். ஏன் இந்தத் தாமதம் என்று அந்த நாளிடம் கேட்க வேண்டு மென்று உம்மாச்சுவுக்குத் தோன்றிற்று. அவள் மாயனைத் தட்டி எழுப்பினாள். அதன் பிறகு அந்த வீட்டிலிருந்த வேலைக்காரிகளை யெல்லாம் எழுப்பினாள். பிறகு எல்லாமே அவசரம்தான். பழைய படி அடுக்களைக் கட்டிலும் வீட்டு வேலைகளிலும் ஆக எல்லா வற்றிலும் கட்டளைக் குரல்கள் உரக்கக் கேட்டன.

"அம்மாவுக்கு ஒடம்பு சரியாயிரிச்சி!" வேலைக்காரிகள் தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள்.

"இனிமே இங்கே அட்டகாசந்தான்."

வெயில் ஏறத் தொடங்கியபோது உம்மாச்சு மாயனை சாய்ப்பறைக்கு அனுப்பி வைத்தாள். அப்து எழுந்திருந்து கடுங்காப்பி குடித்துவிட்டு ஜன்னல் வழியே பார்த்துக் கொண்டிருந்தான்.

"நீ எந்திரிச்சிட்டியா?" மாயன் வாசலில் எட்டிப் பார்த்துக் கேட்டான். அப்து திரும்பிப் பார்த்துவிட்டு, எதுவும் பதில் சொல்லாமல் முகம் திருப்பிக்கொண்டான்.

"ஒனக்கு ஏதாச்சும் ஒடம்பு சரியில்லியா?"

"இல்லே." அப்து ஜன்னல் வழியே பார்த்தபடியே பதில் சொன்னான். மாயன் அந்த அறைக்குள் நுழைந்தான். அவன் ஒவ்வோர் அடியாக வைத்து அப்து படுத்திருந்த கட்டிலுக்குச் சென்றான்.

"மகனே!..."

அப்து பல்லைக் கடித்துக்கொண்டு மௌனமாயிருந்தான்.

"ஒங்கிட்ட ஒரு விசயம் பேசத்தான் வந்திருக்கேன்."

"என்னது?"

"நீ இப்போ பெரியவனாயிட்டே."

"அது ஆண்டவன் சித்தம்!"

"ஆமா. அதனாலேதான்..."

"விஷயத்தைச் சொல்லி முடிங்க."

"இப்பிடி கோபப்பட்டா எப்பிடி?"

"நான் கோபப்படறதோடே மட்டும் நிக்கக் கூடாதுதான். அது எனக்குத் தெரியும். ஆனாலும்....அது போகட்டும். என்ன வேணும்?"

மாயன் சிறிது நேரம் பேசாமல் இருந்தான். எப்படித் தொடங்குவது, எங்கிருந்து தொடங்குவது என்பதைப் பற்றி அவன் சிறிது யோசித்தான். ஆனால் அப்து பேசிய பேச்சில் எல்லாம் கலங்கிப் போயிற்று. நிமிடங்கள் கழியக் கழிய சொல்ல வந்தது எல்லாம் கரைந்து மறையலாயிற்று.

"என்ன சங்கதி?" கடன் வசூலிக்க வந்த ஈட்டிக்காரனின் குரலில் அப்து கேட்டான். இனி தாமதப்படுத்திப் பயனில்லை. மாயன் எடுத்த எடுப்பிலேயே சொன்னான்: "ஒனக்கு ஒரு கல்யாணம் செய்யணுமில்ல?"

"வேண்டாம்."

"அப்பிடியெல்லாம் ஒண்ணும் சொல்லக் கூடாதுப்பா." மாயன் தணிந்த குரலில் தொடர்ந்தான்: "காலா காலத்திலே செய்ய வேண்டியதைச் செய்யணும்."

"எனக்குக் கல்யாணம் செஞ்சி வைக்க நீங்க யாரு?"

அப்து அறுத்து முறித்துப் பேசினான்.

"ஒனக்கு இஸ்டம் இருக்கிற பொண்ணாவே பார்ப்போம். அதிலே உம்மாவுக்கோ எனக்கோ ஒரு மறுப்பும் இல்லே."

"எனக்கு இஷ்டமான பெண்ணைக் கட்டி வைக்கவும் ஒங்களாலே முடியாது. எனக்குக் கல்யாணமும் வேண்டாம்."

"அப்பிடிச் சொல்லாதேப்பா, மகனே!"

மாயனின் 'மகனே' என்ற ஒவ்வோர் அழைப்பும் அப்துவை மேலும் மேலும் எரிச்சலடையச் செய்தது. அவன் பல்லைக் கடித்துக் கொண்டு மௌனமாயிருந்தான். அவனுடைய இருதயத்தில் ஒரு சிறிய சூறைக்காற்று சீறி வந்தது. அந்தக் காற்றினூடே கடந்த காலத்துக் காட்சிகள் பல பொங்கிப் புரண்டு வந்தன.

"நீ சரின்னு சொன்னாப் போதும்."

"நான் பேச வேண்டியதைப் பேசினா அப்புறம் நீங்களே இருக்க மாட்டீங்க."

"நீ சொல்றதுக்கு அர்த்தமென்ன! நான் ஒனக்கு என்ன வேண்டாததைச் செய்திட்டேன்?"

"செய்ததை நானே சொல்லணுமா?"

"சொல்லு."

"வேண்டாம். போயிடுங்க."

"இல்லே, சொல்லித்தான் ஆகணும். வாயைத் தெறந்து பேசினாத்தான் இந்த வெறுப்பு தீரும்."

"அது தீர்றது நான் சவப்பெட்டியிலே அடங்கின பெறகுதான்."

"ஒன்னெ நான்தானே வளர்த்து ஆளாக்கினது? அதெல்லாம் மறந்திட்டியா!"

இந்த வார்த்தை உலர்ந்த காட்டில் தீப்பொறியை வீசியது. அப்து இருக்கையிலிருந்து எழுந்தான். அந்த முகத்தில் இரத்தம் குமுறிப் பாய்ந்தது. நாசித் துவாரங்கள் விடைத்தன. புருவங்கள் மரவட்டைகளைப்போல் சுருண்டன. ஒரு ஆக்ரோஷப் பாய்ச்சல்:

"என்ன சொன்னீங்க, நீங்க என்னை வளர்த்தீங்களா! ரொம்பப் புண்ணியந்தான்! எதுக்காக வளர்த்தீங்க? கொன்னிருக்கலா மில்ல? கொழந்தையா இருந்தப்பவே கொன்னிருந்தா இந்தக் குழப்பமே உண்டாயிருக்காதில்ல!"

மாயன் திகைத்துப் போனான். அவன் அமைதியான குரலில் கேட்டான்: "என்னோடே புத்தித்தடுமாற்றம்னு வேணும்னா வச்சிக்கோ... ஆனாலும்..."

"நிறுத்துங்க! சொல்ற விஷயத்திலேயே ஒங்களுக்கு புத்தி தடுமாறிப் போச்சே. எங்காப்பாவைக் கொன்ன மாதிரி என்னையும்.."

"கடவுளே!" - மாயன் எழுந்தான்.

"கடவுளே!" - வெளியிலிருந்து உம்மாச்சுவின் குரலும் கேட்டது.

"கொஞ்சறதுக்கு வந்திருக்காரு! இப்போ வெளியே போங்க. நான் ஏதாச்சும் செஞ்சாலும் செஞ்சிருவேன்!"

மாயன் அசையவில்லை. மரக்கடை போல அங்கேயே நின்றிருந் தான். எதுவும் புரியவில்லை. பூமி சுற்றிச் சுழன்றது. மயிர்க்கால் களில் ஒரு எரிச்சல்.

அப்து வாசல் கதவைத் தள்ளிக்கொண்டு ஒரு அக்னி ஜ்வாலையைப் போல வெளியே போனான். சூடு அப்போதும் அந்த அறையில் தங்கி நின்றது. உம்மாச்சு தட்டுத் தடுமாறி அறைக்குள் நுழைந்தாள்.

"என் தங்கமே!..." அவள் மாயனைக் கட்டிப் பிடித்தாள். ஆனாலும் மாயன் அசையவில்லை. ஒவ்வொரு திசையிலும் பார்வையைச் செலுத்திவிட்டுப் பனைமரம் போல நின்றிருந் தான். உம்மாச்சு அவனுடைய காலடியில் விழுந்து தேம்பித் தேம்பி அழுதாள். கண்ணீர்த் துளிகளும் நிமிடங்களும் உதிர்ந்து விழுந்தன. அதற்குப் பிறகு எதுவும் பேசாமல், மாயன் அப்துவின் கட்டிலில் படுத்தபடி கண்களை மூடினான்.

"என் தெய்வங்களே! ஓடி வாங்களேன்.." உம்மாச்சு ஓலமிட்டாள். வேலைக்காரிகளும் மரக்காரும் அந்த அறை நோக்கி ஓடி வந்தார்கள்.

"என்னம்மா?" - மரக்கார்.

"அப்பாவைப் பாரு!"

அவன் நெஞ்சில் கை வைத்துப் பார்த்தான்: துடிப்பிருந்தது. எல்லோருமாகச் சேர்ந்து தாங்கிப் பிடித்து மாயனை உள்ளே கொண்டு போய்க் கிடத்தினார்கள். வைத்தியரைக் கூப்பிட ஆட்கள் ஓடினார்கள். சேதி தெரிந்து ஹைத்ரோஸ் வந்து சேர்ந்தான்.

"என்ன?" அவன் மரக்காரின் முகத்தைப் பார்த்தான்.

"சுய நெனப்பில்லே."

வைத்தியர் வந்தார். ஒரிரண்டு தடவை மூக்கில் பொடி தூவித் தடவியதும் மயக்கம் தெளிந்தது.

"என்ன வயித்தியரே?" - உம்மாச்சு கேட்டாள்.

"ஒண்ணுமில்லே. ஒரு மயக்கந்தான்."

மாயன் மெதுவாகக் கண் விழித்துச் சுற்றிலும் பார்த்தான்; சட்டென்று உம்மாச்சுவின் கழுத்தைப் பிடித்துக்கொண்டு அழுதான்.

"கொல்லாதே...கொல்லாதே..."

அப்போது பிள்ளைகள் அருகில் சென்றார்கள். நல்ல வார்த்தை சொல்லிப் படுக்க வைத்தார்கள். அப்படி எல்லோராலும் பணிவிடை செய்யப்பட்ட நிலையில் மாயன் அன்று முழுவதும் அங்கேயே படுத்திருந்தான். இரவில் ஹைத்ரோஸ் கேட்டான்: "என்னாச்சிம்மா வாப்பாவுக்கு?"

எதையாவது பார்த்து பயந்திருக்கலாம். பொங்கிப் பொங்கி வந்த அழுகையை உதட்டைக் கடித்து அடக்கினாள். எல்லாம் அவளுக்குத் தெரியும். ஆனாலும் எதையும் பேச முடியவில்லை. என்றைக்கும் அவளுடைய அனுபவம் அதுவாகத்தான் இருந்தது. மறுநாள் அவள் மேலே பார்த்தபடி பிரார்த்தித்தாள்: 'என் தம்பிரானே! எதுக்கு எனக்கொரு மனசைத் தந்தே?'

ஒரு பதிலும் கிடைக்காததால் அவள் கையை விரித்து மேலே பார்த்தபடி நின்றாள். அப்போதுதான் பின்னாலிருந்து ஒரு குரல்:

"உம்மாச்சு!"

திரும்பி பார்த்தாள்; மாயன்.

"ஏன் எந்திரிச்சீங்க?"

"எனக்கு எல்லாம் சரியாயிரிச்சி. ஒரு விசயம்..."

"என்ன?"

"நான் போறேன்."

"ஹே இப்பவேவா?"

"நாளை விடிஞ்சதும்."

"நீங்க இப்போ போக வேணாம்."

"போகணும்."- மாயன் கண்டிப்பாகச் சொன்னான். "இனிமே நான் இங்கே இருந்தா-ஒனக்கும் நல்லதில்லே, எனக்கும் நல்லதில்லே; செரிஞ்சிக்கோ!"

"அப்பிடீன்னா நான் "

"இங்கேயே இருந்துக்கோ."

"நானும் வர்றேன்."

"வேணாம்; தேவைப்பட்டா அப்புறமா வந்துக்கிடலாம்."

உம்மாச்சு தேம்பி அழவில்லை. அவள் யோசித்தாள். சிறிது கழித்து அவள் கேட்டாள்: "எனக்குப் பாக்கணும்னு தோணினா?"

"நீ அங்கே வரலாம். ஹைத்ரோஸையும் கூடக் கூட்டிக்கோ."

"உம்." - அவள் சம்மதித்தாள்.

மறுநாள் மாயன் வயநாட்டுக்குப் புறப்பட்டான். மூட்டை முடிச்சுகளுடன் அவன் கிளம்பினான். வேலியோரத்துத் தென்னை மீது சாய்ந்தபடி உம்மாச்சு அவன் சென்றதைப் பார்த்துக் கொண்டு நின்றாள். மாயன் இடைவழியின் திருப்பத்திற்குச் சென்றதும் ஒரு தடவை திரும்பிப் பார்த்தான், ஒரு நிமிடம். பின்னர் தலை தொங்கியபடி மீண்டும் நடையைத் தொடர்ந்தான். கொஞ்சம் கொஞ்சமாக உம்மாச்சுவின் கண்களிலிருந்து மறைந் தான். கடைசியில் அந்தத் தலைப்பாகை நுனியும் கண்பார்வை யிலிருந்து மறைந்தபோது அவள் குலுங்கி அழுதாள்.

ஓ, என் தெய்வமே! இனி நான் எப்போ பார்ப்பேன்?

# 16. ஒரு நல்ல சந்தேகம்

ஹஸ்ஸன் அதிர்ந்து போனான். அந்த சிக்கல் நிறைந்த நிமிடத்தில் மாயன் வந்து சேர்வானென்று அவன் நினைக்கவே இல்லை. தனக்கு முன்கூட்டித் தகவல் தெரிவித்து, வேண்டிய ஏற்பாடுகள் செய்துவிட்டுத்தான் மாயன் வருவான் என்பதுதான் ஹஸ்ஸனின் நம்பிக்கை. இருந்தாலும், எங்கேயோ இருந்த ஒருத்தி இந்த வீட்டில் வந்து பிரசவித்துக் கிடக்கும்போதுதான் வீட்டுக்குச் சொந்தக்காரன் வந்து சேர்வது என்று நேர்ந்தால்! ஹஸ்ஸனுக்கு மூச்சு முட்டிற்று. என்ன செய்வது? இந்த அக்கிரமத்துக்கு மன்னிப்பு கிடைப்பது எளிதல்ல, அவன் பதுங்கினான்.

"எப்பிடி இருக்கே, ஹஸ்ஸன்?" மாயன் திண்ணையில் ஏறி உட்கார்ந்துகொண்டு கேட்டான். அதற்கு பதில் சொன்னது ஹஸ்ஸனல்ல. அப்போது உலகத்திற்குப் புதிதாக வந்தே சேர்ந்த அந்தக் குடிமகன் 'கிள்ளே கிள்ளே' என்று அழுதது.

"ஏதுப்பா கொழந்தே?"

இனி தப்பிக்க வழியில்லை என்று புரிந்துகொண்ட ஹஸ்ஸன் உலகத்திலுள்ள எல்லாப் பெண்களையும் சபித்தான். அந்த அழும் குழந்தையின் வாயில் துணியைத் திணித்து வைக்க வேண்டுமென்று தோன்றிற்று. அந்தத் தாயைப் பிடித்து வீசி எறிய முடிந்தால்..

"என்ன ஹஸ்ஸன், பேச்சைக் காணோம்?" - மாயன் மீண்டும் கேட்டான்.

"அண்ணே..."

"உம்?"

"ஒரு ஏமாத்து வேலை நடந்து போச்சி."

மாயன் ஒரு நிமிடம் மௌனமானான். இப்போது எழுந்து வந்து தன்னுடைய இடுப்பை முறித்து விடுவானென்றுதான் ஹஸ்ஸன் எண்ணினான். மாயனுக்கு வெறி கிளம்பினால் என்ன நடக்கு மென்பதை ஹஸ்ஸன் அறிவான். ஓடுகாலிப் பெண் ஒருத்தியை இழுத்துக்கொண்டு வந்து மாயனின் கட்டிலில் ஏற்றிப் படுக்க

வைத்துப் பிரசவிக்க அனுமதித்தால் அதைப் பார்த்துக் கொண்டிருக்க அவனால் இயலாது. அடி வாங்கிக் கொண்டாவது காரியத்தை முடிவுக்குக் கொண்டு வந்தால் போதுமென்றிருந்தது ஹஸ்ஸனின் பிரார்த்தனை. அவன் பணிந்து தொழுது சொன்னான்: "அண்ணே மன்னிச்சிடுங்க."

"என்ன இருக்குடா இதிலே மன்னிக்கிறதுக்கு? பொம்பிளைன்னா பிள்ளை பெறுவாளில்ல!"

அந்த வார்த்தைகளின் அர்த்தம் புரியாமல் ஹஸ்ஸன் மாயனின் முகத்தையே பார்த்த வாறிருந்தான். "ஆனாலும்.." - மாயன் கனிவாகத்தான் பேசினான்: "இதை நீ மொதல்லேயே சொல்லியிருக்கலாமில்ல.. சொல்லியிருந்தா நான் நல்ல முறையிலேயே செஞ்சிருப்பேனே!"

"அண்ணே!..."

"நீ இந்த மாதிரி செஞ்சது நல்லா இல்லே. ஆம்பிளேன்னா ஒரு பொம்பிளே வேணும்தான். அதை ஒழுங்காவே செஞ்சிருக் கலாமில்ல?"

"அண்ணே, நான் ஒண்ணும் செய்யலேண்ணே!"

"என்னது?"

"அவ தோட்டத்திலே பிரசவிக்கறதா இருந்தா."

"ஹம்க்கே, நீ அதை அனுமதிக்கலாமா? ஒரு பொம்பளையெ கஸ்டத்திலே விட்டுடறதா?"

"என்னோடே பொம்பளையில்லே."

"பின்னே?"

"பெத்துக்க எடமில்லாமே இருந்தப்போ கூட்டிக்கிட்டு வந்தேன்."

"என்னப்பா ஹஸ்ஸன், கதை அளக்கிறே? முன்பின் தெரியாத எவளோ ஒருத்தி வந்து ஒன் குடிசையிலே வந்து பெத்துக் கிட்டாளாக்கும்?"

"நான் அய்யோ பாவம்னிட்டு..."

"போதும், போதும். செய்றதையெல்லாம் செஞ்சிட்டு பொய் வேறே சொல்றயாக்கும்? நீயும் ஒரு ஆம்பிளையா? இதைப் பத்திச் சொல்றதுக்கு ஒனக்குக் கூச்சமா இருக்கா? நான் ஒண்ணும்

சொல்றதுக்கில்லே. இனியாச்சும் அவளை ஒழுங்கா கவனிச் சிக்கோ. அதுதான் ஆம்பிளைங்க லட்சணம்."

"அவளை எனக்குத் தெரியாது, அண்ணே."

"அவளை மட்டும் தெரிஞ்சிக்கிட்டாப் போதும். அவளோடே குடும்பம், நெலவரம் எல்லாம் தெரியணும்னா முன்னாலேயே யோசிச்சிருக்கணும்."

"அண்ணே, அவளாத்தான் இங்கே வந்து சேர்ந்தா."

"வந்து சேர்ந்ததும் பிடிச்சிக்கிட்டே. இப்போ இவ்வளவுக்கு ஆயிப் போச்சி, இனிமே கழிச்சிக்கட்ட முடியுமா?"

"அவ இன்னிக்குத்தான் வந்தா."

"என்னது? பெர்றதுக்காகவா?"

"ஆமாண்ணே!"

"வழியிலே போறவங்கள்ளாம் பெத்துப் போடறதுக்கான எடமா இது? அப்போ நீ வெறும் ஒதவாக்கரையா! ஒரு பொண்ணைத் தடுக்க முடியாமே நீ எதுக்காக இங்கே இருக்கிறே?"

ஹஸ்ஸன் வசமாக மாட்டிக்கொண்டான். ஒன்று, தன்னுடைய இயலாமையை ஒப்புக்கொள்ள வேண்டும்; அல்லது, இந்தப் பெண் தன்னுடையவள்தானென்று ஒப்புக்கொள்ள வேண்டும். இயலா மையை ஒப்புக்கொண்டால் தன்னுடைய வேலையை விட்டுவிட வேண்டும். பெண் தன்னுடையவள்தான் என்று ஒப்புக்கொண்டால் வாழ்க்கை முழுவதும் அந்தப் பெண்ணைச் சுமக்க நேரும். 'எக்குத்தப்பாக மாட்டிக் கொண்டேனே, கடவுளே!' என்று அவன் உள்ளுக்குள் நினைத்துக்கொண்டான். அவன் மீண்டும் மாயனை அணுகினான்: "அக்கம் பக்கத்திலே வேணும்னா கேட்டுப் பாருங்க, அண்ணே."

"எனக்கு யார்கிட்டேயும் கேக்கத் தேவையில்லே. நீ யாரு கிட்டேயாவது கேட்டுக்கிட்டா அவகிட்ட போனே? இந்தக் கொடுமையைச் செய்யக்கூடாது, ஹஸ்ஸனே! ரெண்டிலே ஒண்ணு இப்போ சொல்லியாகணும். நீ அவளைக் கட்டிக்கிறியா?"

"அண்ணே...."

"கட்டிக்கிறியா, இல்லாட்டி ஒடனே எடத்தைக் காலி பண்ணு. என்ன, இந்தக் கஸ்டத்தைப் பார்க்க என்னாலே முடியாது."

"அண்ணே, நீங்க அவ கிட்டவே கேட்டுக்கிடுங்க."

"இப்போ சொல்றியே, அது சரி."

மாயன் மெதுவாக உள்ளே போனான். மாயனைக் கண்டதும் பக்கத்து வீட்டுக்காரிகள் கிளம்பிவிட்டார்கள். உதையைப் பங்கிட்டுக்கொள்ள அவர்கள் விரும்பவில்லை. ஆமினா சோர்ந்து போய்ப் படுத்திருந்தாள். கொழுத்த அந்தப் பச்சிளம் குழந்தை எதிர்ப்புத் தெரிவிப்பதுபோல் அழுதுகொண்டு பக்கத்தில் படுத்துக் கிடந்தது.

மாயன் அறை வாசலில் நின்றான். ஒட்டு மொத்தமாக ஒரு முறை பார்த்தான். ஹஸ்ஸனும் பார்த்தான். அவனுடைய இருதயம் வேக வேகமாகத் துடித்தது. மாயன் ஒரு முறை செருமினான். ஆமினா கண்விழித்துப் பார்த்தாள். கண்களில் திகில் நிழலாடிற்று. அவள் எழுந்திருக்க முயன்றாள்.

"வேணாம், படுத்துக்கோ." - மாயன் கனிவான குரலில் சொன்னான். "நீ ஏன் இங்கே வந்தே?"

அவள் எதுவும் பேசவில்லை.

"மொதலாளியாக்கும் கேக்கறாங்க." - ஹஸ்ஸன் இடையில் புகுந்து தெளிவுபடுத்தினான்.

"நான் போயிர்றேன்." - ஆமினா விம்மலுடன் சொன்னாள்.

"அதெல்லாம் போக வேணாம்." - மாயன் கேட்டான்: "எப்பிடி இங்கே வந்தே?"

"இவங்கதான் கொண்டாந்தாங்க!" ஆமினா அழும் குரலில் சொன்னாள். மாயன் ஹஸ்ஸனைத் திரும்பிப் பார்த்தான். பின்னர் கனிவான குரலில் ஆமினாவிடம் சொன்னான்: "எங்கேயும் போக வேணாம், இங்கேயே இருந்துக்கோ. ஒன்னை இவன் பார்த்துக்கு வான். என்ன?"

"உம்."

மாயன் வெளியே போனான். தொடர்ந்து ஹஸ்வனைக் கூப்பிட்டுச் சொன்னான்: "அந்தப் பொண்ணைக் கஸ்டப்படுத் தாமே பார்த்துக்கோ. என்னவானலும் ஒரு ஆம்பிளைக் கொழந்தையில்ல! நாளைக்கு ஒனக்கு ஒபகாரமா இருப்பான்... அப்பிடித்தான் நாம நம்பணும்... கொழந்தைகளையும் பூக்களையும் வச்சி ரொம்பவும் எதிர்பார்க்கக்கூடாது அப்பிடீம்பாங்க. ஒரு மழைமேகம் வந்தா ரெண்டும் போனாலும் போயிரும்." சிறிது

நேரம் மௌனமாக இருந்துவிட்டுத் தொடர்ந்தான்: "வீடும் வெளியும் இல்லேன்னா நீ கவலைப்பட வேணாம், ஹஸ்ஸனே! இந்த வீட்டை நீயே வச்சிக்கோ. நீங்க இங்கேயே இருந்துக்கிடுங்க. என்ன?"

ஹஸ்ஸன் எதுவும் பேசவில்லை. என்ன பேச வேண்டுமென்றும் அவனுக்குப் புலப்படவில்லை.

"ஒண்ணும் யோசிக்க வேணாம். ஆணும் பெண்ணுமா இருந்தா இதெல்லாம் சகஜந்தான்." மாயன் மீண்டும் சமதானப்படுத்தி னான். ஹஸ்ஸன் மொத்தத்தில் யோசனையில் ஆழ்ந்தான். இந்த வீடு தன் சொந்தமாகப் போகிறது. ஒரு மனைவியும் குழந்தையும் கிடைக்கப் போகிறார்கள். இதில் எதற்காகக் குழப்பம்? எதற்காக இந்தத் திணறல்? அது யாருடைய குழந்தை? உண்மையில் அவள்தான் யார்? நேற்று இந்த நேரத்தில் ஒரு தொந்திரவும் இல்லாமல் அவன் இதே வீட்டில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தான். காலையில் எழுந்தபோதும்கூட சிக்கலின் எந்த அறிகுறியும் தென்படவில்லை. வெள்ளை முயலின் இறைச்சிக்கு சுவை அதிகமென்று எண்ணம் ஏற்பட்டதனால் விளைந்த சிக்கல்தான் இதெல்லாம். இனி இப்போது என்ன செய்ய வேண்டும்? ஒன்று, எல்லாவற்றையும் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் அவன் பெரும்புள்ளி ஆகிவிடுவான். இல்லாவிட்டால், எல்லாவற்றையும் உதறித் தள்ளிவிட்டு ஓர் உண்மையை நிலைநாட்டலாம். எது வேண்டும்? உண்மையை நிரூபித்துத்தான் ஆக வேண்டுமென்று ஹஸ்ஸனுக்குத் தோன்ற வில்லை. ஆனால் மொத்தத்தில் ஓர் ஒழுங்கீனம் இது. அவளுக்கிது விருப்பமா என்று யாராவது கேட்டார்களா? சட்டென்று ஆமினா வின் உருவம் ஹஸ்ஸனின் மனத்தினூடே கடந்து சென்றது. வெளுத்து மெலிந்த அந்தப் பெண்ணின் தளர்ந்த படுக்கை மனதில் தட்டுப்பட்டது. அவளுக்கு இருபத்து நான்கு வயதைவிட அதிக மிருக்காது. சிறிது சோகை பாதித்த உடல். அது அலைக் கழிக்கப்பட்ட வாழ்க்கையினால் ஏற்பட்டதாக இருக்கலாம். தோட்ட வேலைக்கு என்று வந்துவிட்டால் ஒரு வகை மரணம்தான் அல்லவா! மொத்தத்தில் பரவாயில்லை. ஆனால்... ஒரு குழந்தை! அந்தக் குழந்தை யாருடையது? அதனுடைய சொந்தக்காரன் கடைசியில் தேடி வந்து இருவரையும் கூட்டிச் சென்றுவிடு வானோ? போனால் போகட்டுமே, தனக்கென்னாயிற்று? என்ன இருந்தாலும் அது ஓர் அவமானமல்லவா?

"நீ இனிமே ஒன்னும் யோசிக்க வேணாம், ஹஸ்ஸன். நல்ல விதமா வாழ்க்கையை நடத்து." மாயன் உற்சாகப்படுத்தினான்.

அதற்கும் ஹஸ்ஸன் பேசவில்லை. எதையும் உறுதியிட்டுச் சொல்ல முடியவில்லை. உண்மையில் விஷயத்தை வெளிப்படையாகப் பேசி முடிக்க அப்போதும் சந்தர்ப்பம் இருந்தது. இவ்வளவும் விளக்கியான பிறகு சரியென்று ஒரு தடவை சம்மதக் குரல் கொடுத்தால் என்னவென்று ஹஸ்ஸனுக்குத் தோன்றிற்று. 'நல்லா இல்லேண்ணா அப்புறமா தள்ளி வச்சிறலாமில்ல?' என்றோர் எண்ணமும் அவனுக்கு ஏற்பட்டது. ஏதானாலும் அவன் இரண்டில் எதையும் சொல்லாமல் நின்றான்.

"எனக்கு கொஞ்சம் படுக்கணும்ப்பா."

"அண்ணே, ஏதாச்சும் சாப்பிட்டீங்களா?"

"ஒண்ணும் வேணாம்ப்பா, ஹஸ்ஸன்."

மாயன் அந்தத் திண்ணையிலேயே படுத்தான்; ஹஸ்ஸனும் அவனருகில் படுத்தான். இருவரும் வெகு நேரம்வரை உறங்கவில்லை. மாயனின் கண் முன்னால் தான் விட்டு வந்திருந்த குடும்பம் முழுவதும் நிழலாடிற்று. உம்மாச்சுவும் அவளைச் சுற்றி மூன்று பிள்ளைகளும். ஒவ்வொரு முகமும் மாறி மாறி மனதில் தோன்றுவதும் மறைவதுமாக இருந்தது. சோகம் பற்றியிருந்தாலும் அழகு மாறாத உம்மாச்சுவின் முகம்; எப்போதும் கோப உணர்ச்சி ததும்பும் அப்துவின் முகம். அது மாயனை நடுங்கச் செய்தது. அப்து கடைசியாகச் சொன்ன வார்த்தைகள் இப்போதும் காதில் முழங்கிக் கொண்டிருக்கின்றன. எப்படி இதெல்லாம் தெரிந்தது? யார் சொன்னது? அவன் திரும்பிப் படுத்து எல்லாவற்றையும் மறக்க முயன்றான். மாயன் சொந்தப் பிள்ளைகளைப் பற்றி நினைத்தான். சோர்ந்து போன மரக்காரின் முகம் வாடி நின்றது. அடுத்தாற்போல் துடுக்காகச் சிரித்து நிற்கும் ஹைத்ரோஸ்.

"என் பிள்ளைங்க இப்போ என்னைப் பத்தி நெனச்சிக்கிட்டிருப்பாங்களா?" என்று அவன் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். 'நான் இனிமே என் பிள்ளைங்களைப் பாக்க முடியாது!... நான் எப்படியெல்லாம் வளர்த்தேன்! ஆனா இப்போ அவங்களைப் பாக்கக்கூட முடியலே..' மாயனின் கண்கள் நிறைந்ததை ஹஸ்ஸன் பார்க்கவில்லை.

அவர்களுக்கு நடுவில் கனத்த இருள் படர்ந்திருந்தது. தான் ஒரு கட்டுண்டவனாக மாயனுக்குத் தோன்றிற்று. யாரும் அவனைக் கட்டி வைக்கவில்லை. ஆனாலும் சுற்றிலும் ஒரு கற்சுவர் உள்ளது போல- ஒரு சிவந்த கற்சுவர். அதன்மீது கண்ணுக்குப் புலப்படா விட்டாலும் பயமுறுத்தும் நிழல்கள் தென்படுகின்றன. முறைத்துப் பார்க்கும் கண்களுடன் நிற்கும் அந்த உருவம் விரும்பத் தகாத பல கேள்விகளைக் கேட்கிறது. அந்தக் கேள்விகளுக்கெல்லாம் த்குந்தாற்போல் பதில் சொல்ல முடிகிறது. ஆனாலும் நிழல் அங்கேயே நின்று கொண்டிருக்கிறது. 'நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது எனக்குத்தான். உம்மாச்சுவை நான் விரும்பினதாலே அவளும் என்னை விரும்பணும்னு ஆசையோடே எதிர்பார்த்தேன். ஒரு தரம் மனசு சஞ்சலப்பட்டதாலே எல்லாமே கெட்டுப்போச்சி. இல்லாட்டா அந்தத் தறுதலை என் மொகத்தைப் பார்த்து அப்பிடிக் கேட்டிருப்பானா!...' மூட்டைப்பூச்சியை நசுக்குவது போல மாயன் பாயைக் காலால் தேய்த்தான்.

"அண்ணே ஒறங்கலியா?" ஹஸ்ஸன் கேட்டான்.

"அப்போ நீயும் ஒறங்கலேல்ல?"

"இல்லே. அண்ணனுக்கு வீட்டுக் கவலையா?"

"அதெல்லாம் இல்லே. ஹஸ்ஸன், நான் நெனக்கிறேன்..."

"என்னண்ணே?"

"மனிசனோடே ஒலக வாழ்க்கை என்னங்கறே? ஒரு கண்ணாடித் தம்ளர் மாதிரிதான். சாயா, காப்பி, எளநீர் எல்லாம் ஊத்திக் குடிக்கலாம். ஆனா ஒரு வேளை அது ஒடைஞ்சி போச்சின்னா பெறகு குப்பையிலே எறிய வேண்டியதுதான்!"

"ஒண்ணும் நடந்திரலே...."

பிறகு சிறிது நேரத்திற்கு இருவரும் எதுவும் பேசிக்கொள்ள வில்லை. ஹஸ்ஸனும் சிந்தனையிலாழ்ந்தான், வரவிருக்கும் குடும்பத்தைக் குறித்து. இந்த ஆமினாவின் வம்ச வரலாறு எதுவும் அவனுக்குத் தெரியாது. அவள் குடும்பப் பெண்தானா? அல்லது பிச்சைக்காரியா? இஸ்லாமென்று தெரிகிறது. அது மட்டும் ஒப்புக்கொள்ளத் தக்கதாக இருக்கிறது.

"என் வாப்பா இருந்திருந்தார்னா இப்படியெல்லாம் வந்திருக் காது." - ஹஸ்ஸன் நினைத்தான். ஆனால் இது வயநாடாக்கும்; இங்கே ஊர் நிலவரத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்பதில்லை.

'பாம்பு தின்கிற ஊருக்குப் போனா நடுத்துண்டத்தைத்தான் திங்கணும்' - அவன் ஆறுதலடைந்தான். இவ்வளவு திடுதிப்பென்று இந்தச் சம்பவங்களெல்லாம் வந்து சேர்ந்தது எப்படி?

"இதிலே கடவுளுக்கும் பங்குண்டு. அவன் எனக்காகக் கொண்டாந்திருக்கான் இவளை, இந்த ஆமினாவை. ஆனாலும் இப்படி இறக்கிவிட்டிருக்கக் கூடாதுதான்."

நம்முடைய சித்தம் இல்லை, தெய்வத்தின் சித்தமென்று அப்போது சமாதானப் படுத்திக்கொண்டான். இப்படி நடக்கட்டுமே என்றுதான் ஹஸ்ஸனும் அப்போதைக்கு விரும்பினான். முதல் கால்வைப்பு எப்போதும் சிக்கலானதுதான். அவளிடம் இதை எப்படிச் சொல்வது? அவள் என்ன பதில் சொல்வாள்? எல்லாம் அனுகூலமாகவே ஆனாலும் பின்னரும் ஒரு கேள்வி வருமல்லவா? அந்தக் குழந்தை. அதை என்ன செய்வது? அவன் அடுத்த அறையிலிருந்து எதிர்ப்புக் குரலை முழக்கிக்கொண்டிருந்தான். அந்தப் புதிய ஜீவனின் தாளக் கிரமத்திலான அலறல். சிறிது நேரம் செவிமடுத்தான்: கிள்ளே...கிள்ளே..கிள்ளே... அவனைத் தவிர்க்க முடியுமென்று தோன்றவில்லை.

"ஹஸ்ஸனே!..." மாயன் கூப்பிட்டான்.

"அண்ணே!"

"நீ நல்ல சொகம்தானே?"

"ஆமாண்ணே."

"சொகம்னா என்ன, ஹஸ்ஸனே?"

அந்தக் கேள்விக்கு பதில் சொல்ல ஹஸ்ஸனால் முடியவில்லை. மொத்தத்தில் சுகம் என்றல்லாமல் அவன் வேறென்ன சொல்வான்?

"எனக்கு எந்தக் கஷ்டமும் இல்லேண்ணே!"

"நீ அதிருஷ்டக்காரன்தான், ஹஸ்ஸனே!"

"எல்லாம் ஒங்க புண்ணியந்தாண்ணே!"

"இல்லே ஹஸ்ஸன், இந்தப் பொண்ணு ஒன்னோடே நல்ல கொணத்தினாலே வந்து சேர்ந்திருக்கா. நீ ஊர் சுத்திக்கிட்டுத் திரிஞ்சவன்தானே!"

ஹஸ்ஸன் ஒன்றும் பேசவில்லை. அவன் அப்போதும் முடிவெடுத்திருக்கவில்லை. மறுநாள் ஆமினாவோடு கலந்து பேசி எல்லாவற்றையும் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று

நினைத்தான் அவன். அதற்கு முன்னதாகவே அவன் ஏன் முந்திக் கொள்ள வேண்டும்?

"என்ன ஹஸ்ஸன்?"

"உம்.."

அப்போதும் அந்த சின்ன ஜீவனின் தாளக்கிரமமான அழுகுரல் அடுத்த அறையிலிருந்து கேட்டுக்கொண்டிருந்தது.

"நேரம் ரொம்ப ஆச்சோ, ஹஸ்ஸன்?"

"ஆமாண்ணே."

"அப்போ ஒறங்கு."

அந்த இரண்டு ஆண்களும் இருட்டில் வாசல் திண்ணையில் படுத்தபடி யோசித்துக்கொண்டிருந்தார்கள். கடந்த காலத்திலும் வருங்காலத்திலுமாகக் கிடக்கும் இரண்டு குடும்பங்களின் வாழ்க்கை அவர்களை வளைத்துக்கொண்டது. மனமுறிவுக்கு மறுநாளும் திருமணத்தின் முந்தின நாளும் யாருக்கும் அவ்வளவு எளிதாக உறக்கம் வராதல்லவா! ஆனால் உறங்குவதாக இருவருமே பாசாங்கு செய்தார்கள்.

அவ்வாறு நிசப்தமாக இரவு ஜாமங்கள் கழிந்துகொண்டிருந்த போது, புலரியின் செங்கிரணங்கள் கிழக்கு மலையின் முகட்டில் விழுந்தபோது, அவர்கள் உறக்க மயக்கம் கொண்டார்கள். இருவரும் கனவுகளும் கண்டார்கள். ஹஸ்ஸனுக்கு எதிரில் ஒரு சின்னக் குழந்தை நின்றபடி நடனமாடத் தொடங்கியது. அவன் நடனமாடி நடனமாடி அருகில் வந்து ஹஸ்ஸனின் கழுத்தை இறுக்கிப் பிடித்துக்கொண்டு சிரித்தான்; ஆடையில்லாமல் ஒரு பெண்ணும் உண்டு அந்தக் குழந்தையின் பின்னால்.

மாயனின் கனவுகள் தெளிவாயில்லை. அஸ்தமனத்திற்குப் பிறகு ஆகாயத்தில் காணப் பெறும் அந்தி வர்ணங்களினூடே எங்கேயோ நீந்தி நீந்திப் போகிறான். நீந்தியதால் கால்கள் களைக்கின்றன; ஆனால் நீந்தாமலும் இருக்க முடியவில்லை. அப்படி தெம்பு குறைந்த போதுதான் அந்தக் குரல் கேட்டது: "அண்ணே... அண்ணே..."

மாயன் கண்விழித்தான். ஹஸ்ஸன் ஒரு பாத்திரத்தில் கடுங் காப்பியுடன் அருகில் நின்றிருந்தான். மாயன் கிளாஸ் வாங்கிக்கொண்டு கேட்டான்: "அவளுக்குக் குடுத்தியா?"

"உம்."

ஹஸ்ஸன் அப்படிச் சொன்னது உண்மைதான். அவன் எழுந்திருந்து காப்பி தயாரித்து விட்டு என்ன செய்வது என்று தெரியாமல் சிறிது நேரம் நின்றிருந்தான்; வருவது வரட்டுமென்று நினைத்து காப்பி எடுத்துக்கொண்டு ஆமினா படுத்துக் கிடக்கும் அறைக்குச் சென்று சொன்னான்:

"இந்தா காப்பி."

"பெருத்த ஒபகாரம்!" - பறந்து களைத்த ஒரு கிளியினுடையதைப் போல சன்னமாக இருந்தது அந்தக் குரல். அவள் அதை வாங்கி கடகடவென்று குடித்து முடித்தாள்! ஹாவ்!

"இன்னும் வேணுமா?"

"இருந்தா...."

"தர்றேன்." அவன் மறுபடியும் ஊற்றிக் கொடுத்தான்.

அவள் அதை வேகமாகக் குடித்துவிட்டு தம்ளரைக் கீழே வைத்துவிட்டுச் சொன்னாள்: "ஒங்களை எந்தக் காலத்திலேயும் ஆண்டவன் கைவிட மாட்டான்."

அந்த மெல்லிய குரல் ஹஸ்ஸனுக்கு மிகவும் இனிமையாக இருந்தது. இதுவரை எந்தப் பெண்ணும் அவனிடம் இப்படிப் பேசியதில்லை. ஒரு பெண்ணுக்காக வேண்டி அவன் இப்படி அல்லல்பட்டுக் கொண்டதுமில்லை.

"எப்படி இருக்கே?" அவன் சிறிது பரபரப்பு உணர்வுடன் கேட்டான்.

"ராத்திரி நாக்கை இழுத்துக்கிடுச்சி. பொறுத்துக்கிட்டேன்."

"கஷ்டமாச்சே! கூப்பிட்டிருக்கலாமில்ல?"

"மொதலாளி இருந்தாரில்ல!"

"அதனாலே என்ன? போகட்டும். இப்போ தாகம் தீர்ந்திருச்சா?"

"ஆமா...கொஞ்சம் வெயில் அடிக்க ஆரம்பிச்சதும் நான் கொழந்தையை எடுத்துக்கிட்டு போயிர்றேன்."

"எங்கிட்டு?"

"அது...அது..அல்லாவுக்குத்தான் தெரியும்..." அவளுடைய கண்கள் நிறைந்து தளும்பி, கண்ணீர் நெஞ்சு மீது சொட்டுச் சொட்டாக விழுந்தது.

"நீ போக வேணாம்." - இதைக் கூறியபோது ஹஸ்ஸனின் நரம்பில் ஒரு முறுக்கு ஏறியது. "ஒரு பச்சைக் குழந்தையை எடுத்துக் கிட்டுப் போக முடியுமா?"

"ஆனா இங்கே இருந்தாலும் ஒங்களுக்கு இடைஞ்சலா இருக்கும்; அதுவும் தவிர மொதலாளியும் வந்திட்டாரு."

"பெரியவரு நல்லவருதான். ஒண்ணும் சொல்ல மாட்டாரு."

ஆமினா பெருமூச்சு விட்டாள்: "மாலிக்கல் ஜப்பாராய தம்பிரானே!"

"எந்த ஊரு?"

"மஞ்சேரி."

"எப்படி மலைக்கு வந்தே?"

"என் புத்தி மோசத்தினாலே."

ஹஸ்ஸன் கொஞ்ச நேரத்திற்கு எதுவும் பேசவில்லை. அவளை முழுதுமாக ஒரு முறை பார்த்தான். பனியில் நனைந்த நீலச் சங்கு மலர்களைப் போலிருந்த அந்தக் கண்கள் நட்பும் தோழமையும் வேண்டி யாசிப்பதைப் போல் தென்பட்டன. அந்தப் பச்சிளங் குழந்தை ஒரு முறை நீட்டி நிமிர்ந்துவிட்டு மறுபடியும் தூங்கி விட்டது. ஒரு நீண்ட பயணத்தை முடித்து ஓய்வு எடுத்துக் கொள்கிறது போலிருக்கிறது.

"இந்தக் கொழந்தையோடே தகப்பன்?" ஹஸ்ஸன் மிகவும் கிலேசப்பட்டுத்தான் இந்தக் கேள்வியைக் கேட்டான்.

"அந்த ஹம்க் என்னை ஏமாத்திட்டானில்ல?"

"எப்படி?"

"மொதல்லே இனிப்பாப் பேசி ஊர்லேர்ந்து கடத்திக்கிட்டு வந்திட்டான். அப்புறம் இந்தத் தோட்டத்திலே கொண்டு விட்டிட்டுப் போய்ட்டான். மை வச்சிப் பாத்தும் காணலே."

"தோட்டத்திலேயா வேலை?"

"வெரட்டிட்டாங்க."

"ஏன்?"

"மேஸ்திரியோடே கொஞ்சலுக்கும் நான் ஒத்துப்போகாத தனாலே."

மேஸ்திரியினுடைய அட்டகாசங்களுக்கு இணங்காததால்தான் அவள் வெளியேறியது என்று கேட்டபோது ஹஸ்ஸனுக்கு மிகவும் மகிழ்ச்சி ஏற்பட்டது: 'அழுத்தக்காரிதான்!' என்று உள்ளுக்குள் நினைத்துக்கொண்டான்.

ஆமினாவின் மனத்தினூடே கடந்த காலம் முழுவதும் கடந்து சென்றது; அப்பா அவளைச் செல்லமாக வளர்த்தது; எல்லோருக்கும் அவளைப் பிடித்திருந்தது; அம்மாவின் வாஞ்சை பொங்கும் அழைப்புக் குரல்; அம்மாவின் தோழிகளான இரண்டு ஹிந்துப் பெண்கள் சற்றுத் தள்ளி இருந்தாலும் குதூகலமும் நட்பும் கலந்து அவளைச் சீராட்டியது; கவலை இல்லாத அந்த வாழ்க்கை; கடைசியில் அப்பாவும் அம்மாவும் வைசூரி கண்டு இறந்தது; அப்பாவின் நிலங்களும் வீடும் பறி போனது; சகோதரன் ஓடிப்போனது; இனிமையான ஒரு புன்னகையுடன் மனம் மயக்கும் சீழ்க்கை ஒலியுடன் உஸ்மான் அவளை அணுகியது; இன்பமான இரவுகள்; வயநாடன் மலை நோக்கிப் பயணம்- இவையெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக அந்த நெஞ்சில் கடந்து வந்தன. ஆமினா ஒரு முறை பெருமூச்சு விட்டாள்.

"நான் இப்பிடி இருக்க வேண்டியவ இல்லே; தரமான குடும்பத்திலே பெறந்தவதான். என்னோடே முட்டாத்தனத்தினாலே..." தொண்டை இடறிற்று. கண்கள் மீண்டும் நிறைந்தன.

"அவன் இனிமே வரமாட்டானில்ல?"

"எங்கே வரப்போறான்? இதுக்குள்ளே எத்தனை எளசுகளைக் கெடுத்தானோ..."

"சரிதான்." ஹஸ்ஸன் சொன்னான்: "ஒனக்கு.." ஹஸ்ஸன் சட்டென்று நிறுத்திக்கொண்டான்.

"என்ன?" - ஆமினா தலை நிமிர்ந்தாள்.

"ஒனக்கு இங்கே தங்குறதுக்கு மறுப்பில்லியே?"

சின்னதாக அதிர்ச்சி ஒன்று அவளுடைய கண்களினூடே பாய்ந்து சென்றது. அவள் ஒரு நிமிட நேரம் மௌனமாக இருந்துவிட்டுத் தொடர்ந்தாள்: "மேலே பாத்தா வானமும் கீழே பாத்தா பூமியும் கதியாயிருக்கும் எனக்கென்ன மறுப்பு?"

முதன் முதலாக ஒரு பெண்ணின் குரல் அந்த வீட்டில் தவழ்ந்து பரவியது. அது அந்த வீட்டிற்கு உயிரும் உணர்வும் ஊட்டுவது போல் தோன்றியது. பிறகு அவன் எதுவும் கேட்கவில்லை.

அறையை விட்டு வெளியே போனான். ஒரு தம்ளர் காப்பி எடுத்துக்கொண்டு மாயனின் அருகில் சென்று தட்டி எழுப்பினான்.

"பொழுது விடிஞ்சிரிச்சில்ல?" - ஒரு தத்துவ ஞானி போல மாயன் கேட்டான்: "இனி முப்பது நாழிகை கழிஞ்சாத்தான் இருட்டும், இல்லியா?"

"உம்... அண்ணே, எப்போ போறீங்க?"

"நிச்சயம் பண்ணலே; போகணும்!"

மாயன் ஏதோ யோசனையில் ஆழ்ந்தான்; ஹஸ்ஸனும்.

## 17. புதிய தளிர்

"கொஞ்சம் நில்லு !"

"என்னத்துக்கு ?"

"ஒண்ணு சொல்லப் போறேன்."

"சொல்லுங்க, கேக்கறேன்."

"சொல்ற ஆளு பின்னாலேயே வந்துக்கிட்டிருக்க முடியுமா?"

"சொல்லணும்னு இருந்தா வரலாம்தான்."

"கேக்கணும்னு இல்லியா?"

"சொல்லாமே கேக்கணும்கிறது எப்படி?"

"குதிரை மாதிரி இப்படி பின்னாலே ஓட முடியாது."

"இயல்பாவே எனக்கு இந்த ஓட்டந்தானே? எனக்குப் பின்னாலே ஓடி வந்தா என்ன தப்பு?"

"தர்க்கம் பண்ணிக்கிட்டிருக்க முடியாது. நிக்கிறியா இல்லியா?"- அப்பு நடப்பதை நிறுத்திக் கேட்டான்.

"உலகத்திலே வேறேயும் ஆளிருக்கு." சின்னம்மு நடந்து கொண்டேதான் பதில் சொன்னாள்.

"இப்போ நிக்கப் போறியா இல்லியா?" - அப்பு உரக்கவே கேட்டான்.

சின்னம்மு நின்றாள். பிறகு ஒரு பரிகாசச் சிரிப்புடன் கேட்டாள்: "பைத்தியம் ஏதாச்சும் பிடிச்சிருக்கா?"

"இப்போதைக்கு இல்லே."

"எல்லாப் பைத்தியங்களும் எப்பவும் சொல்றது அப்படித்தான். என்ன வேணும்?"

"சிலது பேசணும்னு நினைக்கிறேன்."

"வீட்டிலே மூணு நாற்காலி இருக்கு. எட்டடி நீளத்திலே ஒரு பெஞ்சும்கூட. இந்த இடைவழி, ஆளுங்க நடக்கிறதுக்காக்கும். புரியுதா?"

"டீச்சரம்மா சொல்றதை ஸ்கூல் பசங்கதான் கேப்பாங்க."

"ஆமாம்."

"நான் ஒரு வார்த்தை கேக்கலாம்னு இருக்கேன்."

"என்ன?"

"நானும் ட்ரெய்னிங்குக்குப் போனா?"

"மாணவங்க பாடு திண்டாட்டந்தான்." சின்னம்மு பட்டென்று சொன்னாள்.

"அதென்ன?"

"வீட்டுக்கு வந்தா சொல்லுவேன்."

சின்னம்மு கை வீசிக்கொண்டு குடையைப் பிடித்தபடி பள்ளிக்கூடத்தை நோக்கி நடந்தாள். அப்து விழித்துக்கொண்டு நின்றான். இவள் யாரப்பா, சப்இன்ஸ்பெக்டரோ?

ட்ரெய்னிங்குக்குப் போக வேண்டுமென்ற சிந்தனை அப்துவின் மனதில் முளைத்து சில நாட்களாகின்றன. சும்மாவே இருந்து வெறுத்துவிட்டது. இப்போதெல்லாம், வீட்டில் இருப்பதற்குக் கூடப் பிடிக்கவில்லை. அங்கே யாரும் யாருடனும் பேசிக் கொள்ளாத ஒரு நிலைதான். மாயனின் வெளியேற்றத்தினால் அந்த வீட்டில் மகிழ்ச்சியும் உற்சாகமும் வந்து சேரும் என்றுதான் அப்து எதிர்பார்த்தான். ஆனால் மாறுபாடாகத்தான் நடந்தது. அதிகப்படியான இருட்டு பரவிற்று. மாயன் போனதற்குப் பிறகு உம்மாச்சு பெரும்பாலான நேரம் தன் படுக்கையறையிலேயே இருந்தாள். நிம்மதி இல்லாத வாழ்க்கை. ஒன்றுமில்லாததற்குக்கூட அவள் கோபித்துக் கொள்வாள்.

கட்டிலின் அடியில் எச்சில் கும்பா காணாவிட்டால் போதும், வேலைக்காரிகளை வைது தீர்ப்பாள்: "எல்லாருமாச் சேர்ந்து எங்கேடி தொலஞ்சிட்டீங்க, சனியன்களா? எல்லாருமாச் சேர்ந்து என்னெ அவஸ்தைப் படுத்துறீங்களே!"

வேலைக்காரிகள் சற்றே திகைத்தார்கள். அவர்கள் தங்களுக்குள் கிசுகிசுத்துக் கொண்டார்கள்: "பெரியவங்களுக்கு என்னாச்சி?"

"கிறுக்கு!"

"சே! நல்லாத்தானே இருந்தாங்க?"

"இப்போ எப்ப பார்த்தாலும் நமத்தல்தான்!"

"பெரியவரு போய்ட்டதாலே வெசனமா இருக்கும்!"

"இருந்தாலும், பெரியவரும் வந்து பாத்திட்டுப் போயிருக்க லாமில்ல?"

"எனக்கொரு சந்தேகம்...."

"என்ன?"

"அம்மாவுக்கும் பெரியவருக்கும் இடையிலே ஏதாச்சும் தகராறா?"

"அப்பிடி இருக்காது. ஈயும் சர்க்கரையும் போலேல்ல இருந் தாங்க? அவங்க நடந்துக்கிட்டதைப் பாத்தா, வயசாயிட்டதை அவங்க கண்டுக்கவே இல்லேண்ணில்ல தோணிச்சி!"

"இருந்தாலும், ரெண்டாம் கல்யாணமில்ல!"

"அதனாலே என்னவாம்? மொதல் கலியாணம் பள்ளிவாசல் போயிட்டு வர்றாப்பிலே; ரெண்டாம் கலியாணம்கிறதுதான் மௌல்வியா ஆறது."

"ஒனக்கென்ன மௌல்வியாகணும்னு நெனப்பிருக்கா?"

"ஹைத்ரோஸ் மொதலாளி கெடச்சா நீ மௌல்வி ஆக மாட்டியா!"

"சீ! சைனபா, என் சோத்திலே மண்ணை வாரிப் போட்டிராதே! ஏதுன்னாலும் பெரியம்மாவுக்கு இப்போ நேரம் சரியில்லே!"

"நமக்கும்தான்."

உம்மாச்சுவின் முணுமுணுப்புகளை அந்த வேலைக்காரிகள் பொறுத்துக் கொண்டார்கள். கடந்த காலங்கள் அவர்களுக்கு நினைவில் இருந்தன. உம்மாச்சு தானாகட்டும் ஹைத்ரோசுடனும் மரக்காருடனும் பேசுவதில்லை. ஹைத்ரோஸ் அடிக்கடி அறைக்குள் வந்து கேட்பான்: "உம்மா எதுக்காக இப்படிப் படுத்துக் கெடக்கிறே?"

"என் இஸ்டம்."

"ஏம்மா இப்படியெல்லாம் பேசறே?"

"டேய், நன்றியில்லாதவண்டா நீ!"

"உம்மாவுக்கு என்ன வேணும்?"

"எனக்கு ஒன்னோடே சொரிசு ஒண்ணும் வேணாம்... ஒன்னோடே வாப்பா போயி இத்தனை நாளாச்சில்ல?"

"ஆமாம்."

"நீ ஒரு தரமாவது தேடிப் போனியா?"

"நான் அப்பாவைத் தேடிப் போகணும்கிறே, அவ்வளவுதானே?"

"போக வேணாம்; வர்றப்போ வரட்டும்."

"நான் நாளைக்குப் போறேம்மா."

"வேணாம். இனிமே அங்கே போயி குழப்பம் உண்டாக்க வேணாம்."

"நான் என்ன குழப்பத்தை உண்டாக்கப் போறேம்மா?"

"எல்லாம் ஒண்ணுதான்! இனிமே வாப்பா வரமாட்டாரு. அப்பிடீன்னாத்தான் என்ன?"

"வாப்பா வரமாட்டாங்களாம்மா?"

"வருவாங்க."

ஹைத்ரோஸ் ஏதோ யோசித்தான். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் இடையிலான உறவில் ஏதேனும் இடர்ப்பாடு நேர்ந்ததோ? அதனாலேயா அப்பா வீட்டை விட்டுப் போனார்? அப்படியானால் கவனிக்க வேண்டுமே!

"என்னப்பா யோசிக்கிறே?"

"வாப்பா போனதுக்கு காரணம் என்னம்மா?"

உம்மாச்சு தணிந்து பேசினாள்: "வயநாட்லே மேற்பார்வை ஏற்பாடுகளை கவனிக்கப் போனாரில்ல? ஹஸ்ஸன் அங்கே என்ன பண்றான்னு பார்க்கப் போயிருக்காரு."

"பின்னே எதுக்காகச் சொன்னே, வாப்பா வரமாட்டங்கன்னு?"

"சும்மா இரு. தொணதொணக்காதே. உம்மாவுக்கு சொகமில்லேண்ணு தெரியுமில்ல! நம்மளைவிட்டு வாப்பா எங்கேயாச்சும் போவாங்களா?"

ஹைத்ரோஸ் அமைதியானான். ஆனாலும் அம்மாவின் நடவடிக்கைகளில் வந்த மாற்றத்தை கவனிக்கவில்லை. சட்டென்று கோபிக்கிறாள், சட்டென்று அமைதியாகிறாள்; சட்டென்று சிரிக்கிறாள், சட்டென்று அழுகிறாள். இந்த நடவடிக்கைகள் உண்மையில் ஹைத்ரோஸைக் குழப்பத்தில் ஆழ்த்தின. என்னதான் இதெற்கெல்லாம் காரணம்? மனிதர்களுக்கு வயது கூடினால் இப்படியெல்லாம் மாறுவார்களோ? அம்மாவுடன் அதிகம் பேசி

அவளை நோகச் செய்யாதிருப்பதே நல்லதென்று அவன் நினைத்தான். மரக்கார் தினமும் ஒரு தடவை அம்மாவின் பக்கத்தில் போய் உட்கார்ந்திருப்பான். அப்படி கொஞ்ச நேரம் உட்கார்ந்த பிறகு உம்மாச்சு கேட்பாள்: "மரக்காரே, சாப்பிட்டியா?"

"ஆமாம்மா, உம்மா சோறு சாப்பிடலியா?"

"சாப்பிட்டிட்டேன். சாப்பிடாமே முடியுமா? சாகிற வரைக்கும் கிடக்க வேணாமா?"

"இப்படியெல்லாம் பேசாதேம்மா."

அதற்குப் பிறகு இருவரும் பேசவில்லை. மரக்கார் அமைதியாக இருந்தான். கூர்ந்து நோக்கும் இயல்புடையவனாக இருந்தான் மரக்கார். தாயின் இருதயத்தில் தாங்க முடியாத அதிர்ச்சி ஏற்பட்டிருக்கிறதென்று அவன் புரிந்துகொண்டான். ஆனால் என்னவென்று தெளிவுபடவில்லை.

அவன் பலமுறை கேட்டான்: "உம்மாவுக்கு என்னாச்சி?"

"ஒண்ணுமில்லே, மரக்காரே."

தொடர்ந்து எது கேட்டாலும் பதில்லை. ஒரு நாள் காலையில் அவன் அம்மாவின் அறைக்குள் சென்று சொன்னான்: "உம்மா, நான் இன்னிக்குப் போறேன்."

"எங்கே?"

"வயநாட்டுக்கு."

"எதுக்கு?"

"வாப்பாவை ஒரு தரம் பார்க்கணும். போய் நாளாச்சில்ல?"

"உம்...ஆனா இப்போ போக வேணாம்."

"எனக்கு வாப்பாவைப் பார்க்கணும்மா."

உம்மாச்சு சிறிது நேரம் யோசித்தாள்: அவனுக்கு அவனுடைய தகப்பனைப் பார்க்க வேண்டும். பார்க்க வேண்டியதுதான். பிள்ளைகள் தகப்பனைப் பார்க்காமல் எவ்வளவு காலம் இருக்க முடியும்! மரக்கார் ஹைத்ரோஸைப் போல ஒரு அடாவடிக்காரனல்ல. இவன் போய்ப் பார்ப்பதனால் ஆபத்து எதுவும் வரப் போவதில்லை.

"போய் வா. ஆனாக்க, வாப்பாகிட்ட ஒண்ணு சொல்லு. உம்மாவுக்கு ஒரு சவப்பெட்டி சீக்கிரமா செய்து தரச்சொல்லு."

"உம்மா, சும்மா இருங்க. நான் போய் வர்றேன்." - அவன் வெளியே வந்தான். வாசலில் அப்து நின்றிருந்தான். "என்னண்ணே?" - மரக்கார் அமைதியாகக் கேட்டான். அதற்கு பதில் ஏதும் சொல்லாது அப்து தாயின் அருகில் சென்றமர்ந்தான். மரக்கார் ஒரு நிமிடம் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, தன் வழியைப் பார்த்து நடந்தான்.

அப்து ஒன்றும் பேசவில்லை; அம்மாவும் எதுவும் பேசவில்லை. வெடித்துச் சிதறும் ஒரு சூழலாக இருந்தது. அப்துவுக்கு என்னவெல்லாமோ பேச வேண்டுமென்றிருந்தது; அம்மாவைக் கட்டிப் பிடித்துக்கொண்டு அழ வேண்டும் போலிருந்தது; ஆனாலும் முடியவில்லை. அவன் அம்மாவின் காலடியில் உட்கார்ந்தான். நுரைத்துப் பொங்கும் வார்த்தைகள் கழுத்து வரை வந்து அலைக்கழிந்து மறுபடியும் கீழேயே போய்விட்டன. அம்மா ஏதாவது சொல்ல வேண்டுமென்று மகன் ஆசைப் பட்டான்; மகன் ஏதாவது பேசுவான் என்று தாய் எதிர்பார்த் தாள். அம்மா ஜன்னல் வழியே பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த இருதயத்தில் பற்பல காட்சிகள் வந்து போயின. அப்து தன் வயிற்றில் உண்டாகியிருக்கிறான் என்று முதன் முதலாக பீரானிடம் கூறியது; அதைக் கேட்டு பீரான் மகிழ்ச்சியினால் துள்ளிக்குதித்து ஓடிச் சென்று தன் தாயாரிடம் சேதி சொன்னது; 'அப்படியா உம்மாச்சு?' என்ற மாமியாரின் கேள்வியைக் கேட்டுத் தான் தலை குனிந்து நின்றது; அப்துவின் முதல் அழுகுரல் - இத்தனையும் நினைவில் எழுந்தபோது உம்மாச்சு சிலிர்த்துப் போனாள். அவள் மகனின் முகத்தைப் பார்த்துக் கேட்டாள்: "என்னப்பா அப்து?"

"ஒண்ணுமில்லேம்மா.

அதற்குப் பிறகு எதுவும் பேச அவனால் முடியவில்லை. குமைந்து குமைந்து அழுதான். தாயும் சேர்ந்து அழுதாள். எதற்காகவென்று வெளிப்படையாக உணர்த்த முடியாத அந்த அழுகை அரை மணி நேரத்துக்குத் தொடர்ந்தது. இரண்டு முளைக்குச்சிகளில் எட்டாத தூரத்தில் கட்டப்பட்ட பசுவும் கன்றும் ஒன்றையொன்று பார்த்துக்கொண்டு அழுவதைப் போலிருந்தது அந்தக் காட்சி. கடைசியில் உம்மாச்சு கூப்பிட்டாள் "மகனே!...."

"......"

"போப்பா -"

"உம்மா...."

"உம்..."

அவன் எழுந்து சாய்ப்பறைக்குப் போனான். அன்று அப்து தன்னைப் பற்றியும் தன் சுற்றுப்புறத்தைப் பற்றியும் தீவிரமாகச் சிந்தித்தான். இவ்வளவு தீவிரமாக அவன் இதுவரை சிந்தித்த தில்லை. இந்த வாழ்க்கையை எவ்வளவு காலம் தொடர்வது? வாழ்க்கை முடிவுவரை இந்த சாய்ப்பறையில் ஒருவனைப் புதைத்து வைத்திருப்பது சாத்தியமல்ல. உடம்பில் காயம் பட்டவன் எச்சரிக்கையுடன்தான் நடக்க வேண்டும். வெளி உலகுடன் அவனுக்கு வேண்டிய அளவு பிடிப்பில்லை. ஏற்பட்டிருந்த ஒரு பிடிப்பும் சீட்டு விளையாட்டுத்தான். அதுவும் நின்று போயிற்று. இனி பிறருடன் ஒத்துப்போவதைப் பற்றி அவன் நினைத்துப் பார்த்தான். கழிந்ததெல்லாம் கழிந்தது. கடந்த காலத்தை அழித்துவிட யாருக்கும் இயலாது. புத்தியுள்ளவன் அதை மறக்கத்தான் வேண்டும். மறப்பதையும் பொறுத்துக் கொள்வதையும் செயற்படுத்த முடியாவிட்டால் இந்த பூமி படுநரகமாகிவிடும்! எல்லாம் மறந்து, எல்லாம் பொறுத்து, எல்லோருமே ஒன்றாய் ஒத்து இணங்கி வாழ்வதற்கு ஏதாவது தடை ஏற்பட்டதுண்டோ? இல்லை, ஒன்றுமில்லை. சினேகமய மான அம்மா சிரித்துக் கொண்டு அவனுக்கருகில் நிற்கிறாள்; எதைச் சொன்னாலும் கேட்டுக்கொள்ளத் தயாராக இருக்கும் தம்பிமார்கள். பிறகு மாயன்தான். அவனும் மனிதன்தானே.... சட்டென்று உள்ளே இருந்து ஓர் எதிர்ப்புக் குரல் - அவன் மனிதன்தானா? கொலைபாதகம் செய்து அம்மாவையும் அப்பாவையும் ஒரேயடியாகத் தட்டிப் பறித்தவனல்லவா; தனது வாழ்க்கையை அனாதரவாக்கியவனல்லவா? சட்டென்று மாயனின் பூதாகாரமான உருவம் அவனுடைய இருதயத்தின் எதிரில் வந்தது. அவன் பற்களைக் கடித்தான் 'அந்தப் பிசாசு வந்து எல்லாத்தையும் அழிச்சிரிச்சி!'

அதை நினைக்கும்போது வஞ்சம் பொத்துக்கொண்டு வந்தது; பெற்ற தாயைக்கூட அவன் வெறுத்தான். அம்மா எல்லா வற்றுக்கும் துணையாக இருந்திருக்கிறாள் அல்லவா; எல்லா வற்றையும் மூடி மறைத்தாள் அல்லவா; அவனை, அந்தக் காட்டானை, காப்பாற்றிவிட்டாள் அல்லவா?

'சைத்தான் பிடித்த பெண்!'

ஆனால் அவள்தான் அவனை நோவு பொறுத்துப் பெற்றது; முலைப்பால் ஊட்டியது; அவனுக்காக வேண்டி அல்லும் பகலும் கஷ்டப்பட்டது. ஒரே பெண்ணில் ஒரு தேவதையும் ஒரு பிசாசும் சேர்ந்து குடியிருந்தன. ஒன்றைக் கும்பிட்டு வழிபடும்போது, மற்றொன்றை மிதித்துத் துவைக்க வேண்டும். எல்லாப் பெண்களும் இப்படித்தானா? ஒளியும் புகையும் ஒருசேரப் பரப்பும் தீதானா பெண்? சின்னம்முவும் அப்படித்தானா? இல்லை. அவளுக்கு அப்படி இருக்க முடியாது. இப்படி ஒரே ஒரு பெண்தான் உண்டு. அவனுடைய அம்மா. ஏன் அவள் இப்படி ஆனாள்? தன்னைப் பெற்றது அவளில்லை என்றிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்! ஆனால் பெற்றவள் அவளாகத்தானே இருந்தாள்!

ஊரிலுள்ள இளைஞர்களுக்கெல்லாம் அம்மாவும் அப்பாவும் இருந்தார்கள்; அவர்களில் யாருக்காகிலும் இப்படி ஒரு குழப்பமுண்டா? சினேகிக்கவும் வெறுக்கவும் ஒரே சமயத்தில் செய்ய வேண்டிய ஒரு தனிப்பட்ட அவஸ்தை. ஒத்துப்போவதற்கும் முரண்படுவதற்கும் இடையிலான ஒரு நிலை.

அப்துவிடம் அந்த மனப்போராட்டம் தொடர்ந்தது. அவன் சாய்ப்பறையில் ஜன்னலைத் திறந்து வைத்து உட்கார்ந்திருந்தான். அதற்கு அடுத்தாற்போல் வேலைக்காரிகள் வைக்கோலை அடித்துக்கொண்டிருந்தார்கள். வைக்கோல் அடிக்கும் கம்புகள் வைக்கோலில் விழுவதற்கு ஒப்பாகக் கண்ணாடி வளையல்களின் கிலுங்கல் ஒலி அவனுக்குக் கேட்டது. அவர்கள் ஆடுகிறார்கள், சிரிக்கிறார்கள். எவ்வளவு லகுவான உணர்வோடு கூடிய வாழ்க்கை அவர்களுடையது! பக்கத்துச் சாய்ப்பில் அய்யப்பன் விறகு வெட்டிக்கொண்டிருக்கிறான். அந்த மெலிந்த சரீரம் மொத்தத்தில் வியர்வையில் குளித்திருந்தது. இருந்தாலும் அவன் வேகவேகமாக வெட்டினான். வெண்கலப் பாத்திரத்தில் தண்ணீருடன் அவனுடைய மனைவி அருகில் சென்றாள். அவன் அதை வாங்கிக் குடித்தான். நன்றி சொல்வது போல அவளுடைய முகத்தைப் பார்த்தான்; மறுபடியும் விறகு வெட்டத் தொடங்கினான். இவர்களுக்கெல்லாம் வாழ்க்கை முழு அளவில் திருப்தியானது தானா? எப்படித் திருப்தியானதாக ஆக்கிக்கொள்ள முடிந்தது? அவர்களுக்கு ஊடல், கர்வம், வெறுப்பு எதுவும் இல்லையா? அல்லது வேலை மும்முரத்தில் எல்லாவற்றையும் மறந்து

விடுகிறார்களா? வேலை செய்பவனுக்கு இதற்கெல்லாம் நேரம் கிடைத்திருக்காது. தானும் ஏன் வேலை செய்யக் கூடாது? என்ன வேலை செய்யலாம்? வயல் வேலை பழக்கமில்லை; விறகு வெட்டத் தெரியாது; எண்ணெய்ச் செக்காட்டிப் பழக்கமில்லை. அப்படிப் பார்த்தால் ஒன்றுமே தெரியாது.

'நான் படிச்சவனாச்சே.' -- அவன் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான் "ஏதாச்சும் தொழில்னு இருந்தா, நானாச்சு என் வேலையாச்சுன்னு கெடப்பேன். அந்தச் சின்னம்முவுக்கு ஏதாவது சிக்கல் இருக்கா?"

உண்மைதான். தனக்கு உதவக் கூடியது ஒரு பள்ளி ஆசிரியர் வேலைதான். யாருடனும் கூட்டுச் சேர்ந்து அண்டிப் பிழைக்க வேண்டாம். தானும் தன் மாணவர்களும் சேர்ந்து ஒரு தனி உலகத்தைப் படைத்துக்கொண்டால் போதுமானது. ஒரு தொழிலை உருவாக்கிக்கொண்டு எல்லாவற்றையும் அறவே மறந்துவிடலாம் அல்லவா!

அதனால்தான் அவன் சின்னம்முவை அணுகி விசாரித்தான், தான் 'ட்ரெய்னிங் போனால் என்ன என்று. அப்துவின் உலகத்தில் எல்லாக் காரியங்களையும் யோசித்து முடிவெடுக்க இருவரே இருந்தார்கள். சின்னம்முவும் அவளுடைய தகப்பனாரும். சின்னம்மு எப்போதும் அவனைக் கோபித்தாள். சாப்புண்ணி நாயர் அறிவுரை வழங்கினார். இரண்டையும் அனுசரிப்பது பல சமயங்களில் கஷ்டமாக இருந்தது. ஆனால் அனுசரிக்காமல் இருக்கவும் முடியவில்லை.

அன்று மாலைப் பொழுதில் சாப்புண்ணி நாயரின் வீட்டிற்குச் சென்றான். முற்றத்தில் யாருமில்லை. அவன் அரவமில்லாமல் நாற்காலியில் உட்கார்ந்தான். உள்ளே சில பாத்திரங்கள் மோதிக் கொள்ளும் சத்தமும் லட்சுமியம்மையின் பேச்சுக் குரலும் கேட்டன. அவன் தேடி வந்த நபரின் சந்தடி மட்டும் கேட்கவில்லை. ஆனாலும் காத்திருக்கலாம் என்று தீர்மானித்தான். யோசனைகள் மனதுக்குள் அலைக்கழிந்தன. உள்ளத்தில் ஒரு போராட்டம். அந்தப் போராட்டம் முடிந்து அவனை அது பின்னுக்கு இழுத்துச் சென்றது. போராட்டத்தின் முடிவில் அவனுடைய மனதில் ஒரே ஓர் உருவம் மட்டும் எஞ்சி நின்றது -- சின்னம்முவின் அந்த நெற்றியும் மூக்கும் கண்களும் துல்லியமாகத் தெரிந்தன. அப்து அவற்றை நோக்கியபடி முகம் தாழ்த்தியிருந்தான்.

"தொழுகை நடத்துறீங்களா?" - திடீரென்று எதிரிலிருந்து ஒரு கேள்வி. அப்து தலையுயர்த்திப் பார்த்தான். சின்னம்மு. குடையைக் கையில் ஏந்தியபடி முன்வாசலில் நின்றிருந்தாள். குழப்பத்துடன் அப்து சொன்னான்: "இல்லே."

"தொழுகையில்லே, அப்படித்தானே? நல்லதாப் போச்சி. நான் புடவை மாத்திக்கிட்டு வர்றேன்." - அவள் எதையும் கண்டு கொள்ளாத பாவனையில் உள்ளே போனாள். போகிற போக்கில் அவளுடைய முன்றானை அப்துவின் கையை உரசிக் கொண்டு போயிற்று; அது அவனை மயிர்க்கூச்செரியச் செய்தது!

பத்து நிமிடங்களில் கீழுடுப்பும் ஜாக்கெட்டும் மேல்துண்டும் உடுத்திக் கொண்டு, கையில் சிற்றுண்டியும் காப்பியும் ஏந்தி சின்னம்மு திரும்பி வந்தாள். அவற்றை அப்துவின் எதிரில் வைத்துவிட்டுச் சொன்னாள்: "தொழுகை முடிஞ்சதும் ஏதாச்சும் சாப்பிடணுமில்ல.. உம், சாப்பிடுங்க."

அப்து மெதுவாகச் சிரித்தான். தொடர்ந்து கேட்டான்: "இன்னிக்கு ஸ்கூல் விட்டு வர ரொம்ப நேரமாயிடிச்சே!"

"ரொம்ப நேரமாகல்லே, கொஞ்ச நேரம்தான்." - சின்னம்மு.

"என்ன காரணம்?"

"அதா, இன்னிக்கு காங்கிரஸ்காரங்க பிரசங்கம் கேட்டுக்கிட்டு கொஞ்ச நேரம் நின்னிட்டேன்."

"ஓகோ!"

"அவங்க சொல்றாங்க, நாட்டை நம்மதாக்கணுமின்னு."

"சும்மா ஆசையிலே பேசறாங்க."

"ஆசைப்படறதனாலேதானே ஒவ்வொண்ணையும் சாதிக்க முடியுது? எதுக்கும் ஒரு தெம்பு வேணும்."

"தெம்பை நம்பிப் போனா அவங்க கையிலே துப்பாக்கி இருக்கு."

"அதைப்பத்தியெல்லாம் யோசிக்கிற மூளை அவங்களுக்கும் இருக்குது. நீங்க ஏன் இந்தக் காங்கிரஸ்லே சேரக்கூடாது?"

"எதுக்காக?"

"ஸ்கூல் வாத்தியார் வேலையைவிட ஒசந்ததில்ல தேசத்தை வசமாக்கிறது?"

அப்பு தம்ளரைக் கீழே வைத்தான். சின்னம்முவை ஏற இறங்கப் பார்த்தான்: "சின்னம்முவுக்கு எல்லாமே கிண்டல்தானா?"

"நல்லது நடக்கட்டும்னு சொல்றது கிண்டலா? நீங்க எளவட்டந் தானே? நாட்டுக்குப் பாடுபடறது ஒண்ணும் தப்பில்லையே! ஆனால் அதுக்கு ஒங்களுக்குத் தெம்பு வேணும்."

"சின்னம்மு, எனக்குத் தெம்பில்லேண்ணா நெனச்சிக் கிட்டிருக்கே?"

"நான் நெனக்கிறதாலே மட்டும் ஒருத்தருக்கு தெம்பு வந்திராதில்ல?"

"அப்படியில்லே, எனக்குத் தேவையான அளவு தெம்பு என்கிட்ட இருக்கு."

"தேவையான அளவா! ஆனால் அந்தத் தேவைப்படற அளவே ரொம்பக் கொறச்சலாத்தான் இருக்கு. அதனாலேதான், நான் ஸ்கூல் வாத்தியாராப் போறேன், அதாகப் போறேன், இதாகப் போறேன்னு சொல்லிக்கிட்டுத் தடுமாறுநீங்க!"

"சின்னம்மு தெம்பு இல்லாததனால்தான் டீச்சர் ஆனதாக்கும்?"

"இப்போ, பொண்ணுங்க தெம்புதான் ஒங்களுக்கு இருக்காக்கும்?"

"தர்க்கம் பண்ண என்னாலே முடியாது."

"அப்படீன்னா நான் சொல்றதைக் கேளுங்க. பைத்தியக்காரத் தனமா அது இதுன்னு நெனைச்சுக்காம அவங்கவங்க காரியத்தைப் பாத்துக்கிட்டு மரியாதையா ஆம்பிளைகள் மாதிரி நடந்துக்கணும். குடும்பத்தைச் சமாளிக்க முடியாதவங்களுக்கில்ல ஸ்கூல் வாத்தியார் வேலை!"

அப்பு தலை குனிந்திருந்தான் சின்னம்முவின் நீண்ட கண்கள் அப்புவின் முகத்தில் அப்போது மாறி மாறி இடம் பெற்ற உணர்ச்சி பாவங்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தன.

"நான் போகத்தான் போறேன்."

"எங்கே?"

"எங்கேயாவது"

"வண்டிக்கு டிக்கட் எடுக்கற இடத்தை நான் சொல்லித் தரவா?"

"சின்னம்மு, இந்தக் கிண்டலை நிறுத்து; எல்லாருக்கும் என்னைப் பார்த்தா கேலியாப் போச்சி. யாருக்கும் நான் வேண்டாதவனாப் போய்ட்டேன்."

"அதனாலேதான் போறேங்கிறீங்களா?"

"ஆமாம்."

"அப்படீன்னா போக வேணாம்."

"ஏன்?"

"உம்மாச்சு அம்மா, மகன் வேணாம்னு வெறுத்திறலே."

"எனக்கு இந்த வாழ்க்கை வெறுத்துப் போச்சி."

"வாழாமே இருக்கிறவங்களுக்குத்தான் வாழ்க்கை வெறுத்துப் போகும்."

"சின்னம்மு!"

"உம்?"

"எனக்கும் வாழணும்னு ஆசைதான்."

"வாழ வேண்டியதுதானே!"

"ஆனால் இந்த மாதிரியான வாழ்க்கை என்னை எங்கே கொண்டுபோய் விடும்னு எனக்கே தெரியாது. ஒண்ணு, நான் பைத்தியமாவேன்; இல்லாட்டி, தற்கொலை பண்ணிக்குவேன்."

"ரெண்டும் ஒண்ணுதான் - பைத்தியக்காரத்தனம்தான்!"

"ஒனக்கு இதைச் சொல்ல ரொம்ப லேசா முடியுது." - வெறுப்பை வெளிப்படுத்தும் முகபாவத்துடன் அப்து தொடர்ந்தான்.

"மனசோடே எரிச்சல் என்னண்ணு ஒனக்குத் தெரியாது. ஒன்னோடே அப்பாவைப் பிடிச்சி யாரும் கழுத்தை அறுத்த தில்லே; ஒன்னோடே அப்பாவைக் கொன்னவனுக்கு எதிரிலே தலையைச் சொறிஞ்சிக்கிட்டு நிக்க வேண்டி வந்ததில்லே. ஒன்னோடே அம்மாவை அந்தக் கொலையாளி..."

"நிறுத்துங்க, அப்து! என்னவெல்லாம் இல்லாத பொல்லாத கதைகளைச் சொல்றீங்க. நீங்கள்ளாம் அம்பிளையா? இருதய சக்தியில்லாத சவம்!"

அப்துவின் தலை தானாகத் தாழ்ந்தது.

"நெனச்சிப் பாருங்க!" சின்னம்மு நடுக்கத்துடன் பேசினாள்: "உங்கம்மா ஒரு நிமிஷம் சலனப்பட்டிருந்தாங்கன்னா நீங்க

இன்னிக்கு உயிரோடவே இருக்கமாட்டீங்க. பிறந்தவுடனேயே உங்களைப் பிடிச்சி குப்புறப் படுக்கப் போட்டிருந்தா அதுவே போதும்."

"அதைச் செய்திருந்தா எனக்கு இன்னிக்கு இந்தக் கவலை அனுபவிக்க வேண்டி வந்திருக்காது." - அப்து துக்கம் நிறைந்த குரலில் தொடர்ந்தான்: "அதைச் செய்யாமே விட்டிட்டாளே.."

"இந்த அலட்டல் வார்த்தையெல்லாம் என்கிட்ட பேச வேணாம்! அப்து, உங்க அம்மா அன்னிக்கு அதைச் செய்யலே; தப்பாவே இருக்கட்டும். ஆனால் இன்னிக்கு உங்களுக்கு வயசாயிருச்சில்லே? நீங்களாவே அதைச் செய்ய முடியாதா- தற்கொலை பண்ணிக்கிடுறதை?"

"சின்னம்மூ!" அப்து உணர்ச்சி வசப்பட்டவனாக அவளுடைய முகத்தைப் பார்த்தான்.

"ஏன், எதுக்காகக் குழம்பறீங்க?" அவள் மென்மையான குரலில் கேட்டாள்: "அப்படிச் செய்ய உங்களுக்கு இஷ்டமில்லே, அப்படித்தானே? வாழ்ந்திருக்கணும்னு ஆசை இருக்கு. அது எல்லாருக்கும்தான் உண்டு; உங்க அம்மாவுக்கும்தான். அவங்க ஒரு பொம்பிளே. உங்களுக்கு ஒரு பொண்ணைப் புரிஞ்சிக்க முடியாது. நீங்க பலவீனம்."

அதற்கு என்ன பதில் சொல்ல வேண்டுமென்று அப்துவுக்குத் தெரியவில்லை. அவனுக்கு தலையைக் குடைவது போலிருந்தது. ஏதேதோ இருதயத்தில் உடைந்து சிதைந்தன. அவன் நின்ற இடம் பிளந்தது. தான் இந்த உலகில் நிராதரவாகிவிட்டான். சின்னம்முகூடத் தன்னைக் கைகழுவிவிட்டாள். தனக்கென்று இந்த உலகத்தில் யாருமில்லை. அவன் ஒற்றை ஆளாய் நிற்கிறான். அந்தத் தனிமையுணர்வு பொறுத்துக்கொள்ள முடியாதபடி இருந்தது. அப்து தன்னுடைய தீனக் கண்களை சின்னம்முவுக்கு நேராக உயர்த்தினான். அவளும் இங்கே பார்த்தாள். அந்த நான்கு கண்களும் அசையாமல் சிறிது நேரம் நிலைத்தன. ஒவ்வொருவரின் கண்களும் மற்றவரின் கண்களிலிருந்து எதையோ கண்டுபிடிக்க முயன்றன.

"அப்து..." அவள் மெல்லிய குரலில் கூப்பிட்டாள். அவ்வளவு மென்மையாக முன்பு ஒருபோதும் அவள் பேசி அப்து கேட்டதில்லை.

"என்ன சின்னம்மு?"

"உங்களுக்கு என்மேலே நம்பிக்கை இல்லையா?"

"இருக்கு."

"அப்படீன்னா நான் சொல்றதைக் கேளுங்க. உங்க மீறல் போக்கும் வெறுப்பும் கோபமும் எல்லாமே எனக்குப் பிடிச்சிருக்கு."

"நிஜம்மாவா?"

"ஆமாம். ஆனால் நீங்க முட்டாளா மார்றதைப் பார்க்க என்னாலே முடியாது. பொறுத்துக்கிடுங்க. எல்லாமே சரியாயிடும்."

"எப்படி?"

"அது எனக்குத் தெரியாது. ஆனால் சரியாயிடும். என்னை நம்புங்க. நம்புவீங்கல்ல?"

அந்த நீண்ட கண்கள் அப்துவின் சோக மயமான கண்களுடன் சென்று இணைந்தன.

"ஆமாம்." அப்து எழுந்து நின்றான்: "நான் வர்றேன்."

"அப்பா வந்த பிறகு போனால் போதாதா?"

"நான் அப்புறமா வர்றேன்."

"வரணும்."

"உம்."

வழி நெடுக அப்து தன்னுடைய உள்மனத்தைப் பார்த்தபடி நடந்தான். அங்கே ஒரு புதிய தளிர் தலையெடுப்பதை அவன் கண்டுகொண்டான்.

# 18. தப்பி ஓட்டம்

"மகனே, போய்ட்டு வா!" மாயன் நீண்ட கையெடுத்து மரக்காரின் தோளில் வைத்துச் சொன்னான். மரக்கார் ஒரு வாரமாக அப்பாவுடன் தங்கியிருந்தான். அப்பாவும் தன்னுடன் ஊருக்கு வர வேண்டும் என்பதுதான் அவனுடைய பிடிவாதம். ஆனால் மாயன் அதற்கு விருப்பப்படவில்லை. ஏன் விருப்பப்பட வில்லை? ஏனென்று சொல்லவுமில்லை. இந்தச் சிக்கலிலிருந்து அப்பாவை விடுவிக்க மகன் எண்ணினான். அவன் ஆசைப் பட்டான்: "வாப்பாவும் வரணும்."

"வாப்பா இப்போ வரல்லே..." மாயன் சிறிது நேரம் யோசித்து விட்டுத் தொடர்ந்தான்: "வாப்பா பின்னாலே வர்றேன்."

"இப்பவே வந்தா என்ன?"

"வாப்பா இங்கே வந்தது ஒரு வேலையாத்தானே? அது முடிஞ்சதும் நானே அங்கே வர்றேன். கண்டிப்பா...ஆமா. அது சீக்கிரம் முடிஞ்சிடும்!" இதைச் சொன்னபோது மாயனின் தொண்டை இடறிற்று.

"வாப்பா..."

"மரக்கார்.."

"வாப்பா வராட்டா ரொம்பக் கஷ்டமாயிரும்!"

"வாப்பா இப்போ வந்தா அதைக் காட்டிலும் ரொம்பக் கஸ்டமாயிரும். ஒன்கிட்ட அதெல்லாம் சொல்லி என்ன செய்ய? நீ இப்பவும் ஒரு கொழந்தைதானே!"

"வாப்பாவுக்கு அங்கே அப்படி என்ன ஒரு தொந்திரவு?"

மாயன் கொஞ்ச நேரத்திற்கு பதில் சொல்லவில்லை. அந்தத் தளர்ந்த வட்டக் கண்கள் சிறிது நேரம் ஒரே திசையில் நத்தி நின்றது. அந்தக் கண்களினூடே துக்கமும் ரோஷமும் இணை கலந்து பாய்ந்து போவதாக மரக்கார் கண்டான்.

"என்ன வாப்பா ஒண்ணும் பேசலே?"

"எனக்கு ஒரு தொந்திரவும் இல்லே. இனிமே தொந்திரவு எது வந்தாலும்தான் என்னப்பா, சாகிற வரைக்கும்தானே மனிசனுக்குத் தொந்திரவு?"

"வாப்பா, ஏன் இப்படியெல்லாம் பேசறீங்க? நாங்களும் உம்மாவும் ஏதாச்சும் வாப்பாவுக்கு வேண்டாததைச் செய்திட்டோமா?"

மாயன் பார்வையை நிமிர்த்தி மரக்காரின் முகத்தைப் பார்த்தான். பின்னர் மெதுவாக அவனுடைய முதுகைத் தடவிக் கொடுத்தபடி சொன்னான்: "என்னோட பிள்ளைங்களை வச்சி எனக்கு எந்தத் தொந்திரவும் இல்லே. ஹைத்ரோஸ் கொஞ்சம் குறும்புக்காரன். அவனுக்கும் என்னை ரொம்பப் பிடிக்கும்; எனக்கும் பிடிக்கும். அப்புறம் ஒங்கம்மா...."

"என்னப்பா, உம்மா ஏதாச்சும் சொல்லிட்டாளா?"

"அவள் பேசறதா? ஒன்னோடே உம்மாவைப் பத்தி ஒனக்குத் தெரியாது. அவளைப் போல ஒரு பொறுமைசாலிப் பொம்பிளே இந்த ஒலகத்திலே இல்லை. குடும்பத்துக்கு ஒரு குத்துவிளக்கு அவ."

"அப்படீன்னா வாப்பா இப்பவே வாங்க. அவசியம் வரணும்."

"முரண்டு பிடிக்காதே. நீ மட்டும் இப்போ போ. நான் அப்புறமா வர்றேன்."

மரக்கார் எதுவும் பதில் சொல்லவில்லை. அவன் எதையோ யோசித்துக் கொண்டிருந்தான். கண்ணுக்குப் புலப்படாத நிழல் காட்சிகள் அவனுடைய மனதில் கடந்து போயின.

"நீ கவலைப்படாதே. எனக்கு இங்கே எல்லாம் சொகமாவே இருக்கு. இந்த ஹஸ்ஸன் இருக்கானே, ரொம்ப நல்லவன். அவன் ஒருத்தியைக் கட்டிக்கிட்ட பெறகு அதுக்கு மேலேயும் நல்லவனா யிட்டான்."

"உம்." - மரக்கார் ஒரு முனகலை மட்டும் வெளியிட்டான்.

"உம்மாகிட்டச் சொல்லு...."

"என்னண்ணு?"

"வாப்பா எல்லாம் ஞாபகம் வச்சிருக்கார்னு. அப்புறம், உம்மாவைக் கஸ்டப்படுத்தக்கூடாது. அவ இதுவரைக்கும் ரொம்ப அல்லல் பட்டுட்டா. இனிமேயும் அல்லல்பட விடக்கூடாது."

"வாப்பா வந்த பிறகு நேராவே எல்லாத்தையும் சொல்லுங்க."

"சரி. சொன்னதெல்லாம் ஞாபகம் வச்சிக்கோ!"

"நீங்க எப்போ வருவீங்க?"

"சீக்கிரத்திலே."

"அடுத்த வாரமா?"

"வந்தாலும் வந்திருவேன்."

"அப்பஊன்னா நான் வரட்டுமா?"

"போய்ட்டு வா." - இதைச் சொன்னபோது மாயனின் தொண்டை இடறிற்று. இன்னும் ஏதாவது சொல்ல வேண்டும் போலிருந்தது. தன்னைத் தானே தனிமைப்படுத்திக் கொள்ள முடியவில்லையே என்று அவன் மறுகினான். அப்பாவும் மகனும் பூமியைப் பார்த்தபடி நின்றிருந்தார்கள். மௌனம். இருவரும் அவரவர் உள்மனத்தை நோக்கித் தலை திருப்பிக் கொண்டிருப்பதாக நின்றிருந்தார்கள். உள்ளுக்குள் நிம்மதியில்லாத ஓர் அவஸ்தை; வெளியில் அமைதித் தோற்றம். தொலைவிலிருந்து தேயிலை பறிக்கும் பெண்களின் சலசலப்பும், கண்காணிகளின் கட்டளைக் குரல்களும் அந்த அமைதிச் சூழலை நோகச் செய்தன. ஆமினா வளர்த்து வந்த ஆட்டுக்குட்டி உள்ளேயிருந்து அடிக்கடி கத்திக்கொண்டிருந்தது.

"நான் வரட்டுமாப்பா?"

"போய் வா."

மரக்கார் இறங்கி நடந்தான். வாசல்படிவரை மாயனும் பின்னால் சென்றான். ஒரு சின்ன மோட்டார் போட் வலித்துக் கொண்டு போகும் கட்டுமரம் போல. வாசல்படியில் வைத்து அவை தம்மிலுள்ள கட்டை அறுத்துக்கொண்டன. மோட்டார் போட் முன்னோக்கி நகர்ந்தது. கட்டுமரம் பின்தங்கிவிட்டது. மரக்கார் மீண்டும் திரும்பிப் பார்க்கவில்லை. மாயன் நிலையைப் பிடித்தபடி கண்களை ஊன்றியபடி நின்றிருந்தான். மகன் அகன்றகன்று போகும்போது நெஞ்சிலிருந்து ஏதோ ஒன்றைக் கிழித்தெறிவது போல் தோன்றியது. அந்த முகம் ஒருபோதும் இவ்வளவு சோர்வடைந்து தென்பட்டதில்லை. அங்கே புதிய சுருக்கங்கள் சட்டென்று தென்பட்டன. மரக்கார் மலையிலிருந்து இறங்கினான். அவனுடைய தொப்பியை மட்டுமே அப்போது மாயன் காண முடிந்தது. அவன் நிலைப்படியைப் பற்றியபடி எட்டிப் பார்த்தான். மரக்கார் மீண்டும் மலைப்பாதையில் ஏறி நடந்தான். அந்த மலைப்பகுதியையும் இறங்கிக் கடந்துவிட்டால் பிறகு

அவனைப் பார்க்க முடியாது. மாயன் கண்களை அகற்றாமல் பார்த்தான்: தன்னுடைய மகன் அவன். அந்தச் சுறுசுறுப்பான நடை, அந்தக் கைவீச்சு, தலையைச் சாய்த்துப் பிடிக்கும் அந்த தோரணை- எல்லாம் தன்னைப் போலவேதான். தன்னுடைய உயிரிலிருந்து பறித்தெடுத்த ஒரு புதிய கிளை. சில நிமிடங்கள் கழிந்தால் அவன் கண்பார்வையிலிருந்து மறைந்துவிடுவான். அதற்குப் பிறகு தான் அவனைப் பார்க்க முடியுமா? அவன் அந்த மலைச்சரிவிலிருந்தும் இறங்கத் தொடங்கினான். மாயனின் நெஞ்சத்தை ஒரு நினைவு அலைக்கழித்தது. இறக்கும் தறுவாயிலிருக்கும் பெற்ற மகனைப் பார்த்துக்கொண்டிருக்க நேர்ந்த ஒரு தகப்பனின் நிலையாயிருந்தது அது. மரக்கார் சரிவில் இறங்கிக் கொண்டிருந்தான்; கால்கள் மறைந்தன; முதுகும் மறைந்தது; தலை மட்டும் எஞ்சியிருந்தது; ஒரு கறுத்த தொப்பி மட்டும்; எல்லாம் மறைந்தாயிற்று. சூன்யம். அடிவானம் வரை வெறுமையாகவே இருந்தது. இரண்டு மூன்று கண்ணீர்த் துளிகள் அந்த நிலைப்படியைப் பிடித்துக் கொண்டிருந்த முன்னங்கையில் தெரித்து விழுந்தன. அவற்றிற்கு அக்னித் திராவகத்தின் சூடிருந்தது.

"நான் செத்திட்டேன்!..." அவன் தனக்குத் தானே முணுமுணுத்தான்.

"என்னண்ணே?" - பின்னாலிருந்து ஒரு கேள்வி வந்ததைக் கேட்டு அவன் திரும்பிப் பார்த்தான். ஹஸ்ஸன் ஒதுங்கி நின்று கொண்டிருந்தான். நீர் ததும்பும் மாயனின் கண்களைக் கண்டு ஹஸ்ஸனும் சற்று திடுக்கிடாமலில்லை. ஆனாலும் அவன் அதை வெளியே காட்டிக்கொள்ளாமல் மறைத்தான்.

"என்னண்ணே?"

"என் மகனே..." மாயன் ஹஸ்ஸனின் கழுத்தைக் கட்டிப் பிடித்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதான். ஏன் அழுகிறீர் களென்று ஹஸ்ஸன் கேட்டுக்கொள்ளவில்லை. அழட்டும் என்றொரு பாவத்தில் மாயனின் விசாலமான முதுகைத் தடவிக் கொடுக்க மட்டும் செய்தான். சிறிது நேரம் கழிந்த பிறகு ஹஸ்ஸனின் தோளைப் பிடித்தபடி மாயன் திண்ணைக்கு வந்தான். நாடியில் கைவைத்து உட்கார்ந்தான். ஹஸ்ஸன் சிறிது நேரம் பொறுத்திருந்துவிட்டு, உள்ளுக்குள் சென்று கூப்பிட்டான்: "ஆமினா!"

"ஓ..."

"அரிசி வெந்திரிச்சா?"

"ஆ!"

"ஆயிருந்தா கொஞ்சம் கஞ்சி ஊத்தி இங்கே கொண்டா."

"இந்தா கொண்டாறேன்."

சில நிமிடங்களுக்கெல்லாம் உப்பிட்டாற்றிய கஞ்சி கொண்டு வந்தாள். மாயன் மௌனமாக அதை உறிஞ்சிக் குடித்துவிட்டு வாய் துடைத்துக்கொண்டு திண்ணையில் நீண்டு நிமிர்ந்துபடுத்து கண்களை மூடினான்.

"இடி விழுந்து சிதறின மலை மாதிரி இருக்கு இந்தக் கிடப்பு!" என்று ஹஸ்ஸன் உள்ளுக்குள் நினைத்தான். ஒன்றும் பேசாமல் உள்ளே போனான். ஆமினாவை உள்ளே எங்கும் காணவில்லை. அவன் கொல்லைப்புறம் சென்று பார்த்தான். அவள் ஆட்டுக் கூட்டின் அடுத்திருந்தாள். பிண்ணாக்குக் கலக்கலை இளக்கிக் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

"என்னவாம்?" - அவள் கேட்டாள்.

"ஒவகூம்." ஹஸ்ஸன் ஒன்றுமில்லையென்ற பாவனையில் தலையாட்டிக் கொண்டு சொன்னான்: "கொழந்தைக்கு பால் குடுக்க வேணாமா? இவ்வளவு நேரமாயிரிச்சில்ல?"

"குடுக்கிறேன். இதை முடிச்சிட்டு வந்திர்றேன்."

ஹஸ்ஸனைப் பொருத்தவரை அவன் தன்னை அறியாமலே ஒரு தந்தையாக மாறியிருந்தான். ஏதோ ஒரு மனிதனுக்குச் சொந்தமான அந்தக் குழந்தையைத் தன்னால் ஒரு போதும் ஆத்மார்த்தமாக நேசிக்க முடியாது என்பதுதான் அவனுடைய ஆரம்ப காலத்து நம்பிக்கை. உண்மையில், மாயன் நிர்ப்பந்தித்தும் கல்யாணம் செய்துகொள்ளத் தடையாக இருந்தது அதுதான். ஆனால் கடுக்காய்க் கஷாயம் குடிப்பது போல அதைச் செய்து முடிக்க நேர்ந்தது. குடித்துப் பார்த்த போதுதான் தெரிந்தது அது கடுக்காய் அல்ல, நெல்லிக்காய் என்று. முன்னால் துவர்த்தது. பின்னால் இனித்தது. ஆமினாவுக்கு இது எதிர்பாராததொரு பாக்கியமாக இருந்தது. அவள் கஷ்டத்தின் அடித்தளத்திற்கு மூழ்கி மூழ்கிச் சென்றுகொண்டிருந்தாள். மரணம் காலடிகளில் கிடந்து நெளிந்தது. அப்போதுதான் ஹஸ்ஸன் அவளைக் கைகொடுத்துத் தூக்கியது. அந்தப் பெண் அந்த சந்தர்ப்பத்தை

நழுவவிடாமல், உயிர் போனாலும் விடுவதில்லை என்பதுபோல் பற்றிக்கொண்டாள். உண்மையில், ஒரே சமயத்தில் அது ஒரு கைப்பற்றலாகவும் ஆத்மார்ப்பணமாகவும் இருந்தது. அந்தக் காட்சியை நினைக்கும்போதெல்லாம் ஹஸ்ஸனுக்கு ஒரு புல்லரிப்பு ஏற்படும். அவனுடைய இருதயத்தில், இணை ஒன்றைத் தேடிப் பிடித்து வாழ்க்கையை நிறைவாக்குவதற்கான பிரேரணை முனைந்து நிற்கிறது. ஆனாலும் மாயன் சொன்னபோது அவன் அந்த வழியை ஒத்துக்கொள்ளவில்லை. பிரசவித்து நாற்பது நாட்கள் கழிந்தன. இதற்கிடையில் ஒவ்வொரு நாளும் ஆமினா சொல்வாள்: "இனிமே நாங்க போயிடறோம்."

"போக வேணாம்" என்று மட்டும் மாயன் சொல்வான். இந்த ஒவ்வொரு வார்த்தையும் தன்னை எங்கேயோ இழுத்துக்கொண்டு போகிறதென்று அவன் பயப்படவும் செய்தான். ஆனாலும் மறுநாளும்கூட ஹஸ்ஸன் சொன்ன பதில் அதுவாகத்தான் இருந்தது.

"உங்களுக்கு எங்களாலே எடஞ்சலாப் போச்சி!" - ஆமினா சொன்னாள்.

"எனக்கு சந்தோசந்தான்." - ஹஸ்ஸன் உடனுக்குடன் பதில் சொன்னான். இந்த வார்த்தை அவளுடைய கண்களில் ஒரு மிரட்சியை உண்டாக்கியதை ஹஸ்ஸனும் காணத்தவறவில்லை. ஆனாலும் அதைத் தொடர்ந்து எதுவும் சொல்ல முடியவில்லை. ஒரு வார்த்தை கூடுதலாகப் பேசிவிட்டால் அது தனக்குத் தானே பின்வாங்கிக்கொள்ள முடியாத வியூகமாகி விடுமல்லவா! காத்திருக்கலாம்; என்ன நடக்கிறதென்று பார்க்கலாம். ஆமினாவின் இந்த வினயத்தையும் குற்ற உணர்வையும் கிளப்பி விட்டு, அதை வேடிக்கை பார்ப்பதில் ஹஸ்ஸன் இரகசியமான ஒரு மன நிறைவை அனுபவித்தான்.

ஒவ்வொரு நாளும் அவன் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்: "நல்லவளாத்தான் தெரியுது!"

ஹஸ்ஸன் அவளை நன்றாகவே பராமரித்தான். தோட்ட வேலையிலிருந்து ஓய்வு பெற்ற ஒரு கர்நாடகக் கிழவியை பிரசவ சிசுருஷைக்காக ஏற்பாடு செய்தான். துக்கத்தின் மறுபிறவி போலிருந்த அந்தக் கிழவி ஆமினாவுக்கு நன்றாகவே பணிவிடை செய்தாள். பற்கள் முழுவதும் காவியேறி கறுத்துப் போன அந்தப் பெண்மணி சிரிக்கும்போதுகூட அழுவதாகவே தோன்றும்.

அப்படிப்பட்ட ஓர் உயிர்த்துணை ஆமினாவுக்கு ரொம்பவும் தேவையாக இருந்தது. தன்னை முன்னிட்டுத்தான் அந்தக் கிழம் எப்போதும் அழுதுகொண்டிருப்பதாக அவளுக்கொரு தவறான அபிப்பிராயம். ஆனால் அவளுக்கும் இப்படி ஒரு பிடிப்பு தேவைப்பட்டிருக்கலாம். தனக்காக வேண்டி கூட வேதனைப் படுகிறவர்கள் சிலர் இருக்கிறார்கள் என்பதல்லவா பரம சுகம்! அந்தக் கன்னடக்காரியின் முகத்திலிருந்து எப்போதும் ஆமினா நிம்மதி தேடுவாள். ஹஸ்ஸனின் பராமரிப்பும் கன்னடக்காரியின் அனுதாப முகபாவமும் சேர்ந்து ஆமினாவின் ஆரோக்கியத்தை மீட்டு வந்தன. அந்தக் கன்னங்கள் திரண்டன; அங்கே இரத்தச் செழுமை தென்பட்டது. அந்த நீண்ட கண்களிலும் ஒளி திரும்பி வந்தது. அவை சுருக்கு தட்டிய விளக்குச் சுடர் போல ஒளிர்ந்தன. வெளுத்து குச்சி போலிருந்த அவளில் பனியில் நனைந்த கொடிப்பந்தலில் வெயில் சுதிர்கள் பட்டது போல புதிய பூக்களும் புதிய தளிர்களும் தென்பட்டன.

இந்த மாற்றங்களை ஹஸ்ஸன் கவனித்துக்கொண்டுதான் இருந்தான். ஆனாலும் அவன் அசைந்து கொடுக்கவில்லை. அவன் புதிய ஆடை அணிகளை வாங்கி வந்தான். அது பிரசவித்து முப்பத்து ஒன்பதாம் நாளாக இருந்தது.

ஹஸ்ஸன் வாசலிலிருந்து கட்டிலுக்கு அந்த ஆடைகளைத் தூக்கி வீசியபடி சொன்னான்: "இந்தா, இதை உடுத்திக்கோ."

ஆமினா பிரமித்துப்போனாள். அவள் ஹஸ்ஸனை உற்றுப் பார்த்தாள். இவர் யார்? கடவுளோ! எதுவும் பேசாமல் ஹஸ்ஸன் அங்கிருந்து அகன்றான். ஆமினாவும் அந்த ஆடைகளைக் கையில் பற்றியபடி அசையாமல் இருந்தாள். குழந்தையின் அழுகுரல் கேட்டுத்தான் அவள் தன் இருக்கையிலிருந்து எழுந்தாள்.

அப்படி நாற்பது நாட்களும் கழிந்தன. நாற்பத்தைந்தாம் நாள் ஆமினா அவளாகவே சொன்னாள் "இனிமே நாங்க இங்கே இருந்தா...."

"இருந்தா?" -- ஹஸ்ஸன் கேட்டான்.

"ஒங்களைக் கஸ்ட்டப்படுத்தின மாதிரி இருக்கும். நனைஞ்ச எடத்திலேயே குழி தோண்டக் கூடாதில்ல! ஒங்க கொணத்துக்கு ஆண்டவன் ஒங்களுக்கு அள்ளித் தருவான்."

"ஆண்டவன் இப்பவே எனக்குக் குடுத்திட்டானே!"

"என்ன?"

"உன்னெத்தான்." அந்த வார்த்தை உண்மையில் ஹஸ்ஸனின் வாயிலிருந்து தவறித்தான் விழுந்தது.

"ஹா!...." சைத்தானையோ பார்த்தது போல அவள் விதிர்த்துப் போனாள். அந்தப் பிரகாசம் பொருந்திய கண்கள் ஹஸ்ஸனின் முகத்தில் ஊன்றினாற்போல் ஆடாமல் அசையாமல் நின்றன.

"நீ திகைக்காதே, ஆமினா! உனக்கு மறுப்பு இல்லேன்னா நீ இந்த வீட்லேயே இருந்துக்கிடலாம். எனக்கு ஒராள் வேணும். உனக்கு சம்மதமானாக்கா..."

"என் தெய்வமே!" ஆமினா, பதற்றத்துடன் தொடர்ந்தாள்: "ஆனா நான்..."

"இந்தக் கொழந்தைதானே, பரவாயில்லை. அவன் என் மகன்னு நெனச்சிக்கோ." ஹஸ்ஸன் புன்சிரிப்புடன் சொன்னான். "ஆனா, என்னைப் பிடிக்கலேன்னா வேண்டாம்."

"ஹோஜராஜவான தம்பிரானே!..." அவள் ஹஸ்ஸனின் காலடியில் அமர்ந்தாள்; இல்லை, விழுந்தாள். இரண்டு கால்களையும் கட்டிப் பிடித்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழத் தொடங்கினாள்.

அப்படி நடக்குமென்று ஹஸ்ஸன் எதிர்பார்க்கவில்லை. அவனுடைய உடம்பெல்லாம் புல்லரித்தது. தன்னுடைய காலைப் பற்றிப் பிடித்துக்கொண்டு ஒரு யுவதி அழுகிறாள். இருதயத்திலிருந்து ஏதோ சில கட்டுகள் அவிழ்ந்து போவது போலத் தோன்றிற்று. வெளிச்சத்தின் ஒரு வரவு; திகைக்கச் செய்யும் வரவு. ஒரு நிமிடம் எதுவும் புரியவில்லை; அவள் தேம்பித் தேம்பி அழுதுகொண்டே கேட்டாள் "நீங்க மனிசரா, தெய்வப் பிறவியா?" பின்னரும் அவள் ஏதேதோ மொணமொணவென்று சொல்லிக்கொண்டிருந்தாள். எதுவும் புரியவில்லை. மொத்தத்தில் ஒரு திகைப்பு. எதற்காக இவள் இப்படித் தேம்பி அழுகிறாள்? அவள் இப்போது அனுபவிப்பது சுகமா, துக்கமா? எதை? இவ்வளவெல்லாம் ஏன் உண்டானது?

"நீங்கதான் எனக்கு உயிரைக் குடுத்தது!...." அவளுடைய இந்த வார்த்தைகள் ஹஸ்ஸனின் காதில் விழுந்தன. அவன் கீழே குனிந்து நோக்கினான். அந்த நீலக் கண்களிலிருந்து புறப்பட்ட இரண்டு கண்ணீர்த் தாரைகள் கன்னங்களினூடே கீழ்நோக்கி வழிந்து

கொண்டிருந்தன. என்ன பேசுவதென்று அந்த இளைஞனுக்குத் தெரியவில்லை. அவளைப் பிடித்து எழுப்பி நிறுத்தியபடி அவன் சொன்னான் "வா!..."

"ஒங்களை நான்..."

"காப்பாத்துவேன்." -- ஹஸ்ஸன் முடித்தான்.

"என்கிட்ட ஒண்ணுமே இல்லே. உயிர்தான் இருக்கு. அதை நான் ஒங்ககிட்ட குடுத்திடறேன்." -- சிதறி விழும் கண்ணீரினூடே அவள் இந்த வார்த்தைகளைச் சொன்னபோது, தெய்வம் அந்த வார்த்தை களில் நடமாடுவதாகத் தோன்றிற்று. ஒரு தெய்வீக ஒளி ஹஸ்ஸனின் மனதுக்குள் பாய்ந்தது. அவன் அந்த ஒளியைப் பார்த்தபடி நின்றிருந்தான்; அவள் அவனுடைய முகத்தைப் பார்த்தபடி. கடினமான இருதயத் துடிப்புக்களினூடே நிமிடங்கள் கழிந்துகொண்டிருந்தன. இரண்டு ஆத்மாக்கள் ஒன்றையொன்று புரிந்துகொண்டன; ஆடிக்குலுங்கி ஒன்றின.

"ள்ளா...ள்ளா..." -- குழந்தையின் அழுகை ஆமினாவின் முகத்தைத் திரும்பச் செய்தது. அவள் அதன் அருகில் சென்றாள். ஹஸ்ஸனும் கூடவே போனான். அந்தச் சின்ன முகத்தில் அவன் தன்னுடைய வாழ்க்கையே நிழலிடுவதைக் கண்டான்.

அந்தக் காட்சியைப் பற்றி நினைவு வந்தால் ஹஸ்ஸனுக்கு இன்றும்கூட ஒரு புல்லரிப்பு. அங்கே ஒரு குடும்பம் இதழ் விரித்துக்கொண்டிருந்தது. அந்த மலர்ச்சி மிக மெதுவாக இருந்தது. குழந்தையின் அந்தப் பக்கமும் இந்தப் பக்கமுமாக இருந்தபடி இருவரும் பேசத் தொடங்கினார்கள்; சாதாரண லௌகீக காரியங்கள்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவள் அந்த வீட்டில் எல்லாக் காரியங்களையும் மேற்பார்வையிடத் தொடங்கினாள். சமைப்பது, பரிமாறுவது, பெருக்குவது ஆக எல்லாவற்றிலும் வெகு சாமர்த்தியம்.

'கெட்டிக்காரிதான்!' ஹஸ்ஸன் உள்ளுக்குள் நினைத்துக் கொண்டான். நாட்கள் கடந்தபோது, ஹஸ்ஸன் யார் ஆமினாயார் என்று பிரித்தறிய முடியாத ஒரு நிலை ஏற்பட்டது. அவளைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் ஹஸ்ஸன் சொல்வ துண்டு: "நான் அதிர்ஷ்டக்காரன்தான். வேண்டான்னாலும் ஆண்டவன் தர்றப்போ நல்லபடிதான் தருவான்!"

ஆமினாவாகட்டும், வணங்கித் தொழும் ஒரு மனோ பாவத்துடன் ஹஸ்ஸனுக்காக எல்லாவற்றையும் செய்தாள். அவளைப் பொருத்தவரை அது ஆத்மாவின் மீட்பாயிருந்தது. இருதயம் குளிர்ந்தபோது உடம்பில் வசந்தம் குடியேறியது. பாசத்துடன் ஒரு கை தழுவ வந்தபோது அந்த மனித ஆத்மா கொழுத்தது.

"எதுக்குடாப்பா மகனே அழறே?...." என்று ஹஸ்ஸன் குழந்தையிடம் கேட்கும் ஒவ்வொரு கேள்வியும் ஆமினாவை சொர்க்கத்திற்கு இட்டுச் செல்வதாக இருந்தது. தன் குழந்தை யுடன் அந்த மாதிரி ஓர் ஆடவன் எப்போதேனும் பேசுவான் என்று அவள் நினைத்ததே இல்லை. ஆனாலும் அது நிகழ்ந்தது. அப்போது அந்தத் தாய் கண்களை மூடிப் பிரார்த்தித்தாள் "மாலிக்கான் ஜப்பாராய தம்பிரானே!..."

இப்போதும் குழந்தை சிணுங்கியது கேட்டுத்தான் ஹஸ்ஸன் ஆட்டின் கூட்டை நோக்கிச் சென்றது. அவன் ஆமினாவை அதட்டினான் "அவன் அழறது உனக்குக் கேக்கலே?"

"அழட்டும். ஆம்பிளெப் பிள்ளையாயிருந்தா அழுது அழுதுதான் வளரணும். அப்பதான் தெம்பு கூடும்." -- ஆமினா சிரித்துக்கொண்டே சொன்னாள்.

"அவனுக்குத் தெம்பு ஊட்றது இருக்கட்டும். மொதல்லே போயி பாலு ஊட்டு. ஆட்டுக்கு நான் தண்ணி காட்றேன்." ஹஸ்ஸன் அவளை அனுப்பி வைத்தான். ஆமினா உள்ளே சென்று பார்த்தபோது நிலைமை என்ன? மாயனின் மடியில் படுத்தபடி குழந்தை சிரித்துக் கொண்டிருந்தது! அவள் ஓடிப் போய் கணவனிடம் விவரத்தைச் சொன்னாள்

"பாருங்க! பிள்ளே பெரியவரு மடியிலே!"

"மாயன் அண்ணே மடியிலேயா?"

"ஆமாம். பெரியவரு கண்ணு நெறஞ்சிருக்கு! நான் போய் நின்னதைக் கவனிக்கலே. என்னமோ யோசனையிலே இருக்காரு!"

ஹஸ்ஸன் ஒரு நிமிடம் யோசித்தான். பிறகு அங்கிருந்து நகர்ந்தான். ஹஸ்ஸனின் காலடிச் சத்தம் கேட்டபோது மாயன் தலை நிமிர்ந்து பார்த்தான். குழந்தையை அவனிடம் கொடுத்தான். கண்களைத் துடைத்துக்கொண்டு திண்ணைக்குச்

சென்று குப்புறப் படுத்துக்கொண்டான். அப்போதும் ஹஸ்ஸன் எதுவும் பேசவில்லை. என்ன பேச?

அன்று முழுவதும் ஹஸ்ஸன் சிந்தனை வயப்பட்டான்.

"என்னங்க யோசனை?" ஆமினா கேட்டாள்.

"ஒண்ணுமில்லே."

மறுபடியும் துருவிக் கேட்பது அவளுடைய வழக்கமல்ல. மறுநாள் மாயன் ஹஸ்ஸனைக் கூப்பிட்டுச் சொன்னான் "இந்த வீட்டையும் மனையையும் ஒம் பேர்லேயும் ஆமினா பேர்லேயும் எழுதி வைக்கணும்."

ஹஸ்ஸன் எதுவும் பேசவில்லை.

"நாளைக்குப் பத்திரம் எழுதணும்."

"அதுக்கு இப்போ என்ன அவசரம், அண்ணே?"

"சும்மா சொல்றதைக் கேளு."

அதற்குப் பிறகு ஹஸ்ஸனால் எதுவும் பேச முடியவில்லை. மறுநாளே பத்திரம் எழுதி முடித்து எல்லோருமாக சப்ரிஜிஸ்தரார் ஆபீசுக்குப் போனார்கள். மாயன் மிகவும் நலிந்துபோய் மெள்ள மெள்ளத்தான் அடியெடுத்து வைத்து நடக்க முடிந்ததை ஹஸ்ஸன் புரிந்துகொண்டான். அது மட்டுமல்ல, அந்த மீசை அளவுக்கு மீறித்தான் நரைத்திருந்தது.

பத்திரத்தில் கையெழுத்திட்டுத் திரும்பி வரும்போது மாயன் சொன்னான் "இவளையும் இந்தக் குழந்தையையும் விட்டிராதே. விட்டே, கதி கெட்டே அப்பிடீன்னு வச்சிக்கோ. என்ன பேச்சைக் காணோம்?"

"அவளை நான் விட்டிற மாட்டேன்."

"அவனையும்?"

"அவனையும்தான்."

"அது போதும்."

திரும்பி வந்து திண்ணையில் அமர்ந்தபோது தென்றல் வீசுவதாக மாயன் உணர்ந்தான்.

"இன்னிக்கு என்னமோ ஒரு சொகம் தெரியுது." - அவன் ஹஸ்ஸனிடம் சொன்னான். மாயன் அடிக்கடி சிரித்தான்.

குழந்தையின் கன்னம் பிடித்துக் கிள்ளினான். ஆமினாவுடன் ஒவ்வொரு முறையும் கேலிப் பேச்சு பேசினான்.

ஆமினா கணவனின் காதில் முணுமுணுத்தாள்: "பெரியவரு இன்னிக்கு ஏக சந்தோசத்திலிருக்காரு!"

"உம்...!"

சாப்பாடு முடிந்து மாயன் ஒரு தூக்கம் போட்டான். எழுந்திருந்தபோது, தேயிலைக் காடுகளிலிருந்து மாலை வெயில் கடைசியாக விடைபெற்றுச் செல்ல அடி எடுத்து வைப்பதுபோல் இருந்தது. மாயன் தன்னுடைய நீளமான வேட்டியையெடுத்து தலையில் கட்டி, கையில் ஒரு கம்பும் எடுத்து வெளியே நடந்தான். ஒரு நிமிடம் வாசலில் நின்றான். பிறகு திரும்பி ஹஸ்ஸனிடம் சொன்னான்: "நான் கொஞ்சம் அப்பிடீ போயிட்டு வர்றேன்."

"அண்ணே, எங்கே போறீங்க?"

"காட்டுக்கு."

"நேரம் அதிகமாப் போச்சே!"

"எனக்கும் ஒனக்கும் காடெல்லாம் வீடுதானே, ஹஸ்ஸன்!" என்று சொல்லிவிட்டு உரக்கச் சிரித்தான். இறங்கி நடந்தான். மாயன் கண்ணிலிருந்து மறைந்ததும் ஹஸ்ஸன் ஆமினாவிடம் சொன்னான்:

"பெரியவரு ஏதோ முடிவெடுத்திருக்காரு."

"என்ன?"

"ஆண்டவனுக்குத்தான் தெரியும்."

மாயனோ காட்டிலுள்ள ஒற்றையடிப் பாதையினூடே உற்சாகமாக நடந்துகொண்டிருந்தான். கையில் கிடைத்த கற்களைப் பொறுக்கி அவன் தேக்கு மரங்களை நோக்கி எறிந்தான். கல் இலக்கைத் தாக்கும்போது அவனுடைய உதட்டிலிருந்து பாட்டு உதிர்ந்தது:

"வானத்துக் கார்மேகம்போல் உருவம் மாறிப் போனானே."

உச்சி வெயிலில் அருவி நோக்கிப் பாயும் காட்டெருமையின் வேகமாக இருந்தது அந்த நடை. அவன் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. மூக்குக்கு நேரான முன்பார்வைதான். இருட்டு வலை விரிக்கத் தொடங்கிவிட்டது. அப்போதும் மாயன் நடந்துகொண்டிருந்தான்; பாட்டுப் பாடினான்; கல் எறிந்தான்.

மெள்ள நிலா உதித்தது. அப்போதும் நடைதான். கொடிப் பின்னல்களை விலக்கிக்கொண்டும், மரத்தின் வேர்களைத் தாண்டிக் கடந்தும் சுறுசுறுப்பான நடை. கால்கள் அயரத் தொடங்கின. அப்போது அவன் ஒரு தேக்கு மரத்தின் மீது சாய்ந்தபடி சந்திரனைப் பார்த்துப் பாடினான்: "வானத்துக் கார்மேகம்போல் உருவம் மாறிப் போனானே..."

கனகம்பீரமான அந்தப் பாட்டு நிலா வெளிச்சத்தில் கூடிக் கலந்து அந்த அடர்காட்டின் நெஞ்சினூடே அமிழ்ந்து அமிழ்ந்து போயிற்று.

# 19. இறுக்கம் தளர்ந்தது

ஹாஜியாரின் கடைக்கு முன்பாக ஆட்கள் கூட்டம். வம்புச் சண்டைக்கு வந்த கூட்டமல்ல; துக்கம் பொங்க நிற்கும் மனிதர் கூட்டம். தென்னிந்திய சமுதாயம் முழுவதன் பிரதிநிதித்துவம் அங்கே இருந்தது. கன்னடக்காரர், தெலுங்கர், தமிழர், மலையாளிகள், தேயிலை பறிக்கும் பெண்கள், கண்காணிகள், மண்வெட்டும் வேலையாட்கள் என்பதாகப் பலருடன் இரண்டு வேடுவர்களும். வேடுவர்கள் அடக்கமாக, ஒதுக்கமாக ஒரு பக்கமாக நின்றிருந்தார்கள். எல்லோரும் பரஸ்பரம் கிசுகிசுத்துக் கொண்டார்கள்.

"உண்மையாவா?"

"ஆமாங்கறேன்."

"நம்ப முடியல்லே."

"கடவுள் சித்தத்தை யாராலே தடுக்க முடியும்!" - ஒரு தமிழன்.

"சரிதான்! எங்கே அது நடந்தது?"

"காட்டிலே."

"இல்லிந்து எஷ்டு தூர?" - ஒரு குடுமிக்கார கன்னடக்காரன் வறட்டுச் சொறி சொறிந்துகொண்டு கேட்டான்.

"பகு தூர...ஏரடு மெலு." - மற்றொரு கன்னடத்தான் அதே இளிப்புடன் பதில் சொன்னான்.

"பகுள கஷ்ட!"

"துரித."

அப்படி பல்வேறு மொழிகளில் ஏதோ ஒரு சோகமான நிகழ்ச்சியைப் பற்றிக் கிசுகிசுப்பு நடந்துகொண்டிருந்தது. ஹாஜி எதிலும் முனைப்பில்லாமல் நாடியில் கை முட்டுக் கொடுத்தபடி ஊமையாயிருந்தார். நரை முற்றிய தாடியில் இளம் காற்று மெல்லென அலை சேர்த்தது.

"இப்படி ஒரு நெனப்பு வரக் காரணம்?" அங்கே வந்த தேயிலை வியாபார நாயர் கேட்டான்.

"ஆண்டவனுக்குத்தான் தெரியும்...உம்!" - ஹாஜியார் ஒரு பெருமூச்சு விட்டார். இந்தக் கூட்டத்தைக் கண்டுதான் ஹஸ்ஸன் அங்கே வந்து சேர்ந்தான். ஹாஜியார் கூப்பிட்டனுப்பியதால் வந்தான். ஏதோ வியாபார விஷயமாக இருக்குமென்றுதான் நினைத்தான். ஆனால் ஆள்க்கூட்டத்தைப் பார்த்தவுடன்தான் நடையில் வேகம் அதிகரித்தது. கடை முற்றத்தில் ஏறிக்கொண்டு ஹஸ்ஸன் கேட்டான்: "என்னாச்சி ஹாஜியார் அண்ணே?"

ஹாஜியார் ஹஸ்ஸனை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு சாவதானமாகச் சொன்னார்: "உக்காருப்பா, ஹஸ்ஸன்."

ஹஸ்ஸன் உட்கார்ந்தான். ஆர்வத்துடன் ஹாஜியாரின் முகத்தைப் பார்த்தான்: 'என்ன விசேஷம்?' ஹாஜியார் எதுவும் பேசவில்லை. ஒரு கனத்த மௌனம்.

"என்னாச்சீங்க?" மீண்டும் ஹஸ்ஸன் நச்சரித்தான்.

"இதை என் வாயாலேயே சொல்ல வேண்டியிருக்கே.. உன்னை இந்த மலையிலே குடி வச்சது அவன்தான். ஆனா இப்போ.." ஹாஜியாரின் வெள்ளைத் தாடி நா தழுதழுப்புக்கேற்ப அசைந்தாடியது.

"என்னண்ணே நடந்திச்சி?"

"நம்ம மாயன் சமாசாரம்தான்."

"உம்-ம்? அண்ணே எங்கே?"

"காட்டிலே..."

"காட்லேயா?"

"கதை ஒரு வழியா முடிஞ்சி போச்சி, ஹஸ்ஸனே."

ஹஸ்ஸன் எழுந்து நின்றான். திகைப்பினால் இறுகிய கண்கள் ஹாஜியாரின் முகத்தில் பதிய, அவர் விவரம் வெளிப்படுத்த எதிர்பார்த்தான். ஹாஜியார் மூச்சுத் திணற சொல்லத் தொடங்கினார்: "அன்று காலையில் காட்டில் ஏலம் அறுக்கப் போன வேலையாட்கள் தரையில் கால் பாவாமல் நின்ற ஓர் ஆளைப் பார்த்து பயந்துபோய்த் திரும்பி வந்துவிட்டார்கள். உடனே வேறு சிலர் போயிருக்கிறார்கள். ஒருத்தன் தூக்கிலே தொங்கிக் கொண்டிருந்திருக்கிறான். அது மாயன்தான் என்றும் தெரிந்திருக்கிறது."

"அட தெய்வமே!..." ஹஸ்ஸன் மார்பில் ஓங்கி ஓங்கி அறைந்து கொண்டு அழத் தொடங்கினான்: "ஓ, நேத்து சாயந்திரம் ஒரு தரம் சுத்திப் பாத்திட்டு வர்றேன்னு போனவரில்ல!....."

"வெசனப்பட்டு என்ன பண்ண, ஹஸ்ஸன்? அவனை நான் இங்கேயே இருக்க வச்சி ஆளாக்கினேன். வேலையிலே திறமை சாலியா இருந்தான். அவன் நல்லாத்தான் வந்திட்டிருந்தான், எனக்கு சந்தோசந்தான். இப்படியெல்லாம் வந்து சேரும்னு நான் நெனச்சேனா?..."

"இப்படியா வரணும்!"

"எவ்வளவு நல்ல மனிசன்!"

"ஆளைப் பார்க்கிறப்போ வயசு கொறச்சலாத்தான் தெரியும்!"

"என்னமாதிரி சுறுசுறுப்பு!"

இவ்வாறாக ஆண்பெண் இருபாலாரின் துயரச் சாயையான அபிப்பிராயப் பிரகடனங்கள் நீண்டன. ஆனால், அதைக் கேட்டுக் கொண்டிருந்தால் மட்டும் போதாதல்லவா?

"வீட்டுக்குச் சொல்லி அனுப்ப வேணாமா?"

"சொல்லணும்." ஹஸ்ஸன் அழுதபடி சொன்னான்.

"போலீசிலேயும் சொல்லிரணும்." - தேயிலைக்கார நாயர் நினைவுபடுத்தினான்.

"ஊருக்கு யாரு போரது?"

"யாராவது வெவரமான ஆளுதான் போகணும்." ஹாஜியார் சொன்னார்: "நம்ம நாயர் போகட்டும்."

தேவையான உபதேசங்களுடன் அடுத்த பஸ்ஸில் தேயிலைக் கார நாயரை ஊருக்கு அனுப்பி வைத்தார்கள். போலீசுக்கு இன்னோர் ஆள் போனான்.

உச்சி வேளையின்போது போலீஸ் வந்தது. ஒரு பெரிய கூட்டம் காட்டை நோக்கிச் சென்றது. ஹஸ்ஸனும் கூடப் போனான். அவர்கள் ஒரு குன்றுப் பகுதியில் ஏறி இறங்கினார்கள். அடுத்த பள்ளத்தாக்கில் சென்றபோது வேடுவன் சுட்டிக் காட்டினான்: "பாத்தீங்களா சாமீ..."

ஹஸ்ஸன் உற்றுப் பார்த்தான். ஒரு பீமாகார உருவம் தொங்கிக் கொண்டிருந்தது. இருதயம் வேகமாக அடித்துக்கொண்டது.

அவன் பிணத்தின் அருகில் சென்றான். வாழ்க்கை முழுவதையும் வஞ்சம் தீர்த்துவிட்டது போல் தலை தொங்கிக்கொண்டிருக்க நின்றுகொண்டிருந்தது அந்த உருவம். ஹஸ்ஸன் ஒட்டுமொத்த மாக ஒரு முறை பார்த்தான். பிறகு கீழே பார்த்தான்.

போலீசாரின் கட்டளைப்படி பிணத்தை இறக்கிக் கிடத்தி னார்கள். அந்த மரத்தின் அடியில் சின்னச் சின்ன உருட்டுக் கற்கள் குவியலாகக் கூட்டி வைக்கப்பட்டிருந்தன.

"இது என்னது?" - இன்ஸ்பெக்டர் அந்தச் சின்னக் கற்குவியலை ஆராய்ந்து பார்த்தார். குறிப்பிட்டு எதுவுமில்லை.

உடம்பில் ஆடைகளைக் களைந்துவிட்டுப் பரிசோதித்தார். ஒரு நீலக் கோடு கழுத்தில் பாம்பு போலச் சுற்றிக் கிடந்தது. முகம் அப்போதும் சிரித்து முறுவல் காட்டிக்கொண்டுதான் இருந்தது. உடைகளை ஒவ்வொன்றாகப் பரிசோதித்தார். எல்லாப் பாக் கெட்டுகளையும் துளாவினார். ஒன்றில் ஒரு ரூபாயும். சில்லறையும். மற்றொன்றில் ஒரு கடிதச் சுருள். இன்ஸ்பெக்டர் அதை விரித்துப் படித்துவிட்டு ஒரு தடவை நெடுமூச்செறிந்தார்.

"என்னங்க?" - அடுத்து நின்ற ஹாஜியார் கேட்டார்.

அந்தக் குறிப்பில் அந்த மரணம் நேர்ந்த வழி குறிக்கப்பட்டிருந்தது. கடிதம் பென்சிலால் இவ்வாறு எழுதப் பட்டிருந்தது: 'நான் விருப்பப்பட்டுத்தான் சாகிறேன். யாரும் குற்றவாளியல்ல. இப்படிக்கு மாயன்.'

ஹாஜியார் கண்ணாடி எடுத்து மாட்டிக்கொண்டு அந்தக் கடிதத்தை முகத்தோடு சேர்த்துப் படித்தார். பிறகு எதுவும் பேசாமல் இன்ஸ்பெக்டரின் கையில் திருப்பிக் கொடுத்துவிட்டார். பிணத்தை ஒரு கட்டாகக் கட்டினார்கள். கூடியிருந்த எல்லோருடைய கையிலிருந்தும் கைநாட்டு ரேகைகள் வாங்கப்பட்டன.

"போஸ்ட்மார்ட்டத்துக்கு..." இன்ஸ்பெக்டர் சொன்னார்.

"அதைத் தவிர்க்க முடியாதா?" ஹாஜியார் கேட்டார்.

"தவிர்க்க முடியாதுதான்."

"குடும்பத்திலேருந்து இப்போ ஆளுங்க வரும். அதனாலே கொஞ்சம் பொறுங்க."

"ரொம்ப நேரம் ஆகுமா?"

"அடுத்த பஸ்ஸிலே."

"பார்ப்போம்." ஏதானாலும் காட்டிலிருந்து இறங்க வேண்டியதுதான். இன்ஸ்பெக்டர் முன்னால் நடந்தார்; மற்றவர்கள் வாய் பொத்திக்கொண்டு பின்னால் வந்தார்கள்.

இன்ஸ்பெக்டர் முன்னால், அதற்குப் பின்னால் பிணம். அதற்கும் பின்னால் இரண்டு போலீசார். அவர்களுக்கும் பின்னால் தான் ஹாஜியாரும் ஹஸ்ஸனும் நடந்தது. யாரும் பேசிக்கொள்ள வில்லை. ஹஸ்ஸனின் மனதுக்குள் பல காட்சிகள் கடந்து போய்க்கொண்டிருந்தன. தங்கச் சுரங்கத்திலிருந்து திடீரென்று தலை நீட்டிய அந்த உருவம்; 'யாரது?' என்று கனத்ததும் நடுக்கத் திலுமான கேள்வி; தனியாக வாழ்ந்த வாழ்க்கை; கல்யாணம்; குழந்தைகள் பிறந்தது; கூட்டுக் குடும்ப வாழ்க்கை; கடைசியாக வந்து சேர்ந்தது; தன்னுடைய கல்யாணம்; கடைசித் தடவையாக வாசற்படி இறங்கிப் போனது - இவையெல்லாம் ஒவ்வொன்றாக மனதுக்குள் ஓடி ஓடிக் கடந்தன.

'கடைசியில் இப்படி ஆகிவிட்டது. பிள்ளை குட்டிக்காரி வரும் போது என்னத்தைச் சொல்ல?' - ஹஸ்ஸன் யோசித்தான். 'ஆனா ஹாஜியார் அண்ணனும் இருக்காரில்ல.'

நான்கு மணிவரை காத்திருந்தார்கள்; ஊரிலிருந்து யாரும் வந்து சேரவில்லை. பிணத்தை போஸ்ட்மார்ட்டத்திற்காக எடுத்துப் போய்விட்டார்கள். அதற்குப் பிறகு அரை மணி நேரம் கழித்து ஒரு பஸ் ஹாஜியாரின் கடைக்கு முன்பாக வந்து நின்றது. தேயிலைக் கார நாயர், மரக்கார், ஹைறத்ரோஸ்; தலை குனிந்தபடி இறங்கினார்கள்.

"வாங்க பிள்ளைங்களா!" ஹாஜியார் அவர்களைக் கை நீட்டி வரவேற்றார்.

"எங்கே எங்கப்பா?" - துக்கம் தாங்கமாமல் குமுறியபடி ஹைறத்ரோஸ் கேட்டாள்.

"உக்காருங்க." - நாயர் பிடித்து உட்கார வைத்தான். ஹாஜியார் நடந்ததை விவரித்துச் சொன்னார்.

"ஓ, ஒரு தரம் பார்க்கக்கூட முடியலியே!"

ஹாஜியார் எதுவும் பேசவில்லை. யாரும் எதுவும் பேச முடியவில்லை. உடனே போஸ்ட்மார்ட்டம் செய்யும் இடத்திற்கு ஆள் போயிற்று.

"இனிமே நெனச்சி என்ன பண்றது?"

"நாங்க கொண்டு போறோம்." மரக்கார் திட்டமிட்டு வந்தது போல் சொன்னான்.

"அது இப்போ..." ஹாஜியார் தயங்கினார்.

"என்ன?"

"ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனதனாலே..."

"உம்மா கொண்டு வரணுமின்னு கட்டாயப்படுத்திச் சொல்லி யிருக்காங்க."

"உ-ம்." - ஹாஜியார் ஏதோ யோசனையில் செருமினார். "அப்படீன்னா கொண்டு போறது...."

"எப்படி எடுத்துப் போறது?"

"அதுக்கு வழி செய்யலாம். லாரி கிடைக்கும்."

"அது போதும்."

ஹைறத்ரோஸ் தலை குனிந்திருந்தான். அவனது கண்கள் அழுது கலங்கியிருந்தன. எல்லோரும் அங்கங்கு நின்றிருந்தார்கள். பிள்ளைகள் வந்தது தெரிந்ததும் அவர்களைப் பார்ப்பதற்காக மேலும் சிலர் கடைக்கு முன்பாக நெருக்கமாகக் கூடினார்கள்.

"கொஞ்சம் உப்பும் மொளகும் வேணும்." - அந்த நெருக்கடியில் ஒரு சிறுமி காசு நீட்டிக் கேட்டாள்.

"இப்போ இங்கே நிக்காதே பொண்ணு, போய்ட்டு வா."

அந்தச் சிறுமி எல்லோருடைய முகத்தையும் ஒரு தடவை பார்த்தாள். திரும்பிப் போய்விட்டாள். மரக்கார் ஒரு பீடி பற்ற வைத்து, அந்தப் புகையைப் பார்த்தபடி அசையாதிருந்தான்.

சிறிது நேரம் கழித்து ஹஸ்ஸன் வந்தான். ஹஸ்ஸனைப் பார்த்ததும் ஹைறத்ரோஸ் குலுங்கி அழுதான்.

"அண்ணே!...."

"தம்பி!..."

இருவரும் விம்மி விம்மி அழுதார்கள். மரக்கார் தூண் மறைவில் நின்று கண் துடைத்துக்கொண்டான். எல்லோருடைய கண்களும் நிறைந்தன.

ஹாஜியார் இடறும் குரலில் சொன்னார்: "ஹஸ்ஸன், நீதான் அவனை சமாதானப்படுத்தணும்ப்பா. நீயே இப்படி அழுதா..."

ஹஸ்ஸன் அதற்கு பதில் சொல்லவில்லை. சிறிது நேரத்தில் பிணக்கட்டு வந்தது; ஹஸ்ஸன் வீட்டு முற்றத்தில் இறக்கினார்கள்.

இரண்டு பிள்ளைகளும் அதை உற்றுப் பார்த்தார்கள்; பிறகு பரஸ்பரம் தங்களைப் பார்த்துக்கொண்டார்கள். அந்தக் கண்களில் அப்போது வேதனையைக் காட்டிலும் வெறுப்புத்தான் அதிகம் சுடர்விட்டது.

உள்ளேயிருந்து ஆமினாவின் குழந்தை அழுதது: "கிள்ளே... கிள்ளே..."

அதிகம் காத்திருக்கவில்லை; லாரி வந்தது. பிணத்தை எடுத்து அதில் கிடத்தினார்கள். மரக்காரும் ஹைத்ரோசும் முன்னால் ஏறிக்கொண்டார்கள். ஹஸ்ஸன் பிணத்தின் பக்கத்தில்!

"யோய்ட்டு வாங்க, பிள்ளைங்களா..." - ஹாஜியார் அவர்களைப் பயணப்படுத்தினார். அந்த லாரி கண்ணிலிருந்து மறைந்தபோது ஹாஜியார் நெடுமூச்செறிந்து சொன்னார்: "மாயன் மலை இறங்கிப் போறான்..."

தண்ணீரிலிட்ட சர்க்கரை கரைந்து போவது போல அந்த துக்ககரமான சூழலிலிருந்து ஆட்கள் மௌனமாக சிறிது சிறிதாக விடைபெற்றுக்கொண்டார்கள். ஹாஜியார் மட்டும் நாடியில் கையிட்டுத் தாங்கியபடி அந்தக் கடை முற்றத்தில் உட்கார்ந் திருந்தார். அந்தக் கிழட்டுக் கண்கள் தொலைதூரத்தில் கடந்த காலத்தில் எங்கேயோ அலைந்துகொண்டிருந்தன.

அந்த மனிதர் மெதுவாக முணுமுணுத்தார்: "கூட்டிக் கழிச்சிக் கணக்குப் பார்த்தா, சம்பாதிச்சவனும் சம்பாதிக்காதவனும் எல்லாம் ஒண்ணுதான்!"

பிணம் ஏற்றிய லாரி மலையிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தது. ஒவ்வொரு திருப்பத்திலும் ஹஸ்ஸனும் பிணமும் உரசிக் கொண்டார்கள். அப்போதெல்லாம் ஒரு சிலிர்ப்பு. அங்கிருந்து கொஞ்சம் தள்ளி உட்கார்ந்திருக்கலாமோ என்று தோன்றும். அப்படி மாறி உட்காரலாமா? அந்த மனிதனுக்காக வேண்டி தான் எல்லாவற்றையும் பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான். தன்னை ஆளாக்கியது இதோ கிடக்கின்ற மனிதர்தான். லாரியின் குலுக்கலில் கட்டிப் பொதிந்த துணியிலிருந்து கொஞ்சம் கொஞ்சம இரத்தம் கசிந்திருந்தது. போஸ்ட்மார்ட்டம் முடிந்த பிண உடம்பு என்று அப்போதுதான் ஹஸ்ஸனுக்கு நினைவு வந்தது. அவன் டிரைவரிடம் சொன்னான்: "வளைஞ்சி திரும்பறப்போ கொஞ்சம் மெள்ள ஓட்டினாப் போதும்."

"என்ன?" மரக்கார் கேட்டான்.

"மெள்ளத்தான் ஓட்டணும்." ஹஸ்ஸன் உரத்துச் சொன்னான். அதன் பிறகு டிரைவர் அவன் சொன்னதை அனுசரித்து ஓட்டினான்.

மரக்காரின் இதயம் கொதிப்படைந்திருந்து. அப்பா இந்த விதமாக ஏதாவது செய்துவிடுவாரென்று கடைசியில் தன்னை விட்டுப் பிரியும்போது அவனுடைய மனதில் ஓர் எண்ணம் உண்டானது. அப்போதே முயற்சி செய்திருந்தால்! அன்று கெட்ட சகுனம் கண்ட மனதைக் கோபித்து அடக்கியது தப்பாகப் போய்விட்டது. ஆனாலும் இப்படியெல்லாம் வந்து சேர்ந்து விட்டதே! இதற்கெல்லாம் காரணம் என்ன?... தெளிவில்லாமலிருந் தாலும் இப்போது ஒரு மாதிரியான தெளிவு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. அதை யோசிக்கும்போது வெறியும். அவன் தனக்குத் தானே பேசிக்கொண்டான்: "வாப்பா பால் வார்த்து வளர்த்திருக்காங்க. கடைசியிலே அது கடிச்சிரிச்சி, வாப்பா செத்தும் போயாச்சி!"

இறக்கத்தில் லாரி நல்ல வேகத்துடன் பாய்ந்து சென்றது. குளிர்ந்த காற்று காதில் வந்து சீறி அடித்தது. ஹைத்ரோஸ் காதைப் பொத்திக் கொண்டான். மரக்கார் துண்டை எடுத்து அவனுடைய காதை அடைத்துக் கட்டினான். ஹஸ்ஸன் நெடுகிலும் யோசனையில்தான் இருந்தான். டிரைவர் வேகமாக வண்டியைச் செலுத்திக்கொண்டிருந்தான்.

மூன்று பயணிகளும் கிலேசத்தையோ தளர்ச்சியையோ உணரவில்லை. ஊருக்குள் வந்த லாரி ரோடு அருகில் நிறுத்தப் பட்ட போதுதான் அவர்கள் யோசனைகளிலிருந்து விடுபட் டார்கள். ஹஸ்ஸனும் ஹைத்ரோசும் ஒரே சமயத்தில் சொன்னார்கள்: "றபுல் ஆலமீன்!" மரக்கார் வண்டியிலிருந்து முதலில் இறங்கினான். ஹஸ்ஸன் மூலம் வீட்டுக்குச் சொல்லி அனுப்பினான். அந்த ஏகாந்தமும் நிசப்தமும் கலந்த நிமிடத்தில் தான் இருதயத்திலிருந்து முதலில் தாங்க முடியாத வலி வெளிப்பட்டது.

மங்கிய நிலவொளி ஒரு சவ மூடுதுணி போலப் பிரபஞ்சத்தைப் போர்த்தியிருந்தது. கிழிசல்களைப் போல அங்கங்கே நிழல்கள் சிதறிக் கிடந்தன. கண்ணீரில் அமிழ்ந்து போன ஒரு புன்னகை போல இருந்தது பிரபஞ்சம்.

"வந்தாச்சா?" - சட்டென்று பின்னாலிருந்து ஒரு குரல் கேட்டது. மரக்கார் நடுங்கினான். திரும்பிப் பார்த்தபோது தென்பட்டது

சாப்புண்ணி நாயரும் ஹஸ்ஸனும் நாலைந்து பேரும். பிணத்தைத் தூக்கிக்கொண்டு சிலர் முன்னால் நடந்தார்கள். பின்னால் பிள்ளைகள். அதற்கும் பின்னால் சாப்புண்ணி நாயர்.

அவர்கள் வீட்டை அடைந்தபோது முற்றத்திலும் கூடத்திலும் நிறையப் பேர் இருந்தார்கள். நிறைய வெளிச்சம். யாரும் யாருடனும் பேசிக்கொள்ளவில்லை. பிணத்தைத் தூக்கிப் படுக்க வைத்துவிட்டு எல்லோரும் நிமிர்ந்தபோது அடுத் அறையிலிருந்து ஒரு கனத்த குரல்:

"மரக்காரே!..."

"உம்மா..."

"வந்தாச்சா?" அந்தக் குரல் தெளிவாக இருந்தது.

"உம்."

அதற்குப் பிறகு உம்மாச்சு எதுவும் கேட்கவில்லை. தன் கட்டிலிலிருந்து எழுந்து மெதுவாக அடி எடுத்து வைத்து அந்த அறையின் கதவுப் பக்கம் வந்தாள்.

"உம்மா!..." ஹைத்ரோசும் மரக்காரும் சேர்ந்து சென்று தடுத்தார்கள்.

"தள்ளிப் போங்க!" - அவர்களை உதறித் தள்ளிவிட்டு உம்மாச்சு முன்னே நடந்தாள். சட்டென்று சாப்புண்ணி நாயர் மறித்து நின்று சொன்னார்: "இப்போ அங்கே போய்ப் படுங்க."

"இன்னிக்குப் போனா அப்புறம் எப்பவும் படுத்திருக்கத்தானே போறேன், சாப்புண்ணியாரே! ஆனா இன்னிக்கு மட்டும் நான் படுக்கப் போறதில்லே." - அந்த முரட்டுக் குரல் வீட்டின் அஸ்திவாரத்தைப் பிடித்து ஆட்டியதாகத் தோன்றிற்று. சாப்புண்ணி நாயர் விலகி நின்றார்; எல்லோருமே விலகிக்கொண்டார்கள். உம்மாச்சு வாசலுக்கு வந்து சொன்னாள்: "துணியை எடுங்க!"

எல்லோரும் பரஸ்பரம் பார்த்துக்கொண்டார்கள். கடைசியில் சாப்புண்ணி நாயர் ஹஸ்ஸனை நிமிண்டினார். அவன் கண் மூடி நின்று ஒரு நிமிடம் பிரார்த்தித்தான். பிறகு முகத்தை மூடியிருந்த துணியை நெற்றி வரை அப்புறப்படுத்தினான். அதற்கும் கீழே அப்புறப்படுத்தக் கூடாததாக இருந்தது. போஸ்ட்மார்ட்டத்திற்காக மண்டை ஓட்டைப் பிளந்து பார்த்துவிட்டுப் பொருத்தி வைத்திருந்தார்கள். முகத்தில் ஒரு கோட்டமிருந்தது. ஆனாலும் அது சிரிப்பது போலவே இருந்தது. நீண்ட மூக்கும் செழுமையான

கன்னங்களும் அப்படி அப்படியே இருந்தன. உம்மாச்சு பார்த்தபடி நின்றிருந்தாள். அவள் விம்மவோ அழவோ இல்லை. கண்கள் நனைந்ததாகக்கூடத் தோன்றவில்லை. கடைசியாக பகை தீர்த்துக் கொள்வது போன்ற குரலில் கேட்டாள்: "முன்னாலேயே போயிட்டீங்கல்ல?"

ஊசி விழுந்தால் கேட்கும் அமைதி. அவள் முகம் திருப்பிக்கொண்டு சொன்னாள்: "போதும்."

முகம் மீண்டும் மூடப்பட்டது. அழுத்தமாகக் கால்களை ஊன்றி அவள் தன்னுடைய அறைக்கும் போகும்போது கூப்பிட்டாள்:

"ஹைத்ரோஸே!..."

"என்னம்மா?" - அழுவதைப் போன்று அவனுடைய குரல் கேட்டது.

"என்னடா பார்க்கிறே?" அவள் சினந்து பேசினாள்.

"அய்யோ உம்மா!"

"அடக்கம் செய்றதுக்கான ஏற்பாட்டை சீக்கிரம் செய்யுங்க. இனி எனக்கும் அதேதான் செய்ய வேண்டியிருக்கும், கழிசடைகளா!"

யாரும் பதில் சொல்லவில்லை. உம்மாச்சு பிடிப்பில்லாமல் உதிர்ந்து விழும் பூமாலை போல கட்டிலில் சரிந்தாள்.

சாப்புண்ணி நாயர் வெளியில் சென்று கண்களைத் துடைத்துக்கொண்டார். பிறகு சவ அடக்கத்திற்கான ஏற்பாடுகள் தொடங்கின. சவப்பெட்டி எடுத்து வர ஆட்கள் போனார்கள்; குழி தோண்டுவதற்கும் ஏற்பாடாயிற்று; சொல்லி அனுப்ப வேண்டிய ஆட்களுக்கும் சொல்லி அனுப்பியாயிற்று. அதன் பிறகு சாப்புண்ணி நாயர் திண்ணையில் ஏறி நின்று தூணில் சாய்ந்துகொண்டார். தலையில் இடி விழுந்தது போல உணர்ந்தார். எதையும் தனித்து யோசிக்கும் நிலையிலில்லை. தலைக்குள் பல நினைவுகள் கூடி நின்று கூத்தடித்தன. தொடக்கமும் முடிவுமில்லாத யோசனைகள். கடைசியில் சாப்புண்ணி நாயர் ஒரு பெருமூச்சு விட்டார்: "என்னோடே ஜன்மம் என்ன ஜன்மமோ!"

மௌனமாகி, தலையும் தாழ்த்தி முற்றத்தில் உலவிக் கொண்டிருந்த மரக்காரைப் பார்த்தார். மரக்கார் அதை கவனிக்க வில்லை. அவ்வாறு உலவிக்கொண்டிருந்தபோது அவன்

சட்டென்று நின்றான். சாய்ப்பறை வராந்தவை நோக்கிக் கேட்டான்: "யாருடா அது?"

பதில்லை.

"யார்ரா அங்கே இறுமினது?" - அதிகாரமாக மறுபடியும் கேட்டான்.

"நான்தான்." - அங்கே தூணில் சாய்ந்திருந்த அப்து பதில் சொன்னான்.

"உம்!" - ஒரு முரட்டுக் கனைப்புடன் மரக்கார் மீண்டும் உலவத் தொடங்கினான்.

சவப்பெட்டி வந்தது; எல்லா ஏற்பாடும் ஆயிற்று. பிணத்தை எடுத்துக் கிடத்தினார்கள். ஒரு மனிதன் என்றென்றைக்குமாக விடைபெற்றுக்கொள்கிறான். அவனுடைய வெறுப்பும் நட்பும் குரூரமும் அனுதாபமும் ஆக எல்லாமே ஆறடி மண்ணில் மூடிப் போகின்றன. இனிமேல் 'விதி தீர்ப்பு நாள்' வரை நெடியதான தூக்கம்தான். முன்பின் அறிமுகமில்லாத அந்த உலகத்தைப் பற்றிய பயமும் குழப்பமும் ஒன்று கலந்த அந்த நிமிடத்தில் மனிதன் கடவுளை நெருங்குகிறான். "அல்லாஹு அக்பர்..." என்ற குரல் முழங்கிற்று. சவக்கட்டிலை எடுத்துத் தோளில் வைத்தவர்கள் முன்னால் புறப்பட்டார்கள். சாப்புண்ணி நாயர் நின்ற நிலையிலேயே பார்த்துக்கொண்டிருந்தார். அது அப்படியே கண்ணிலிருந்து மறைந்தது.

சட்டென்று அவருடைய கண்கள் வாசலைச் சென்றடைந்தன. அங்கே திரைச் சீலையைப் பிடித்தபடி நின்றிருந்தாள் உம்மாச்சு. கைப்பு கலந்த சிரிப்பொன்று அந்த உதட்டில் படர்ந்திருந்தது. சவக்கட்டில் வெளியேறிப் போகும்போது அவள் வாசலில் சரிந்து விழ இருந்தாள். பக்கத்தில் யாருமில்லை.

"பிடிங்க!...பிடிங்க!..." ஓரிரண்டு தடவை இரைந்து சொன்னார். ஆனால் யாரும் கவனிக்கவில்லை. கடைசியில் சாப்புண்ணி நாயர்தான் ஓடிச் சென்று தாங்கிப் பிடித்தார். உம்மாச்சு அந்தக் கைகளில் சாய்ந்தாள். அப்போதுதான் அப்துவும் ஓடி வந்தான். இருவரும் சேர்ந்து எடுத்துக் கிடத்தினார்கள். வேலைக்காரிகள் முகத்தில் தண்ணீர் தெளித்தார்கள். அப்து விசிறியடி கூப்பிட்டான்: "உம்மா!... என் உம்மா!.."

# 20. அச்சு முறிந்த வண்டி

சில சமயங்களில் ஒரு பகைவனை இழப்பதால் வாழ்க்கை முழுவதும் சூனியமாகி விடுவதுண்டு. இனி எதற்காக வாழ வேண்டு மென்ற நிச்சயமற்ற தன்மையை உருவாக்கிவிடும். அப்துவின் விஷயத்திலும் அப்படித்தான் நடந்தது. மாயன் அவனுடைய இருதயத்தில் வாழ்க்கைப் பகைவனாக நிலைபெற்றிருந்தான். அவன் வளர வளர அந்தப் பகை உருவமும் மனதில் வளர்ந்துக் கொண்டே இருந்தது. எப்போதும் அந்தப் பகைவனைப் பற்றிய சிந்தனைதான். அப்படி அந்த வெறுப்புக்குரிய உயிர் அப்துவின் வாழ்க்கையில் ஒரு பகுதியாகவே மாறிவிட்டது. மாயன் தற் கொலை செய்துகொண்டான் என்று அறிந்தபோது திடீரென்று ஒரு நிம்மதி பிறந்தது. அவன் அறியாமலே சொன்னான்:

"ஒழிஞ்சான்."

அந்தச் சமயத்தில் ஆழ்ந்து சிந்திக்காமல் இருக்க முடியவில்லை. எதற்காக அவன் தற்கொலை செய்துகொண்டான்? அப்படி என்னதான் நடந்துவிட்டது? அதற்கான பதிலைத் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான்: "விதைச்சவன் அறுப்பான்!"

ஆனால், விதைத்தவர்கள் பலர் அறுக்காமல் மறைந்து போவதை அவன் கண்டதுண்டு. கடந்த காலத்தை நினைவிலிருந்து அழித்து ஒழித்துவிட்டு வாழத்தான் மனிதன் முயல்கிறான். சுகம் தர இயலாத சிந்தனைகளை எந்த உயிரும் தேக்கி வைத்துக் கொண்டிருப்பதில்லை. தனக்குரியதான செயற்பாடுகளை ஆத்மா உமிழ்ந்துவிடுவதுதான் தற்கொலையோ? மற்றவர்களின் கர்மங் களுக்கு மனிதர்கள் பலிமிருகங்களாக ஆகிவிடுவதுண்டு அல்லவா? அதுதான் இந்த உலகத்தில் அதிகம். தான் ஒருவருக்கும் எந்த உபத்திரவமும் செய்ததில்லை. ஆனாலும் வாழ்க்கை முழுவதும் துக்க மயமாகிவிட்டது. விரும்பாமல் ஒட்டிக்கொண்ட ஒரு மனிதனின் தீய செயல் தன் வாழ்க்கை முழுவதையும் கெட்ட கனவாக மாற்றிவிட்டது. இதற்கெல்லாம் என்னதான் அர்த்தம்? அப்துவுக்கு யோசித்த பின்னும் முடிவு கிடைக்கவில்லை.

அப்து தன்னைத்தானே சபித்துக்கொண்டான்: "இந்தச் சனி பிடிச்சவன் செத்துத் தொலைஞ்சாலும் நம்ம தலையை விட்டுப் போக மாட்டேன்கிறான்."

உண்மைதான். அவ்வளவு தீவிரமான மற்றொரு பகையோ நட்போ மனதில் இடம் பெறாமல் மாயனைப் பற்றியுள்ள கவலை ஒழிந்து போவது சாத்தியமில்லை. அந்தக் குடும்பத்தில் இன்று மிகவும் அதிக எரிச்சலை அனுபவிப்பது இரண்டு பேர்கள்தாம்- அப்துவும் உம்மாச்சுவும். ஒரு நபருக்கு பகை ஒழிந்துவிட்டது; மற்ற நபருக்கு அன்பு.

துக்கத்தை சமமாகப் பங்கிட்டுக்கொண்ட அந்த இருவரும் பரஸ்பரம் பார்த்துக் கொள்ளாமலும் நெருங்காமலும் இருக்க முயன்றார்கள். உம்மாச்சு பெரும்பாலும் தன்னுடைய அறையிலே தான். கைத்தண்டை நெற்றியில் வைத்தபடி அவள் கண் மூடி அரவமில்லாமல் கிடப்பாள். இப்போது அவள் வேலைக்காரி களோடுகூட சச்சரவிட்டுக் கொள்வதில்லை. கட்டிலின் அடியில் எச்சில் குவளை இல்லையென்றாலும்கூட ஓசைப்படாமல் எழுந்து நடந்து போய் ஜன்னல் வழியே துப்பிவிட்டுத் திரும்பி வந்து படுத்துக் கொள்வாள். முக்காட்டுத் துணியின் தலைப்பை வருடிச் சுருட்டியவாறு காலம் கடத்தினாள்.

"சாப்பிட நேரமாகலியா?" - வேலைக்காரி வாசலில் வந்து நின்றுகொண்டு அச்சத்துடன் கேட்பாள்.

"இல்லே. கொஞ்சம் போகட்டும்." - கண் திறக்காமலேயே உம்மாச்சு பதில் சொல்வாள்.

சிறிது நேரம் கழித்து மற்றொரு வேலைக்காரி வந்து கேட்கும் போதும் அவள் அதே பதிலைத்தான் சொல்வாள்: "கொஞ்சம் போகட்டும்."

அப்படி, எப்போதாவது ஒரு தடவைதான் அவள் சோறு சாப்பிட்டாள். அதுவும் மிகக் குறைவாகத்தான். சோற்றுக் கவளத்தைக் கையில் வைத்தபடி ஆடாமல் அசையாமல் அப்படியே உட்கார்ந்திருப்பாள். ஐந்து பத்து நிமிடங்களுக்கு அதே இருப்புத்தான்.

"உம்மா!...உம்மா!...." ஹைத்ரோசின் குரல் கேட்டுத்தான் அவள் சிந்தனைப் பிடியிலிருந்து விடுபடுவாள்.

"என்னப்பா?"

"உம்மா சோறு சாப்பிடணுமில்ல!"

"சரி." -பின்னர் வேகவேகமாக சாப்பிட்டு முடிப்பாள், இப்படியும் ஒரு கடமையைச் செய்து முடித்தாக வேண்டுமே என்பதுபோல். ஐந்து நிமிடங்களுக்குள் அவள் படுக்கைக்குச் சென்று படுத்து கண் மூடுவாள். அவளைப் பொருத்தவரையிலும் பகலுக்கும் இரவுக்கும் வித்தியாசமில்லை. பாதி மயக்க நிலையில் காலம் அப்படிப் பறந்து போகும். அவளைப் பொருத்தவரை கிழக்கும் மேற்குமான இரண்டு துருவங்களைக் கூட்டி இணைக்கும் பளபளப்பான ஒரு ரப்பர் பட்டை போலிருந்தது காலம். அதனூடே அவள் உரசி உரசிப் போகிறாள். எங்கே? எங்கேயானால் என்ன?

வேகமாகச் சுழன்று எதிலோ சென்று முட்டி மோதிச் சிதறிய ஒரு பம்பரத்தின் துணுக்குப் போல அவள் அந்தப் படுக்கையில் கிடந்தாள். தன் கடந்த காலத்தின் சுழற்சிகளைப் பற்றி அந்தப் பம்பரத் துணுக்கு தனக்குத்தானே கனவு காண்பதாக வேண்டுமானால் வைத்துக்கொள்ளலாம். அது இப்போது ஒரு சாதாரண மரத் துணுக்காக மட்டுமே அங்கே அசைவற்றுக் கிடந்தது. அப்போதுதான் முட்டையிலிருந்து வெளிப்பட்ட கோழிக்குஞ்சு, தான் அதுவரை இருந்த முட்டை ஓட்டைப் பார்ப்பது போல உம்மாச்சு கடந்த காலத்தை எண்ணிப் பார்த்தாள்.

"யா றப்பல் அலமீன்..." இடையே ஒரு பெருமூச்சு நெஞ்சிலிருந்து கிளர்ந்து கிளர்ந்து வரும். அந்த ஒரு கண நேரம் மட்டும்தான் அந்தப் பெண்மணியின் உள்ளம் உலகத்துடன் ஒட்டியிருந்தது.

அவரவர் காலடி ஓசை கேட்காதிருக்க எல்லோரும் முயல்வது போலிருந்தது. வேலைக்காரிகள்கூட வளையலோசை கேட்காதிருப்பதற்காக கை வீசாமல் நடந்தார்கள். பாத்திரங்களை மிக மெதுவாகத் தரையில் வைத்தார்கள். அடுக்களையிலோ தேங்காய்க் களஞ்சியத்தின் பின்புறமோ நின்று அவர்கள் பரஸ்பரம் கிசுகிசுத்தார்கள்.

"பாத்தியா, சைனபா?"

"பாத்தேன்."

"சிறகு ஒடிஞ்சி போச்சி."

"எவ்வளவு சீக்கிரமா எல்லாமா வந்தே சேந்திடிச்சி!"

"ஆண்டவன் வர்ற வழி நாம பாத்தா தெரியாது, சைனபா, தெரியாது."

"சரியாச் சொன்னே, கோவில் பூசாரிகளுக்கும், மவுலியார் களுக்கும் தவிர வேறே யாருக்கு அந்த வழி தெரியாது."

"ஆனா சைத்தான் வர்ற வழி எல்லாருக்கும் தெரியும்."

"அதேதான்."

"அம்மாவோடே இந்தப் போக்கு ஒரு அழிவுதான்!"

"இனிமே எந்திரிப்பாங்களா?" - அவள் குரலைச் சிறிது தாழ்த்திச் சொன்னாள்.

"அங்கேதான் கேக்கணும்." - மற்றவள் வானத்தைச் சுட்டிக் காட்டினாள்.

"பெரியவருக்கும் சிரிப்பும் களிப்பும் எல்லாம் போச்சி."

"ஹைத்ரோஸ் மொதலாளிக்கும் அப்படித்தானா?"

"ஆமா, எப்பவும் சண்டையும் கோபமும்தான்."

"ஒன்கிட்ட ஏதாச்சும் சொன்னாரா?"

"முன்னாலே பாத்த மாதிரியே இல்லே, என்னமோ?" - அவள் ஒரு பெருமூச்சு விட்டாள்.

"மனசிலே சொகம் இல்லாட்டி பின்னே என்ன சிரிப்பும் கும்மாளமும்?"

"அப்படியாத்தானிருக்கும்."

"ஆனாக்க அம்மா கதை முடிஞ்சா நம்ம கதையும் முடிஞ்ச மாதிரிதான்."

"அப்படித்தான்... கொஞ்சம் கோபக்காரங்களா இருந்தாலும் இரக்கம் உள்ளவங்கதான்."

"அதான் சொன்னேன்!"

அந்தக் குடும்பத்தின் தற்கால நிலவரத்தைப் பற்றி இப்படிச் சில இரகசியமான அபிப்பிராயங்களைப் பேசிக்கொண்டாலும் உரத்துப் பேச அந்த வீட்டில் யாரும் விரும்பவில்லை. எந்த வாயாடியின் மீதும் ஆதிக்கம் செலுத்தக் கூடியதாக இருந்தது அந்த வீட்டு உட்புறத்தின் மௌனம். ஒரு பயமுறுத்தும் குரல் தொடர்ச்சியாக அந்த வீட்டில் எதிரொலித்துக் கொண்டிருக் கிறதோ என்றொரு பிரமை. பூமி சுழலும் சத்தத்தை நாம்

கேட்காதது போல அதை யாரும் அங்கே கேட்டதில்லை. ஆனாலும் அப்படி ஒன்று இருக்கும் என்றொரு நம்பிக்கை. வீட்டின் இடைவெளிகளிலும் படுக்கையறைகளின் மூலைகளிலும் நிழல்கள் கட்டிப் பிணைந்து கிடக்கின்றன என்றொரு நம்பிக்கை. இரவின் நடுச்சாமத்தில் வேலைக்காரிகள் திடுக்கிட்டு விழிப்பதும் செவிசாய்த்து கவனிக்கவும் செய்தார்கள். ஒருத்தி மற்றவளை மெதுவாகத் தட்டி எழுப்பிக் கேட்டாள்: "கேட்டியா?"

"என்ன?"

"அந்தத் திண்ணையிலேருந்து ஒரு குறட்டைச் சத்தம் கேக்குதில்ல?"

"கேக்குதா?" சினேகிதியின் பக்கத்தில் நெருக்கிப் படுத்துக் கொண்டு அவள் தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்: "பெரியவருடையதாயிருக்கும்."

"நீ என்னை ஒட்டியே படுத்துக்கோ, பயமா இருந்தா!"

பல சமயங்களில் உம்மாச்சுவின் அறையிலிருந்து மந்திர உச்சாடனங்கள் கேட்கும். முதலில் இப்படி நடந்தபோது மூன்று நான்கு தடவைகள் வேலைக்காரிகள் சென்று பார்த்தார்கள். அவள் கண்மூடிப் படுத்துக்கொண்டு யாருடனோ பேசிக்கொண்டிருந் தாள். தெளிவில்லாத அந்த ஒலிகளுக்கு அர்த்தம் புரியவில்லையானாலும் அவை அச்சுறுத்தின.

"ஏதாச்சும் கோயில் பூசாரியைக் கூட்டியாந்து கொஞ்சம் மந்திரிச்சா நல்லது." சைனபா அபிப்பிராயப்பட்டாள்.

"ஆமா. இலங்கைலேருந்து வந்த பூசாரியா இருந்தா ரொம்ப நல்லது. ஆனா யார் செய்வாங்க?"

"பிள்ளைங்க."

"அவங்களுக்கு இது மேலேயெல்லாம் எந்தக் கண்ணும் மூக்கும் இல்லே."

"உம்."

மரணத்துக்கு மட்டுமல்ல, மரணம் கடந்துபோன வழியைக் கண்டுகூட மனிதன் பயப்படுகிறான். அதற்குப் பிறகு அதே இடத்தில் வாழ நேர்வது வாழ்க்கையின் தேவைகளினால்தான்; வாழ்வதற்கு உகந்ததாக ஆக்கி வைப்பது வாழ்க்கையின் சலனங்கள்தாம். உம்மாச்சுவின் வீட்டில் அதுவும் இருக்கவில்லை.

அதனால் மரணம் கடந்து போய்விட்டது என்று யாருக்கும் தோன்றவில்லை; அது அங்கேயே முகாமிட்டிருப்பதாக ஒரு நம்பிக்கை. எங்கோ ஒரு மூலையில் அது ஒளிந்துகொண்டிருக்கிறது. எப்போதாவது தங்களை வந்து பிடித்துக் கொள்ளும் - இந்த பிரமை எங்கும் இருக்கிறது.

இந்தச் சூழலிலிருந்து விலகி நின்றிருந்தது அப்து மட்டுமே. அவன் சாய்ப்பறையிலிருந்தபடி யோசித்தான்: என்ன? அவனுக்குக் கூட நிச்சயமில்லை. ஏதோ போய்விட்டது என்பது மட்டும் தெரிகிறது. அவன் ஜன்னல் வழியே பார்த்தான். உலகம் முன்னைப் போலத்தான் போய்க்கொண்டிருக்கிறது. தோட்டத்துப் பலா விலிருந்து பழுத்த இலைகள் மெதுவாக இற்று வீழ்கின்றன. வசந்தகாலத்தை நேர்நின்று அழைப்பது போல பலா மரத்துப் பூக்கள் அரும்புகின்றன. வேலிக்கம்பி மீது சுற்றிப் படர்ந்து கிடக்கும் பாடவள்ளிக் கொடியில் வந்திருக்கும் வண்ணாத்திப் பறவைகளுக்கு அப்போதும் பாட்டுத்தான். அயலில் ஒரு சொறிநாய் மோப்பம் பிடித்து நடந்தது. விறகு வெட்டுவதும் வைக்கோல் மிதிப்பதும் தொடர்ந்து நடக்கின்றன. ஏதோ இழப்பு ஏற்பட்டதான சாயல் யாரிடமும் இல்லை. அடகு வைத்து கெடு முடிந்துபோன ஒரு வெண்கலப் பாத்திரத்தை முன்னிட்டு அயலில் இரண்டு பெண்கள் சண்டை போட்டுக் கொண்டிருந்ததைக் கேட்டுத்தான் அன்று அப்து விழித்தெழுந்தது. எதற்காக என்று தெரியவில்லை, அப்து ஜன்னல் பக்கம் போய் நின்றுகொண்டு அதை உற்றுக் கேட்டான். தன்னைப் பற்றி அல்லாது வேறொன்றைப் பற்றி நினைப்பதற்கான ஓர் ஆசையாக இருக்கலாம்.

"போன மாசம் இருபத்தி ஏழிலே திருப்பிக்கிடறேன்னுதான் நான் சொன்னேனில்ல?"

"ஆமா. இந்த மாசம் இன்னிக்கி அஞ்சாயிரிச்சில்ல?"

"வட்டியும் மொதலும் நான் கொண்டு வந்திருக்கேனில்ல?"

"ஆனா கெடு முடிஞ்சி போச்சில்ல? கெடு முடிஞ்சிரிச்சின்னா அடகு வச்ச பாத்திரம் திருப்பிக் கெடைக்குமா?"

"இப்பிடியெல்லாம் அடம் பிடிக்காதீங்க."

"நான் அடம் பிடிக்கிறேன்னு நீங்க மட்டும்தான் சொல்றீங்க. நெறைய ஆளுங்க இங்கே அடகு வைக்க வந்து போறாங்க."

"என் கொழந்தைங்களோடே தகப்பன் அதை திருவில்வா மலையிலேருந்து கொண்டு வந்ததாக்கும், கேட்டீங்களா! எனக்கு அந்த உருளிப் பாத்திரம் பார்க்கிற போதெல்லாம் அந்த மனிசரைப் பார்க்கிற மாதிரிதான், கேட்டீங்களா!"

"ஒங்க கொழந்தைங்களோடே தகப்பனை நெனச்சி நான் என்னோடே பணத்தைக் கோட்டை விடறதா?"

"பணம் அசல் இந்தாங்க, வட்டி இந்தாங்க."

"கெடு முடிஞ்சதுக்கு என்ன பண்ண?"

"இது பேங்க்கு இல்லேல்ல!"

"அது என்னமோ, உருளி நான் தரமாட்டேன்."

"நீங்க ஏய்ச்சிப் பிடுங்க இருக்கீங்களா?"

"இந்தா, என் சுபாவம் ரொம்ப மோசம்னு தெரியுமில்ல?"

"ஏய்ச்சிப் பிடுங்கிறதுதான் இது - நான் எந்த கோர்ட்லேயும் அப்பிடித்தான் சொல்லுவேன்."

"சும்மா தகராறு பண்ண வேணாம்."

"இப்பிடியெல்லாம் பண்ணினா ஒங்களோடே இந்த சொத்தெல் லாம் அழிஞ்சிதான் போகும். ஆண்டவனை மறந்திறக் கூடாது. இது பகல் கொள்ளை!"

"என்னடீ சொன்னே?" என்று அலறிக்கொண்டே வந்த அந்த அடுக்காரி முற்றத்திற்கு ஓடி வந்து, எதிராளியின் தலைக்கொண் டையைப் பற்றிக்கொண்டாள். அப்து திடுக்கிட்டான். அப்போது வைக்கோல் மிதித்துக் கொண்டிருந்தவர்கள் குறுக்கே புகுந்து இருவரையும் பிரித்துவிட்டார்கள். ஒருத்தி திண்ணையிலும் மற்றவள் முற்றத்திலும். இரண்டு புஸ்வாணங்கள் கொளுத்தி வைக்கப்பட்டது போல இருவரும் ஏசிக்கொண்டார்கள்; வார்த்தைகளில் தீப்பொறி சிதறிற்று. அடகு வைத்தவள்தான் நல்ல வாயாடி. வார்த்தைகளுக்குப் பஞ்சமில்லை.

அவள் சொல்லிக்கொண்டிருந்தாள்: "பணம் இருக்குங்கிறத னாலே ரொம்பவும் துள்ளக் கூடாது. அக்கம் பக்கம் ஒரு தரம் பாத்துக்கிறணும். ரெண்டு பேரைக் காலி பண்ணினவ படுத்திருக் கிறதைப் பாத்தியா?"

அப்து விக்கித்துப் போனான். அப்படிச் சொன்னது யாரைப் பற்றி என்று அவனுக்குப் புரிந்துவிட்டது. உடனே ஓடிப் போய்

பேசினவளின் தாடையில் ஓர் அறை கொடுக்கலாமென்று தோன்றிற்று. அவன் ஜன்னல் கம்பிகளைப் பிடித்து இறுக்கினான். ஓசைப்படாமல் கட்டிலுக்குத் திரும்பி வந்து உட்கார்ந்தாள். அமைதிப்பட்டிருந்த மனம் மீண்டும் சஞ்சலப் பட்டது. "ஹா! என்ன நாசமாப் போற வாழ்க்கை!"

அப்துவுக்கு அந்த அறையில் உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை. அவனுக்கு மூச்சு முட்டுவது போலிருந்தது. எங்கேயாவது போக வேண்டும். ஓடி ஓடிப் போக வேண்டும். வேகமாக சட்டை மாட்டிக் கொண்டு தலையைக்கூட வாராமல் வெளியே போனான். வாசற்படியைத் தாண்டினான். முற்றத்துத் திண்ணையில் உட்கார்ந்திருந்த மரக்காரை அவன் கவனிக்கவில்லை. மரக்காரும் அவன் போவதைப் பார்த்துக்கொண்டுதான் இருந்தான். அப்து கண்ணிலிருந்து மறைந்ததும் மரக்கார் சொன்னாள்: "ஹம்க்!"

இதைச் சொல்லிவிட்டு எழுந்து உள்ளே போனான்.

அப்து கால்களின் நெடுநாள் பழக்கம்கொண்டு ஒரு பாதையில் நடந்தான், தலையைக் குனிந்தபடி. சொந்த இருதயத்திலிருந்தே எதையோ அகழ்ந்தெடுப்பது போன்ற தோற்றம். அப்படி நடந்து போய்க் கொண்டிருந்த போதுதான் திடீரென்று பின்னாலிருந்து குரல் கேட்டது: "பின்னந் தலையிலே என்ன?"

அப்து நின்றான். திரும்பிப் பார்த்தான். ஒரு குளிர்ந்த வசந்தம் போல சின்னம்மு. புன்சிரிப்பை ஏந்தியபடி எதிரில் நின்றிருந்தாள்.

"என்ன கேட்டே?"

"பிடரியிலே என்னன்னுதான்! தலை இவ்வளவு குனிஞ்சிருந்த தனாலேதான் கேட்டேன்."

"என்னன்னு எனக்கும் தெரியலே. அதான் ரொம்பக் கஷ்டம்!"

"கூலி இல்லாமே சுமை தூக்கக் கூடாது. அதான் புத்திசாலித் தனம்!"

"அந்த நெனப்பெல்லாம் எனக்கும் தோணுது. ஆனா- "

"நடந்துகிட்டே சொல்லுங்க. இது பொதுவழியாக்கும்."

அப்து முன்னாலும் அவள் பின்னாலும் நடந்தார்கள்.

"எனக்குச் சிலது சொல்லணும் போல இருக்கு."

"நான் ஸ்கூலுக்குப் போகணும்."

"கொஞ்ச தூரம் நானும் வர்றேன்."

"எதுக்கு கொஞ்ச தூரம்? ஸ்கூல் வரைக்குமே வாங்க. நான் உங்களை அங்கே சேர்த்துப் படிக்க வைக்கிறேன். - ஆனா ஆவன்னா படிங்க. என்ன நெனக்கிறீங்க?"

அப்து கோபத்துடன் திரும்பி அவளை முறைத்துப் பார்த்தான்: "சின்னம்மு நானும் மனுஷந்தான்."

"மனுஷக் குழந்தை!" - சின்னம்மு உடனே திருத்தினாள். அப்து பதில் சொல்லாமல் பத்தடி நடந்தான். பிறகு ஒரு பெருமூச்சுடன் சொன்னான்: "சின்னம்முவுக்குக்கூட என்னைப் புரியலே."

"எனக்கு மட்டும்தான் புரிஞ்சிருக்கு."

"அப்படி இருந்தும் - "

"ஆமாம், இருந்தும் ஏன் இப்படிச் செய்றேன்னுதானே? என்னோடே பேசணும்னு இருக்கிற விஷயம் என்னண்ணு எனக்குத் தெரியும்."

"என்னது?"

"எங்கேயாவது ஓடிப் போகணும். இங்கே இருக்க முடியலே. தற்கொலை பண்ணிக்கணும் - இது மாதிரித்தானே?"

"பொறுக்கிற மட்டும் நான் பொறுத்திட்டேன், சின்னம்மு."

"உங்களை விரும்புறவங்களுக்கு வேண்டி இன்னும் கொஞ்சம் பொறுத்துக்குங்க. அப்போ எல்லாம் சரியாயிடும்."

"என்னை யாராவது விருமபுவாங்களா?"

"இப்பவும் சந்தேகந்தானா?"

"யாரு?"

"உம்மாச்சு அம்மாவாச்சும் விரும்புவாங்கல்ல? பெத்த வயிறில்லியா!"

"உ-ம்." அப்து ஒரு பெருமூச்சு விட்டான்: "வேறே யாரும் என்னை விரும்புற மாதிரியில்லே."

"எப்படித் தெரியும்?"

"யாரு?"

"உங்களை விரும்புறவங்க லிஸ்ட்டெல்லாம் என் கையிலேயா இருக்கு? சில பேரையாவது விரும்பாமே மனுஷங்களாலே இருக்க முடியுமா? இல்லாட்டி எப்படித்தான் உயிர் வாழறது?"

"ஆனா, என் வாழ்க்கை சூனியமாகிப் போச்சி."

"யாருடைய வாழ்க்கையும் சூனியம் ஒண்ணுமில்லே. இந்த நெடுஞ்சாலையைப் பாருங்க. இது சிருஷ்டி ஆரம்பத்திலே இப்படி ஒண்ணும் இல்லே. பூமியைக் கடவுள் படைச்சான். மனுஷனுக்குக் கையும் கொடுத்தான். பிறகு எல்லாமே மனுஷனோடே வேலை தான். வாழ்க்கை இயற்கையாகவே கரடுமுரடானதுதான். அதைக் கொஞ்சம் செம்மைப் படுத்தத்தான் ஆண்டவன் நமக்குப் புத்தியும் மனசும் கொடுத்திருக்கிறது. இதையெல்லாம் புரிஞ்சிக்கிடறதுக்கு அவ்வளவு அதிகமா புத்தியொண்ணும் தேவையில்லே."

"உனக்கு இப்படியெல்லாம் பேச முடியுதாக்கும்!" - அப்து வியப்புடன் சின்னம்முவின் முகத்தைப் பார்த்தான்.

"முடியும்தான். எனக்கு ரொம்ப விவரம் தெரியாது. ஆனால் விவரம் தெரிஞ்சவங்க சொன்னதைக் கேட்டுக்குவேன். அதைப் பத்தி யோசிப்பேன். நீங்களும் அப்படிச் செய்யுங்க. உம், நடங்க. நான் போகணுமில்ல.." - அவள் கையை வீசிக்கொண்டு நடந்தாள். அப்து நின்றுவிட்டான்.

நான்கடி நடந்தபின் அவள் திரும்பிப் பார்த்து புன்சிரிப்புடன் சொன்னாள்: "இன்னிக்கு சாயங்காலம் ஸ்கூல் மைதானத்திலே காங்கிரஸ் மீட்டிங் இருக்கு. கேக்க வாங்களேன் -" அதற்கான பதிலுக்குக் காத்திருக்காமலே அவள் மீண்டும் கையை வீசி நடந்தாள். நிறுத்தாமல் கொள்ளாமல் பேசும் அவளிடம் என்ன பேசுவது? எல்லாமே கட்டளையிடுவது போலத்தான். ஒரு காரம் கலந்த வாசனை. ஆனாலும் தன் மனதிலிருந்து சங்கடங்களை அவள் குறைத்துவிட்டதாக அப்துவுக்கு தோன்றிற்று. ஏதோ மெல்லியதொரு வீணைக்கம்பி இதயத்தின் அடித்தளத்திலிருந்து இசைத்துக்கொண்டிருந்தது.

"அப்து, என்ன இங்கே நிக்கிறே?" - எதிரே வந்துகொண்டிருந்த சாப்புண்ணி நாயரின் கேள்வி காதில் விழுந்த பிறகுதான் அப்துவுக்கு நினைவு திரும்பியது.

"ஒண்ணுமில்லே." - எச்சிலை விழுங்கிக்கொண்டு அப்து கேட்டான்: "எங்கே போறீங்க?"

"உங்க வீட்டுக்குத்தான். அம்மா அங்கே வரச் சொல்லி அனுப்பியிருக்காங்க. உனக்குத் தெரியாது?"

"தெரியாதே!"

"எப்படித் தெரிய முடியும்! குடும்ப விஷயத்திலே ஏதாச்சும் அக்கறை இருக்கா?"

அப்து பேச்சுமூச்சற்று தலையைத் தாழ்த்தி நின்றான். சாப்புண்ணி நாயர் அவனுடைய முதுகைத் தட்டிச் சொன்னார்: "போகலாம், தம்பி, சும்மா வெயில்லே அலையாதே."

போகலாம், தம்பி - என்ற அந்தக் குரலில் ஒரு தந்தையின் இதயம் முழுவதையும் அப்து தரிசித்தான். தந்தையின் விரல் பிடித்து நடக்கும் ஒரு சின்னக் குழந்தையைப் போல அவன் அந்த கரணவரின் பின்னால் நடந்தான்.

வீட்டு முற்றத்தை அடைந்தபோது அங்கே யாரும் இருக்கவில்லை. அப்து நேராக சாய்ப்பறைக்குப் போனான்.

சாப்புண்ணி நாயர் முற்றத்தில் இருந்தபடியே உள்ளுக்குள் குரல் கொடுத்தார்.

"யாரு?"

"நான்தான்."

சாப்புண்ணி நாயர் உள்ளே அழைத்துச் செல்லப்பட்டார்.

உம்மாச்சு முந்தின நாள் முதற்கொண்டே சாப்புண்ணி நாயரைப் பார்க்க வேண்டுமென்று நினைத்துக்கொண்டிருந்தாள். திடீரென்றுதான் அந்த எண்ணம் தோன்றிற்று. அதற்குக் காரணம் இருந்தது. முந்தின நாள் பகலில் அடுத்த அறையில் நடந்த ஒரு சம்பாஷணையின் பெரும்பகுதியை அவள் கேட்டாள்: 'அப்படீன்னா, அதனாலேதான் வாப்பாவுக்கு இப்படியெல்லாம் வந்திருக்குது.'

'வாப்பா வளர்த்து ஆளாக்கீட்டு...'

'அது பாம்புக்குட்டியாக்கும்!'

'கள்ளப்பயலாக்கும்.'

'ஹம்க்கா.'

'அண்ணே, அவனும் நம்மளும் ஒண்ணா சேர மாட்டோம்.'

'அவனை நான் விடப் போறதில்லே.'

உம்மாச்சு அதிர்ந்து போனாள். அவள் படுக்கையில் தளர்ந்து சாய்ந்தாள். மறுநாள் அதிகாலையில்தான் சாப்புண்ணி நாயருக்கு ஆள் அனுப்பி வைத்தாள். சாப்புண்ணி நாயர் அறை வாசலில் நின்றார். காலடி ஓசை கேட்டுக் கண் விழித்த உம்மாச்சு அடுத்திருந்த ஒரு பெஞ்ச்சை சுட்டிக் காட்டிச் சொன்னாள்: "உக்காருங்க."

சாப்புண்ணி நாயர் உட்கார்ந்தார். பிறகு கேட்டார்: "எதுக்காகக் கூப்பிட்டீங்க?"

உம்மாச்சு கட்டிலில் உட்கார்ந்தபடி ஒரு நிமிடம் யோசித்து விட்டுச் சொன்னாள் "சாப்புண்ணியாரே..."

அவள் அங்கே நிறுத்தினாள். அவளுடைய மனதில் எதையோ அடுக்கி வரிசைப் படுத்திக்கொண்டதுபோல் தோன்றிற்று.

"என்ன?" - சாப்புண்ணி நாயர்.

"ஒண்ணுமில்லே. ஒருத்தருக்கொருத்தர் புரிஞ்சிக்கிட்டவங்க எல்லாம் போய்ச் சேர்ந்திட்டாங்க. இனி நீங்களும் நானும்தான் பாக்கி இருக்கோம்."

வார்த்தையின் கடைசியில் அவளுடைய தொண்டை இடறிற்று. எதிர்பாராத இந்த உரையாடல் சாப்புண்ணி நாயரிடத்தும் சோகத்தை உண்டாக்கிற்று. மண்ணுக்குள் அமிழ்ந்து கிடந்த விதைகள் புது மழை பெய்ததும் எல்லாமே முளைவிட்டுக் கிளம்புவது போல, அவருடைய உடம்பெங்கும் புல்லரிக்கச் செய்தது. கண்கள் நனைந்தன. சிறிது நேரத்திற்கு இருவரும் எதுவும் பேசவில்லை. கடைசியில் சாப்புண்ணி நாயர்தான் மௌனத்தைக் கலைத்தார்.

"ஈஸ்வரன் சித்தத்தை மாத்த முடியுமா?"

"அப்படித்தான். நாம எவ்வளவுதான் அடைச்சாலும் ஆண்டவனோடே வழி தெறந்துதான் இருக்கும்."

"எதுக்காகக் கூப்பிட்டீங்க?"

"இந்தக் குடும்பத்தோடே நெலமை இனி என்ன ஆகுறது, சாப்புண்ணியாரே?"

"பிள்ளைங்கதான் வளர்ந்திட்டாங்கல்ல!"

"அவங்க வளந்ததுதானே இப்போ நமக்கு பயத்தை உண்டாக்கியிருக்கு!"

"ஏன் என்னாச்சி?"

"ஒண்ணு சேராது."

"அப்படீன்னா?"

"அது அப்படித்தான். எதுக்காக அதிகமாப் பேசணும்! ஒங்களுக்கும் எனக்கும் எல்லாமே தெரியும்- நாம இருக்கிறப்பவே

இவங்களுக்குப் பிரிச்சிக் குடுக்கலேன்னா..." தழுதழுத்ததால் அதற்கு மேல் பேச முடியவில்லை.

"நீங்க என்ன சொல்றீங்க!"

"ஆமா, நெலமை அவ்வளவுக்குப் போயிரிச்சி."

"குடும்பம் எல்லாமே தாறுமாறாயிருமில்ல?"

"சொல்றது சரிதான். ஆனா வர வேண்டியது வந்துதான் தீரும். எனக்கது நல்லா தெரிஞ்சி போச்சி. ஆண்டவன் சொல்லி குடுத்தது. சேராததை வெட்டி விடறதுதான் ரொம்ப நல்லது."

"கெட்டது எது? யாரை வெலக்கறது?

"எல்லாம் என் பிள்ளைங்கதான். கல்லிலே அடிச்ச பூக்குலை போல அவங்க சிதறிப் போறதை நான் பார்த்தாக வேண்டியிருக்கே... பாக்க வேண்டியதைப் பாத்துத்தான் ஆகணும்; கேக்க வேண்டியதைக் கேட்டுத்தான் ஆகணும். தயங்கறதிலே புண்ணியமில்லே, சாப்புண்ணியாரே!"

"இருந்தாலும்...."

"இப்போ நாம இதைச் செய்யலேன்னா, இங்கே நடந்து முடிஞ்ச சங்கதிங்க எல்லாமே இனியும் ரெண்டு மடங்கா நடக்கும். அவங்க நல்லா இருக்கிறதைப் பாத்தபடியே நான் கண்ணை மூடிர்றேன். எனக்கு சொத்து சொகம் வேணாம், அவங்கதான் வேணும்."

சாப்புண்ணி நாயர் அதற்கெதுவும் பேசவில்லை.

"மரக்காருக்கும் ஹைத்ரோசுக்கும் ஒரு பங்கு; அப்துவுக்கு வேறே ஒரு பங்கு."

"எனக்குப் புரிஞ்சிடிச்சி."

"அப்பிடீன்னா இன்னிக்கே அதைச் சரிப்படுத்திரணும்."

"அவங்களும் விவரம் தெரிஞ்ச பிள்ளைங்கதானே, அவங்ககிட்ட ஒரு வார்த்தை கேட்டுக்க வேணாமா?"

"இங்கே இருக்கிறதெல்லாம் என்னோடதுதான். எனக்குத் தோணுற மாதிரி செய்வேன். இந்தப்படி முடிக்க ஒங்களுக்கு முடியுமில்ல?"

"இதையும் என் கையாலேயே செய்ய வேண்டியிருக்கே!" சாப்புண்ணி நாயர் பெருமூச்சு விட்டார்: "சரி."

உம்மாச்சு நன்றியுணர்வுடன் சாப்புண்ணி நாயரை உற்றுப் பார்த்தபடி சொன்னாள்: "நீங்கதான் மனிசன்!"

அதைத் தொடர்ந்து இருவரும் எதுவும் பேசிக்கொள்ளவில்லை.

## 21. இரண்டும் இரண்டும் ஐந்து

"என்ன யோசனை?" - சாப்புண்ணி நாயர் மரக்காரிடம் கேட்டார்.

"யோசனை ஒண்ணுமில்லே. ஆனா, நெனச்சிப் பார்க்க முடியாதபடி இந்தக் காரியம் மொளச்சி வந்திருக்கு." - மரக்கார் சொன்னான்.

"எது?"

"உம்மா இப்படிச் சொல்வாங்கன்னு நான் நெனக்கவே இல்லை."

சாப்புண்ணி நாயரின் உதட்டில் ஒரு கைப்பான சிரிப்பு வெளிப் பட்டது: "உங்க யாருக்கும் அம்மாவைப் புரிஞ்சிக்க முடியலேன்னு தான் தோணுது."

"அது சரிதான்." அதுவரை பேசாமலிருந்த ஹைத்ரோஸ் சொன்னான்: "உம்மாவுக்கு மூளையிருக்கு. சேர்க்க முடியாதது சேராது."

"உங்களுக்கும் அப்துவுக்கும் நடுவே அவ்வளவு இடைவெளி ஏற்படலாமா?"

"ஏற்படலாமா என்கிறது வேறே விஷயம். ஆனா, இப்போ இடைவெளி ஏற்பட்டிருச்சி." - ஹைத்ரோஸ் விஷயத்தைத் தெளிவாக்கத் தயங்கவில்லை.

"என்ன இருந்தாலும்...." சாப்புண்ணி நாயர் அந்த வாக்கியத்தை அப்படித் தொடங்கி, சட்டென்று அப்படியே நிறுத்திக் கொண்டார். ஹைத்ரோஸ் விடவில்லை: "என்ன இருந்தாலும்? முழுசும் சொல்லுங்க."

"என்ன இருந்தாலும் ஒரு தாய் பெற்ற மக்களில்லையான்னு!"

"சரிதான். அம்மா ஒண்ணுதான். ஆனா, அவனோடே அப்பா குணம் அவனுக்கு; எங்க அப்பா குணம் எங்களுக்கு. இது எங்களைச் சேர விடாது. சேரவும் மாட்டோம். அவன் செஞ்ச.."

"நிறுத்து." - மரக்கார் இடையில் புகுந்து தடுத்தான்: "சும்மா பேச்சுப் பேசிக்கிட்டிருந்தா எப்படி? உம்மா தீர்மானிச்சபடி வெவகாரத்தை நடத்தட்டும்."

சாப்புண்ணி நாயர் ஒரு நிமிடத்திற்கு பதில் எதுவும் சொல்ல வில்லை. அந்த வயதான கண்கள் எதிர்காலத்தை நோக்கிச் சென்று எதையோ தேடித் துளாவியது போல மெல்ல மெல்ல அசைந்தது.

"உங்களுக்கு வருத்தம் உண்டாகும், சாப்புண்ணியாரே. ஆனா, பரவாயில்லே, பாகம் பிரிக்காமே நடக்காது." - மரக்கார் அமைதி யாக சாப்புண்ணி நாயரைச் சமாதானப்படுத்த முயன்றான்.

"என்கிட்ட ஒண்ணும் சொல்லி சமாதானப்படுத்த வேண்டாம். உங்களுக்குத் தெரிஞ்சதைவிட அதிகம் தெரிஞ்சவன் நான். அப்படியிருக்க நான் ஏன் கவலைப்படணும்? உங்களுக்கில்லாத கவலை எனக்கு உண்டாகுமோ? மரக்காரே, இந்தக் கை மேலே உங்க மூணு பேரையும் தூக்கிச் சுமந்த தழும்புண்டு. இதிலே எதையாவது ஒண்ணைத் தவிர்க்க முடியுமான்னுதான் யோசிக்கிறேன்." - சாப்புண்ணி நாயர் குரல் சற்று பதற்றமாகவே இருந்தது. அது மரக்காரின் உள்ளத்தைத் தட்டவும் செய்தது.

ஆனால், ஹைத்ரோஸ் அதற்கிடையில் புகுந்து சொன்னான்: "அம்மாவுக்கும் இருக்குமில்ல இந்தக் கவலை? அங்கேயும் சொல்லுங்க, அப்போ."

"சரிதான், வேலியைத்தான் பயிர் மேயுதாக்கும்?"

"இல்லே. இந்த நெலமைக்குப் போனா எடைஞ்சல் முத்திப் போகும்னு உம்மாவுக்குத் தெரியும்."

"உம்...ம்..." சாப்புண்ணி நாயர் செருமினார். நாடிக்குக் கைமுட்டுக் கொடுத்து உட்கார்ந்தார். அவரைப் பொருத்தவரை துக்கத்தின் கார்மேகங்கள் சுற்றுப்புறமெங்கும் அடர்ந்து கூடியிருந்தன. கொடிய வேதனை. புலப்படாத வழிகள். இம்மாதிரி யான சில சம்பவங்கள் எதிர்காலத்தில் நிகழுமென்று சாப்புண்ணி நாயரும் சிந்திக்காமலிருந்ததில்லை. ஆனால் அது உம்மாச்சுவிட மிருந்து பொங்கி வெளிப்படும் என்றுதான் சற்றும் எதிர்பார்க்க வில்லை. அவள் வாழும் காலம் வரை மக்களை அரவணைத்துக் கொண்டு நடப்பாள் என்றுதான் நம்பியிருந்தார். அதனால் தன் காலத்தில் கெடுதலாக எதுவும் அந்தக் குடும்பத்தில் நிகழ்ந்து விடாது என்றும் சமாதானமடைந்திருந்தார். அப்படி அவர் சாய்ந்து நின்றிருந்த சுவர்தான் இப்போது இடிந்துவிட்டது.

"யாராலும் இதைத் தடுக்க முடியாது!" ஒரு பெருமூச்சுடன் சாப்புண்ணி நாயர் சொன்னார்: "உம்...ம். குழந்தை பிறக்கும் போது ஜாதக கர்மம் செய்த அதே கையைக்கொண்டுதான் உத்தரக்கிரியையும் செய்ய வேணும். நான் மட்டும் இதற்காக வேண்டி பாக்கியிருக்கிறேன்."

"உம்மா உண்டில்ல!" - ஹைத்ரோஸ் நினைவுபடுத்தினான்.

"உண்டு. நாங்க ரெண்டு பேரும் உண்டு." - சாப்புண்ணி நாயர் ஒப்புக் கொண்டார். சாப்புண்ணி நாயர் சிந்தித்துப் பார்த்தார். எந்தப் பாதுகாப்பு வழியுமில்லை. உம்மாச்சு ஒன்று சொன்னால் சொன்னதுதான் என்று அவருக்குத் தெரியும். குழப்பம் ஏற்படாமல் காரியம் முடிந்தால் அவ்வளவுக்கு நல்லது. ஆனால், தானேதான் இதைச் செய்ய வேண்டுமா?

"இந்தக் காரியத்துக்கு வேறே பெரியவங்களையும் கூப்பிடறது தானே நல்லது?" - சாப்புண்ணி நாயர் மரக்காரின் முகத்தைப் பார்த்தார்.

"உம்மாவோடே இஷ்டம்போலே ஆகட்டும்." - மரக்கார் சம்மதித்தான்.

"ஆமாம்." - ஹைத்ரோசும்.

உம்மாச்சுவிடம் இதைச் சொன்னால் தனக்குப் பாதுகாப்புக் கிடைக்குமென்று சாப்புண்ணி நாயருக்கு நம்பிக்கை இல்லை. ஆனாலும் உம்மாச்சுவிடம் அவர் கேட்டுப் பார்த்தார்.

"நாம ரெண்டு பேரும் சேர்ந்துதான் இந்தக் குடும்பத்திலே வேலை பார்க்கத் தொடங்கினது. நீங்க வெளியிலே; நான் வீட்டிலே. இப்பவும் நாம இருக்கிறோம். நாம இருக்கிற காலம் வரைக்கும் நீங்க இல்லாமே இந்தக் குடும்பத்திலே வேலையை ஒருத்தராச் செய்ய முடியாது. சொத்து என்னுடையது. சரியோ தவறோ நிச்சயிக்க வேண்டியது நான்தான். இஷ்டம் போலச் செய்துக்கிடுங்க. என்ன?"

சாப்புண்ணி நாயருக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. தன்னுடைய ஆயுட்கால நடவடிக்கைகளுக்கான பாராட்டு அந்த வார்த்தைகளில் முழங்கிக் கேட்டது. என்னவெல்லாமோ எதிர்வாதங்கள் உண்டானாலும் உம்மாச்சுவின் எதிரில் நின்றால் சாப்புண்ணி நாயர் கூனிக்குறுகிவிடுவார். எதிர் எதிராக இருந்து, அந்தப் பெண்மணி சொல்வதை வரம்பு மீறாமல்

பின்பற்றுவதுதான் அவருடைய வழக்கம். அவர் பேசும்போது, பேசப்படும் காரியங்களைவிட அதிகமாக அவரைப் பற்றி ஆலோசிக்கத் தோன்றும். இதைச் சொல்லி லட்சுமியம்மை பல சமயங்களில் அவரைக் கிண்டல் செய்ததுண்டு. 'இந்த அதிகார மெல்லாம் என்கிட்டத்தான் செல்லும். அந்த அம்மா கண்ணை உருட்டினாப் போதும், நீங்க நடுங்கிடுவீங்க.'

'சரிதான்.' சாப்புண்ணி நாயர் ஒப்புக்கொள்வார். 'அடியே லட்சுமீ, தேவேந்திரனேயானாலும் கிழிச்ச கோட்டிலே நிக்க வைக்கிறவங்கடி அந்த அம்மா!'

இன்றோ உம்மாச்சு தளர்ந்திருக்கிறாள். வேதனைகளின் ஒரு குளவிக் கூட்டத்தை இருதயத்தில் உள்ளடக்கி வைத்துக்கொண்டு அவள் படுத்திருப்பது அவருக்குத் தெரியும் எப்படித்தான் கலவரப்படுத்துவது? மகாராணிக்கு கசப்பான மருந்தை விதிக்க நேர்ந்த ஒரு அரண்மனை வைத்தியனுக்கு ஏற்படும் குழப்பம் முழுவதும் அவருக்கு ஏற்பட்டிருந்தது.

"என்ன, உங்களாலே செஞ்சி முடிக்க முடியாதா?" - உம்மாச்சு தலையணையில் கைமுட்டுக் கொடுத்துப் படுத்தபடி கேட்டாள்.

"செய்திறலாம்."

"எப்போ?"

"நாளைக்கு ஆரம்பிக்கலாம்."

"உம்."

இந்தக் காலத்திற்குள்ளாக சாப்புண்ணி நாயர் பல குடும்பங் களில் பாகப்பிரிவினை நடத்தியதுண்டு; பல பாகப் பிரிவினைப் பத்திரங்கள் எழுதிக் கொடுத்ததுண்டு. பெரிய அளவிலான பாகப்பிரிவினை கேசுகள் மூன்று கோர்ட் ஏறி இறங்கியதுண்டு. ஒன்றுமில்லாத ஜங்கம சொத்துக்கள் மட்டும் பாகம் பிரிக்க உள்ள வீடுகளில் பகை அதிகமாகித் தங்களுக்குள் குடுமிப்பிடி சண்டை தொடங்கும்போது, மொத்தமே உள்ள ஒரே ஒரு குத்துவிளக்கின் தட்டு ஒருவருக்கும், தண்டு மற்றவருக்குமாகப் பிரித்துக் கொடுத்து அவர்களைச் சமாதானப் படுத்தித் திருப்பி அனுப்பியதுண்டு. அப்போதெல்லாம் இந்தச் சங்கடத்தை அவர் அனுபவித்ததில்லை. தான் நட்ட வாழையின் குலை கூம்பும்போது, ஊன்றுகோலைத் தட்டிவிட்டு காற்று அதை ஒடிக்க அனுமதிப்பது போன்ற ஒரு நிலைமையாக இருந்தது அது. எங்கேயிருந்து, எப்படித்

தொடங்குவதென்று அவருக்குத் தெரியவில்லை. வீட்டிற்குச் சென்று, தோளில் இட்டிருந்த துண்டை எடுத்து விசிறியபடி வராந்தாத் தூணில் சாய்ந்துகொண்டு அவர் நிசப்தமாயிருந்தார்.

"இன்னிக்குக் குளியல் இல்லியா?" - உள்ளே இருந்து ஒரு தென்றல் காற்றுப் போல அசைந்து வந்த லட்சுமியம்மை கேட்டாள். அவளுக்குப் பின்னால் சின்னம்முவும் வந்தாள். அவள் வாசல் வரை வந்து வாசல் நிலைப்படியில் சாய்ந்து நின்றாள். "என்ன குளிக்கலியா?" - மீண்டும் லட்சுமியம்மை சாப்புண்ணி நாயரின் கவனத்தைக் கவர கேட்டாள்.

"குளிக்கனும்."

"பிறகென்ன, சுகம் இல்லாதது மாதிரி..."

"சுகமெல்லாம் முடிஞ்சி போச்சின்னுதான் நெனக்கிறேன்."

"ஏன்? சந்நியாசம் வாங்கப் பொறப்பட்டுட்டீங்களா?"

"உன் வாயிலே நாக்கு இப்படி நீண்டிச்சின்னா நான் சந்நியாசி யாத்தான் போகனும்."

"என்ன விஷயம்?"

"இனிமே ரொம்ப நாள் அங்கே போக வேண்டியிருக்காது. தெரியுமா?" கொஞ்சம் கோபத்தோடுதான் சாப்புண்ணி நாயரின் கேள்வி இருந்தது.

"அவங்களுக்கு என்னாச்சி?"

"பாகப்பிரிவினையாக்கும் நடக்கப் போகுது. பாகப்பிரிவினை! தெரியுமா?"

"உம்மாச்சு அம்மா யாரு பங்கு?" - இந்தக் கேள்வி வாசலிலிருந்து தான் வந்தது. அப்போதுதான் சின்னம்மு அங்கே நின்றிருந்தது லட்சுமியம்மைக்குத் தெரிய வந்தது.

"அதொண்ணும் நிச்சயமாகலே." சாப்புண்ணி நாயர் சொன்னார்.

"அதுதானே மொதல்லே நிச்சயமாக வேண்டியது." - சின்னம்மு.

"உம், எதெல்லாம் எப்படியெல்லாம் முடிவாகப் போகுதுன்னு கடவுளுக்கு மட்டும்தான் தெரியும்!"

அவர் எழுந்து குளத்தை நோக்கி நடந்தார். அன்று சாப்புண்ணி நாயருக்கு எல்லோரிடத்திலும் கோபமாயிருந்தது. லட்சுமியம்மை

யுடனும் வேலைக்காரர்களுடனும் எல்லோருடனும் அவருக்குக் கோபந்தான். சின்னம்மு மட்டும் தந்திரமாக விலகி நின்றாள்.

"அப்பா இன்னிக்கு ரொம்பச் சூடா இருக்காங்கம்மா." அவள் லட்சுமியம்மையிடம் மெள்ளச் சொன்னாள்.

"என்ன காரணமா இருக்கும்?"

"உம்மாச்சு அம்மாவின் பிள்ளைங்க பாகப்பிரிவினை செய்யப் போறதனாலே!"

"சரிதான், அந்தக் குடும்பத்தை வச்சித்தானே நம்ம குடும்பம் முன்னுக்கு வந்திருக்கு?"

"நாமளா பிரிச்சிவிடறோம்? பிரிஞ்சி போகணும்னு நெனக்கிற வங்களுக்கு பிரிஞ்சி போகாமே இருக்க முடியுமா?"

"நீ அதைச் சொல்லுவே. நடந்து முடிஞ்சதெல்லாம் உனக்குத் தெரியாது. அப்பாவுக்கு அதனாலே குழப்பந்தான். நல்ல தைரியமுள்ள ஆளாக்கும்! நானா இருந்தேன்னா உருகிச் செத்திருப்பேன்."

"உம்." சின்னம்மு ஒரு முனகல் மட்டும் வெளிப்படுத்தினாள் 'இதெல்லாம் அம்மா பேச வேண்டாத பேச்சாக்கும், பேசிட்டுப் போறா' என்ற அர்த்தத்தில்.

லட்சுமியம்மையோ எப்போதும் கணவனுக்கு அருகிலேயே இருந்தாள். காரியங்களின் நிலவரத்தைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டுமென்றஎண்ணம் அவளுக்குண்டு. ஆனால் சாப்புண்ணி நாயர் கோபித்துக்கொண்டுவிட்டாலோ என்ற பயமும் உண்டு. குளியலும் சாப்பாடும் முடிந்து முற்றத்துத் திண்ணையில் சாய்ந்து உட்கார்ந்திருந்த சாப்புண்ணி நாயரின் பக்கத்தில் வெற்றிலைச் சுருளுடன் போய் நின்றாள்.

"இந்தாங்க வெத்திலை."

"உம்.." - சாப்புண்ணி நாயர் அதை வாங்கி வாயிலிட்டு மென்று ஒரு தரம் நீட்டித் துப்பியபோது, லட்சுமியம்மை கேட்டாள்: "என்கிட்ட என்ன கோபம்?"

"உன்கிட்டியா?" - திகைப்படைந்து அந்த மனிதர் கேட்டார்.

"இல்லாட்டி பின்னே எதுக்காக இப்படி எரிஞ்சி விழறீங்க?"

"உன்கிட்டியா நான் கோவிச்சிக்கிட்டேன்? இதான் புதுமை! என் கஷ்டநிலைமை யாருக்காவது தெரியுதா?"

"சொன்னாத்தானே தெரியும்?"

"நான் சொல்லலே! பாகப்பிரிவினை நடக்கப் போகுதாம் பாகப்பிரிவினை!" - சாப்புண்ணி நாயர் ஒரு செவிடனிடம் பேசுவது போல் கொஞ்சம் உரக்கவே பேசினார்.

"கஷ்டந்தான்! ஆனா, நாம சொன்னா அவங்க கேப்பாங்களா?"

"கேக்க வேணாம். அழிஞ்சி போகட்டும். தொல்லை! இதெல்லாம் என் தலையிலே வந்து விழுதில்ல!"

"முடியாதுன்னு சொல்லியிருக்கலாமில்ல?"

"சொல்லாததுதான் கெட்டுப் போச்சாக்கும் இப்போ!" சாப்புண்ணி நாயர் நகைச்சுவை கலந்து இந்த வார்த்தைகளைச் சொன்னார். "என்னுடைய கையாலேயே உடைச்சிவிடணுமாம். ஆகட்டும், ஆகட்டும். யாருக்கு நஷ்டம்? எல்லா விவகாரங்களிலும் நானொரு நேரடி சாட்சி... உம், பார்த்துக்கிடுறேன் நாளைக்கு."

"என்ன செய்யப் போறீங்க?"

"முடியாதுன்னு நல்லா அழுத்தந் திருத்தமாவே அங்கே சொல்லத்தான் போறேன். என் தலையை வெட்டிற முடியாது."

"உம்மாச்சு அம்மா கிட்டவா?"

"யாரா இருந்தா என்ன? எனக்கு பயம் ஒண்ணுமில்லே. மனுஷனை மன நிம்மதியோடே ரெண்டு நாள் இருக்க விடலேண்ணா! ஒரு சாவு தீர்ந்தா இன்னொண்ணு. நாசம்!..."

சாப்புண்ணி நாயர் அவ்வாறு முணுமுணுத்தபடி சொல்லிக் கொண்டிருந்தார். லட்சுமியம்மை கூடக்கூட உம் கொட்டிக் கொண்டிருந்தாள். அப்படியே சாயங்காலம் ஆனதுகூடத் தெரிய வில்லை. லட்சுமியம்மை அடுக்களை வேலைகளில் இறங்கினாள். சாப்புண்ணி நாயர் அப்போதும் சிந்தனை வயப்பட்டிருந்தார்.

கருஞ்சிவப்பு மேகக் கூட்டங்கள் , அஸ்தமன சூரியனுக்குத் துணை சென்றன. காற்றில் அவை அசைவதும் சுருளுவதும் நிமிர்வதுமாக இருந்தன. இலக்கு இல்லாத ஒரு பயணம். எதை நோக்கி? அந்த மேகக் கூட்டங்கள் சாப்புண்ணி நாயரை சிந்தனையின் ஆழத்திற்கு இழுத்துக்கொண்டு போயின. கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் எல்லாம் கூடிக் கலந்து போய்க் கொண்டிருந்தன. எதையேனும் ஒன்றையாவது நினைத்து அமைதி பெற முடியவில்லை. எல்லாவற்றின் மீதும் துக்கத்தின் மூடுபனி

போர்த்தப்பட்டுக் கிடந்தது. சிரிப்பு மனிதனை ஆகாசத்தின் அளவுக்கு உயர்த்துகிறது. அழுகையோ, சொந்த இருதயத்தின் அதலபாதாளங்களுக்கு இழுத்து செல்கிறது. சாப்புண்ணி நாயர் தன் இருதயத்தினுள் ரொம்பவும் மூழ்கியிருந்தார். அங்கே முதிர்ச்சி பெறாத அபிலாஷைகளும், வெயில் கதிர்கள் படாமல் சாம்பிய புது முளைகளும் நிறைந்திருந்தன. அவற்றைக் கண்ட போது அவர் ஒரு முறை அதிர்ந்து போனார்.

"என்ன!...என்ன!...என்ன!..."

சட்டென்று திண்ணையில் ஒரு காலடி ஓசை கேட்டது. சாப்புண்ணி நாயர் திரும்பிப் பார்த்தார் அப்து. அவனைக் கண்ட போது கோபந்தான் ஏற்பட்டது -- எந்த ஆபத்தை இழுத்து வர இப்போது இந்த அறிஞனின் வரவு? இருந்தாலும் "உக்காரு" என்று சொல்லிவிட்டு சாப்புண்ணி நாயர் பேசாதிருந்தார். அப்து உட்கார்ந்தான். எவ்வளவு நேரம்தான் அப்படியே இருப்பது? கடைசியில் சாப்புண்ணி நாயர்தான் மௌனத்தைக் கலைக்க வேண்டியிருந்தது "எங்கேருந்து வர்றே?"

காங்கிரஸ்காரங்க மீட்டிங் நடந்துக்கிட்டிருந்திச்சி; அதைக் கேட்டுக்கிட்டிருந்தேன்."

"அவங்க என்ன சொல்றாங்க?" -- சாப்புண்ணி நாயர் ஒரு கேள்வியைக் கேட்டார். என்ன பதில் சொன்னாலும் சாப்புண்ணி நாயருக்கு எதிராகவோ அனுகூலமாகவோ இருக்கப் போவ தில்லை. ஆனாலும் பேசுவதற்கு ஏதாவது விஷயம் வேண்டாமா?

"சுதந்திரத்தைப் பத்தி." அப்து சொன்னான்.

"இப்போ யாராச்சும் கையும் காலும் கட்டிப் போட்டிருக் காங்களா?"

"ஆமான்னுதான் அவங்க சொல்றாங்க."

"சட்டம்ங்கிறதெல்லாம் அயல்நாட்டுக்காரங்க நம்ம தலையிலே வச்சிக் கட்டினதில்லே?"

"அப்போ நம்ம நாட்டுக்காரங்களே அரசாளத் தொடங்கினா சட்டம் இருக்காதுங்கிறியா?"

"சட்டம் இல்லாமே முடியுமா!"

"அது உன்னையும் என்னையும் கேட்டுக்கிட்டுத்தான் உண்டாக்கப் போறாங்களா?"

"நாம தேர்ந்தெடுக்கிற பிரதிநிதிகள் உண்டாக்குவாங்க."

"பிரதிநிதிகள்னு மொத்தமாச் சொன்னா எப்படி? ஒரு தலையாரி கிடையாதா, ஒரு கர்ணம் கிடையாதா, ஒரு மணியகாரர் வேண்டாமா? தலையாரி சொல்றதை மட்டும் கேட்டுக் கிட்டிருந்தாப் போதுமா?"

"அந்தத் தலையாரியை மாத்தவும் நமக்கு அதிகாரம் வரும்."

"அப்புறம்?"

"வேறே ஒரு ஆளை அமர்த்துவோம்."

"அப்போ நெனச்ச மாதிரியெல்லாம் போக்கு மாறும்."

"மனுஷங்களை கொஞ்சமாச்சும் நம்பலேன்னா முடியுமா?"

"அப்படீன்னா இப்போ இருக்கிற இவங்களை நம்பக் கூடாதா?"

"இவங்களை நம்ப முடியலே."

"ஏம்பா, நான்தான் கேக்கறேன்." சாப்புண்ணி நாயர் ஆவேசத் துடன் திரும்பி உட்கார்ந்தார் "நம்ம நாட்டிலே நிலைமை என்ன? ஒரு குடும்பத்திலே ஒரு தாய் பெத்த பிள்ளைங்களே சேர்ந்திருக் கிறதில்லே. அங்கே பாகப்பிரிவினை நடக்குது, பாகப்பிரிவினை! அப்படியிருக்க ஒரு நாடு?"

"நாட்டிலேயும் பாகப்பிரிவினை கேக்கிறவங்க இருக்காங்க. லீகுக்காரங்க சொல்றது அவங்க வேறே நாட்டைச் சேர்ந்தவங்கன்னுதான்."

"அதுதானே நானும் சொல்றேன். உன்னுடைய குடும்பத்திலே இப்போ என்ன நடக்கப் போகுதுன்னு தெரிஞ்சிருக்கும், இல்லே?"

"என்னது?"

"ஒண்ணும் தெரியாதில்லே? அம்மா ஒண்ணும் சொல்லலே?"

"இல்லையே!"

"பாகப்பிரிவினை!"

"என்ன?"

"என்ன திகைக்கிறே? உங்க குடும்பத்திலே பாகப்பிரிவினை நடக்கப் போகுது."

"யாரு அப்படித் தீர்மானிச்சது?" அப்து கொஞ்சம் ஆவேசத் துடன்தான் கேட்டான்.

"உன் அம்மாதான். என்ன?"

அப்துவின் முகம் தாழ்ந்தது. சாப்புண்ணி நாயரல்லாமல் வேறு யாராவது சொல்லியிருந்தால் அவன் இந்த வார்த்தைகளை நம்பியிருக்க மாட்டான். சிறிது நேரமாக மனதிலிருந்து விட்டகன்றிருந்த மன உளைச்சல்கள் மீண்டும் திரும்பி வந்தன.

அவன் தனக்குத் தானே கேட்டுக்கொள்வது போல முணுமுணுத்தான்: "உம்மாவை அவங்க சொல்லித்தான் திருப்பியிருப்பாங்க."

"யார்?" அந்தக் கேள்வி வந்தது வாசலிலிருந்து. அப்து அந்தப் பக்கம் பார்த்தான்: சின்னம்மு!

"மரக்காரும் ஹைத்ரோசும்."

"அம்மாவுக்கு மூளை இல்லேன்னா நினைக்கிறீங்க?" சின்னம்முவின் கேள்வி சாட்டையடி போல வந்தது.

"சுயபுத்தி இருக்குமானா பிள்ளைகளை விரட்டிவிடணும்னா நெனப்பாங்க?"

"பின்னே அப்படியில்லாமே, பிள்ளைங்களை ஒருத்தொருத்தர் குத்திக் கொல்ல விடறதுதான் புத்திசாலித்தனமா?"

"அப்படியெல்லாம் நடக்காது."

"அது ஒரு சுகமான நம்பிக்கைதான். ஆனா பெத்த தாய்க்கு அப்படி நம்ப முடியலே. பிள்ளைங்களைப் பிரிச்சி வைக்கணும்ங்கிறதைப் போல ஒரு சங்கடம் ஒரு தாய்க்கு வேறே கிடையாது! அப்படியிருந்தும் இந்தத் தீர்மானத்துக்கு வந்திருக்கிற உங்கம்மா நெஞ்சுரம் உள்ளவங்கதான். அப்படித் தீர்மானிச்சது நல்லதாப் போச்சு!" சின்னம்மு தன் எண்ணத்தைச் சொன்னாள். அதற்கு என்ன பதில் சொல்வதென்று அப்துவுக்குத் தெரியவில்லை. அவன் யோசனையில் ஆழ்ந்தான். அப்போது சாப்புண்ணி நாயர் இடையிட்டுச் சொன்னார்.

"தீர்மானிச்சது நல்லதுண்ணு ஒண்ணுமில்லே. ஆனாலும் அதை முடிவு பண்ணியாச்சு. உனக்குத் தெரியாது, ஒரு குடும்பத்தை உண்டாக்கிக் கொண்டு செலுத்தறது எவ்வளவு பாடுங்கிறது!"

"உம்மாச்சு அம்மாவுக்கும் தெரியுமில்ல?" சின்னம்மு கேட்டாள்.

"பேசறதைக் கேட்டால் தெரியலேண்ணுதான் தோணுது." சாப்புண்ணி நாயர் குறை கூறுவதுபோல் முணுமுணுத்தார்.

"ஆமாம்." அப்துவும் ஒப்புக்கொண்டான்.

சின்னம்மு திண்ணையைத் தாண்டி வந்தாள். பிறகு அப்துவை ஏற இறங்க ஒரு தடவை பார்த்துவிட்டுக் கேட்டாள் : "என்ன அந்த 'ஆமாம்' என்கிறதுக்கு அர்த்தம்? அந்தக் குடும்பத்துக்காக வேண்டி அவங்களைப் போல அல்லல்பட்ட ஒரு ஆள் இருக்கா? காளைகளைப் போல நடக்கிற மாதிரி உங்களை வளர்த்து ஆளாக்க கொஞ்சமா பாடு? அப்பாவுக்கும் அப்துவுக்கும் வருத்தம் வரத்தான் செய்யும். அதுசரிதான். ஆனா அழுதுக்கிட்டு உட்கார்ந்திருக்கிறதனாலே காரியம் நடந்திராது."

சின்னம்முவின் லாகவமான வார்த்தைகள் நின்றபோது அந்த இடத்தில் ஒரு நிசப்தம் நிலவியது. அவள் சொல்வதுதான் சரியென்று சாப்புண்ணி நாயருக்கும் தோன்றிற்று. அவள் சொல்லும்போது சம்மதிக்கத்தான் வேண்டுமென்று அப்துவுக்கும் தோன்றிற்று. ஆனால் இருவருமே ஒப்புக் கொள்ளாததுபோல் பாசாங்கு செய்தார்கள்.

சின்னம்மு உள்ளே போய் ஒரு தட்டில் சில பலாச்சுளைகளை எடுத்து வந்து அப்துவுக்கு முன்னால் வைத்துவிட்டுச் சொன்னாள்: "சாப்பிடுங்க. காபி தர முடியலே. பால் உறை ஊத்தியாச்சு. சுக்குத் தண்ணி தரட்டுமா?"

"வேணும்."

அவன் தண்ணீர் குடிக்கவும், சாப்பிடவும் செய்த இடைநேரத்தில் சின்னம்மு கேட்டாள்: "மீட்டிங் நல்லா இருந்திச்சா?"

"உம்."

"நிறைய ஆளுங்க பேசினாங்களா?"

"உம்."

சாப்பிட்டு முடிந்ததும் ஒரு புன்னகையுடன் சின்னம்மு தட்டும் கிளாசும் எடுத்துக்கொண்டு உள்ளே போனாள்.

"நான் வரட்டுமா?" - அப்து போகப் புறப்பட்டான்.

"உம்." - சாப்புண்ணி நாயர் விடைகொடுத்தார். அப்து அடிக்கடி திரும்பிப் பார்த்துக்கொண்டு வெளியே போனான்.

அன்று படுக்கச் சென்றபோது, சாப்புண்ணி நாயர் லட்சுமியம்மையிடம் சொன்னார்: "நாளைக்கு நேரத்தோடேயே போகணும்."

"எங்கேயாம்?"

"அங்கே போக வேணாம்?"

"உம்."

எதற்கும் முரண்டு பிடிக்கும் அந்த மனிதரில் வந்த இந்த மாற்றத்தைக் கண்டபோது லட்சுமியம்மை மனதுக்குள் சிரித்துக் கொண்டாள் என்றாலும் எதுவும் எதிர்த்துச் சொல்லவில்லை.

மறுநாள் எட்டு மணிக்கு முன்னதாகவே சாப்புண்ணி நாயர் உம்மாச்சுவிடம் ஆஜரானார்.

"அப்போ, ஆரம்பிச்சிட வேண்டியதுதானே, நாயரே?"

"ஆனா..."

"என்ன?"

"நாளைக்குப் பார்த்தா என்ன?"

"நல்லதை நேரத்திலே செய்திருவோம். என்ன?"

"இப்போ எப்படி பாகம் பண்ணணும்னு நினைக்கிறீங்க? யார் யாரெல்லாம் ஒண்ணா நிக்கிறீங்க?"

"மூணும் ஒண்ணும்தான்." - அந்த இடத்துக்கு வந்து சேர்ந்த மரக்கார்தான் அதற்கு பதில் சொல்லியது.

"இல்லே." உம்மாச்சு கட்டிலில் சாய்ந்திருந்தாள்: "ரெண்டும் ரெண்டும்னுதான் கணக்கு."

"என்னம்மா, ஒரு ஆளுக்கு மட்டும் ரெண்டு பங்கு கொடுக்கணும்னு சொல்றது?

"ஒரு ஆளுக்கு ரெண்டு பங்கு கொடுக்க வேணாம்; ரெண்டு பேருக்கு ரெண்டு பங்கு கொடுக்கணுமில்ல?"

"யார் யாருக்கு?"

"உனக்கும் ஹைத்ரோசுக்கும்."

"அப்போ நீங்க?"

"நான் அவன்கூடத்தான்."

"ஹே! என்ன?"

"ஆமாம் மகனே, உனக்கு ஹைத்ரோஸ் இருக்கான்; ஹைத்ரோசுக்கு நீ இருக்கே. அவனுக்கு யாரு இருக்காங்க?"

"அது சரிதான். பிள்ளைங்களா!" - சாப்புண்ணி நாயர் ரொம்ப வேகமாக ஒப்புக்கொண்டார்.

"ஆனா, அவன் உம்மாவைக் காப்பாத்துவான் என்கிறது என்ன நிச்சயம்? எங்க உம்மாவைக் கஷ்டப்படுத்த நாங்க சம்மதிக்க மாட்டோம்." மரக்கார் ஆவேசத்துடன் சொன்னான்.

"மன்னிச்சிருப்பா." - உம்மாச்சு அமைதியாகச் சொன்னாள்: "நீங்க என்னிக்கும் என்னைப் பார்த்துக்கிடுவீங்கண்ணு என்னப்பா நிச்சயம்? அப்பிடியாப்பட்ட நிச்சயம்தான் அவனைப் பொருத்தும். நீங்க ரெண்டு பேரும் என்னோடே ரெண்டு கண்ணுங்க. அவன் என்னோடே நெஞ்சு. அவனைப் பெத்தப் போதான் நான் இடுப்பு வலி தெரிஞ்சிக்கிட்டேன். என்னாலே அவனை விடமுடியாது."

"உம்மாவுக்கு எங்களை விட்டிறலாமாக்கும்?"

"விடல்லே, நீ பெறலே; அதனாலே உனக்கு அந்த வலி தெரியாது. - அவ்வளவுதான், மகனே, அதை நீங்க பின்னாலே புரிஞ்சுக்குவீங்க."

குரல் தடுமாறியதால் அவளுக்குத் தொடர்ந்து பேச முடியவில்லை. மரக்கார் அந்தக் கட்டிலின் ஓரத்தில் உட்கார்ந் திருந்தான். இது நினைத்துப் பார்க்காத அடியாயிருந்தது. உண்மையில் யாரும் நம்பவில்லை, உம்மாச்சு அப்துவுடன் போவாளென்று - மரக்காரும், ஹைத்ரோசும், அப்துவும் கூட. சாப்புண்ணி நாயருக்கும் சந்தேகமாகத்தான் இருந்தது. திடீரென்று உருவான இந்தத் தீர்மானம் மரக்காரை மொத்தத்தில் திகைக்கச் செய்தது: "உம்மா தீர்மானிச்சாச்சா?"

"தீர்மானிச்சிட்டேன்."

"உம்."

சாப்புண்ணி நாயர் மௌனமாகி சுவரில் சாய்ந்து உம்மாச் சுவைப் பார்த்தபடி நின்றிருந்தார். உம்மாச்சு தன் உள்ளங் கையையே பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள்.

அங்கிருந்து கண்ணெடுக்காமல் அவள் சொன்னாள்: "சாப்புண் ணியாரே, ரெண்டு கூட்டத்தார்க்கும் நஷ்டம் இல்லாதபடி எல்லாம் சரிப்படுத்திடுங்க. கொஞ்சம் அதிகமா இந்தப் பிள்ளைங் களுக்குப் போனாலும் பரவாயில்லை. அப்துவுக்கு நான் இருக்கேனில்ல துணைக்கு."

"உம்.."

"சரி." - அந்தப் பெற்ற தாய் தளர்ந்து படுக்கையில் முகம் சோர்ந்து கிடந்தாள். மரக்கார் பெருமூச்சு விட்டுவிட்டு வெளியே சென்றபோது சாப்புண்ணிநாயரின் மனதில் நிம்மதி படிந்தது போலத் தோன்றிற்று.

அவர் சிந்தித்தார்: 'என்ன மனசு அந்தப் பெண் மனசு! அது வெண்ணெயா, கருங்கல்லா?'

# 22. கொத்தி விரட்டிய கோழி

தாய் வாழையிலிருந்து கன்றுகளைக் கொத்தியெடுத்து வேறிடத்தில் நட்டுப் பழக்கப்பட்டவர்கள் மனிதர்கள். அவர்கள் ஒரு குடும்பத்தின் பாகப்பிரிவினையைக் காண்பதுவும் அதே மனோபாவத்தோடுதான். கொத்தி எடுத்த கன்றுக்கு, சில சமயம் தாய் வாழைக்கும், நான்கு நாட்களுக்கு ஒரு வாட்டம் இருக்கும். அதற்கிடையில் மழை பெய்துவிடுமானால் அவை உஷாராகி செழித்து வளரத் தொடங்கிவிடும். தாய் வாழைகளாகும் வரை அந்த வளர்ச்சி சீராக நீண்டு நிலைத்துவிடும். பிறகும் இது தொடரும். உம்மாச்சுவின் குடும்பம் இரண்டாகப் பிரிந்துவிட்டது. அப்போதும் ஊரார் அதில் அவ்வளவாக ஏறுக்கு மாறாக ஒன்றும் காணவில்லை.

இளகிய மனமுடைய சிலர் மட்டும் மூக்கில் விரல் வைத்தார்கள்: "கஷ்டம்! தாய்க்கும் மக்களுக்குமா பாகப்பிரிவினை!"

"பாகம் பிரிக்கிறது சாதாரணந்தானே?" சாந்தசீலர்கள் பதிலும் சொன்னார்கள்: "குடும்பம் பெருத்தால் பாகப்பிரிவினைதான்!"

"குடும்பம் ஒண்ணும் பெருத்திரலியே, அதுதானே அதிசயம்!"

"பெருத்திரல்லேன்னாலும் அனுபவம் பெருத்துப் போச்சில்ல?"?

"கலிகாலம்!"

"கௌரவரும் பாண்டவரும் கலிகாலத்திலேதானே வாழ்ந் தாங்க? அவங்க பாகப்பிரிவினை கேசுதானே பாரத யுத்தமாச்சி? தாச்சுமான் அண்ணே, இதெல்லாம் அன்னிக்கும் இன்னிக்கும் என்னிக்கும் இருக்கத்தான் செய்யும், தெரிஞ்சிக்கிடுங்க!"

ஒரு குடும்பத்தை வளர்த்துப் பராமரிக்கும் குடும்பஸ்தனான தாச்சும்மானுக்கு அதை அவ்வளவு எளிதாக ஏற்றுக்கொள்ள முடிய வில்லை. ஆனால் தன்னுடைய கலிகால வாதத்தின் சாமர்த்தியம் போதாதென்று மட்டும் உணர்ந்தார். அதற்குப் பிறகு ஒன்றைத் தான் சொன்னான்: "அழிக்கிறதுக்காகவே பொறந்தவங்க அழிச்சிக்கிட்டேதானே இருப்பாங்க!"

"யாரும்? உம்மாச்சுவா?"

"இல்லே. பிள்ளைங்க!"

"ஆனா உம்மாச்சு அக்காதானே பாகப்பிரிவினையைக் கட்டாயப்படுத்திச் சொன்னது?"

"பொய்."

"நெசம். சாப்புண்ணி நாயர் சொன்னதாக்கும். அவரைக் காட்டிலும் இந்த விஷயத்திலே விவரம் தெரிஞ்சவங்க தாச்சும மான் இல்லேல்ல!"

மேலும் தோல்வி அடையத் தயாராய் இல்லாத தாச்சும்மான் தீவிரமாக யோசித்தார்: "வரப்போறது வழியிலே தங்காதும் பாங்க!" என்று சொல்லிவிட்டுத் தன் வழியே நடந்தார். இதுபோல் பலரும் அந்தச் சம்பவத்தை அவ்வளவு முக்கியமானதாக எடுத்துக் கொள்ளவில்லை. உம்மாச்சுவின் வீட்டின் உட்புறம் மட்டும் ஏகாந்த சூனியம் குடிகொண்டிருந்தது.

இன்று அங்கே அப்துவும் உம்மாச்சுவும் இரண்டு வேலைக் காரிகளும் மட்டுமே உண்டு. அப்து பெரும்பாலும் காலையிலேயே எழுந்து வெளியே போய்விடுவான். வேலைக்காரிகள் அடுக்களை யிலும் தோட்டத்திலும் இருப்பார்கள். உம்மாச்சு விட்டத்தைப் பார்த்தபடி படுத்திருப்பாள். ஹைத்ரோஸ் இருந்தபோது வீடு கலகலப்பாயிருக்கும்.

'அவன் போன பெறகு எல்லாமே போயிட்ட மாதிரி ஆயிடிச்சி.' - உம்மாச்சு யோசித்தாள்: 'எல்லாரையும் கொத்தி விரட்டிட்டு நான் மட்டும் மீந்திட்டேன்.' அவள் ஒரு பெருமூச்சு விட்டாள். எங்கும் துயரம் தழுவியதொரு சூழ்நிலை. ஒரு சாவு விழுந்த வீடுபோல.

மரக்காரும் ஹைத்ரோசும் இன்று வேறொரு வீட்டில் குடியேறிவிட்டார்கள்; வீடு நல்ல வீடுதான்; சூழ்நிலையும் நல்லது தான்; எல்லாம் அவர்களுக்குச் சொந்தமானதுதான். ஆனாலும் அவர்கள் பாதுகாப்பில்லாமல் இருப்பார்களோ என்றொரு சந்தேகம் உம்மாச்சுவுக்கு. ஹைத்ரோசும் மரக்காரும் அருகில் இருந்தபோது, அவர்களைவிட அப்துவைப் பற்றித்தான் உம்மாச்சு அதிகம் நினைத்துக்கொண்டிருப்பாள். இன்று அப்து அருகில் இருக்கிறான். இப்போது மற்றிருவரைப் பற்றி எப்போதும் நினைவு.

அந்தப் பிள்ளைகள் படி இறங்கிப் போன காட்சி ஒருபோதும் அவளுடைய மனதிலிருந்து மறையாது. வாழ்க்கையின் கடைசி வரை அந்தக் காட்சியின் ஆக்கிரமிப்பு தன்னுடைய இருதயத்தில் நிலைத்திருக்குமென்று உம்மாச்சுவுக்குத் தோன்றியது. சாமான்களெல்லாம் எடுத்துப் போயாயிற்று. ஒவ்வொரு சாமானை எடுக்கும்போதும் மரக்கார் கேட்டான்: "இது உம்மாவுக்கு வேணுமா?"

"வேண்டாம்ப்பா."

மீண்டும் ஒரு சாமானை எடுத்துக் கட்டும்போது ஹைத்ரோஸ் அதே கேள்வியை ஒரு தரம் கேட்டான்.

"உம்மைக்கு நீங்களே போதும், மக்களே!" - உம்மாச்சுவின் தொண்டை இடறிற்று.

"உம்." - மரக்கார் அதற்கு ஒரு முனகல் மட்டுமே வெளிப்படுத்தினான்.

"ஒங்களுக்குத் தோணினாலும் தோணும், உம்மா ஒங்களைக் கழிச்சிக்கட்டிட்டான்னு. இல்லே, பிள்ளைங்களா! ஆனா ஒங்க கொணம் உம்மைக்குத் தெரியும். உம்மைக்குக் கெடுதல்னாலும் ஒங்களுக்கு சொகம் கெடைக்கட்டும்னு நெனச்சித்தான்..."

"உம்மா எங்கேருந்தாலும் எங்களைப் பெத்தவ என்கிறது மாறாதில்ல?"

"உம்."

"உம்மைக்கு ஏதாச்சும் தேவைப்பட்டா அப்போ சொல்லி அனுப்பணும். மறந்திரக்கூடாது. நாங்க இருக்கிறப்போ நீங்க கஷ்டப்படக் கூடாது. சுகமா இருக்கணும்." - மரக்கார்தான் இதைச் சொன்னான்.

"சொகம்! உம்மா எவ்வளவோ சொகத்தை அனுபவிச்சிட்டேன். இந்த ஒலகத்திலே சாதாரணமா பொண்ணுங்க கனவுகூடக் கானாத சொகங்களை உம்மா அனுபவிச்சிட்டேன். சொர்க்கத் துக்கும் ரொம்ப மேலேதான் ஒங்கப்பா என்னெ வச்சிருந்தாரு. அதைவிட ஒசத்தியான ஒரு சொகம் எங்கேருக்கு ஒரு பொண்ணுக்கு! நாம இருக்க வேண்டியபடிதான் இருந்தோம். இப்போ படுத்திட்டேன். அதுக்காக இப்போ வெசனப்படலே. இனிமே என்னோட சொகம் நீங்க சொகமா இருக்கிறதைப் பார்க்கிறதுதான்."

ஹைத்ரோஸ் கண் இமைகள் நனைந்தன; மரக்கார் மௌனமாக நின்றிருந்தான். அவர்களும் அவர்களைப் பெற்றவளும் என்றென் றைக்குமாக இரண்டு குடும்பத்தவர்களாக இருப்பார்கள். தாங்கள் அனாதரவாகப் போய்விட்டதாக ஓர் எண்ணம். அம்மா தங்களுக்கு உடுப்பு அணிவித்து ஸ்கூலுக்கு அனுப்பி வைத்த காலம் முதல் அன்று வரை நடந்த எல்லா நிகழ்ச்சிகளும் மரக்காரின் இதயத்தூடே கடந்து சென்றன. சுருக்கம் விழத் தொடங்கிய அந்தக் கைத்தண்டில் படுத்துத்தான் அவன் வளர்ந்தது. அந்த மடியில் கிடந்துதான் அவன் நம்பிக்கையுடன் தூங்கியது. அந்த உயிரிலிருந்துதான் தன்னுடைய உயிர் கிளைத்து வந்தது. ஆனாலும்.....

"உம்மா!" - அணை உடைந்தது போல அழுது அவன் அம்மாவின் மடியில் தலைசாய்த்தான்.

"என் பிள்ளைங்களா!"

சிறிது நேரத்திற்கு யாரும் எதுவும் பேச முடியவில்லை. சூடான ஓரிரண்டு கண்ணீர்த் துளிகள் மரக்காரின் முதுகில் விழுந்தன. உம்மாச்சுவே அதைக் துடைக்கவும் செய்தார். அழுத்தி மூடிய உதடுகளுடன் அவள் தொலைதூரத்தில் நோக்கிக்கொண்டிருந் தாள். அவள் தன்னைத் தானே பிடித்து ஒதுக்குவதில் முனைந்தாள். அவளுடைய மனசுக்குள்ளேயே ஒரு யானையும் ஒரு அங்குசமும் உண்டு. யானை கட்டறுந்து திமிறும்போது அவள் அந்த அங்குசத்தை தயவுதாட்சன்யம் இல்லாம் குத்தி இழுப்பாள். யானை நின்றுவிடும்; அவள் பழைய நிலைக்கு வந்துவிடுவாள்.

"மரக்காரே, எந்திரிப்பா. கலங்காதே...என் பிள்ளைங்களுக்கு நல்லதுதான் நடக்கும். உம்மா கூட இல்லாட்டாலும் இருக்கிற தாவே நெனச்சிக்கோ. ஆனா, நீங்க அண்ணன் தம்பிங்க விட்டுப் பிரியக்கூடாது. உடல் ரெண்டானாலும் உயிர் ஒண்ணுதான்னு எப்பவும் நெனச்சிக்கிடுங்க. அப்பிடீன்னா நல்லதே நடக்கும்."

சாமான்களையெல்லாம் கொண்டு போயாயிற்று. அவர்கள் படியிறங்கிப் புறப்பட்டார்கள். அந்தப் பிள்ளைகள் திரும்பிப் பார்த்துக்கொண்டே இறங்கிப் போவதை உம்மாச்சு நின்றபடி பார்த்திருந்தாள். அந்தப் பெண்மணி விம்மவில்லை. அழவில்லை. ஒரு பெருமூச்சுக் கூட வெளிவிடவில்லை. மரக்காரும் ஹைத் ரோசும் கண்ணிலிருந்து மறைந்தபோது அவள் கட்டிலுக்கு வந்து உட்கார்ந்துகொண்டு சொன்னாள்: "இப்போ ரெண்டு வழி

உண்டாயிடிச்சி. யாறப்புல் அலமீன், அவரு சித்தப்படியே எல்லாம் நடக்கட்டும்!"

ஒரு பம்பரத்தின் வேகத்துடன் இருதயத்தில் ஏதோ கிடந்து சுழலவும், வெடித்துச் சிதறவும் செய்வதாக அவளுக்குத் தோன் றிற்று. வாழ்க்கையின் அதிமுக்கியமான அம்சங்கள் அடர்ந்து தெரிந்துப் போவதை நோக்கிக்கொண்டு இருந்தால் போதாது; அவ்வாறு அடர்ந்து பெருகியதைக் களைந்தாக வேண்டும். சொந்த மாமிசத்தைக் கடித்துத் தின்ன வேண்டும்; ஆனால் அதே சமயத்தில் அழாமலும் இருக்க வேண்டும்.

"உம்மா!..." - அப்து அங்கே கடந்து வந்தான். அவள் அவனை ஒட்டுமொத்தமாகப் பார்த்தாள். அந்தக் கண்கள் சூரியக் கதிர்களைப் பிரதிபலிக்கும் முத்துப் போல ஒலிர்ந்தன.

"என்னப்பா?"

"உம்மா அழக்கூடாது."

"உம்மா என்னிக்கும் அழுததில்லேப்பா, மகனே."

"உம்மாவுக்கு நானிருக்கேன்."

"நீ பொறந்தே; ஒண்ணெப் பெத்தப்போ நான் மொதல்லே ஒரு தரம் அழுதேன். அந்த அழுகையை உள்ளுக்குள்ளேயே இழுத்துக் கிட்டேன். பெறகு அது வெளியே போகலே; போகவும் போகாது. என்னப்பா?"

அப்து அதற்கு பதில் சொல்லவில்லை. அவனைப் பொருத்த வரை எல்லாமே எதிர்பார்க்காமல் நடந்தது. பாகப்பிரிவினை நடந்து முடிந்தது எதிர்பார்க்காமல்தான். அதைவிட அதிகம் வியப்பிலாழ்த்தியது அம்மா தன்னுடன் இருக்க வேண்டுமென்று சொன்னது.

"உண்மையாவா?" - அவன் சாப்புண்ணி நாயரிடம் கேட்டான்.

அம்மா அடம்பிடித்து நிற்கிறாள். அது எதிர்பார்க்காத லாப மாயிருந்தது; ஒரு முடிவடையாத அங்கலாய்ப்பும். எல்லாம் முடிந்த பிறகு அம்மா எரிச்சல்பட்டுப் பேசினாள். இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? மனிதர்களின் காரியங்கள் எதுவும் அவர்களுடைய விருப்பத்திற்கு மாறாக நடப்பதாக இருக்குமோ!

"சரிப்பா, இப்போ போயிட்டு வா." உம்மாச்சு கட்டிலில் திரும்பிப் படுத்தாள். அப்து நாடியில் கை வைத்து அங்கேயே உட்கார்ந்திருந்தான்.

விடைபெறுவதான இந்தக் காட்சி நாள்தோறும் பல தடவை உம்மாச்சுவின் மனதில் வந்து போயிற்று. சொந்த இருதயத்திலிருந்து வெளிவருவதான கூக்குரலைக் கேட்டுக் கொண்டிருக்க அவள் விரும்பவில்லை. யாரும் அந்த வீட்டுக்கு வருவதில்லை. கோபம் என்று எதுவும் இல்லை. குக்கிராமத்தில் அப்படியெல்லாம் யோசிக்காமல்தான் சில வீடுகள் ஒதுக்கி வைக்கப்படும்: தகர்ந்து இடிந்துபோன ஒரு வீடு, துர்மரணம் நடந்து வீடு, விளகேற்றாத கோயில- இவற்றையெல்லாம் தள்ளி வைப்பது மனிதர்களின் வழக்கம். உம்மாச்சுவின் வீட்டையும் ஏதோ அந்த வகையில் சேர்த்திருந்தார்கள். ஆனால் வெளியில் சொல்லிக்கொண்டது இப்படித்தான்: "எதுக்காக அவங்க வீட்டுக்குப் போகணும்? யாரைப் பார்க்கிறதுக்கு?"

ஒரு மனிதக் குரலைக் கேட் ஆசை தோன்றும் போதெல்லாம் உம்மாச்சு வேலைக்காரிகளைக் கூப்பிடுவாள்: "சைனபா!..."

"என்னங்கம்மா?"

"இப்பிடி உக்காரு."

சைனபா கட்டிலின் அருகிலிருந்தபடி அன்று முக்காட்டைச் சரிப்படுத்திக்கொண்டு கேட்டாள்: "என்ன வேணுங்க? காலு பிடிச்சி விடணுமா?"

"ஏதாச்சும் பேசு."

"என்ன பேசறது?"

"அதாவது... ஒரு கதை இருக்கில்ல. ஒரு பூதத்தைப் பிடிச்சி குடத்தில் அடக்கி வச்ச கதை ஒனக்குத் தெரியாது?"

"தெரியும்." - சிறிது வாஞ்சை கலந்த குரலில் சைனபா சொன்னாள்: "ரொம்ப ரொம்ப முன்னாலே, முத்து நபியின் காலத்துக்கும் முன்னாலே, ஈசா நபி ஒலகத்துக்கு வர்றதுக்கும் முன்னாலேயே..."

"அப்போ காலம் ரொம்ப ஆயிடிச்சில்ல. பெறகு?"

"ஒரு செம்படவன் இருந்தான்."

"எங்கே?"

"மக்காவிலே. அவன் வலை வீசப் போவான்."

"நல்லா விளக்கமாச் சொல்லு."

"அவன் கெட்டிக்காரன். நல்லா வாகான ஒடம்பும். வலை வீச பெரிய கடலைப் பார்த்துப் போனான். மொதல்லே வலையிலே சின்னதா ஒரு சள்ளி மீன்தான் கெடச்சது; பெறகு வலையிலே சிக்கினது ஒரு பெரிய செம்பல்லி மீனு."

"சைனபா, இப்போ செம்பல்லி கெடையாதில்ல?"

"கெடையாது."

"கதையைச் சொல்லு."

"பெறகு வீசினப்போ கெடச்சது ஒரு செம்புக்குடம். இத்தாம் பெரிசு, இவ்வளா நீளம்!"

"அப்போ செம்படவன் நெச்சான், அது நெறய பொன்னா யிருக்குமுன்னு. இல்லே?" - ஒரு சின்னக் குழந்தையின் உற்சாகத் துடன் உம்மாச்சு கேட்டாள்.

"ஆமா. ஆனா தெறந்து பார்த்தப்போ ஒரு பூதம்!"

"அட தெய்வமே!"

"பூதம் ஒரு பொக போலே வளந்து வெளியே வந்தப்போ ஒரு இரும்பு ஒலக்கை மாதிரி நின்னிச்சி. நிக்கிறப்போ அதோட குடுமி ஆகாசத்தை முட்டி ஒரசிக் கிட்டிருந்திச்சி. செம்படவனைப் பிடிக்கப் போச்சி பூதம்..."

"ஆபத்தை வலை வீசிப் பிடிச்சதாப் போச்சி!"

"மனுசனோடே மனசு அப்பிடித்தானுங்களேம்மா. தங்கம்னு நெனச்சிப் பிடிக்கும்! பாத்தா பூதமாயிருக்கும்! அதனாலே..."

"அப்புறம்?" உம்மாச்சு அழுத்தமாக முனகினாள். சைனபா அதற்குப் பிறகும் கதையைத் தொடரத்தான் செய்தாள். ஆனால் உம்மாச்சு கேட்டுக்கொள்ளவில்லை. அது அவளுடைய இருதயத் திற்குள் முட்டி மோதி விழுந்து கடந்தது. அந்தக் கதையின் பரிணாமம் என்னவென்று அவளுக்குத் தெரியும். பல தடவை கேட்டதுதான். ஆனால் அப்போது யோசித்துக்கொண்டிருந்தது தனது பரிணாமத்தைப் பற்றியதாயிருந்தது.

"இங்கே யாருமில்லியா?" வாசலிலிருந்து ஒரு குரல்.

"யாரது? பாரு சைனபா."

சைனபா வெளியே போனாள். திரைக்குப் பின்னாலிருந்து பார்த்தாள். பிறகு கண்ணாடி வளையலைக் குலுக்கிக்கொண்டு ஓடி வந்து சொன்னாள்: "வயநாட்லேருந்து எசமான்!"

"யாரு?" உம்மாச்சு கட்டிலைவிட்டு எழுந்து போனாள்.

"ஹஸ்ஸன் வந்திருக்கேன்."

உயரமான அலை திடீரென்று சாந்தமடைந்து தாழ்வது போல உம்மாச்சுவின் முகம் தாழ்ந்தது. அவள் சிறிது நேரம் யோசித்தாள். பிறகு சொன்னாள்: "உள்ளே வந்து பேசலாமே."

ஹஸ்ஸன் உள்ளே வந்தான். கையில் ஒரு பெரிய மூட்டை இருந்தது. அதை உம்மாச்சுவின் எதிரில் வைத்துவிட்டு முகத்தின் வியர்வையைத் துடைத்துக்கொண்டான். அது மாதிரியான காணிக்கை இதற்கு முன்பும் பல தடவை ஹஸ்ஸன் கொண்டு வந்ததுண்டு. அன்றெல்லாம் வாஞ்சை சுரக்கும் இதயத்துடன் உம்மாச்சு அதை எடுத்து உள்ளே கொண்டு போய் வைப்பதுண்டு. அயலில் இருப்பவர்களுக்கு தன்னுடைய வளப்பத்தைக் காட்டிக்கொள்ள அதை விநியோகிப்பாள். இன்று அந்தக் காணிக்கையைக் கண்டதும் அவளுடைய முகத்தைத் திருப்பிக் கொண்டாள். துணியில் கட்டப்பட்டிருந்த, இரத்தம் வடிந்த ஒரு தலைதான் சட்டென்று நினைவுக்கு வந்தது. அவளுடைய இருதயத்தில் யானை ஒன்று பிளிறியது. அப்போதும் அவள் அங்குசமிட்டு அடக்கினாள்.

"சைனபா, இதை எடுத்துக்கொண்டு போ."

சைனபா சொன்னபடி செய்தாள். அந்த மூட்டை எதிரிலிருந்து மறைந்ததும் உம்மாச்சு நேராக நிமிர்ந்து உட்கார்ந்தாள். என்ன பேசுவது, எப்படித் தொடங்குவது என்று அவள் திணறினாள். ஏதாவது பேசாமல் முடியுமா? அவள் மனதின் வாசல்களை அடைத்துச் சரிப்படுத்திக்கொண்டு கேட்டாள்: "எப்போ வந்தது?"

"வர்ற வழிதான்."

"விசேசமா ஒண்ணும் இல்லேல்ல?"

"இல்லே."

"ஒன்னோடே வீட்டுக்காரி..."

"எல்லாம் சொகம்தான். ரெண்டு நாளுக்கு முன்னாலேயே வரணும்னு நெனச்சதுதான். ஆனா மகன் விடமாட்டேன்னிட்டான். அவன் என் மடியைவிட்டு எறங்க மாட்டேங்கறான்."

"நடக்க ஆரம்பிச்சாச்சா?"

"கொஞ்ச நாளுக்கு முன்னலேதான் ஆரம்பிச்சான்."

அவ்வாறான குடும்ப விவகாரங்களையெல்லாம் கேட்டு முடித்தாள். இனி என்ன கேட்பது? கடந்த காலத்தை நினைவு படுத்தும் எதையும் பேசாதிருக்க உம்மாச்சு விரும்பினாள். தற்சமயத்துக்கு ஹஸ்ஸனை ஒதுங்கச் செய்துவிட்டு, தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று தோன்றிற்று. அவள் ஹஸ்ஸனிடம் கேட்டாள்: "சாப்பிட்டாச்சா?"

"சாப்பிடலாம்தான்."

"சைனபே, அவனுக்கு சாப்பாடு போடு."

"அவசரமில்லே; சாப்பிட்டுக்கிடலாம்."

"மொதல்லே சாப்பிட்டு முடிச்சிரு."

அவன் சைனபாவின் பின்னால் போனான். ஒரு பழைய பாம்புப் புற்றின் முன்பாக இருட்டில் தாண்டிச் செல்வதான ஒரு மனநிலை யுடன் உம்மாச்சு பெருமூச்சு விட்டாள்: ஹாவ்! ஹஸ்ஸனை அதிக நாள் அங்கே தங்க வைப்பது நல்லதல்ல என்று அவள் நினைத்தாள். அவன் அங்கே தங்கியிருக்கும் காலம்வரை மனதுக்கு நிம்மதியிருக்காது. மண்ணிட்டு மூட எண்ணிய பலவும் குத்திட்டு மேலெழும்பும். தன்னைத்தானே கட்டுப்படுத்திக்கொள்ள முடியாமல் போகும். என்னவானாலும் அது கூடாது. கொடுங் காற்றுகள் அடித்த போதும் ஆணிவேர் அறாது நின்ற ஒரு மரம் அவள்.

"அப்து...அப்து..." வாசலிலிருந்து ஒரு குரல்.

"சாப்புண்ணியார்தானே?" உம்மாச்சு கேட்டாள்.

"ஆமாம்."

"உள்ளே வாங்க."

சாப்புண்ணி நாயர் உள்ளே வந்து சொன்னார்: "காரியம் இப்போ எடஞ்சலாச்சே!"

"என்ன, காசு வேணுமா?" உம்மாச்சு கேட்டாள். சாப்புண்ணி நாயர் கனிவுடன் அவளை ஒரு முறை பார்த்தார். பிறகு சொன்னார்: "வேண்டாம்."

"பெறகு?"

"பிள்ளைங்க உண்டாக்கி வைக்கிற ஆபத்து!"

"என்னாச்சி நாயரே?"

"ஒண்ணுமில்லே...ஹைத்ரோஸ் போயி தேர்தல்லே நிண்ணிருக்கான். வழியிலே போய்க்கிட்டிருந்த பொல்லாப்பைத் தலையிலே ஏத்திக்கிட்டான்!"

"அவ்வளவுதானே? கொழந்தைங்கதானே நாயரே? அவனுக்கு இந்த மாதிரி தமாசெல்லாம் இல்லாம இருக்குமா?"

"இது தமாஷில்லே. பணச்செலவுதான்."

"பரவாயில்லே."

"அப்து எதிர்க்கட்சியிலே."

"ஹே?"

"அப்து காங்கிரஸ்காரங்க பக்கத்திலே, ஹைத்ரோஸ் லீகுங்க பக்கத்திலே."

"இந்தத் தேர்தல் என்கிறது பந்து விளையாட்டு மாதிரிதானே, இல்லே? அடிச்சிப் பிடிச்சி நடக்கிறப்போ, அவங்களுக்குள்ளே சமரசம் உண்டாகத்தானே செய்யும்?"

"சமரசமா! பகைதான் வளரும்."

"ஹே!"

"ஹைத்ரோசின் கூட்டாளிங்க உண்டாக்கற ஆபத்துத்தான் இது. மசூதியிலே லீகுக்காரங்க பிரசங்கம் நடந்திச்சி."

"பெறகு?"

"அதுக்குப் பிறகு ஹைத்ரோசைக் கூட்டிக்கிட்டுப் போனாங்க. கடைசியிலே, அவங்க கட்சியிலே தேர்தல்லே நிக்கச் செய்திட்டாங்க! என்னத்தைச் செய்ய? ஹைத்ரோஸ் அங்கே நிண்ணப்போ, காங்கிரஸ்காரங்க அப்துவை இந்தப் பக்கத்திலே நிறுத்திட்டாங்க."

"அவன் ஒண்ணும் சொல்லலேல்ல?"

"எல்லாம் சம்மதப்பட்டு கைஎழுத்தும் போட்டதாத்தான் கேள்விப்பட்டேன். சின்னம்மு இன்னிக்குச் சொன்னப்போதான் எனக்குத் தெரிஞ்சது."

"அவன் எங்கே?"

"இங்கே இருப்பான்னுதான நான் நெனச்சேன்."

"வரல்லியே!"

"இது போட்டி வளர்த்துவிடுற ஏற்பாடு. நமக்கிது வேண்டா மில்ல."

"வேணாம்."

"இந்தக் காங்கிரசைப் பத்திச் சொன்னா..."

"சொன்னா?"

"ஒரு வகையிலே சர்க்காருக்கு எதிரிதான். அப்படியிருக்க இதெல்லாம் நமக்குத் தேவைதானா?"

"இதெல்லாம் சைத்தான் வேலையாத்தான் இருக்குமோ?"

"அதுபோலே ஏதோ ஒண்ணுதான். என்னவானாலும் குடும்பத் திலே இருக்கிறவங்களுக்கு இது தேவையில்லே."

"அவன்கிட்டச் சொல்லுவோம்; ஹைறத்ரோசையும் கூப்பிட்டனுப்புவோம்."

"இனிமே தாமதப்படுத்த வேண்டாம்."

சாப்புண்ணி நாயர் உம்மாச்சுவை உற்றுப் பார்த்தார்: கெட்டு அழிந்த ஒரு புத்தகம் போல இருக்கும் அந்தப் பெண்மணி. ஆனாலும் ஒரு காவியத்தன்மை அங்கே அலைபாய்ந்து கொண்டிருந்தது. ஒரு பெருமூச்சுடன் சாப்புண்ணி நாயர் வெளியே வந்தார். ஹஸ்ஸன் அங்கே இருந்தான். சாப்பிட்டு முடித்து பல் குத்திக்கொண்டு நின்றிருந்தான்.

"நீ எப்போ வந்தே?"

"கொஞ்சம் முன்னாலேதான்."

குசலம் விசாரித்துவிட்டு சாப்புண்ணி நாயர் குடையை எடுத்துக் கையில் மாட்டிக்கொண்டார்: "நான் வர்றேன்."

"நானும் வர்றேன்." - ஹஸ்ஸனும் பின்னால் போனான்.

அவர்கள் போவதை உம்மாச்சு ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டு நின்றாள் - தன்னுடைய காரியஸ்தன் முன்னாலும் மாயனின் காரியஸ்தன் பின்னாலும் போகும் அந்தப் போக்கு!

"சைனபா!"

"என்னங்க?"

"ஹஸ்ஸன் கொண்டு வந்ததை அவுக்கலேல்ல?"

"ஆமா."

"அதை அப்படியே சாப்புண்ணி நாயர் வீட்லே கொண்டு போய்க் குடுத்துட்டு வா."

"காட்டமான தேத்தூள் இருக்கு."

"வேணாம்; இங்கே இனிமே காட்டமா எதுவும் வேணாம்."

"சரி."

உம்மாச்சு கட்டிலில் போய்ப் படுத்தாள்.

# 23. தீர்மானமும் பிரிவினையும்

"என்ன அமர்க்களம், அடேயப்பா!"

"கோயில் திருவிழா மாதிரி, சைனபா."

"கொடிங்களைப் பிடிச்சிக்கிட்டு!"

"கோசங்களைப் போட்டுக்கிட்டு!"

"அவங்க என்ன எளவுதான் கத்தறாங்களோ, சைனபா?"

"இஸ்லாமுக்கு ஆபத்துன்னாதான் அவங்க கத்தறாங்க!"

"அப்பிடியா? என்ன ஆபத்து, சைனபா?"

"அது தெரியலே! அவங்க சொல்றது ஆபத்து இருக்கிறதாத் தான்!"

"இஸ்லாமுக்கு அப்பிடியெல்லாம் ஆபத்து வருமா, சைனபா?"

"அல்லாவுடையவும் தேவதைங்களான பதரீங்களுடையவும் கிருபையினாலே அப்பிடியெல்லாம் ஆபத்து வராதுன்னு வச்சிக்கோ."

"பின்னே எதுக்காக அவங்க அப்பிடிச் சொல்லிக்கிட்டுத் திரியறாங்க?"

"வோட்டுப் போடுற அமர்க்களத்திலே அப்பிடியெல்லாம் சொல்லணும்னு நான் நெனக்கிறேன். கத்திச் சண்டை போடறப் போ ஒடம்பிலே கத்திக்குத்து விழத்தான் செய்யும். அதை வேணும்னு யாராவது செய்வாங்களா? அதுதான் சட்டம். அப்போ அது செஞ்சிதான் ஆகணும்."

"அப்படியா? அப்பிடீன்னா பரவாயில்லே." மற்றவளுக்கும் நிம்மதியாயிற்று. உம்மாச்சுவின் அந்த இரண்டு வேலைக்காரிகளும் சேர்ந்து வேலியருகில் நின்றுகொண்டு ஒரு தேர்தல் ஊர்வலத்தை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்கள். அந்தப் பிரச்சார ஊர்வலம் முஸ்லீம் லீகினுடையது. இடைவிடாமல் கோஷங்களை ஊர்வலத்தினர் முழங்கிக்கொண்டு சென்றார்கள். அன்றைக்கும்

கோஷங்களுக்குப் பஞ்சமாயிருக்கவில்லை; என்றைக்கும் அது உண்டாகப் போவதில்லை.

"எதுக்காக இவங்க இப்பிடி அலர்றாங்க?" துணையாக நின்றவள் சைனபாவிடம் கேட்டாள்.

"அது ஒரு சட்டம்னு வச்சிக்கோ! எல்லாக் கூட்டத்திலேயும் தானே இருக்கு? பழனிக்குப் போற போதும், பள்ளிவாலுக்குப் போற போதும் ஒவ்வொருத்தரும் ஒரு மாதிரி கோஷம் போடலே?"

இஸ்லாமுக்கு நேர்ந்திருக்கும் ஆபத்தை விளக்கிக்கொண்டும், ஹைறத்ரோஸ் முதலாளிக்கு வோட்டளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டும் அந்த ஊர்வலம் போய்க் கொண்டிருந்தது. ஹைறத்ரோஸ் ஒரு வீர புருஷனாக விளங்கினான். இஸ்லாமை ஆபத்திலிருந்து காப்பாற்ற அவதரித்த அவனுக்குத் துணைநிற்க வேண்டியது எல்லா மூலைகளிலும் முழங்கிற்று. சந்தை, பள்ளி வாசல், கல்யாண வீடு, கடைகள் ஆக எல்லா இடங்களிலும். இந்த அளவு ஹைறத்ரோஸ் கூட எதிர்பார்க்கவில்லை. முதன்முதலில் தன்னுடைய பெயரை அப்படி முழக்கமிட்டுச் சொல்லக் கேட்ட போது அவனுக்கு வெட்கமாக இருந்தது.

"இது எதுக்கு என் பேரை இப்படிச் சத்தம்போட்டுக் கூவுறாங்க?" அவன் மரக்காரிடம் சொன்னான்.

"எலக்ஷன்னு வந்துட்டா சும்மா விளையாட்டில்லே. சும்மா ஒளிஞ்சிக்கிட்டு நிக்க முடியாது." மரக்கார் கொஞ்சம் அழுத்தமாகவே பதில் சொன்னான். ஆனால் நாட்கள் கடந்தபோது தன்னுடைய பெயரை அடிக்கடி முழக்கமிடுகிறார்களில்லையே என்று ஹைறத்ரோசுக்கு ஆதங்கம் ஏற்படத் தொடங்கிற்று. காரணம், அந்தப் பெயருக்குரியவனை ஆட்கள் ஆதரிக்கிறார்கள்; வியப்புடன் பார்க்கிறார்கள். அவனைக் குறித்தும், அவனுடைய குணாதிசயங்களைப் பற்றியும் ஆட்கள் பிரசங்கம் செய்கிறார்கள். தன்னைப் பற்றி ஒரு பிரசங்கம் நடக்குமென்று அதுவரை ஹைறத்ரோஸ் நினைத்ததில்லை. இவ்வளவும் ஆனபோது அவனுக்கும் புலனாயிற்று 'எலக்ஷன் மோசமில்லே.'

உண்மையில் எலக்ஷனில் நிற்பதற்கான நோக்கம் வேறாயிருந்தது. உறவினர்களில் சில முக்கியஸ்தர்களின் வற்புறுத்தல். மரக்காராவது ஹைறத்ரோசாவது நிற்க வேண்டும்.

"அவங்க அப்பா நல்ல மதநம்பிக்கை உள்ளவரு. இந்தப் பள்ளிவாசல் முகப்பை மராமத்து செய்ய எவ்வளவு காசு

குடுத்திருக்காரு!" இதுதான் அவர்களுடைய நியாயம். அப்படி பள்ளிவாசல் மராமத்து வேலை செய்யக் கொடுத்த காசு பிள்ளைகளுக்கு எலக்ஷன் டிக்கட் கிடைக்க உதவிற்று. மரக்காருக்கு இயலாது. அப்படியானால் ஹைறத்ரோஸ்தான் நின்றாக வேண்டுமென்ற கட்டாயம் ஏற்பட்டது.

"அண்ணே நிண்ணுக்கிடுங்க." ஹைறத்ரோஸ் சொன்னான்.

"என்னாலே முடியாது. நான் நின்னா குடும்ப வேலை எல்லாமே கெட்டுப் போகும்."

"அப்படீன்னா நானும் நிக்க மாட்டேன்."

"அவங்கள்ளாம் பெரியவங்க. சொன்னதைக் கேக்கலேன்னா நல்லா இருக்காது." அண்ணன் தம்பிக்கு உபதேசித்தான். அப்படித் தான் ஹைறத்ரோஸ் வேட்பாளனாகியது. அப்போது அதில் ஹைறத்ரோசுக்கு கொஞ்சமும் வேட்கை ஏற்பட்டிருக்கவில்லை. ஆனால் அப்துதான் எதிர்வேட்பாளன் என்றறிந்தபோது கோபம் பொங்கியது.

"பாத்தீங்களாண்ணே?"

"பாத்தேன்." மரக்கார் சொன்னான். "நான் இதை முன்னாலேயே நெனச்சதுதான்."

"அவனைத் தோக்கடிக்காமே விடக்கூடாது."

"ஆண்டவனே பாத்துக்கிடுவான்."

இரண்டு கட்சிகளிலும் தீவிரமான முயற்சிகள் நடந்தன. ஊர்வலங்கள், மேடைப் பேச்சுக்கள், கோஷங்கள் -- எங்கும் கோலாகலம்தான்.

வெள்ளையனே வெளியேறு, உழுநிலம் உழவர்க்கே, காங்கிரசுக்கு வோட் செய்யுங்கள் -- என்ற வாசகங்கள் பொங்கி வரவேண்டியது தான் தாமதம், 'இஸ்லாமை ஆபத்திலிருந்து காப்பாற்ற முஸ்லீம் லீகுக்கு வோட் செய்யுங்கள்' என்ற கோஷம் கேட்கத் தொடங்கும். ஊரில் வேலையில்லாமல் திரிந்துகொண்டிருந்த பலருக்கும் இதுவே தொழிலாயிற்று. எடுபிடியாட்களும் கோஷம் போடுபவர்களும் சிப்பந்திகளும் அடியாட்களும் வாய்ச்சண்டையிட்டு அவரவர் கட்சிகளை நிலைநிறுத்துபவர்களான பல வகையான தொழிலாளி களானார்கள்.

"அவங்க தொண்டை கிழியட்டுமே, சான்ஸ் நமக்குத்தான்."

"ஏன்?"

"இஸ்லாம் விட்டுக் குடுக்காது; என்னிக்கும் விட்டுக் குடுத்தில் லேன்னு வச்சிக்கோ."

"அப்பிடி விட்டிட்டா பின்னே மௌல்விகளுக்கு என்னதான் பலமிருக்கு?"

அடுத்த கட்சியிலும் 'வீராவேசிம்' பேசுவதில் குறைவாய் ஒன்று மிருக்கவில்லை.

"சுதந்திர வீரர்களின் மகத்தான பாரம்பரியம் நமக்குண்டு. அது போதும். அது ஒண்ணு வச்சே காங்கிரஸ் ஜெயிக்கும்."

தெருப் பிள்ளைகளுக்கும் வேலை கிடைத்துவிட்டது. ஒரு பெரிய ஊர்வலம் நடைபெற்றால் அவர்கள் பங்குக்கு ஒரு இமிட்டேஷன் ஊர்வலம் நடைபெறும். அதில் கட்சி பேதமில்லை. காங்கிரசையும் லீகையும் அவர்கள் பின்பற்றுவார்கள். உலர்ந்த வாழைத்தண்டோ காகிதக் கொடியோ உயர்த்திப் பிடித்துக்கொண்டு அவர்களில் மூத்தவன் கோஷம் போடுவான். எல்லோரும் அவனைப் பின்பற்றி முழக்கமிடுவார்கள். அதில் ஹிந்துக்களும், முஸ்லீம்களும் கலந்திருந் தார்கள். உடுப்புத் துணியும் சாப்பாடும் இரண்டு கூட்டத் தாருக்குமே கிடையாது. எச்சில் இலைகளும் வீசி எறிந்த பீடித் துண்டுகளும்தான் அவர்கள் எல்லோருடைய நோக்கம். ஹிந்துக்கள் புகைத்துவிட்டு விட்டெறிந்த பீடித் துண்டுகளையும், முஸ்லீம்கள் விட்டெறிந்த பீடித்துண்டுகளையும் அவர்கள் சமமாகவே பாவித்தார்கள். அதனால்தான் எல்லாக் கட்சிக்காரர் களுக்கும் வேண்டு அவர்கள் கோஷங்களைக் கூவினார்கள்.

இஸ்லாம் ஆபத்தில் என்று உரக்கக் கூவியது எண்ணெய்ச் செக்குக்கார சோபியின் நான்காவது மகன் ராரிச்சன். கோஷத்தைக் கூவுவதில் ராரிச்சன் ஒரு கில்லாடி என்று எல்லோரும் ஒப்புக்கொண்டார்கள்.

"சீனக்குழலின் உள்ளேயிருந்து வருவது போலிருக்கும் அந்தப் பொடியனின் குரல்; காதைத் துளைத்துவிடும்."

எல்லாக் காதுகளையும் துளைத்துச் செல்ல வேண்டியதுதானே கோஷங்களின் உத்தேசம்? அதனால் எல்லாப் பார்ட்டிக் காரர்களும் ராரிச்சனைப் பல தடவைகள் வாடகைக்கு அமர்த்தினார்கள். நாலணாவும் ஒரு சிங்கிள் சாயாவும்தான் கூலி. ஹைத்ரோசுக்காக கோஷம் போடப் போனால் மத்தியானம்

கஞ்சி கிடைக்கும். அதனால் அதிகமாக அவன் இஸ்லாமுக்காக வேண்டி கோஷங்களை முழங்குவான். அவனுடைய தகப்பன் தான் செய்யாத ஒரு குற்றத்திற்காகச் சிறையில் அடைக்கப்பட்டதால் அந்தக் குடும்பம் சிதறுண்டது. தந்தையைச் சிறையிலிருந்து விடுதலை செய்தார்களோ என்னவோ? அவனுக்குத் தெரியவில்லை. அவனுக்கு மூத்த இரண்டு அண்ணன்மார்களும் சேர்ந்து மதுரைக்கு எடுபிடி வேலைகளுக்காப் போனார்கள்; பிறகு திரும்பி வரவே இல்லை.

"அவங்க ஒரு செட்டியார் பொம்பிளையக் கட்டிக்கிட்டதாக் கேள்வி" என்று ராரிச்சன் சொன்னான். மூன்றாவது பெண் பிறப்பு. அவள் வயதுக்கு வந்து போது, சர்க்கஸ் கம்பெனியில் நரியை விளையாட்டுக் காட்ட வந்த ஒருவனுடன் ஓடிப் போனாள்.

"அவ ஒரு ஓடுகாலி" என்பது ராரிச்சனின் கருத்து. அவளுக்கு இளையவர்களான இரண்டு குழந்தைகளும் அம்மாவுமாக பதினோரு மைல் தொலைவிலுள்ள ஒரு சொந்தக்கார வீட்டிற்குப் போனார்கள்; பிறகு திரும்பவில்லை.

"நீ ஏன் எங்கேயும் போகலே, ராரிச்சா?" என்று யாராவது கேட்டால் அவன் சிரித்துக்கொண்டு பதில் சொல்வான்:

"நாம இந்த ஊர்லே ஒரு மேஸ்திரியில்லே? நாம போயிட்டா ஊர்க்காரங்க கஷ்டப்படுவாங்கல்லே?" அவ்வாறு ராஜ்ய பரிபால னத்தில் ஈடுபட்ட ராரிச்சனின் வாழ்க்கை வெளியில் எறியப்படும் சோறும், வீசி எறியப்படும் பீடித்துண்டும், தேங்காய் மண்டித் திண்ணையில் உறக்கமுமாக உருண்டுகொண்டிருந்தது. பாண்டன் மொய்துட்டி என்றொரு கூட்டாளியும் கிடைத்தான். உதட்டில் இருந்த ஒரு வெளுத்த தழும்புதான்- பாண்டுதான் - அந்தப் பெயர் அவனுக்கு ஏற்படக் காரணமாக இருந்தது. நீளமான பீடித் துண்டுகளாகப் பார்த்துச் சேகரித்து வைப்பதில் ஒரு குறிப்பான கெட்டிக்காரத்தனம் பாண்டனுக்கு இருந்தது. அதுதான் ராரிச்சனுக்கு அவனிடம் ஏற்பட்டிருந்த மதிப்புக்குக் காரணம்.

"பாண்டன்கிட்டேயிருந்து ஒரு பீடித்துண்டு வாங்கினா ரெண்டு பொகை இழுக்கலாம்" என்று ராரிச்சன் சொல்வான்.

இந்த விதமாக வாழ்க்கை போய்க்கொண்டிருந்தபோதுதான் எதிர்பாராத பாக்கியம் வந்து சேர்ந்தது - நாலணாவும் மத்தியானச் சாப்பாடும்! முதலில் அவன் அப்துவுக்காக கோஷம் போடத்தான் போனான். ஆனால் அங்கே மதியச் சாப்பாடு

கிடையாது. ஒரு கிளாஸ் சாயா மட்டும்தான். மதியச் சாப்பாடு விஷயத்தில் காங்கிரசைவிட லீக்தான் மேலானது என்று கண்டுகொண்டதும் அவன் ஹைத்ரோசின் நிரந்தர கோஷக்கார னானான்.

"இஸ்லாமை ஆபத்திலிருந்து காப்பாற்றுங்கள்! ஹைத்ரோஸ் மொதலாளிக்கு வோட்டுப் போடுங்கள்!" என்ற அவனுடைய கோஷம் அந்த ஊரில் அலைபாய்ந்தது. பாண்டனுக்கு சில சமயங்களில் அப்துவின் கூட்டத்தாரிடம் வேலை கிடைக்கும். நோட்டீஸ் விநியோகம் செய்தல், சுவர்களில் எழுதுதல், மற்றும் பிற. ஆனால் அவற்றில் எதுவும் கோஷம் போடுவதுபோல 'சொர'த்தான வேலையில்லை என்பது பாண்டனின் கருத்து. ஆனாலும் வயிற்றுப்பாட்டுக்காகச் செய்துகொண்டிருந்தான்.

இந்த ஊர்வலம், கோஷமிடுதல் விவகாரம் உம்மாச்சுவின் காதிலும் விழுந்தது. தன்னுடைய பிள்ளைகளின் பெயர்களும் கலந்து வெளிவந்த முழக்கங்கள் அவளுடைய நெஞ்சில் ஊசியாகப் பாய்ந்தன. அவள் காதுகளைப் பொத்தியபடி சகித்துக் கொண்டாள். இந்தப் போட்டி இல்லாதபடித் தவிர்க்க உம்மாச்சுவும் சாப்புண்ணி நாயரும் தங்களால் முடிந்த அளவு முயற்சியெல்லாம் செய்தார்கள். அப்துவிடம் அவர்கட் சொல்லிப் பார்த்தார்கள்:

"தம்பி, இந்த கேடுகெட்ட போட்டிக்கெல்லாம் போகவேணாம்."

"அம்மா, நான் வாக்குக் குடுத்திட்டேன்" என்பதுதான் அவனுடைய பதிலாயிருந்தது.

"அண்ணன் தம்பிங்க எதிர்த்து நிக்க வேணாம். அதை விட்டிடறேன்னு ஒரு வார்த்தை சொல்லுப்பா!"

"அது அப்பாவுக்கு கெட்ட பேரும்மா. வாக்குக் குடுத்திட்டுப் பின்வாங்கலாமா?"

உம்மாச்சுவுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. அவனுடைய அப்பாவுக்கு கெட்ட பெயர் வரவழைக்க என்னவா னாலும் தான் காரணமாகக் கூடாது. அவள் பெருமூச்சுடன் சம்மதித்தாள்: "ஒன் இஸ்ட்டம்போலே பண்ணிக்கோ."

உண்மையில் அப்துவுக்கு காங்கிரஸ் கொள்கைகளுடன் அவ்வளவு அதிகப் பற்றுதல் எதுவும் ஏற்பட்டிருக்கவில்லை. எதிர்க்

கட்சியில் நிற்பது ஹைத்ரோஸ்தான் என்று கேள்விப்பட்டபோது தொடங்கியதுதான் அந்த அங்கலாய்ப்பு. இரண்டு நாட்கள் அதை அசைபோட்டுக் கொண்டிருந்தான். மூன்றாம் நாள் சின்னம்முவிடம் சொன்னான்:

"ஹைத்ரோஸ்தான் எதிர்க்கட்சியிலே நிக்கிறான்."

"அப்போ அது எதிர்க்கட்சியா?"

"இப்போ எதிர்க்கட்சியாத்தான் ஆயிட்டது."

"அப்படீன்னா அப்து இந்தப் பக்கம் நிக்க வேண்டியதுதான்."

"நான் நிண்ணா?"

"நிக்கணும்."

"தொந்திரவுதான்."

"தெம்பில்லையாக்கும்?"

"என் தெம்போடே அளவுக் கணக்கெல்லாம் ஒன் கையிலேதானே?"

"கொஞ்சங் கொஞ்சம்."

அதற்குப் பிறகு இருவரும் எதுவும் பேசிக்கொள்ளவில்லை. அப்து வீட்டிற்கு வந்து சேர்ந்த பிறகும் அவனுடைய மனதில் இருந்த எண்ணம் 'தொந்திரவுதான்' என்பதாகத்தான் இருந்தது. சாய்ப்பறைத் திண்ணையில் காலடி வைத்தபோது அங்கே ஓர் ஆள் நின்றிருந்தார்.

"மிஸ்டர் அப்து, நான் உங்களுக்காகத்தான் காத்துக்கிட்டிருக்கிறேன்."- கோவிந்த குறுப்பு ஒரு புன்னகையுடன் சொன்னார். தொடர்ந்து, தன்னுடைய குட வயிறு முழுதும் தெரியும்படி நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்தார். கறுத்து, உருண்டு, குள்ளனாக இருந்த அந்த மனிதரை அங்கே எல்லோருக்கும் தெரியும். அந்தக் கதர்ச் சட்டைக்காரரை சாதாரண ஆட்கள் காங்கிரஸ் குறுப்பு என்றுதான் அழைப்பது வழக்கம். பிற்காலத்தில் காங்கிரசிலிருந்து விலகிய பின்னும் அந்தப் பெயர் அவரைவிட்டுப் போகாமல் தங்கிவிட்டது. ஒரு பெயர் அவ்வளவு சீக்கிரம் மாறிவிடாதல்லவா! அந்தக் காங்கிரஸ் பிரசிடென்ட்டைப் பார்த்தபோதுதான் அப்துவுக்கு ஏதோ புரியத் தொடங்கியது. இருந்தாலும் கேட்டான்: "என்ன விஷயம்?"

"நீங்களெல்லாம் உதவாமே இந்த நாட்டுக்கு சுதந்திரம் எப்படிக் கிடைக்கும்?"

"என்ன செய்யணும்?"

"எலக்ஷனோடே நடப்பெல்லாம் தெரியுமில்லே?"

"ஆமாம்."

"இதெல்லாம் சுதந்திரத்தை வாங்குறதுக்கு படிக்கட்டுகள். நீங்க அதிலே துடிப்போடே பங்கெடுக்கணும்."

"எப்படி?"

"ஒரு வேட்பாளரா நிண்ணு."

"நான் நிக்கணுமா?"

"நிக்கணும்."

பிறகு, பேச்சில் சாமர்த்தியசாலியான குறுப்பின் அரைமணி நேரப் பிரசங்கம் முடிந்தபோது அப்து சம்மதித்தான்.

"நான் நிக்கிறேன்."

"ஆனா, கொஞ்சம் குழப்பமிருக்கு."

"என்னவாம்?"

"பல பேர் இதுக்கு எதிரா வற்புறுத்துவாங்க! அப்போ.."

"எனக்கு ஒரு அப்பன்தான் உண்டு, குறுப்பு. ஒரு வார்த்தை சொன்னா சொன்னதுதான்!"

"அது எனக்கும் தெரியும்; சாயங்காலம் ஆபீஸ் பக்கமா வாங்களேன்!"

சிரித்துப் பேசி, சாயா குடித்து முடித்து, குறுப்பு எழுந்து நடந்தார். அவருடைய முகத்தில் திருப்தி ஒளி வீசிக்கொண்டிருந்தது. இவ்வளவு சீக்கிரத்தில் காரியம் முடிந்துவிடும் என்று குறுப்பு நினைக்கவில்லை. முஸ்லீம்கள் நிறைந்த பகுதி; அங்கே வோட்டு வாங்க ஹிந்து மூஸ்லீம் ஒற்றுமை குறித்த கோஷங்கள் மட்டும் போதாதென்று குறுப்புவுக்குத் தெரியும். இப்போது தனக்குக் கிடைத்தது பெரும் வெற்றியல்லவா? ஒரு முதல் தர உருப்படி - கிளிக்குப் பூனை!

'இதெல்லாமே ஒரு சுபசூசகம்தான்' என்று உள்ளுக்குள் நினைத்து குறுப்பு நடந்தார். அப்துவும்கூட, தான் அப்பிட ஒரு வாக்குக் கொடுத்துத் தலையிட்டதில் உள்ளுக்குள் மகிழ்ச்சி

யடைந்தான். அதனால்தான் உம்மாச்சுவின் வார்த்தைகளுக்கு அவ்வளவு எளிதாக அவனை வசப்படுத்த முடியாமல் போயிற்று.

ஆனாலும் உம்மாச்சு எதிர்க்கட்சியிலும் முயன்றாள். அவள் ஹைத்ரோசினோடும் இதே விதமாய்ச் சொன்னாள்:

"நீங்க ஒங்களுக்குள்ளே அடிச்சிக்கிடணும்னு நெனச்சா நடக்கட்டும். ஆனா, நான் ஒருத்தி இங்கே இருக்கேண்ங்கிறதை நீங்க மறந்திடக் கூடாது."

அம்மாவின் அந்த வார்த்தைகளைக் கேட்டபோது ஹைத்ரோசின் மனம் இளகிற்று. அவள் இன்னும் சற்று உறுதியாக வற்புறுத்தியிருந்தால் அவன் பின்வாங்கியிருப்பான். அதற்கிடையில் மரக்கார் புகுந்து சொன்னான்: "அப்படீன்னா இதே மாதிரி அங்கே பின்வாங்கச் சொல்லியிருக்க வேண்டியதுதானே? விட்டுக் குடுக்கிறது எப்பவும் எங்க பக்கம்தான் இருக்கணுமோ?"

உம்மாச்சுவுக்கு பதில் சொல்ல முடியவில்லை. அவள் மொத்தத்தில் திகைத்து விட்டாள். சில நிமிடங்களுக்குள் பற்பல விஷயங்கள் அந்த நெஞ்சினூடே கடந்து போயின.

"அண்ணன் சொல்றது இருக்கட்டும்; அம்மாவுக்கு இப்போ என்ன செய்யணும்?" - ஹைத்ரோஸ் அவளருகில் சென்றான்.

"ஒண்ணும் வேணாம்."

"நான் பின்வாங்கணுமா?"

"வேணாம். ஏதாச்சும் வந்தாலும் பெரிசா ஒண்ணும் வந்திராது... ஒங்களுக்கு ஒதவிக்கு ஒத்தாசைக்கு ஆளுங்க இருக்காங்கல்ல?"

"இருக்காங்க." - மரக்கார்தான் பதில் சொன்னது.

"சரி. இனிமே உம்மா மூலமா ஏதாச்சும் ஒதவி வேணும்னு தோணினா இங்கே வாங்க."

"வர்ரோம்மா."

அப்படித்தான் அந்த தீர்மானமான பேச்சு முடிந்தது. இதை அறிந்தபோது சாப்புண்ணி நாயருக்கும் மிகவும் குழப்பமாகி விட்டது.

"என்னம்மாவது செஞ்சிகிடட்டும். இந்தத் தான்தோன்றித் தனத்துக்கு நான் ஆளில்லே." - அவர் தீர்மானமாகச் சொன்னார்.

"நம்மவங்கதானே?" - உம்மாச்சு தலை நிமிர்த்தினாள். "நான் பெத்தேன்; அதனாலே என்னாலே தவிர்க்க முடியாதில்ல? அவங்க

காட்டுற எல்லா எடைஞ்சலுக்கும் நான் பொறுப்பேத்துக்க வேண்டியதுதானே? என்ன?"

சாப்புண்ணி நாயர் தலை தாழ்த்தி நின்றார். அந்தப் பெண்ணின் முகத்தைப் பார்க்க அவருக்கு தைரியமில்லை.

"பாருங்க, நாயரே." உம்மாச்சு தொடர்ந்தாள்: "நீங்களாவது கடைசி வரைக்கும் இருப்பீங்கன்னு நான் நெனச்சேன். இனி இப்போ அதுகூட இல்லாட்டாலும் நான் சாகவா போறேன்?"

அந்தக் கண்கள் நனைந்திருந்தன. அதைக் கண்டபோது வயதான நாயரின் மனம் இளகிற்று.

"நான் என்ன செய்யணும்னு மட்டும் சொன்னாப் போதும். சொந்தக் குழந்தைங்க அவங்களுக்குள்ளே சண்டை போடறப்போ எந்தப் பக்கத்திலே சேர்றது?"

"பலம் கொறஞ்ச பக்கத்திலே."

"அது எது?"

"ஹைத்ரோஸ் பக்கம்."

"அது எப்படி?"

"அப்துவுக்கு நான் இருக்கேன். அவங்களுக்கு யார் இருக்காங்க?"

"ஆனா.."

"ஆனா ஒண்ணும் இல்லே. ஒங்களுக்கு இஸ்டமிருந்த இந்தத் தேர்தல்லே அந்தச் சின்னவனுக்கு ஒதவணும்."

"அப்படீன்னா அப்து விஷயம்?"

"அதை நான் பாத்துக்கிடுறேன்."

சாப்புண்ணி நாயர் எதுவும் பேசாமல் நின்றார். விஷயங்கள் எல்லாமே ஒன்றாக மனதில் கட்டி இணைந்தன. மிகவும் சிக்கலான ஒரு பத்திரத்தின்மேல் மூன்று கோர்ட்டுகள் ஏற்றி இறக்குவதற்கான 'லா பாயிண்ட்' கண்டுபிடிக்கக்கூட அவருக்குச் சிரமம் ஏற்பட்டதில்லை. ஆனால் இந்த வகையான தேர்தல் விஷயங்களை மட்டும் அவரால் சமாளிக்க முடியவில்லை. இக்காரியத்தில் ரகசியமான ஒரு மகிழ்ச்சியும், தெளிவான ஒரு சங்கடமும் அவருக்குண்டு. சர்க்காரை எதிர்க்கும் ஒரு கட்சிக்காக வேண்டி எதுவும் செய்யாமலிருக்க முடிந்தது என்ற மகிழ்ச்சிதான். அவருடைய கணக்கில் அது நல்ல குடும்பத்துக்காரனுக்குரிய வேலையல்ல. ஆனால், அப்துவுக்கு எதிராக நிற்பது எப்படியா

னாலும் துக்ககரமானது. ஆண்பிள்ளைகள் இல்லாதிருந்த அவருடைய நெஞ்சில் காலியாகக் கிடந்த ஒரு பெரிய பகுதியை அவனைக் குறித்தான நினைவுகளால் நிரப்பியிருந்தார். ஆனால் இப்போது...

"என்ன நாயர் யோசிக்கிறது?"

"நான் எப்படிச் சொல்றது, அப்துவுக்கு வோட்டுப் போடக் கூடாதுன்னு?"

"ஹைறத்ரோசுக்குப் போடணும்னு சொல்லிடுங்க."

"ரெண்டும் ஒண்ணுதானே? இது கொஞ்சம் சிக்கலானதுதான்."

"இதைவிடச் சிக்கலான விஷயங்களையெல்லாம் நாம ரெண்டும் பேரும் கொத்தி முழுங்கியிருக்கோமில்ல?"

"உ...ம்."

"ஒங்களுக்கு ரொம்ப பயமா இருந்த நீங்க சொல்ல வேணாம். ஆனா, என்னாலே சும்மா இருக்க முடியாதில்ல?"

"சரிதான். எதுக்காக இந்த குல்மால் எல்லாம் வருத்திக்கணும்? உண்டு முடிச்ச நாயரு சும்மா இருக்கமாட்டரு அப்படீன்னு சொல்வாங்கல்ல?"

"ஆனா, இப்போ அம்மா இல்லாம இருக்கிறது மாப்ளமாரில்ல, என்ன செய்ய! அவங்க ஆம்பிளைங்க. குடுத்த வாக்கைத் திருப்பிக்க முடியுமா?"

"வாக்கு கொடுக்கிறப்போ யாருகிட்டேயாச்சும் கேட்டாங்களா?"

"அது அவங்களோடே புத்திமந்தம்னு வச்சிக்குங்க. அப்பிடீன்னா வச்சிக்கிட்டு அவங்களை ஒதுக்க முடியுமா? பிள்ளைங்க அப்பாவையும் அம்மாவையும் வணங்கி நிக்கணும்னு பேச்சு. காலம் மார்றப்போ, நமக்குத் தெரியாமலே அவங்க வணங்கத்தான் செய்றாங்க. வணங்குறாங்க என்கிறது நம்ம நம்பிக்கை. அது நல்ல நம்பிக்கைதான். ஆனா, நம்பிக்கை மட்டுந்தான், நாயரே!"

இந்த உபதேசம் சாப்புண்ணி நாயருக்கு உறைத்தது. சொந்த வாழ்க்கை குறித்து அவர் திரும்பிப் பார்த்தார். தன்னோடு சண்டையிட்டு வெற்றிகண்டு நிற்கும் சின்னம்முவைத்தான் அவர் கண்டது.

"யார் ஜெயிச்சாலும் நமக்கு சந்தோசந்தானில்லே?" உம்மாச்சு கேட்டாள்.

"ஆனா, யாரு தோத்தாலும் நமக்கு துக்கமுந்தான்." சாப்புண்ணி நாயர் பதில் சொன்னார்.

"நொடிச்சுப் போன எடத்தைத் தாங்கித்தான் ஆகணும். நொடிச்சிருக்கிறது ஹைத்ரோசும் மரக்காரும்தான்."

"உம்..." - சாப்புண்ணி நாயர் ஒரு முறை நீட்டிப் பெருமூச்சு விட்டார். பிறகு சொன்னார்: "அப்துவுக்கு என்மேலே நல்ல மதிப்பிருந்திச்சு. இனி அவனும் சேர்ந்து என்னை வெறுக்கட்டும்! இல்லாட்டி என்னதான் செய்றது?"

"அதை இப்பிடி நெனக்க வேணாம். இதனாலே அவன் ஒங்களை வெறுத்திர மாட்டான். வெளையாட்டிலே நீங்க அப்பாவும் பிள்ளையும்தானே? படகு கொஞ்சம் முன்னாலே போகும், அப்புறம் மறுபடியும் திரும்பிடும். அதுபோலத்தான் நீங்களும் அவனும்."

"சரி. நான் உதவியா இருக்கேன்."

உம்மாச்சு சாப்புண்ணி நாயரை உற்றுப் பார்த்தாள். அவ்வளவு கனிவான ஒரு பார்வை ஒரு பெண்ணிடமிருந்து அவ்வளவு எளிதாக வெளிப்படுவதில்லை. வயது கடந்த அந்த நான்கு கண்களும் பரஸ்பரம் வளைய வந்தன, பலவற்றைக் கண்டு பிடித்தன.

உம்மாச்சு தரையைப் பார்த்தபடி யோசித்துக்கொண்டு தயங்கித் தயங்கிப் பேசினாள்: "கல்லுக்குள்ளே தேரைக்கு இரை குடுக்கிற ஆண்டவன் என்னோட கஸ்டத்தைப் பாத்துத்தான் ஒங்களைப் பிறப்பிச்சது. ஆண்டவன் கூட்டி அளக்கவும் மாட்டான், கொறச்சி அளக்கவும் மாட்டான், சரியாத்தான் அளப்பான்னு நெனக்கிறேன். என்ன?"

"உம்."

பிறகு எதுவும் பேசிக்கொள்ளவில்லை. சாப்புண்ணி நாயர் வெளியேறினார்; உம்மாச்சு கட்டிலில் சரிந்து சாய்ந்தாள்: "சுபஹானல்லா!"

# 24. தேர்தல் முடிந்தது.

தேர்தல் பிரசசாரத்தின் வேகம் அதிகரித்து வந்தது. எல்லோரும் அதிகாலையில் எழுந்திருப்பது ஒரு கோஷம் போடுவதைக் கேட்டுக் கொண்டுதான், சுற்றுப்புறமெங்கும் அலையெழுப்பிப் போகும் கோஷ வாசகங்களுக்கு இடையேதான் ஆட்கள் உறங்கிக் கொண்டிருந்தார்கள். காலையில் வலுச்சண்டைக்கு இழுக்கும் அந்தச் சத்தங்கள் ஊராருக்கெல்லாம் மனப்பாடமாகலாயின. இஸ்லாம் ஆபத்திலிருக்கிறதென்றும், ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை வெற்றி பெற வேண்டுமென்றும், நிலம் உழுபவர்களுக்கே சொந்தமாக வேண்டுமென்றும், இன்னும் பிறவும் பொதுமக்களுக்குத் தெரிய வந்தன. அப்படிச் சொல்லப்பட்ட வார்த்தைகளுக்கு எதிர்மாறான சில அர்த்தவிசேஷங்கள் உண்டென்றும் அவர்கள் புரிந்துகொண்டார்கள். சாயாக் கடைகளிலும் மாட்டுச் சந்தைகளிலும் குளக்கரைகளிலும் எங்கும் அதைப் பற்றியதான விமர்சனங்கள் வளர்ந்தன.

"சாத்துண்ணியாரே, இந்தச் சாயாக் கடையை இனிமே அடைச்சிற வேண்டியதுதானே?"

"அட ஹம்க்கே, ஒனக்குப் புத்தியிருக்கா? இனியுள்ள காலம் இதெல்லாம் வேண்டாண்டா."

"முந்நூத்தி அறுபத்தியஞ்சி நாளும் ஏகாதசியா?"

"ஒனக்கு வெவசாய வேலையில்ல?"

"அதுக்காக?"

"இப்போ வாரரச்சன் அண்ணனுக்கு நீ எவ்வளவு பாட்டம் கொடுக்கறே?"

"கணக்குக்கு நூத்தி முப்பது கலம். ஆனா நூத்தி நாப்பது கலம் கொண்டு போனாத்தான் நூத்தி முப்பதா கணக்கு வச்சிக்கு வாங்க. பதர் கணக்கு, காய்ச்சல் கம்மி அப்பிடி இப்பிடீன்னு பத்து கலம் போயிரும்."

"இனிமே நூத்தி நாப்பது கலம் நெல்லு ஒனக்கு லாபம்."

"எப்பிடி?"

"உழற நெலம் உழறவங்களுக்கே ஆயிருமில்ல?"

"ஒங்களுக்கு கிறுக்குத்தான், மாப்பிளே."

"இல்லடா. வெள்ளக்காரனை வெரட்டப் போறோம். நெல மெல்லாம் உழவங்களுக்கு. பாட்டமும் குடுக்க வேணாம், வரியும் கட்ட வேணாம். கையைக் கட்டிக்கிட்டு உக்காந்து சாப்பிடலாம்."

"உழைக்கிறவன் உக்காந்து சாப்பிடுற காலம் வருமா, கடவுளே!"

"வரும், வரும். வரவழைக்க முடியாததை அவங்க சொல் வாங்களா? வர்ற வரத்தைப் பாத்தா அப்பிடித்தான் தோணுது. அதனாலே மொதல்லே இந்தக் கடையை அடைச்சிடு. அப்புறம், ஒழக்கு பிண்ணத் தைலம் வாங்கி ஒரு தரம் தேச்சிக் குளிச்சி ஓய்வு எடுத்துக்கோ!"

அங்கே கூடியிருந்தவர்கள் எல்லோரும் வெடித்துச் சிரித்தார்கள். சொல்வதில் எதுவும் நடக்கக்கூடிய காரியமல்ல என்பது அந்த ஒட்டுமொத்தச் சிரிப்பின் அர்த்தமாக இருந்தது. ஆனாலும் ஆட்களுக்கு உற்சாகமாக இருந்தது. ஸ்கூல் மாஸ்டர்கள், கணக்குப் பிள்ளைகள், படித்தவர்கள், இஸ்லாமில் பற்றுள்ளவர்கள் ஆக எல்லோரும் தேர்தல் வேலைகளில் முனைந் தார்கள். ஆனால் சாதாரண மனிதர்கள் எல்லோரும் ரசித்தார்கள். கோயில் உற்சவமும் பள்ளிவாசல் பெருநாளும் தவிர அந்த கிராமத்தார்களுக்கு வேறு எதுவும் பொழுதுபோக்கு இல்லை. புதிதாக வந்து சேர்ந்த இந்தத் திருவிழாவை அவர்கள் ஸ்வீகரித்துக் கொண்டார்கள். கூட்டம் நடத்தவும், மோதிக் கொள்ளவும், பாய்ந்து நடக்கவும், வாதப் பிரதிவாதம் செய்யவும் ஏதாவது ஒரு விஷயம் இருக்குமல்லவா! ஆனால் முதியோர்களுக்கு பயம் உண்டாகிவிட்டது: "காலம் கெட்டுப் போச்சி! சர்க்காரையில்ல துணிஞ்சி எதுக்குறாங்க! ராஜா, பிரஜை எதுவுமேகிடாயாது இனிமே. கலி முத்திப் போச்சி போலிருக்கு!"

"சரிதான்." - மற்ற கிழவர்களுக்கு ஒத்துப் பாடினார்கள். குளக்கரைகளில்தான் வன்மையான விமர்சனங்கள். எலக்ஷனின் நிலவரங்கள் அனைத்தும் அங்கேதான் பிரத்யட்சமாக இருந்தன. யாருக்கும் அரசியலைப் பற்றி எதுவும் தெரியாது. ஆனாலும் எல்லோருக்கும் ஏதேனும் கொஞ்சம் பேசுவதற்கு இருந்தது. அரசியலில் வர வேண்டிய அடிப்படை மாற்றங்களை அவர்கள்

உரையாடுவார்கள். மிகவும் மெல்லிய குரலில்தான் அது தொடங்கும். "குஞ்சுக்குட்டம்மா வோட்டுப் போடப் போகலியா?"

"என்னத்தே, இது வரைக்கும் வோட்டும் பாட்டும் இல்லாம காலத்தைக் கடத்தியாச்சி. இனியும் அப்பிடியே போயிடட்டும்."

"இப்போ பழைய காலமில்லே. பொம்பிளைங்க பெருமைப்படற காலமில்ல இப்போ!"

"பெருமைப்படறவங்க பெருமைப் பட்டுட்டுப் போகட்டும். மத்தவங்க பெருமையாப் பேசறாப்பலே நாங்க பழக்கப்படலே; அப்பிடிப் பழக்கப்படணும்னு நெனச்சதும் இல்லே."

பக்கத்தில் சீயக்காய் தேய்த்துக்கொண்டிருந்த ஒரு மாது அதை வழித்துவிட்டு, தலைமுடியைச் சுற்றி உச்சியில் முடிந்துகொண்டு சொன்னாள்: "பெருமை பேசத் தெரியாததனால் வந்த முட்டாள் தனம்! பாக்கிறோமில்ல, கர்வப்படறவங்களுக்குக் கெடைக்கிற லாபம்?" - அந்தப் பெண்ணின் பேச்சில் ஏளனம் தெரிந்தது.

"அந்த லாபம் எங்கே போய்ச் சேருதுண்ணு எனக்குத் தெரியும்." குஞ்சுக் குட்டியம்மாதான் சொன்னாள்.

"தெரியும்."

"ஏ? எல்லாம் ஆயிடிச்சா?"

"ஆயிரிச்சின்னுதான் கேள்விப்படறேன். உண்மை கடவுளுக்குத் தான் தெரியும். மத்தவங்க ஒண்ணும் சொல்லலே?" - மற்றொருத்தி.

"கடவுளுக்கு மட்டுமில்லே, ஊர்க்காரங்களுக்கும் தெரியும்." தலை துவட்டிக் கொண்டிருந்த ஒரு கறுத்த பெண்தான் அதைச் சொன்னது. முகம் முழுவதையும் தோர்த்து முண்டில் மறைத் திருந்த அந்த உருவம் தொடர்ந்தது: "சின்ன வயசிலே இருந்த நட்புதான்." இதைச் சொல்லிவிட்டு தோர்த்து முண்டைத் தலையிலிருந்து எடுத்து, அந்தப் பெண் குஞ்சுக் குட்டியம்மையின் பக்கத்தில் சென்றாள். கர்ணத்தின் மகள் நாராயணிக்குட்டி அவள். சின்னம்முவின் வகுப்புத்தோழியும் நித்திய வைரியுமாயிருந்த அவள் இதற்குள்ளாக இரண்டு சம்பந்தமும் மூன்று பிரசவமும் முடித்து மேலும் சற்று பருத்திருந்தாள். முதல் கல்யாணம் ஒரு காதல் கல்யாணமாக இருந்தது. ஒரு குழந்தை பிறந்ததும் அந்த மனிதனின் காதல் முறிந்து போயிற்று. சம்பந்தத்தையும் மாற்றிக்கொண்டான். அதற்குப்பிறகு, கர்ணத்தின் மருமகன் முறையான ஒருவனையே முறைப்படி கல்யாணம் செய்து

கொண்டாள். இரண்டு குழந்தைகள் பிறந்தன. தனக்கு இதெல்லாம் முடிந்தாயிற்று; ஆனால் இன்னும் வாலிபத்திற்கு ஒரு குறைவும் இல்லாமல் நிற்கும் சின்னம்மு டீச்சருக்கு எதிராக நாணிக்குட்டி டீச்சருக்கு ஒரு உள்ளோட்டமான பகை இருந்து வந்தது. பத்தினி வேஷம் போட்டு நடப்பதைப் பார்த்ததில்லையா! அவள் தாழ்ந்த குரலில் சொன்னாள்: "நாங்க சேர்ந்து படிச்சோமில்ல! அன்னிக்கு இருந்த இருப்பெல்லாம் எனக்குத் தெரியும். தொட்டில் பழக்கம் சுடுகாடு வரைக்குமில்ல, என்ன?"

"இருந்தாலும், என்னடி, ஹிந்து முஸ்லீம்ங்கிற விவஸ்தையெல்லாம் வேண்டாமா?"

"காசிருக்கில்ல, அதுதான் அவளுக்கு விவஸ்தையெல்லாம். ஆளு அவ எப்படிப்பட்டவ, தெரியுமா?"

"அந்த அப்பன் இதெல்லாம் பாத்து பொறுத்துக்கிட்டிருக்காரில்ல. ஆளுக்கு ஒரு அபிமானம் வேண்டாமா?" - குஞ்சுக்குட்டியம்மா.

"காசிருக்குமானா சாப்புண்ணியாருக்கும் எல்லாம் அபிமானம்தான்."

"அந்த ஆளுதானே அப்துவை வீட்லே கூப்ட்டு உக்கார வக்கிறது?"

"ஆமாம்! ஒண்ணும் கேக்க வேணாம்!"

"மாப்ளார்க்கு வோட்டு வாங்க நடக்காரு அப்பன், ஒரு குடுமி வச்சிக்கிற ஜாதியாயிருந்தும்!"

"மக எதிர்க்கட்சி."

"ஹிந்துக்களோடேயா?"

"இல்லே, இன்னொரும மாப்ளயோடே - அப்துவோடே."

"அதுபின்னே அப்படித்தானே வரும், நாணிக்குட்டி? நீங்க இப்போ கண்ணன்குட்டி யாருக்கு உதவாம இருப்பீங்களா?"

"ரெண்டு குழந்தைங்க ஆன பெறகும் தள்ள மாட்டேன், நிச்சயமா."

"அது போலத்தான் இதுவும்."

"எனக்கிதெல்லாம் கேக்க வேணாம்." - குஞ்சுக்குட்டியம்மா தொடர்ந்தாள்: "இன்னொரு தரம் முங்கிக் குளிச்சிடணும், கேட்ட பாவம் போறதுக்கு!"

தேர்தல் பிரச்சாரத்தினோடு இப்படி அபவாதக் கதை ஒன்றும் நடமாடிக் கொண்டிருந்தது. அது சாப்புண்ணி நாயருக்குத் தெரியாது; லட்சுமியம்மைக்கும் தெரியாது. சின்னம்மு மட்டும் தன்னைப் பற்றி அவ்வளவு நல்லபடியாக அல்லாமல் ஊரார் கிசுகிசுத்ததை ஊகித்துக்கொண்டாள். ஆனால் அவள் அதற்கு இம்மியும் அசைந்துகொடுக்கவில்லை. எதுவும் நடந்ததாகவே காட்டிக்கொள்ளவில்லை. உள்ளுக்குள் நினைத்துக்கொண்டாள்: பேசட்டும், பேசட்டும்!

சாப்புண்ணி நாயர் மீதான ஆட்சேபத்தை எல்லோரும் கேட்டார்கள்; சாப்புண்ணி நாயரும் கேட்டிருந்தார்.

"இந்த ஆளுக்கென்ன மாப்பிளக்காரங்களோடே சகவாசம்?" - இதுதான் கேள்வி. "லீகு மாப்பிளக்காரங்க கட்சி. அங்கே ஒரு ஹிந்து போயி ஒதவணும்ங்கிறது எதுக்காக?"

சற்று சிக்கலான கேள்வி அது என்று சாப்புண்ணி நாயருக்குத் தோன்றியது. ஆனால் இனி பின்வாங்குவது சரியல்ல; சாத்திய மல்ல. அப்படியானால் சொந்தப் பாதுகாப்புக்கான யுக்திகளைக் கண்டுபிடித்தாக வேண்டும். தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற் காக விலங்குகள் அங்குமிங்கும் ஓடுவதுபோல் அவரும் பாது காப்பைத் தேட முயன்றார். காரியங்கள் எல்லாம் கிரமப்படி நடந்துகொண்டிருந்தன. எதிர்க்கட்சியில் இருந்ததனால் தன்மீது வெறுப்பு உண்டாகாதென்று உம்மாச்சு நம்பிக்கை ஊட்டியதும், அதற்குப் பிறகு சாப்புண்ணி நாயரின் வழியில் ஒரு தடையும் ஏற்படவில்லை. சர்க்காரை எதிர்க்கும் ஒரு பார்ட்டிக்கு உதவா மலிருக்க முடிந்ததல்லவா என்றொரு மனத்திருப்தி அதிகமாகவும் இருந்தது.

அதற்கிடையேதான் ஏடாகூடமான இந்தக் கேள்வி. சென்னையில் உத்தியோகத்திலிருந்த அந்தத் தம்பிரான் இந்தக் கேள்வியைக் கிளப்பிவிட்டது என்று சாப்புண்ணி நாயர் கேள்விப்பட்டிருந்தார்.

விடுப்பு எடுத்து வந்திருந்தார் அந்த மனிதர். சின்னம்முவோடும், அவளைப் பற்றியதான எல்லாவற்றோடும் தம்புரானுக்கு உள்ளுக்குள் பகைதான். முன்பு அவள் சாடிய அந்த அதட்டலின் கனம் இன்னும் நினைவில் இருந்தது. அது மனதில் விழுந்து பதிந்து விட்டிருந்தது. எல்லாவற்றையும்விட துக்ககரமானது சின்னம்மு இன்னமும் வாலிபத்தின் முறுக்கு எதுவும் குறையாமல் தனக்கு

எதிரில் நின்று நடமாடுகிறாள் என்பதுதான். ஹைத்ரோஸ் ஜெயிப்பதில் தம்புரானுக்கு விரோதமில்லை. ஆனால் சாப்புண்ணி நாயருக்கு, சின்னம்முவின் தகப்பனான சாப்புண்ணி நாயருக்கு, உதவ வேண்டும் என்பதற்கு என்ன தேவை? இந்தக் கேள்வியை தம்புரான் பல வழிகளில் பிரச்சாரம் செய்ய முயன்றார். வோட்டு சேகரிக்கச் செல்லும் சாப்புண்ணி நாயரின் எதிரில் அது அடிக்கடி பொங்கி வரத் தொடங்கிற்று: "ஒங்களுக்கென்ன வந்திச்சி இதிலே, சாப்புண்ணியாரே?"

"நான் ஹைத்ரோசோடே பக்கம், அதனாலே."

"நீங்க எப்பிடி அந்தப் பக்கம் சேரலாம்?"

"சேர்ந்தா என்ன?"

"ஒரு ஆசாரமான ஜாதியில்லே?"

சரிதான், சாப்புண்ணி நாயரின் குடுமி நுனி காற்றில் ஊசலாடிக்கொண்டிருந்தது. லீகுக்கு வோட்டு கிடைக்க வேண்டும் என்பதற்காக தலவெட்டத்து மூப்பில் நாயர் தன்னுடைய குடுமியைச் சிரைத்துக்கொள்ள முடியாது. இதற்கு பதில் கூறத் தக்க ஒரு 'லா பாயின்ட்' கிடைக்க வேண்டுமே என்று சாப்புண்ணி நாயர் உள்ளுக்குள் பிரார்த்தித்தார்: "வசமா மாட்டிக்கிட்டேனே, கடவுளே!"

வாக்காளர்கள் விடவில்லை: "உங்களுக்கு இல்லேல்ல வோட்டு?"

"எனக்குத்தான். ஹைத்ரோஸ் ஜெயிச்சா நான் ஜெயிச்ச மாதிரித்தான்."

"ஹைத்ரோஸ் மாப்பிள ஜாதியில்லே?"

மின்னல்போல் ஒரு யுக்தி சாப்புண்ணி நாயரின் மனதில் பட்டது: "அப்போ எதிர்க்கட்சியிலே நிக்கறது ஒசந்த நம்பி யாரா?"- சாப்புண்ணி நாயர் கேட்டார்: "அப்து என்றைக்கிருந்து ஹிந்துவானான்?"

வாக்காளர்களின் வாய் அடங்கிப் போயிற்று. ஆனாலும் அவர்கள் ஒன்று சொன்னார்கள்: "அது காங்கிரஸ்காரங்க ஆளில்ல?"

"இவன் லீகோடே ஆளாக்கும். காங்கிரஸ்னா என்ன ஒசத்தி?"

என்ன உயர்வு? அதைச் சொல்ல வாக்காளர்களுக்குத் தெரிய வில்லை. தன்னுடைய எதிராளி மடங்கிப் போனான் என்று

தெரிந்ததும் சாப்புண்ணி நாயர் அடித்து விளாசினார். ஹைறத் ரோசுக்கு வோட்டுப் போட வேண்டுமென்று அந்த மனிதனைச் சம்மதிக்கச் செய்தார். வெற்றியுணர்வுடன் சாப்புண்ணி நாயர் திரும்பி நடந்தபோதும் குடுமி காற்றில் ஊசலாடியது.

சாப்புண்ணி நாயர் ஓரளவு ஜெயித்துவிட்டார். தம்புரானோடு பேச ஒரு மறுயுக்தி கண்டுபிடித்துவிட்டாரல்லவா? கட்டியிருந்த விலங்கு சிதறிப் போனது போன்றதான ஒரு சுகம். அவர் ஊர் நெடுக நடந்து சொன்னார்: "ரெண்டு கட்சியிலேயும் மாப்பிளங்க தான்; இஷ்டப்பட்டவங்களுக்கு வோட்டுப் போடலாம்." அது கொஞ்சம் பலனைத் தந்தது. சாப்புண்ணி நாயரைப் பலருக்கும் பிடிக்கும். அவருக்கு இப்படி ஒரு சிக்கல் ஏற்பட்டதற்கு வருந்தி மௌனமாக இருந்த எல்லோரும் வாதிட்டார்கள்: "சரிதானே! காங்கிரஸ்காரங்க எதுக்காக மாப்பிளயே நிறுத்தணும்?"

கோயில் பிராகாரத்திலும் வீட்டு உள்கூடங்களிலும் அந்தக் கேள்வி அலைபாய்ந்தது. அது தம்புரானின் காதிலும் விழுந்தது. விசனமாயிற்று. இரண்டு நாட்கள் தொடர்ந்து யோசித்ததன் விளைவாக தம்புரான் தன் பதிலை வெளியிட்டார்: "காங்கிரசுக்கு ஹிந்து என்று முஸ்லீம் என்றும் வித்தியாசமில்லை."

"அதுதான் கெடுதல்" என்றார் சாப்புண்ணி நாயர். "தீண்டாமையை ஒழிக்கிறதும், கோயிலும் பள்ளிவாசலும் ஒண்ணாக் குறதைவிட இப்போ இருக்கிற மாதிரியே கோயில் கோயிலாவும் பள்ளிவாசல் பள்ளிவாசலாவும் இருக்கட்டுமேன்னு விடறதுதான் நல்லது. பழைய நடைமுறைகள் எதையும் அவர் விட்டுக் குடுக்க மாட்டாரு."

அந்த வார்த்தைகள் எல்லோருக்கும் சரியாகப்பட்டது. காங்கிரசுக்கு வோட் செய்தால் ஹிந்துவும் மாப்பிள்ளையும் என்ற வேறுபாடு போய்விடும். இது கவலைப்படத் தக்க ஒரு விஷயந்தா னென்று எல்லோருக்கும் தோன்றிற்று - ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும்.

தம்புரானுக்குக் கோபம் மூண்டது. அவர் தன்னுடைய எல்லா சக்தியையும் திரட்டித் தீவிரமானார். குடியானவர்களைக் கூப்பிட்டனுப்பி, கரணவர்களைக் கொண்டு சொல்லவும் செய்தார்: "உண்ணீ, நாம இந்தப் பொழுதுபோக்குக்கெல்லாம் போகக் கூடாது. அதெல்லாம் ரொம்ப மோசம. ஆனாலும் உண்ணி சம்பந்தப்பட்டதனாலே, ஏதாச்சும் செய்யாட்டா

குலத்துக்கு பேர் கெட்டுப் போயிருமில்ல?" என்பதாயிருந்தது கரணவரின் கட்சி.

அதனால் அரண்மனையின் மானம் காக்க அவர் எல்லா ஏற்பாடுகளையும் செய்தார். கரணவரை குத்தகைதாரரிடம் அனுப்பியும், குத்தகைதாரரைத் தன்னிடம் உழவுசெய்யும் உழவனிடம் சொல்லச் செய்தும் தம்புரானின் கட்டளைகளைத் தெரியப்படுத்தினார். ஊரிலுள்ள ஆட்களையெல்லாம் ஒன்று திரட்டினார்கள். தம்புரானின் சொற்படி கேட்காதவர்களைப் பணிய வைப்பதற்கான ஏற்பாடுகளையும் செய்தார்கள். கடன் திருப்பித் தராத சிலர்மீது நோட்டீஸ் அனுப்பப்பட்டது. புரோநோட்டு கொடுத்தவர்கள் மீதும் பணம் திரும்பக் கொடுப் பதற்கான நோட்டீஸ் அனுப்பப்பட்டது.

அடுத்த கட்சியும் சும்மா இருக்கவில்லை, ஜெயிப்பவர்கள் ஜெயித்துக் கொள்ளட்டும் என்ற மட்டில் இருந்த சாப்புண்ணி நாயரைப் புதிய சம்பவங்கள் எரிச்சலூட்டின. தேங்காய்க்கும் குறுமிளகுக்குமாக முதலாளிமார் கொடுத்திருந்த முன்பணத் தொகைகளைத் திரும்பப் பெற வேண்டுமென்று கருதி புரோ நோட்டுக்களைத் திருப்பிக் கேட்கத் தொடங்கினார். பணம் செலுத்தாதவர்கள் மீது நோட்டீஸ்களை அனுப்பினார்.

இரண்டு பக்கத்திலும் ஆத்திரம்; இரண்டு பக்கத்திலும் வெறி. ஊர்க்காரர்கள் எதிரில் அப்துவும் ஹைறத்ரோசும் மங்கிய சித்திரங்களானார்கள். தம்புரானும் சாப்புண்ணி நாயரும் பிரபல மானார்கள். சாப்புண்ணி நாயருக்கு முறைப்படி குளிப்பில்லை, சாப்பாடில்லை, உறக்கமில்லை. ஓட்டமான ஓட்டம். தலவெட்டத்து நாயர் ஒருவருக்கு உதவி செய்தால் உருப்படியான உதவியாக இருக்க வேண்டும்!

தேர்தல் சூழல் சுற்றுப்புறமெங்கும் பரவிற்று. மோதலும் உரசலும் மின்னலும். இதற்கிடையில் மதியச் சாப்பாடு சாப்பிட்ட ராரிச்சனின் கோஷக் குரல் இடிமுழக்கம் போல உயர்ந்தது: "இஸ்லாமுக்கு ஆபத்து! ஹைறத்ரோஸ் முதலாளிக்கு வோட் செய்யுங்கள்!"

உணர்வு பொங்க கம்பீரமாக இருந்தது அவனுடைய அந்த முழக்கம். ஹைறத்ரோஸ் முதலாளிக்கு வோட் செய்துவிட்டால் இஸ்லாமுக்கான எல்லா ஆபத்துக்களும் தீர்ந்துவிடும் என்று தோன்றச் செய்தது. ராரிச்சனின் முழக்கத்தில் சந்தமும் குரலும்

ஒன்றிணைந்தன. அவனை அப்துவின் கட்சிக்காரர்கள் கைவசப் படுத்தப் பார்த்தார்கள். அவர்களும் மதியப் பொழுதுக்கு அவனுக்கு கஞ்சி கொடுக்கத் தீர்மானித்தார்கள். இதை அறிந்த சாப்புண்ணி நாயர் சோறும் மீன் பொரியலும் கொடுக்கத் தொடங்கினார். அவன் இப்போது துண்டுப்பீடி புகைப்பதில்லை. முழுப் பீடிதான்; இடையில் எப்போதாவது சுருட்டும் புகைப்ப துண்டு. அது மட்டுமல்ல, ஓரிரண்டு பீடிகளை பாண்டனுக்கு சப்ளை செய்வதும் உண்டு. சாப்புண்ணி நாயருக்கு அவனை மிகவும் பிடித்துப் போயிற்று: "நல்ல சுறுசுறுப்பான பய"

"கெட்டிக்காரன்தான்!" - ஒரு முஸ்லீம் பெரியவரும் ஒப்புக் கொண்டார். ஹஸ்ஸன்தான் கோஷமிடுவோரையும் நோட்டீஸ் ஒட்டுவோரையும் கண்காணித்துக்கொண்டது. தான் உம்மாச் சுவின் உபதேசத்தின்படிதான் ஹைத்ரோசுக்கு உதவுவதாகச் சொல்லிக் கொண்டான். அவள் அவ்வாறு சொல்லியுமிருந்தாள். இஸ்லாமுக்கு உதவ நேர்ந்ததில் உள்ளுக்குள் அவனுக்கும் மகிழ்ச்சி தான். ஹஸ்ஸனின் இந்த மேல்ஸ்தானத்தை ராரிச்சன் மட்டும் சம்மதிக்கவில்லை. தானே ஒரு மேஸ்திரிதான் என்று அவனுடைய நினைப்பு. அவன் ஒரு கெட்டிக்கார உழைப்பாளியாக இருந்தத னால் அவனுடைய சுதந்திர உணர்வுகளைப் பிறர் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று.

தேர்தல் நாள் நெருங்கி வரவே சண்டையும் சச்சரவும் முற்றின. சாப்புண்ணி நாயருக்கு ஓய்வே இல்லை. தம்புரானுக்கு ஒரு பாடம் கற்பிக்காமல் அந்த தலவெட்டத்து மூப்பில் நாயர் உட்காரப் போவதில்லை. மூன்றரை மணிக்குப் பிறகுதான் அன்று அவர் சாப்பிட வந்தது.

"அப்பா ஏன் இவ்வளவு தாமசம்?" - சின்னம்மு கேட்டாள்.

"இப்பவாச்சும் வர முடிஞ்சதேன்னு நெனச்சிக்கோ."

"ஏன் இப்படிக் கெடந்து அலையறீங்க?"

"அந்தத் தம்புரான் பேசறது, நம்மளையெல்லாம் தோசை மாதிரி சுருட்டி அப்படியே விழுங்கணும் அப்படீன்னு."

"தம்புரான் எதையாச்சும் பேசிட்டுப் போகட்டும்."

"அப்படி விடக்கூடாதில்ல!"

"அரண்மனைக்காரங்க என்னவானாலும் அரண்மனைக்காரங்க தானே!" லட்சுமியம்மை இடையே நினைவுபடுத்தினாள்.

"அரண்மனைக்காரங்க அரண்மனைக்காரங்கதான். ஆனா தலவெட்டத்துக்காரங்க தலவெட்டத்துக்காரங்கதான். அவரும் தெரிஞ்சிக்கிடட்டும்."

"அரண்மனைக்காரங்க பெருமை அங்கேயே இருக்கட்டும்." சின்னம்மு சொன்னாள்: "ஆனா, நாம எதுக்கு இந்த முஸ்லீம் லீகுக்குப் பின்னாலே சுத்தறது?"

"அப்துவும் முஸ்லீம்தானே?"

"அதுக்கு அர்த்தம், ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் காங்கிரஸ்லே ஒரே மாதிரி ஸ்தானம் இருக்குங்கிறதுதானே? அது ஒரு தேசீயக் கொள்கைதானே?"

"கொள்கை! எனக்கு அதெல்லாம் கேக்கத் தேவையில்லே. ஹிந்துவும் முஸ்லீமும் ஒன்னாயிட்டா அது நல்லதா?"

"என்ன கெடுதல்?"

"கெடுதல்தான். நம்மளும் அவங்களும் ஒண்ணாக முடியுமா?"

"இப்போ அப்பாவும் ஹைத்ரோசும் ஒண்ணாயிரல்லே?"

"அது தேர்தலுக்காகத்தானே?"

"மத்த விஷயத்திலும் இது மாதிரி சேர்ந்திர வேண்டியது தானே!"

"சேர்ந்தாலும் சேரல்லேன்னாலும் சர்க்காருக்கு எதிரான பார்ட்டியெல்லாம் நமக்கு நிக்கத் தேவையில்லே. உனக்கு ஒரு உத்தியோகம் இருக்கு."

"நாளைக்கு இவங்க சர்க்காராயிட்டா?"

"காங்கிரஸ்காரங்களா! இவங்க ஒரு உதவாக்கரையில்ல."

"அப்படி ஜோசியம் சொல்லிற முடியாது."

"சின்னம்மு, உனக்கு நாக்கு நீளம் அதிகமாப் போச்சு. ஆனா, ஒரு விஷயம்: உனக்கும் அம்மாவுக்கும் ஒவ்வொரு வோட்டு இருக்கு. அதை ஹைத்ரோசுக்குப் போட்டிடுங்க. அதுக்குப் பிறகு என்ன வேணும்னாலும் பேசுங்க!"

"அதை மட்டும் சொல்லாதீங்க." சின்னம்மு தொடர்ந்தாள்: "நான் காங்கிரசுக்குத்தான் வோட்டுப் போடுவேன்."

"என்ன!" சாப்புண்ணி நாயர் ஒரு தடவை முறைத்தார். இந்த அடியை எதிர்பார்க்கவில்லை. கப்பலிலேயே கள்ளன் இருக்கி

றானா? சாப்புண்ணி நாயர் வெகுண்டு சீறினார். தன்னுடைய மகள் தன்னுடைய எதிராளிக்கு வோட் போடுவாள் என்பதை அவரால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை.

"நீ நான் சொல்றவங்களுக்கு வோட்டுப் போட மாட்டே, இல்லே?"

"நான் அப்துவுக்குத்தான் போடுவேன்."

"கூடாது."

"நீங்க அப்படிச் சொல்லக் கூடாது."

"அப்பா சொல்றதைக் கேட்டு நட, மகளே." லட்சுமியம்மை உபதேசித்தாள்.

"இது குடும்ப விஷயமில்லேம்மா."

"நீ கேப்பியா, மாட்டியா?"

"அப்பா, என்னை வற்புறுத்தாதீங்க."

"அப்படீன்னா நீ வோட்டுப் போடவே போக வேணாம். தெரியுதா?"

"உம்."

"போனியோ அப்புறம் இங்கே திரும்பி வரவேணாம்; நீ என் மகளில்லே - நெனச்சிக்கோ!"

"உம்!" - சின்னம்மு ஒரு தரம் மெதுவாகக் கனைத்துவிட்டு, அந்த இடத்தை விட்டு அகன்றாள். சாப்புண்ணி நாயர் சாப்பிட உட்கார்ந்தார்.

இந்த விவகாரம் இத்துடன் நின்றுவிடவில்லை. சாப்புண்ணி நாயர் அடிக்கடி லட்சுமியம்மையிடம் சொன்னார்: "சின்னம்மு இப்போ என்ன சொல்றா?"

"ஒண்ணும் சொல்லலே."

"நல்ல பேச்சுப் பேசி அவளை வழிக்குக் கொண்டு வா. தோத்தா அவமானம் எனக்குத்தான்."

"உம்." லட்சுமியம்மை ஒப்புக்கொண்டாள். என்ன அவமானம் என்று தனக்குத் தானே கேட்டுக்கொண்டாள். அனுசரணையான அந்த மனைவி தன் மகளிடம் எவ்வளவோ உபதேசித்துப் பார்த்தாள். சின்னம்முவை வசப்படுத்துவது ஆகக்கூடியதாயில்லை.

"ரகசியமாத்தானேடி, மகளே, வோட்டுப் போடறது?"

"அதுக்காக?"

"வோட்டுப் போடறதை உன் இஷ்டம்போல வச்சிக்க வேண்டியதுதானே?"

"அப்பா கிட்ட பொய் சொல்லணும், இல்லே? என்னை ஒண்ணும் காப்பாத்தவேணாம். நான் அப்துவுக்குத்தான் போடுவேன்; அதைத்தான் சொல்லுவேன்."

அந்தத் தாய் வழக்கம் போல தன்னுடைய, தனக்கு முன்னதான மூன்று தலைமுறைகளைச் சேர்ந்தவர்களுடைய விதியை நொந்து கொண்டு அங்கிருந்து போனாள்.

தேர்தல் நாள் விடிந்தது. எங்கும் இனம் புரியாத குமுறல். கோலாகலமெல்லாம் ஸ்தம்பித்துவிட்டதாகத் தோன்றும். அம்பு எய்யும் நேரத்தில் நாணுக்குள்ள விறைப்பு அது. கார்களும் சைக்கிள்களும் இடைவிடாமல் பாய்ந்து சென்றன. சிலர் தாமாகவே வந்து வோட் போட்டுவிட்டுப் போனார்கள்; சிலரைக் கூட்டி வந்து வோட் போடச் செய்ய வேண்டியிருந்தது. தம்புரான் ஒரு சலவை வேட்டியும், வெள்ளிப் பூண் பொருத்திய கைத்தடியு மாக ஒரு பக்கமாக உட்கார்ந்திருந்தார். கொஞ்ச தூரத்தில் சலவை வேட்டியும், தலைப்பாகைக் கட்டுமாக சாப்புண்ணி நாயர் அமர்ந்திருந்தார். பல இடங்களில் மூன்று பேர், நான்கு பேராகக் கூடி நின்றுகொண்டு கிசுகிசுத்தார்கள்: "சான்ஸ் இருக்கு."

"பார்க்கணும்."

"தெற்கத்திக்காரங்க வோட்டை வச்சித்தான் தீர்மானிக்கணும்."

"ஆனா பொம்பிளங்க வருவாங்களா?"

"ஒண்ணும் சொல்றதுக்கில்லே."

"உம்மாமார் வருவாங்களா?"

"அப்படீன்னா தொலைஞ்சது!"

"உம்?"

"திருட்டு வோட்டு ரெடி."

"ஆகமொத்தம் யோசிச்சா, வோட்டு எண்ணினாத்தான் எதையும் சொல்ல முடியும் போலே!"

இந்த விதமான கிசுகிசுப்புகள் நாலாபுறத்தும் நடந்தன. அதற் கிடையில் ஒரு முஸ்லீம் பெண்கள் கூட்டம் முக்காடிட்டபடி வோட் செய்ய வந்தார்கள்.

"எல்லாப் பொண்ணுங்களோடே வோட்டும் போடறதுக்கு இவங்களே போதும்." - ஓர் இளவட்டம் சொன்னான்.

"ஏன்?"

"இந்தப் பர்தாக் குப்பாயத்தோடே நிறத்தை மட்டும் மாத்தினாலே போதுமில்ல? ஆளுங்களைப் பார்க்கவே முடியாதில்ல! நீளக் குப்பாயங்கதானே இப்போ வோட்டுப் போடப் போகுது?"

இதற்கிடையில் நான்கு பெண்களும் ஒரு தம்புராட்டியும் வந்து வோட் போட்டுவிட்டுப் போனார்கள். வாக்காளர்களின் கூட்டம் குறையத் தொடங்கியபோது, வேட்டை நாய்களை விடுவது போல இரு கட்சிக்காரர்களும் பெயர்ப் பட்டியலைப் பார்த்து ஆட்களை அனுப்புவார்கள். மறுபடியும் ஒரு கூட்டம்; பிறகு அமைதி.

நான்கு மணிக்குத்தான் சின்னம்மு வந்தாள். அவள் சரேலென்று காங்கிரஸ் காம்ப்புக்குள் தாவிச் சென்று கேட்டாள்: "என் நம்பரைக் குறிச்சித் தருவீங்களா?"

"ஆ!" தம்புரான் தலை நிமிர்த்திப் பார்த்தார். அங்கே உட்கார்ந்திருந்த அப்துதான் லிஸ்ட்டைப் பார்த்து அவளுடைய நம்பரைக் குறித்துக் கொடுத்தான். சின்னம்மு அங்க போன அதே வேகத்தில் திரும்பி வந்தாள். காற்றில் ஆடிய அவளுடைய புடைவைத் தலைப்பு தம்புரானின் மூக்கை ஒட்டி உரசிச் சென்றது. ஹா, என்ன ஒரு வாசனை! அவள் பூத்துக்குள் செல்வதுவரை பார்த்து நின்றார்.

"அவ வோட்டு நமக்குத்தானே?" - அவர் அப்துவிடம் கேட்டார்.

"தெரியலே!"

தம்புரான் தன்னுடைய மூக்கைத் தடவிக்கொண்டு ஏதேதோ கற்பனைகள் செய்தார். பகையும் பரிமள நினைவும் கூடிக் கலந்து மனதில் சஞ்சரித்தன.

சின்னம்மு வெளியில் வந்தபோது அப்து அவளை அணுகிக் கேட்டான்: "யாருக்கு வோட் போட்டது?"

சின்னம்மு அவனை உற்று நோக்கினாள். சுடர்விடும் பார்வை. தொடர்ந்து கேட்டாட்: "நீங்க ஒரு ஆம்பிளதானா?"

"அதை இப்ப காட்றேன்." அவன் ஒரு கார் டிரைவரைக் கூப்பிட்டுச் சொன்னான்: "இவளை என் வீட்லே கொண்டுபோய் விட்டுரு- என் வீட்லே."

"நீங்க வரல்லியா?" - சின்னம்மு கேட்டாள்.

"நான் பின்னாலே வர்றேன்!"

"தேர்தல் முடிஞ்ச பிறகா?"

"ஆமா, அதை முடிச்சிட்டு."

சின்னம்மு குளுமையாக அப்துவை உற்றுப் பார்த்தாள், நிலா ஒளிர்வதைப் போல. பிறகு சொன்னாள்: "கொஞ்சமா தெம்பு வருது!"

"கார்லே ஏறிக்கோ."

அவள் ஏறி உட்கார்ந்தாள். உம்மாச்சுவின் வீட்டை நோக்கிப் போய்க்கொண்டிருந்த அந்தக் கார் பார்வையிலிருந்து மறையும் வரை அப்து பார்த்தபடி நின்றிருந்தான்!

# 25. சின்ன உம்மாச்சு

"யாரு வந்திருக்கிறது? ஏன் சின்னம்மு கண்ணுதானே! வாடி செல்லக்கண்ணு..." அறை வாசலில் வந்து நின்ற சின்னம்முவை உம்மாச்சு வரவேற்றுச் சொன்னாள். மகிழ்ச்சியினால் அவளுடைய முகத்தின் சுருக்கங்கள் மறைந்தன. இந்த மாதிரியான சந்தர்ப்பங்களில்தான் வாழ்க்கை ஒரு விருந்தாளியைப் போல. அது இன்று அவளுடைய அறையைத் தேடி வந்திருக்கிறது. கண்ணீரில் மூழ்கிக் கிடக்கும் அந்த ஆத்மா உச்சியில் வந்து சுத்தக் காற்றைச் சுவாசிக்கிறது. தன்னைத்தானே மறக்க ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது.

வந்தது சின்னம்மு என்றதனால் உம்மாச்சுவுக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. சின்னம்மு மனத்தளவில் அவளுடைய மகளேதான். சாப்புண்ணி நாயரின் குடும்பமும் தன் குடும்பமும் வெவ்வேறு என்று அவளால் கருத முடியவில்லை. ஒரு மரத்தின் இரண்டு கிளைகள். தண்டுப் பகுதியில் அவை இரண்டும் ஒன்றே. அவள் சின்னம்முவை அருகில் அழைத்தாள்:

"வா, இந்தக் கட்டில்லே குந்திக்கோ. என்ன, உம்மா பக்கத்திலே உக்காந்திருக்க உனக்கு மடி உண்டோ?" - உம்மாச்சு கொஞ்சம் கேலி கலந்த குரலில் கேட்டாள்.

"என்ன அப்படிச் சொல்றீங்க? நீங்க என் அம்மாதானே!" சின்னம்மு அவளுக்குப் பக்கத்தில் கட்டிலில் சென்றமர்ந்தாள். உம்மாச்சுவின் முகம் ரொம்பவும் தெளிந்தது. அந்தப் பெண்மணி சின்னம்முவின் முதுகைத் தடவிக்கொண்டு கேட்டாள்:

"நீ இப்போ இஸ்கூலுக்குப் போறேயில்ல?"

"போறேம்மா."

"ஒனக்கு அந்த வேலை பிடிச்சிருக்கில்ல?"

"எனக்குப் பிடிச்ச வேலையாக்கும்."

"பின்னே, பிள்ளைங்களை உருப்படியாக்கிற வேலையில்ல? ஒரு புண்ணியமான காரியம்."

"அப்படித்தான் எனக்கும் தோணுது."

"அப்போ, என் செல்லத்துக்கு இப்போ எவ்வளவு சம்பளம் கெடைக்குது?"

"இருபத்தஞ்சி ரூபா."

"இருக்கட்டும். உன்னோடே துணிமணி மத்ததுக்கு அது சரியாப் போகும். ஒங்கப்பா தடையா இல்லேல்ல? அப்பாவுக்கும் வயசாகத் தொடங்கிறசில்ல, பாவம்."

"உம்--." சின்னம்மு ஒரு முறை உம்கொட்ட மட்டும் செய்தாள். அப்பாவைப் பற்றியதான் அந்தப் பிரஸ்தாபம் அவளுடைய இருதயத்தில் மெதுவாக ஒரு சலனத்தை உண்டாக்கிற்று. அவள் ஒரே இடத்தை நோக்கிப் பார்வையைச் செலுத்தியவாறு அசையாமல் உட்கார்ந்திருந்தாள்.

"என்ன யோசிக்கறே?" -- உம்மாச்சு கேட்டாள்.

"ஒண்ணுமில்லே."

"லச்சுமிக்கா...."

"உடம்புக்கு ஒண்ணுமில்லே."

"ரொம்ப நாளாச்சி பாத்து -- நான் கெடு முடிஞ்சு ஒரு அடகுச் சாமானைப் போல இங்கேயே கெடக்கிறேன். உம்!" அவள் நெடிதாக ஒரு தடவை மூச்சுவிட்டாள் : "இவ்வளவு நடந்தாச்சி; இனிமே சும்மா கெடக்க வேண்டியதுதான்."

"நடந்ததைப் பத்தி நெனச்சி துயரப்படாதீங்க." சின்னம்மு சமாதானப் படுததினாள் : "நடந்ததைத் திரும்பிப் பார்த்தா நமக்கு யாருக்கும் வாழ முடியாது."

"அதுவும் சரிதான்...." அவள் சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டுக் கேட்டாள் : "இருக்கட்டும், நீ சொகமா இருக்கேயில்ல!"

"சுகம் வந்துகிட்டிருக்கு." -- அழுத்தமாகத்தான் சின்னம்மு அதைச் சொன்னாள். ஆனால் உம்மாச்சு அதைக் கவனிக்கவில்லை. அவர்களிடையே பேச்சு தொடர்ந்தது :

"இனி ஒரு கல்யாணம் மட்டும் முடிஞ்சால் என் கண்ணுக்கு எல்லாம் ஆயிரும்!"

"அதுவும் ஆயிட்டதா வச்சிக்கிடுங்கம்மா." -- உள்ளே வந்து கொண்டிருந்த அப்துதான் அதற்கான பதிலைச் சொன்னது. அதைச் சொல்லி முடித்தபோது அப்துவுக்கு தன்னைப் பற்றித் தனக்கே பெருமை ஏற்பட்டது.

"அப்பிடியா?," அம்மா வியப்பு கலந்து கேட்டாள் : "என் ஆண்டவனே! அப்பிடியா, இவ சொல்லவே இல்லியே! சாப் புண்ணியாரும் சொல்லலே. யார்ரா இவ புருசன்?"

"நான் தான்."

"போடா போக்கிரி. இல்லாதது பொல்லாததெல்லாம் பேசாதேடா!" உம்மாச்சு கோபித்துக்கொண்டாள் : "எல்லாமே வெளையாட்டுத்தானா?"

"விளையாட்டில்லேம்மா. சின்னம்முவை நான் கட்டிக்கிட்டே வந்திட்டேன்."

"என்ன!"

"அப்படித்தாம்மா.". சின்னம்மா குனிந்தபடி அமைதியாகச் சொன்னாள். "நானும் வந்திட்டேன்."

சின்னம்முவின் வார்த்தைகளைக் கேட்டதும் உம்மாச்சு அமைதியானாள். அவள் அப்துவைக் கிண்டல் செய்வதாகத்தான் உம்மாச்சு நினைத்தாள். "போக்கிரி! ஒனக்கு அவதான்டா சரி. தேர்தல்லே நீ நிக்கறதுக்கு பதிலா அவ நின்னிருக்கணும். ஏது? அப்பிடீன்னா அவ ஒன்னைவிட நல்லா பிரசங்கம் பண்ணியிருப்பா." அவள் குலுங்கிச் சிரித்துக் கொண்டே தொடர்ந்தாள்:

"போகட்டும், வோட்டுக் கதை என்னாச்சி?"

"ஒண்ணும் சொல்றதுக்கில்லே."

"உம்--ம்." உம்மாச்சு அழுத்தமாக ஒரு முறை செருமினாள்.

"அப்புறம், உம்மா..." அப்து சொன்னான்: "இவள் வம்புக்காரிதான். அதனாலேதானே இவளை நான் கூட்டிக்கிட்டு வந்தது?"

"போதும்டா, நிறுத்து. வேறே யாராவது கேட்டிறப் போறாங்க..."

"எல்லாருக்கும் தெரிய வேண்டியது தானேம்மா?"

"நீங்க வேடிக்கைக்குச் சொல்றீங்களாக்கும்னு அம்மா நினைக்கிறாங்க."

சின்னம்மு தொடர்ந்தாள்: "இது நிஜம்மாத்தாம்மா. நான் அப்துவையும், அப்து என்னையும் ஒருத்தருக்கொருத்தார் விரும்பறோம். நாங்க ஒண்ணா வாழணும்னு ஆசைப்படறோம். அம்மா எங்களை ஆசீர்வதிக்கணும்."

"யா ரப்பில் அலமீன்..." உம்மாச்சுவின் பார்வை ஆணி அடித்தது போல நிலைகுத்தி நின்றது. கேட்பது என்ன! தான் புரிந்து கொண்ட அர்த்தம்தானா சின்னம்மு சொன்ன வார்த்தைகளுக்கு என்று அவள் சந்தேகித்தாள்.

"ஒனக்கு பைத்தியம் பிடிச்சிட்டதா, மகளே?"

"எனக்கு பைத்தியம் விலகிடுச்சி. நாங்க சேர்ந்து வாழணும்னு விரும்பறோம்."

"நீ என்ன சொல்றே! நீ புத்திசாலின்னில்ல நான் நெனச்சிக் கிட்டிருந்தேன்!"

"சரிதானே, அதனாலேதான் நேர்வழியிலே காரியங்களைச் செய்ய ஆசைப்படறேன்." சின்னம்முவிடமிருந்து பதில் வர கொஞ்சம்கூடத் தாமதமாகவில்லை. இனி என்ன சொல்வதென்று உம்மாச்சுவுக்கும் தெரியவில்லை. நிறைய சிந்தனைகள் மனதில் அழுந்தின. எல்லாம் பொங்கி எழுந்தன. நெற்றி நரம்புகள் வேகமாகத் துடித்தன. அவள் கட்டிலில் சாய்ந்தாள். மூளையில் என்னவெல்லாமோ வெடித்துச் சிதறின. எதிரில் இருக்கும் எல்லாவற்றையும் அடித்து நொறுக்க வேண்டுமென்று அவளுக்குத் தோன்றிற்று. இரண்டு பேரையும் வெளியே போகச் சொல்ல வேண்டுமென்று அவள் விரும்பினாள். ஆனால் குரல் எழவில்லை. முளைத்துப் பெருகும் கோபம் அழுகையாகத்தான் வெளியே வருகிறது. அவள் சடமானாள்.

"என்னம்மா யோசிக்கிறீங்க?" -- அப்துதான் கேட்டான்.

உம்மாச்சு சிறிது நேரம் மகனின் முகத்தில் கண்களைப் பதித்திருந்தாள். பிறகு திடீரென்று வெடித்த அழுகை:

"மகனே, என்னெக் கொன்னிருடா. அதுக்குப் பெறகு என்ன வேணும்னாலும் செஞ்சிக்கோ."

அப்துவுக்குத் தளர்ச்சி தட்டிற்று. அதைப் பார்த்திருந்த சின்னம்மு ஓர் அடி முன்னால் நகர்ந்து வந்து சொன்னாள்: "யாரும் யாரையும் கொல்லவும் வேண்டாம், சாகவும் வேண்டாம். நான் போயிடறேன். அம்மாவுக்கு இஷ்டமில்லேன்னா ஒரு நிமிஷம்கூட நான் இங்கே இருக்க மாட்டேன். அதைப் பத்தி பயப்பட வேண்டாம்." தன் வார்த்தைகள் எந்த ஆழம்வரை செல்கின்றன என்று தெரிந்துகொள்வதற்காக அவள் காத்திருந்தாள். உம்மாச் சுவின் நரம்புகள் தெறித்தன. பல பேரிடிகளை அவள் தன்

வாழ்க்கையில் பொறுத்துக்கொண்டதுண்டு. இப்படி ஒன்றைப் பொறுத்துக்கொள்ள நேருமென்று அவள் நினைத்ததில்லை.

"அம்மாவுக்கு இஷ்டமில்லே. அப்போ நான் இங்கே இருக்கக் கூடாது." சின்னம்மு எழுந்திருந்தாள்.

"உம்மா..." அப்து ஒரு வேண்டுகோள் விடுக்கும் குரலில் கூப்பிட்டான்.

"மகளே!" அழுவது போன்றுதான் உம்மாச்சு பேசினாள். "எனக்கு ஒன்னெ ரொம்பப் பிடிச்சிருக்கு. ஒரு மக மாதிரிதான். ஆனா ஒங்கப்பாவை மறக்கக் கூடாது. இந்தப் புத்தியில்லாதவனை எடுத்துத் தூக்கிச் சுமந்த தழும்பு ஒன் அப்பாவோடே கையிலே இன்னமும் இருக்கும்மா...அதையெல்லாம் நெனச்சியாடா மகனே..."

"அப்பா ஒரு மகன் மாதிரி அவரை நினைக்கிறாரு; நான் மக. அப்போ..." சின்னம்மு அங்கே நிறுத்தினாள்.

"ஆனா, எப்படியானாலும் இது ஒரு மாப்ளாரோடே குடும்பம். அதை மறந்திராதே!"

"மனுஷங்களோடே குடும்பத்திலே குடியிருக்க நான் தயாரா இருக்கேன்."

"அதைப் பாத்துக்கிட்டு அந்தத் தகப்பன் அதுக்குப் பெறகு உசிரோடே இருப்பாரா? அதைப் பத்தி ஏன் நீங்க யோசிக்கலே?" உம்மாச்சுவின் நெஞ்சிலிருந்து ஒரு தேம்பல் கிளம்பிற்று. சிறிது நேரத்திற்கு யாரும் எதுவும் பேசவில்லை. தொண்டையில் முள் குத்திக் கொண்டது போலான ஓர் அனுபவம். கடைசியில், அப்து தான் மௌனத்தை முறித்தது:

"என்ன சொன்னாலும் வரவேண்டியதெல்லாம் வந்தாச்சி. இனி பின்வாங்கறதுக்கு முடியாது."

"இந்த வீடு வரைக்கும் வந்ததனாலே அவளுக்கிப்போ ஒரு கொறச்சலும் வந்திரல்லே. என்னெப் பாக்கத்தான் வந்தா, அவ்வளவுதான். நீ அவளெ வீட்லே கொண்டு போய் விட்டிரு." -- உம்மாச்சு அதட்டும் குரலில் இதைச் சொன்னாள்.

"அதில்லே விஷயம்..." அப்து தலை குனிந்து நின்றான்.

"பின்னே?"

சின்னம்முதான் பதில் சொன்னது:

"நான் தனி ஆளா வரல்லே."

"அப்பிடீன்னா?"

அதற்கு யாரும் பதில் சொல்லவில்லை. உம்மாச்சு சின்னம்முவின் முகத்தைப் பார்த்தாள். அப்துவின் முகத்தைப் பார்த்தாள். மீண்டும் சின்னம்முவின் உதட்டிலும் மார்பிலும் வயிற்றிலும் ஆக எல்லா இடங்களிலும் அந்த அனுபவப்பட்ட கண்கள் சுழன்று நீந்தின. சட்டென்று அந்தப் பெண்மணி படுக்கையிலிருந்து தாவி எழுந்தாள்:

"ஓ, என் மகனே, நீ இப்பிடி ஒரு அநியாயத்தைச் செஞ்சிட்டியேடா!" அவள் விம்மி அழுதாள். "நான்... நான் எதுக்காக இனிமே இந்த ஒலகத்திலே இருக்கணும்? எப்படி அந்தத் தகப்பன் மொகத்திலே முழிக்கறது! ரெண்டு பேருமாச் சேந்து என்னெக் கொண்ணுருங்க. அதுக்குப் பெறகு நீங்க ரெண்டு பேரும் சொகமா இருந்துக்குங்க..." அந்த அழுகையும் பேச்சும் நீண்டு போகுமென்று அவர்களுக்குத் தெரியும். அவ்வளவு நீள்வதை அனுசரித்து அப்து உருகி உருகிப் போய்விடுவான் என்பதைச் சின்னம்மு புரிந்து கொணடாள். அவளைப் பொருத்தவரை அந்த அழுகை அர்த்தசூன்யமாகத்தான் தோன்றிற்று. அவள் எழுந்து நின்றுகொண்டு சொன்னாள்:

"போதும்மா, போதும்."

உம்மாச்சுவின் பேச்சு நின்றது. சின்னம்மு தொடர்ந்தாள்:

"நானும் ஒரு பொண்ணுதான். எனக்கும் ஒரு இருதயம் இருக்கு!"

அது இடிமுழக்கமாயிருந்தது. உம்மாச்சுவின் அழுகையும் நின்றது. சூழல் நிசப்தமாயிற்று. உம்மாச்சுவும் அப்துவும் சின்னம்முவின் முகத்தைப் பார்த்தார்கள். அந்தச் சிவந்த கன்னங்கள் மேலும் சிவந்தன. அழகான அந்த மூக்கின் நுனி விடைத்தது. சின்னம்மு கைகளைத் தேய்த்தபடி திரும்பிப் பார்த்துக்கொண்டு தொடர்ந்தாள்:

"எல்லாரும் விரும்பறது அவங்கவங்க பாதுகாப்பைத்தான். நான் யாருடைய பாதுகாப்பையும் தகர்க்கணும்னு ஆசைப்படல்லே. ஆபத்துக்களே இல்லாமே நான் இதுவரைக்கும் இருந்திரல்லே. ஆனா, நான் ஒரு மனுஷனைத்தான், ஒரு ஆம்பிளையைத்தான் விரும்பினது. விருந்தும் ஆரவாரமும் இல்லேன்னாலும் உறவு உறவில்லாமேப் போயிடாது. நான் ஒருத்தரை விரும்பினா விரும்பினதுதான். அங்கே மதம், மானம், பாதுகாப்பு -- இதைப் பத்தியெல்லாம் நான் யோசிச்சுக்கிட்டு நிக்கலே..."

"மகளே, மத்தவங்க என்ன சொல்வாங்க?" உம்மாச்சு குரல் தடுமாற்றத்துடன் கேட்டாள்.

"பலதும் சொல்வாங்க. நாக்கு அசர்ற வரைக்கும் பேசுவாங்க. இன்னொரு விஷயம் கிடைக்கிற வரைக்கும் அவங்களுக்கு இதுதான் பேச்சுக்கான விஷயமா இருக்கும். ஆனா, நான் ஒரு பட்டரையோ, நம்பூதிரியையோ, எம்பிராசனையோ கூப்பிட்டு பேருக்கு ஏத்துக்கிட்டா இப்படிப் பேசறவங்களுக்குத் திருப்தியாப் போயிடும். மானத்துக்கு எந்த வித எல்லைக்கோடும் இல்லே. அப்படி எத்தனை கதைதான் கேக்கணும்? எனக்கு அது சம்மதமில்லே."

"மகளே.."

"இல்லே. எனக்கு ஒரு கணவன்தான் உண்டு. இதோ நிக்கிறாரே இவர்தான்! இவருக்குத் தெம்பிருக்குமானா வாழ்க்கைக் கடைசி வரைக்கும் நான் இவரோட மனைவிதான்! நான் இவரோடே மனைவியாத்தான் இருப்பேன். நான் தேவடியாளா ஆக மாட்டேன்; ஒரு மனைவியாத்தான் இருப்பேன்."

"ஆனா ஒன்னோட அப்பாவை நெனச்சிப் பாக்க வேணாமா?..." உம்மாச்சு அவளுடைய கையை எட்டிப் பிடித்தாள்.

"அப்பா அம்மா- இதனோடேயெல்லாம் விலை என்னன்னு எனக்கும் தெரியும். நான் ஒண்ணும் கல்லில்லே. கல்லில்லாமே இருக்கிறதனாலேதான் எனக்கு இந்தத் தொந்திரவெல்லாம் வந்து சேர்ந்தது."

"சின்னம்மு...மன்னிச்சிக்கோ!" - அப்து குறுக்கே வந்து அமைதிப்படுத்த முயன்றான்.

"மன்னிக்கணுமாமில்ல?" அவள் அவனுடைய முகத்தைப் பார்த்தாள்: "என்னைக் காட்டிலும் பொறுமையா பொண்ணுங்க எத்தனை பேரை நீங்க பார்த்திருக்கீங்க? இதோ உங்க அம்மா கிட்ட கேளுங்க. அவங்களும் ஒரு பொண்ணுதான். ஒரு பொண் ணோடே கவலைகள் எல்லாத்தையும் அனுபவிச்சவங்கதான்."

"நெசந்தான் மகளே!" உம்மாச்சுவின் கண்கள் நிறைந்தன: "நான் நெறையத் தெரிஞ்சிக்கிட்டேன்; நல்லதும் கெட்டதும் தெரிஞ்சிக் கிட்டேன். அதனாலேதான் சொல்றேன், கொஞ்சம் சொகத்துக் காக ஆசைப்பட்டு நெறைய கஷ்டங்களை வாங்கிக் கட்டிக்கக் கூடாதுன்னு."

"ஆனா, கை நனையாமே மீன் பிடிக்க முடியாது." - சின்னம்மு உடனே பதில் தந்தாள். "மீன் பிடிக்க நேர்ந்தப்போ நீங்களும் கை நனைச்சிருப்பீங்க!"

அந்தக் குத்து சரியாகவே பாய்ந்தது. உம்மாச்சு தளர்ந்து போனாள். அவளுடைய தொண்டையிலிருந்து ஒரு முனகல் கிளம்பிற்று.

"இதையெல்லாம் நான் பாக்கணும்னு இருக்கு."

"பார்க்கணும்." சின்னம்மு அழுத்தமாகச் சொன்னாள். "நீங்க பலதும் அனுபவிச்சிருக்கீங்க. இனிமே நாங்க அனுபவிக்கிறதைப் பார்த்துக்கிட்டிருந்து ஆசீர்வாதம் பண்ணுங்க. அதுதான் வேண்டியது!"

சின்னம்முவின் வார்த்தை கேட்டு, உம்மாச்சு அவளுடைய முகத்தை உற்றுப் பார்த்தாள். இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு கண்ணாடியில் பார்த்த அனுபவம் அவளுக்கு ஏற்பட்டது. அந்த அம்மா மௌனமானாள்.

"உம்மா சம்மதிக்கணும்." அப்து வேண்டினான்: "உம்மா சம்மதிக்கலேன்னா அப்புறம் என்னதான் எங்களுக்கு சுகம்?"

"என் பிள்ளைங்களா, இந்த விஷயத்திலே என்னெ சம்மதிக்க வைக்காதீங்க! என்னாலே சம்மதிக்க முடியாது. உங்க இஸ்ட்டம் போலே நீங்க செய்துக்கலாம். அதனாலே நல்லதோ கெட்டதோ ஒங்களுக்குத்தான். ஆனா எனக்கதிலே சம்மதமில்லே."

"உம்மா என்ன இப்படிச் சொல்றீங்க?"

"அப்பிடித்தான் சொல்லணும், மகனே. நடந்தது பலதும் ஒனக்குத் தெரியாது. என் வாயாலேயே சம்மதிக்கணும்னு மட்டும் சொல்லாதீங்க! இதுக்குச் சம்மதிச்சா பெறகு நான் மனிசன்லேயும் சேர்த்தியில்லே, மிருகத்திலேயும் சேர்த்தியில்லே. நான் ஒங்க ரெண்டு பேர் காலையும் பிடிக்கிறேன்; என்னெ சம்மதிக்க வச்சிராதீங்க."

இறுதியில் அவளுடைய நெஞ்சு நொறுங்கிப் போயிற்று. அப்துவின் இருதயமும் கலங்கிவிட்டது. இனியும் அம்மாவை வற்புறுத்துவது ஒரு பாவமாக அவனுக்குத் தோன்றிற்று. அவன் பேசாமல் நின்றிருந்தான். ஆனால் சின்னம்முவால் பேசாதிருக்க முடியவில்லை. அவள் அமைதியாக ஒரு விளக்கம் கொடுத்தாள்:

"அம்மா சொல்றதிலேயும் விஷயமிருக்கு. அம்மாவோடே சம்மதத்தோடேதான் செஞ்சிக்கிட்டோம்னு சொல்லக்கூடாது. இல்லே?"

"அதுதான்."

"அப்படீன்னா யார்கிட்டேயும் சொல்ல வேணாம், என்ன?"

"உம்." உம்மாச்சு ஒப்புக்கொண்டாள். சின்னம்மு என்னவென்று தெரியாமலே அப்துவின் நேரே ஒரு முறை கண்சிமிட்டிக் காட்டவும் செய்தாள். உம்மாச்சு கட்டிலில் சாய்ந்தாள். சின்னம்மு அவளுடைய முதுகைத் தடவிக் கொடுத்துக்கொண்டு சமாதானப் படுத்தினாள்:

"செய்ததெல்லாம் சரிண்ணு நான் சொல்லலே. ஆனா, இப்போ மன்னிக்கக் கூடியதான் ஒரு விஷயந்தான் நடந்திருக்கு. நாளை அதை ஒரு பெரிய பாபமா மாத்திடக்கூடாது. அவ்வளவுதான்!"

கண் மூடிகி கிடந்த உம்மாச்சு முனகினாள்: "உ..ம்."

ஒரு நிமிடம் அங்கே நின்றிருந்துவிட்டு, சின்னம்மு வெளியே போனாள்; அப்து பின்னால் தொடர்ந்து சென்றான். அவர்கள் சாய்ப்பறைக்குப் போனார்கள்.

"இனிமே என்ன?" - சாய்ப்பறைக்குச் சென்றதும் அப்து கேட்டான்.

"வாழ வேண்டியதுதான்."

"எப்படி?"

"இப்போ இருக்கிற மாதிரி."

"உம்மா சொன்னதிலே விவரமிருக்கு."

"என்ன?"

"எங்கேயாச்சும் ஒரு எடத்திலே பிடிப்பு இல்லாமே நிக்க முடியுமா?"

"அப்போ, நீங்க எனக்கு நியாயம் சொல்லித் தரவா, இல்லாட்டி மனைவியாக்கவா இங்கே என்னைக் கூட்டி வந்தது!"

"சம்பந்தமில்லாமே பேசாதே. ஒரு சமுதாயம் இல்லாமே இருக்க முடியுமா?"

"சமுதாயம் இருந்தா மட்டும் நாம் இருந்திட முடியுமா? முஸ்லீம் களான ஏழைங்களோடே எல்லாத்தையும் முஸ்லீம்களே பார்த்துக் கிடுவாங்களா?"

"அது முடியுமா?"

"ஹிந்துக்களெல்லாம் ஹிந்துக்களா இருக்கிறதனாலேயே காப்பாத்திக்கிட முடியுதா?"

"இல்லே."

"அப்படீன்னா, கையிலே காசிருந்தா எல்லாம் சரியாய்ப் போயிடும்கிறதுதானே? இன்னிக்கு காசுதான் பெரிசு. சமுதாயம் கிறது ஒண்ணுமில்லே. அதெல்லாம் பழைய கதையாக்கும்!"

"இருந்தாலும் சின்னம்மு, மனுஷங்க இல்லாமே இருக்க முடியுமா?"

"இல்லே. நாம மனுஷங்களுக்கு எதிரியில்லே." சின்னம்மு அழுத்த மாகச் சொன்னாள்: "பின்னே, நான் இப்போ இருக்கிற மாதிரியே இருக்கிறேன்; நீங்க நீங்க இருக்கிற மாதிரி. அப்படியே இருந்து குடும்பம் நடத்துவோம். என்ன, சம்மதம்தானா?"

"சம்மதம் கேக்கறதுக்கான நேரம் தாமதமாகிப் போச்சி." அப்து சிரித்தபடி அவளுடைய கைவளையல்களைப் பிடித்துத் திருகிக் கொண்டிருந்தான்.

"ஓ, தெம்பு வந்திருச்சாக்கும்!" - சின்னம்மு வெடித்துச் சிரித்தாள். தொடர்ந்து அப்துவின் உள்ளங்கையில் மெதுவாக விரலை அழுத்தினாள்.

அன்று அந்த வீட்டில் யாரும் உறங்கவில்லை.

## 26. ஒரு வெற்றி ஊர்வலம்

வெளியில் மோதல் முடிவடைந்தது; உள்ளே ஆரம்பித்திருந்தது. எலக்ஷன் முடிந்தது. சாப்புண்ணி நாயர் சார்ந்த கட்சி வெற்றி கண்டது. ஹைத்ரோசின் வெற்றி சற்றே கோலாகலமாகவே கொண்டாடப்பட்டது. ஒரு பஸ், ஆறு கார்கள், நான்கு மாட்டு வண்டிகள் வண்ணக் காகிதங்களால் அலங்கரிக்கப்பட்டன. எல்லா வாகனங்களிலும் கொடி கட்டி ஆரவாரம். காரில் தலைவர்கள் ஏறியிருந்தார்கள்; பஸ்ஸில் ஆதரவாளர்களும் பணியாட்களும். உற்சாகம் பொங்கிய பொதுமக்களுக்காகத்தான் மாட்டு வண்டி களை ஏற்பாடு செய்தது. எல்லாவற்றிலும் ஆட்கள் நிரம்பி வழிந்தார்கள். செண்டை, மத்தளம், குறுங்குழல் முதலிய வாத்தியக் கருவிகள் எல்லா வாகனங்களுக்கும் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டன. மாட்டு வண்டிகளில் சில பறைக்கொட்டுகளும் வைக்கப்பட்டன. விருப்பப்பட்டவர்களெல்லாம் அவற்றை முழக்கலாம். அது ஒரு பொதுமக்களின் விருப்பத்திற்கான கருவியாகக் கருதப்பட்டது. இந்தப் பரிமாறலை நடத்தியது ஹஸ்ஸன். அவன் பஸ்ஸில் ஏறிய கூட்டத்துடன் இருந்தான். அருகில்தான் கோஷம் முழக்கும் ராரிச்சனும் உட்கார்ந்திருந்தான். அது ஹஸ்ஸனுக்கு அவ்வள வாகப் பிடிக்கவில்லை. அவனைப் பொதுமக்கள் கூட்டத்துடன் ஏற்றியிருக்க வேண்டுமென்பது ஹஸ்ஸனின் எண்ணம். அவன் ராரிச்சனிடம் சொன்னான்:

"நீ மாட்டு வண்டியிலே ஏறியிருக்கலாமே?"

"ஏன்?"

"அதிலே நெறய இடமிருக்கு. சும்மா ஏன் இங்கே உக்காந்து நெரிச்சிக்கிட்டிருக்கே?"

"அப்படீன்னா நீங்க அங்கே போயி ஏறிக்கிடுங்க. நான் ஒரு மேஸ்திரியா இருந்துக்கிட்டு பஸ்ஸிலே போகாட்டா நல்லா இருக்காதில்ல?" ராரிச்சனின் இந்தக் கேள்வி பஸ்ஸில் ஒரு ஒட்டுமொத்தச் சிரிப்பை உண்டாக்கிற்று. ஹஸ்ஸன் வெட்கிப் போனான்.

ஊர்வலம் ஆரம்பிப்பதற்கு முன்பாகவே மாட்டு வண்டியிலிருந்து முரசொலியும் பாட்டும் ஆரம்பமாகிவிட்டன. அது கேட்டபோது அங்கே இருப்பது சரியில்லை என்று ராரிச்சனுக்குத் தோன்றிற்று; தம்பட்டமாவது அடித்துக்கொண்டிருந்திருக்கலாம். தன்னுடைய தகுதிக்கே ஏற்றாற்போலத்தானே பயணம் இருக்க வேண்டுமென்று கருதி அவன் சும்மா இருந்தான். அதற்கு முன்பே மூன்று தடவைகள் அவன் பஸ்ஸில் ஏறியிருக்கிறான். இரண்டு தடவைகள் தள்ளி ஸ்டார்ட் செய்ய உதவியதன் கைம்மாறாக, மூன்றாவது தடவை இரக்க சிந்தையான ஒரு கண்டக்டர் அவனை, ப்ரீயாக ஏற்றிப் போனான் என்பதாகப் பேச்சு. நாலாவதான இந்த வாய்ப்பை விட்டுக்கொடுக்க ராரிச்சன் தயாராக இல்லை.

எல்லாம் தயார். மதம் பிடித்து நிற்கும் யானையைப் போல யாத்திரை புறப்படத் தயாரானது அந்த ஊர்வலம். இதற்கிடையில் காரிலிருந்த ஒரு செந்தாடிக்காரன் சொன்னான்:

"இப்படி நடக்கும்னு நெனச்சிக்கூடப் பார்க்கலே."

"ஆனா, இஸ்லாமின் நிலமை இப்படித்தான் வரும்." அடுத்திருந்த ஒரு மௌல்வியார் கருத்துத் தெரிவித்தார். அவருடைய தலையில் ஒரு கூம்பன் தொப்பியும் அதன்மீது தலைக்கட்டும் இருந்தன; நெற்றியில் காலணா வட்டத்தில் கனத்த தொழுகைத் தழும்பு. அவர் தொடர்ந்தார்: "இதெல்லாம் ஆண்டவனின் வேண்டுதல். ஆண்டவனுக்கு முஸ்லீம்கள் மேலே எப்பவும் ஒரு பற்றுதல்தான்."

"சரிதான். ஆனா நமக்கு ஒரு கொறவு அமைஞ்சிருச்சி." - செந்தாடிக்காரன்.

"என்ன?"

"கம்முசாகிபின் மலையிலேருந்து நாலு யானையும் கொண்டுவராமப் போச்சி; அது வந்திருந்தா கம்பீரமா இருந்திருக்கும்."

"அதை மொதல்லேயே சொல்லலே. இப்போ சொல்லி என்ன பண்ண?"

இந்த உரையாடலின் நடுவே வாத்தியங்கள் ஆரம்பித்தன. முதலில் சில கோஷங்கள்; லீக்குக்கு; காய்-தெ-அஸம் ஜின்னா சாகிபுக்கு, ஊர்த் தலைவர்களுக்கு, ஹைத்ரோசுக்கு எல்லோருக்கும் "ஜே" முழக்கம். எல்லாம் முழக்கியது ராரிச்சன்தான். மற்றவர்கள்

அவனை அனுசரித்து முழங்கினார்கள். ஊர்வலம் புறப்பட்டது. அந்த மெய்மறந்த வெற்றிப் பவனியில், வென்ற கட்சிக்கு உதவியவர்களில் ஒருவரைத் தவிர மற்றெல்லோரும் இருந்தார்கள். அந்த ஒருவர் சாப்புண்ணி நாயர். போலிங் முழுவதும் முடிவதற்கு முன்பாகவே சுற்றுப்புறமெங்கும் கிளம்பிய கிசுகிசுப்பிலிருந்து சின்னம்முவின் 'ஊர்வலத்'தைப் பற்றி அவர் தெரிந்து கொண்டார். உடனே வீட்டுக்குத் திரும்பினார். கதவைத் தள்ளித் திறந்து, உள்ளே போய் இடிக்குரலில் கூப்பிட்டார்:

"லட்சுமீ...லட்சுமீ...லட்சுமீ..."

"ஏன்? என்னங்க?" - நழுவி விழப்போகும் உடுப்புத்துணியை வாரிப் பிடித்துக் கொண்டு லட்சுமியம்மை ஓடி வந்தாள்.

"எங்கே அவ?" - சாப்புண்ணி நாயர் அலறினார்.

"யாரு?"

"உன்னோடே சந்தானம்!"

"சின்னம்முவா?"

"உம்."

"வோட்டுப் போடப் போனா. போகக் கூடாதுன்னு நான் எவ்வளவோ சொன்னேன். கேக்கணுமில்ல?"

"இப்போ அவ எங்கே?"

"வரல்லே."

"இனிமே வரமாட்டா."

"ஹே?"

"அவ துலுக்கனோடே போயிட்டா!"

"யார்கூட?"

"அப்துகூட."

லட்சுமியம்மை அமைதியாயிருந்தாள். தொடர்ந்து சொன்னாள்: "இதுக்கா இந்த அட்டகாசமெல்லாம்? அவ உம்மாச்சு அம்மாவைப பார்க்கத்தான் போயிருப்பா."

சாப்புண்ணி நாயர் அக்னி ஜ்வாலை எரிவதுபோல ஒரு பார்வை பார்த்துவிட்டு அலறினார்:

"அவ ஒரு உம்மாவா மாறாமே இருந்தாப் போதும்!"

"இந்தாங்க, குழந்தையைப் பத்தி அதுவும் இதுவும் பேசாமே இருங்கோ!"

"ஏடி, பிள்ளைங்களை வளர்க்கிற விதமா வளர்க்கணும்டி."

"தகப்பனார்தானே வளர்த்தது!"

"நானா!.... தலவெட்டத்துக்காரங்க பரம்பரை இது இல்லே."

"பரம்பரையைப் பத்தின கதையெல்லாம் இப்போ பேசணு மாக்கும்?"

"இல்லே, பேசத்தான் பேசுவேன்!"

அது மாதிரியான கதைகள் சொல்வதற்கான சந்தர்ப்பம் அதல்ல என்றறிந்த லட்சுமியம்மை உள்ளே போனாள். சாப்புண்ணி நாயரும் மூக்கில் அரிப்பெடுத்த பன்றியைப் போல இடைகழியில் அங்குமிங்குமாக அல்லாடினார்; முணுமுணுப்பாக ஏதோ பேசவும் செய்தார். கொஞ்சம் பேசி முடித்ததும் ஒரு அமைதி வந்தது. பிறகு யோசித்தார்:

சரியாயிருக்கலாம். உம்மாச்சு அம்மாவைப் பார்க்கப் போயிருப்பா. சாயங்காலமா திரும்பிடுவா. இருந்தாலும், வோட்டுப் போடக்கூடாதுன்னு நான் சொல்லியிருந்தேனில்ல? அதை மீறி எப்படிப் போகலாம்? இங்கே வரட்டும், ஒரு "பூசை" வைக்கிறேன்.

சாப்புண்ணி நாயர் காத்திருந்தார். நேரம் கடந்துகொண்டிருந்தது. சூரியன் அஸ்தமித்தான். வீட்டிற்குள்ளே இருட்டு. ஒரு பழைய குத்துவிளக்கு மினுங்கிச் சடரிட்டது. அவர் வெளியே பார்த்தார். நட்சத்திரங்கள் மெள்ள எட்டிப் பார்த்தன. அதற்குப் பிறகும் சின்னம்மு வீடு திரும்பவில்லை.

"குழந்தையைக் காணோமே!" லட்சுமியம்மை வாசலுக்கு வந்து சொன்னாள்.

சாப்புண்ணி நாயர் ஒரு முறை திரும்பிப் பார்த்துவிட்டு, பேசாமல் நடந்தார். அவள் மீண்டும் சொன்னாள்: "ஒரு தரம் பார்த்திட்டு வந்தா..."

அதற்குக் கிடைத்த பதில் ஒரு அதட்டலாக இருந்தது. அவள் உள்ளே போய்க் கட்டிலில் விழுந்து தேம்பினாள். அன்று இரவு முழுவதும் சாப்புண்ணி நாயர் உறங்கவில்லை. லட்சுமியம்மை அழுதாள். பரஸ்பரம் எதுவும் பேசிக்கொள்ளவில்லை. எதுவும் சாப்பிடவும் இல்லை.

தன்னுடைய குடும்பத்தின் அஸ்திவாரக் கல் தோண்டி எடுக்கப்பட்டுவிட்டது என்று சாப்புண்ணி நாயருக்குத் தோன்றியது. அது அந்த தலவெட்டத்து மூப்பில் நாயருக்கு சகிக்க முடியாததாக இருந்தது.

காலையில் எழுந்தபோது தலையில் ஒரு கனம். ஆனாலும் அதையெல்லாம் காட்டிக்கொள்ளாமல் அவர் திண்ணையில் தெற்கு வடக்காக நடந்தார். ஒரு அட்சரம்கூடப் பேசவில்லை. சிக்கலான ஆலோசனைகளுக்கு ஒரு முடிவுகட்ட எந்தத் தடயமும் அவருக்குக் கிடைக்கவில்லை. அப்போதுதான் முற்றத்திலிருந்து ஒரு குரல் கேட்டது.

"அதாவது..."

சாப்புண்ணி நாயர் தலைநிமிர்ந்து பார்த்தார். ராரிச்சன் நாயர். எரிச்சல் கலந்த குரலில் கேட்டார்:

"என்னடா?"

"ஹைத்ரோஸ் மொதலாளி வீட்டுக்கு வரச் சொன்னாங்க."

"என்னவாம்? அவனோடே வேலைக்காரனா நான்? போடா, இங்கேருந்து!"

ராரிச்சன் அயர்ந்துபோனான். பிறகு சுற்றும்முற்றும் பார்த்து விட்டு மீண்டும் சொன்னான்:

"நம்ம மொதலாளி வீட்லே..."

"ஓடுடா!" - சாப்புண்ணி நாயர் வராந்தாவுக்கு காலெடுத்து வைத்தார். ராரிச்சன் படிக்கட்டிலிருந்து மெல்ல இறங்கினான். சாப்புண்ணி நாயரும் உரக்க உரக்கத் திட்டத் தொடங்கினார்: "நம்ம மொதலாளியாமில்ல! யாரிலே? திருட்டுக் கூட்டம்! ஒரேயடியா தொலைஞ்சி நாசமாப் போக! மொள்ளமாறிங்க!.."

இந்த சச்சரவையெல்லாம் லட்சுமியம்மை கேட்டுக் கொண்டு தானிருந்தாள். ஆனாலும் அவள் அசையவில்லை. துக்கத்தை நெஞ்சில் அடக்கிக்கொண்டாள். சாப்புண்ணி நாயர் மொத்தத்தில் தீப்பிடித்து நின்றிருந்தார். எங்கேயாவது ஓடிப்போய்விட வேண்டுமென்று அவருக்குத் தோன்றிற்று. ஆனால் படியைவிட்டு வெளியில் இறங்கத் தைரியமில்லை. யாராவது பார்த்து சின்னம் முவைப் பற்றி ஏதாவது கேட்டால்? அய்யோ! அதற்குப் பிறகு பிழைத்திருக்க வேண்டாம்!

"ஓ! என் பரதேவதே, இந்தக் குடும்பத்துக்கு இப்படி ஒரு புழுக்கத்தை வர வச்சிட்டியே. நீ எதுக்காக இங்கே இருக்கணும்? உன் கண்ணு அவிஞ்சிருச்சா?" - அப்படி சிறிது நேரம் பரதேவதை யையும் மண்மூடிப்போன கரணவரையும் சபித்தார். ஆனாலும் நிம்மதி கிட்டவில்லை. கண்ணில் தட்டுப்பட்ட சாமான்களை யெல்லாம் அவர் எடுத்தெறிந்தார்: வெற்றிலைத் தட்டு, கிண்டி, மொந்தை, கிளாஸ், வெள்ளிக்கோல், கோழிக்கூடு, அம்மிக் குழவி - - அப்படிப் பலவும் தோட்டத்தை நோக்கிப் பறக்கத் தொடங்கின. சில நசுங்கின; சில உடைந்தன. உடையும்போது ஒன்றுவிடாமல் எல்லாமே உடையவேண்டுமென்று அவர் கவனமாயிருந்தார். சகதியைக் கண்டதும் துள்ளந்து ஆட்டம் போடும் காளை போல அவர் அந்த வீட்டைச் சுற்றிலும் ஓடி நடந்தார். யாருக்கும் அவருடன் எதுவும் பேசத் தைரியமில்லை.

"குடிக்கக் கொஞ்சம் தண்ணி கொண்டு வா." - இடையில் ஒரு தரம் பேசினார். உடனே பாத்திரத்தில் தண்ணீருடன் ஒரு வேலைக்காரி வந்தாள்: "இந்தாங்க, தண்ணி."

அவளை எரித்துவிடுவது போல ஒரு பார்வை. பிறகு தண்ணீரை வாங்கி அவள் மேலேயே கொட்டினார். பாத்திரம் தோட்டத்தை நோக்கிப் பாய்ந்தது. நனைந்துவிட்ட அந்த வேலைக்காரி ஒரு பக்க மாக ஒதுங்கினாள்.

சாப்புண்ணி நாயரின் வாழ்க்கையில் அவ்வளவு பயங்கரமாக ஒருநாள் இருந்ததில்லை. தனக்கும் உலகத்துக்குமாக ஒரு சண்டைக்கு ஆயத்தப்படுத்திக்கொள்வதுபோல் இருந்தது அவருடைய நிலை. சிக்கலெல்லாம் எங்கிருந்து தொடங்கின தென்று அவர் யோசித்துப் பார்த்தார். அப்துதான் காரண மென்று முதலில் தோன்றிற்று. பிறகு, அப்துவைப் பெற்றெடுத்த உம்மாச்சுதான் என்று தோன்றிற்று. சின்னம்மு பிறந்ததனால் தான் தவறு நேர்ந்துவிட்டதாகத் தோன்றிற்று கடைசியில். அப்படியானால் அதற்குக் காரணம் தானல்லவா? அதனுடைய ஆரம்பம் எங்கிருந்து? ரொம்பக் காலமாக பிரம்மச்சாரியாகவே இருந்தார். அந்த நிலையிலேயே இருந்திருந்தால் சரியாயிருந் திருக்கும். ஈர முண்டு போர்த்துக்கொண்டு அசைந்தசைந்து கோயில் நடையில் எதிர்ப்பட்ட லட்சுமியம்மையை அவர் நினைத்துப் பார்த்தார். அந்த நிமிடம்தான் எல்லாவற்றையும் பிணைத்து வைத்தது. தன்னை இங்கே வரவழைத்தது.

லட்சுமியம்மை அடித்துக் கொல்ல வேண்டுமென்று அப்போது தோன்றிற்று. 'அசடு!'

மாலை வேளை கடந்தபோது அவர் தளர்ந்துவிட்டார்! ஒரு பக்கமாகப் போய்ப்படுத்தார். அன்றைக்கும் பட்டினிதான்.

மறுநாள்தான் சாப்பிட்டார். ஆனால் யாரோடும் எதுவும் பேசவில்லை. மூன்றாம் நாள் ஹைத்ரோஸ் ஜெயித்துவிட்டதாக யாரோ சொல்லக் கேட்டார். சாப்புண்ணி நாயர் அசையவில்லை. 'எந்த சைத்தானாவது ஜெயிக்கட்டும்' - தனக்குத் தானே பேசிக் கொண்டார். நான்காம் நாள்தான் முழக்கத்துடன் ஊர்வலம் நடந்தது. அதன் சத்தம் கேட்டபோது சாப்புண்ணி நாயருக்கு எரிச்சல் வந்தது; அறைக்குள் சென்று கதவைச் சாத்திக் கொண்டார். சின்னம்முவின் உருவம் அந்தத் தந்தையின் மனத்தினூடே குறுக்கும் நெடுக்குமாகக் கடந்து போய்க்கொண்டிருந்தது- சின்னம்முக்களின் ஊர்வலம். அந்தச் சத்தம் கடந்து போயிற்று. எல்லாம் அமைதியாயிற்று. அப்போது சாப்புண்ணி நாயர் தனக்குள் சமாதானமாகி, 'இல்லேன்னா எனக்கென்ன? ஒண்ணு மட்டும் நிச்சயம்! இனிமே அவனவன் இஷ்டம்போலே நடந்துக்க வேண்டியதுதான்', என்று சொல்லிக்கொண்டார். ஆனால் நிம்மதி கிடைக்கவில்லை. அவருடைய மனதில் அப்போது இரண்டு உருவங்களே இருந்தன: சின்னம்முவும் உம்மாச்சுவும். இரண்டு பேரையும் ஒதுக்கவும் முடியாது; தொடவும் முடியாது; 'பரிதாபம்!'

ஊர்வலத்தின் சத்தம் கொஞ்சம் கொஞ்சமாக ஒடுங்கியது. அது அப்துவின் வாசல் முன்பாகப் போய்க்கொண்டிருந்தது.

"ஹைத்ரோஸ் மொதலாளிக்கு ஜே!"

"அப்து மொதலாளி --- ப்பூ!" - அப்படியும் ஓரிரண்டு குரல்கள் வெளிப்பட்டன. அந்த இரண்டாவது குரலை யாரோ தடுத்தார்கள். சாய்ப்பறையில் அருகருகே உட்கார்ந்திருந்த சின்னம்முவும் அப்துவும் இவற்றையெல்லாம் கேட்டார்கள். அப்து சிரித்தான்; சின்னம்முவும். தான் தோற்றுவிட்டதாகத் தெரிந்தபோது அப்துவுக்கு எந்த வருத்தமும் ஏற்படவில்லை. 'உம்... அப்படியாக்கும்?' என்று மட்டுமே சொன்னான். அவன் அதிலும் ஒரு வெற்றி கொண்டாடிக் கொண்டிருந்தான். ஊர்வலம் கடந்து போய்க் கொண்டிருந்தபோது அப்து சொன்னான்:

"நான் தோத்திட்டேன்னுதானே அவங்க சொல்றது?"

"சரிதானே?" - சின்னம்மு கேட்டாள்.

"அப்படீன்னா நீயும் தோத்திட்டே."

"நான் தோக்கலே, தோக்கவும் மாட்டேன்." - அவளுடைய நீண்ட கண்கள் அப்துவினுடையவும் தன்னுடையவுமான மேனிகள் மீது படர்ந்தன.

"நீ ஜெயிச்சேட்டேன்னுதானே கூத்தாடறே!"

"பின்னே இல்லியா! என்னோடே வெற்றியிலே நான் உங்களைப் பங்கு சேர்த்துக்கிட்டேன், அவ்வளவுதான்."

"ஓ!..."

ஊர்வலத்தின் சந்தடி அகன்று அகன்று போய்க்கொண்டிருந்தது. வண்டு போகக் கூடிய இடைவழி உள்ள இடங்களிலெல்லாம் அது சுற்றியடித்தது. அமைதியான சூழல் சந்தடிகளால் நிறைந்தது. சாயங்காலம்தான் அது முடிவடைந்தது. சிலருக்குத் தொண்டை வறண்டது. சிலருக்குத் தொண்டை அடைத்தது. செம்மண் தூசி படிந்து பலருடைய தலைகள் அந்திப்போதின் நிறம் பெற்று செம்பட்டையாயிருந்தன.

ஊர்வலம் முடிந்த மறுநாள் சாப்புண்ணி நாயர் உம்மாச்சுவின் வீட்டின் முகப்பில் ஏறி நின்றுகொண்டு கேட்டார்:

"இங்கே யாரும் இல்லையா?"

அந்தக் குரலைக் கேட்டு வீடு ஒரு முறை நடுங்கியதாத் தோன்றிற்று. ஒரு நிமிடம் கழிந்தது. அவர் உம்மாச்சுவின் அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். சாப்புண்ணி நாயரைக் கண்டதும் உம்மாச்சு வெடித்து, தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள். அவ்வளவுக்கு எல்லை மீறி அவள் அழுததாக சாப்புண்ணி நாயர் ஒருபோதும் பார்த்ததில்லை. முன்பெல்லாம் அவள் நிம்மதி இழந்தபோது அவர்தான் சமாதானப்படுத்துவது வழக்கம். இன்று என்ன செய்வதென்று அவருக்குத் தெரியவில்லை. அடுத்திருந்த ஒரு பெஞ்சில் அவர் உட்கார்ந்தார். கண்ணீர் அந்தக் கன்னங்களின் சுருக்கங்களைக் கடந்து உருண்டுருண்டு விழுவதை சாப்புண்ணி நாயர் பாத்தார். தலைதாழ்த்திக்கொண்டார்.

"நாயரே..." வார்த்தைகள் அவளுடைய நெஞ்சிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டு வெளிவந்ததாகத் தோன்றியது. "நீங்க இனிமே இந்த வாசப்படியெ மிதிப்பீங்கன்னு நான் நெனக்கவே இல்லே."

"நான் வருவேன். சாகிற வரைக்கும் வருவேன்."

"எனக்காக நெறய கஸ்டத்தைப் பொறுத்துக்கிட்டீங்க நீங்க. இப்போ நான் ஒங்களுக்கு எடஞ்சலை உண்டாக்கிட்டேன். நாயரே, எனக்கு இனி ஒரே ஒரு உதவி மட்டும் செய்தாப் போதும்."

"என்ன?"

"இத்தினியூண்டு விசம் கொண்டு வந்து குடுத்திடுங்க. அதைத் தின்னிட்டுச் செத்திடுறேன். அது எல்லாருக்கும் நல்லதாப் போயிடும். நான் இதை முழு மனசோடேதான் சொல்றேன்!"

சாப்புண்ணி நாயர் செயலற்றிருந்தார். இவ்வளவு துயரம் அடக்கிக் கொண்டவளாக உம்மாச்சுவைப் பார்த்ததில்லை.

"விசனப்பட்டு என்ன செய்ய? வரவேண்டியது வழியிலே நிக்கிறதில்லே. நிம்மதியா இருங்க." - அவர் அப்படிச் சொல்லி விட்டார். இதைக் கேட்டவுடன் உம்மாச்சு சாப்புண்ணி நாயரின் காலடியில் திடீரென்று விழுந்தாள்.

"என்னெ மிதிச்சிக் கொண்ணிடுங்க நாயரே, கொன்னுடுங்க."

அது எதிர்பார்க்காததாயிருந்தது. அவர் எழுந்து இடம் மாறி நின்றுகொண்டு சொன்னார்:

"எந்திரிங்க, எந்திரிங்க."

"என்னெ மிதிச்சிக் கொண்ணிடுங்க!"

"எந்திரிங்கன்னு சொன்னேனில்ல!" அது ஒரு கட்டளையும் வேண்டுகோளுமாயிருந்தது. உம்மாச்சு எழுந்திருந்தாள்.

"ஆகட்டும், நான் அப்புறமா வர்றேன்." - சாப்புண்ணி நாயர் அவளுடைய முகத்தைப் பார்க்காமலே சொன்னார்.

"வருவீங்களா?"

"வருவேன்."

அவர் வெளியே போனார். படிக்கட்டைத் தாண்டிப் போவதை சின்னம்மு சாய்ப்பறை வாசலிலிருந்து பார்த்தாள். ஆனால், அப்பாவைக் கூப்பிட அந்த மகளுக்கு முடியவில்லை. லட்சம் பேர்

ஊர்வலத்தைவிட சக்தி மிக்கதாக இருந்தது அந்த ஒரு தனி ஆளின் நடை. அதைத் தடுத்து நிறுத்த ஒரு இமயமலையாலும் முடியாது.

சின்னம்மு அந்தக் குடுமி நுனி மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்தாள். ஒரு நெடிய பெருமூச்சுடன் பின்னால் திரும்பிய போது, அப்துவின் கை அவளுடைய தோளைத் தடவியது. அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். அந்த நான்கு கண்களும் நனைந்திருந்தன.

# 27. தாத்தா

சின்னம்மு அப்துவுடன் ஓடிவிட்டாள் என்ற செய்தி ஊரில் கொஞ்சமாவது சலனத்தை உண்டாக்காதிருக்கவில்லை. அடுக்களையிலிருந்து அடுக்களைக்கும், வேலிப் படலிலிருந்து வேலிப் படலுக்கும், குளக்கரையிலிருந்து குளக்கரைக்குமாக அது சஞ்சரித்தது. செரோணம்மை உண்ணுவியம்மையிடமும், உண்ணுவியம்மை இச்சுக்குட்டி டீச்சரிடமும், இச்சுக்குட்டி டீச்சர் தனது மூன்றாவது காதலனான பஸ் கண்டக்டரிடமும் சொன்னார்கள். பின்னர் பஸ் கண்டக்டர்கள் மூலமாக அது தேசாந்தரங்களில் பரவிற்று.

இதனுடன் தொடர்புகொண்ட பல புதிய கதைகள் உருவாயின. இதற்கு முன்பே சின்னம்மு பலருடன் ஓடிப் போக நினைத்ததுண்டு என்று செரோணம்மை சொன்னாள். கேட்டுக்கொண்டிருந்த உண்ணுவியம்மையும் அதைத் திரித்து, அவள் ஏற்கனவே மூன்று பேருடன் ஓடிப்போனவள்தான் என்று இச்சுக்குட்டி டீச்சரிடம் சொன்னாள். பஸ் கண்டக்டர் மூலம் அதுவே, பதினொரு ஆட்களுடன் ஏற்கனவே ஓடிப்போய் ரிகர்சல் முடித்துவிட்ட பெண்ணாக்கும் சின்னம்மு என்று பொதுமக்களின் காதுகளை எட்டியது. கேட்டவர்கள் திகைத்தார்கள்.

"அடியாத்தே!"

"இருந்தாலும் இப்போ பிடிச்சது புளியங்கொம்பாக்கும்."

"அந்த எளவட்டப் பையன் கறையான் அரிச்ச மரம்போலே மொத்தத்திலே உருப்படமாட்டான்னு வச்சிக்க வேண்டியதுதான்."

அப்துவைப் பற்றி யாருக்கும் அதிகமாக ஆட்சேபம் எதுவும் உண்டாயிருக்கவில்லை. அம்புகளைத் தொடுத்துவிட்டது சின்னம்முவை நோக்கித்தான். அது மட்டுமல்ல, அப்துவின் செயலை நியாயப்படுத்தவும் சிலர் தயாரானார்கள்:

"அவனை எதுக்காகக் குத்தம் சொல்றீங்க? கல்யாணம் ஆகாத வாலிபனா இருந்தா இந்த மாதிரியெல்லாம் நடந்துக்கத்தான்

வேண்டியிருக்கும். குடும்பத்திலே பொறந்த பொண்ணுங்க இப்படித் தப்பு பண்றதுதானே அசிங்கம்!"

"உண்மைதான்." - கேட்பவர்கள் தலையாட்டினார்கள்.

இம்மாதிரியான பொய் வதந்திகளைப் பரப்புவதில் தம்புரான் தான் முன்னால் நின்றார். புதிய சம்பவங்கள் அவரை நன்றாகவே உற்சாகப்படுத்தின. எதிர்பாராமல் கிடைத்த இந்த வஞ்சம் தீர்க்கும் சந்தர்ப்பத்தை எண்ணி உற்சாகமாக நடந்தார். அவர் எண்ணெய் தேய்த்து, உடம்பைத் தடவிக்கொண்டு கோயில் குளத்தின் படிக்கட்டில் சென்று உட்காருவார். உடம்பில் எண்ணெய் ஊறுகிறவரை நேரம் போக்க வேண்டும். அதற்கு புரணி பேசுவதுதானே நல்ல வழி. அவர் அடுத்த படிக்கட்டுக் கடவுக்கு கூப்பிட்டுக் கேட்பார்:

"கேட்டீரா சேஷன்?"

"என்னவாம்?" - காயத்ரி மந்திரம் சொல்வதை நிறுத்தி சேஷய்யர் கேட்டார்.

"சின்னம்மு பீவி ஆரம்பமான கதை. ஆரம்பமே ரொம்பப் பிரமாதமா இருக்கு. இனிமேலுள்ள வேடிக்கையை, பார்த்துத் தான் சொல்லணும். ஹ!ஹ!.." ஒரு வெடித்த சிரிப்பும்.

காயத்ரி மந்திரம் ஜபித்துக்கொண்டே சேஷய்யர் பதில் சொன்னார்:

"கலிகாலம்!...ஓம் புவர்புவஸ்வா...வோட்டும் கோட்டும் வந்திச்சு. ஹிந்துவும் முஸ்லீமும் வித்தியாசமில்லாமப் போயிடுச்சு. ..ஸவிதுர்வரேண்யம்...நாசமாப் போச்சு...பர்கோ தேவஸ்ய தீமஹி. கோவில், வாரம், ஈஸ்வர சேவை இதிலே எதிலேயும் மனுஷ்யர்க்கு அக்கறையில்லே....தீயோயோ நஹ ப்ரசோதயாத்... எல்லாம் கீதையிலே பகவான் சொன்னது போலத்தான்." இதைக் கேட்டுக் கொண்டு அடுத்திருந்த படிக்கட்டில் பல் தேய்த்துக்கொண்டிருந்த ஒரு நாயர் வாலிபன் உரக்கக் கேட்டான்:

"சின்னம்மு பீவியாவாள்னு கீதையிலே சொல்லியிருக்கா, சேஷய்யர்?"

"சொல்லலே. அதுபோலேயான சங்கதிகள் வரும்னு சொல்லி யிருக்கு."

"ஓகோ? சேஷய்யர் கீதையைத் தலைகீழாத்தான் படிக்கத் தொடங்கினதோ?"

"சாதுர்வண்யம் மயா த்ருஷ்டம்...அப்படீன்னு சொல்லியிருக்கில்ல!"

"அதுக்கு அர்த்தம் சின்னம்மு பீவியாவா என்கிறதா? சேஷய்யரோடே கற்பனையே ரொம்பப் பிரமாதம்!."

சேஷய்யர் இருபத்தெட்டு பல்லும் - மீதிப் பற்கள் விழுந்துவிட்டிருந்தன - வெளியில் தெரியுமாறு ஒரு முறை இளித்தார், தனக்குச் சாதகமாகத்தான் அந்த நாயர் வாலிபன் பேசினான் என்ற எண்ணத்தில். அதற்குப் பிறகு பூணூலைக் கைவிரல் இடுக்குகளினூடே தொடுத்து தண்ணீரை ஊற்றினார். பின்குடுமிக்கு நான்கு தட்டும் கொடுத்தார்.

"இந்தாப்பா, நாராயணன், இருந்தாலும் இவ்வளவுக்கு கேலி கூடாதில்ல?" -- தம்புரான் இடையே புகுந்து ஒரு கேள்வி.

"உ-ம்? ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை வேணும்னுதான் தம்புரான் சொல்றீங்களா?"

"அது எலக்ஷன் விஷயமில்ல?"

"அப்படீன்னா சின்னம்மு மொத்தத்திலே தப்பர்த்தம் பண்ணிட்டா. அவ சொல்றது, தம்புரான் விவரமில்லாமே பேசமாட்டாரு, அது சரியாத்தான் இருக்கும், அதைக் கேட்டுத்தான் நடந்தேன்னு அவ சொல்லுவா."

"அப்படியா?" புன்சிரிப்புடன் தம்புரான் கேட்டார்: "என்னைப் பத்திப் பேசினாளோ?"

"பேசினா. ஆனா, இதுதான் தம்புரானின் அபிப்பிராயம்னு தெரிஞ்சா அவளோடே பேச்சோடே ரீதி எல்லாமே மாறிப் போயிரும். அவளுக்கு தம்புரானை ரொம்ப நல்லாவே தெரியுமே?"

"வெயில் சூடேற ஆரம்பிச்சிரிச்சி. குளிக்கலாம்." - தம்புரான் அந்த விஷயத்திலிருந்து நழுவுவதற்காக குளிக்க இறங்கினார்.

சின்னம்முவைப் பற்றி பாதி உண்மையும் பாதி பொய்யும் கூட்டிக் கலந்த இம்மாதிரிக் கதைகள் பரவிக்கொண்டிருந்தன. தம்புரானுக்கு இதில் மறைமுகமான ஓர் உதவியும் கிட்டியிருந்தது அது நாணிக்குட்டி டீச்சருடையது. அவளுக்கு இந்த மாதிரியான அபவாதங்களைப் பரப்புவதுதான் முக்கியத் தொழில்:

"மாப்பிளகூட ஓடிப் போன கதை கேக்கலே? குடும்பத்தோடே பேரு கெட்டுப் போச்சில்ல? என்ன இருந்தாலும் ஜாதிக்கட்டை மீற முடியுமா?"

"முடியவே முடியாது!" - அக்கம்பக்கத்துக்காரிகளெல்லாம் ஒன்று கூடி கைவிரித்து விட்டார்கள்: "இதெல்லாம் மத்தவங்க நெனச்சிப் பார்க்கவே முடியாது!"- ஒரு தாயின் அபிப்பிராயம். "சாகிறப்போ கண் இமை ஒண்ணு சேர வேணாமா?" - என்பது மற்றொரு மானமுள்ள பெண்மணியின் கேள்வி. இரண்டு கணவர்களுக்கு ஆளாகி, ஐந்து குழந்தைகள் பெற்ற வேறொருத்தி சொன்னது இதுதான்: "என் குழந்தைங்களோடே தகப்பன் இதைக் கேட்டதும் திகைச்சிப் போயிட்டாரு!". "யாரும் அப்படித்தான் திகைப்பாங்க!" என்று நாணிக்குட்டி டீச்சரும் ஒத்துப் பேசினாள்.

ஆனால், ஒரு விஷயத்தைப் பற்றி தேவைக்கதிகமாகப் பேசுவது அதை சாதாரணமாக்கிவிடும் என்பதை வம்பளந்தவர்கள் நினைக்கவில்லை. சிலநாட்களுக்கு ஆட்கள் இந்தப் பேச்சுக்களில் பங்குகொண்டார்கள். பிறகு சொந்த விவகாரங்களில் முனைந்தார்கள். இதற்கிடையில் அறுவடைக் காலம் வந்தது. ஓணம் கழிந்து பல கூட்டுச்சேரல்களும் வேறுபாடுகளும் முளைத்தன. சின்னம்முவைப் பற்றியதான செய்திகள் பின்னுக்குத் தள்ளப் பட்டன.

சின்னம்முவும் தன்னைச் சுற்றி நடக்கும் சழக்குகள் பற்றி எள்ளளவும் பொருட்படுத்தவில்லை. அவள் நினைத்தாள்: 'பேசிட்டுப் போகட்டுமே.' அவள் ஸ்கூலுக்குப் போய்விட்டுத் திரும்பி நேராக அப்துவின் சாய்ப்பறைக்கு வருவது வழக்கமாகி விட்டது. அதற்கிடையில் தம்புரான் உட்பட பலர் அவளைப் பள்ளியிலிருந்து விலக்குவதற்காக ஸ்கூல் மானேஜரிடம் சிபாரிசு செய்தார்கள்.

"எதுக்காக?" - அந்த மனிதர் கேட்டார்.

"ஜாதியைக் கெடுத்தாளில்ல?"

"சுத்தமான ஜாதிக்காரங்களைத்தான் ஸ்கூல் டீச்சராக்கணும்னு சட்டமில்லையே!" அந்த இளைஞன் நிமிர்ந்து நின்றபடி கேட்டான்: "வேறே வேலை ஒண்ணுமில்லியா உங்களுக்கு?"

முகத்தில் உப்பை அப்பிய அட்டைகள் தலைகளைப் பின்னுக் கிழுத்துக் கொண்டன. இதில் எதுவும் சின்னம்முவை வேதனைப் படுத்தவில்லை. ஆனால் அவளைக் கவலைக்குள்ளாக்கிய சங்கதி இருந்தது. அப்பாவையும் அம்மாவையும் பற்றிய நினைவு: 'அப்பா ரொம்ப மெலிஞ்சி போயிருப்பாரு' - அவள் அடிக்கடி நினைத்துப் பார்த்தாள்.

உண்மைதான். சாப்புண்ணி நாயரின் மனம் மிகவும் தளர்ந்திருந்தது; அது வெளியே பாதிக்கவும் செய்தது. நின்றிருக்கும் இடத்திற்கு வலு இல்லையென்று தெரிந்தால் அப்புறம் அசைய முடியாது. குடும்ப கௌரவம் என்ற கரும்பாறையின் மேல்தான் அவர் தனது சொந்தக் கோட்டையைக் கட்டியிருந்தார். அந்தப் பாறை ஒரு விடிகாலையில் பனிக்கட்டிபோல் உருகிப்போய் விட்டது. தான் அனாதையாகிவிட்டதாக அவருக்குத் தோன்றிற்று. முடிந்தவரை அவர் வெளியே தலைகாட்டவில்லை. யாரோடும் எதுவும் பேசவும் இல்லை. தான் ஒரு சிறைச்சாலையில் இருப்பதாக ஓர் எண்ணம். சுற்றிலும் முள்வேலிகள். சிறிது அசைந்தாலும்கூட அந்த முட்கள் தேகத்தைக் குத்திக் கிழிக்கும். அந்த ஒவ்வொரு குத்தும் மார்பில் வலி உண்டாக்கித் தீர்க்கும். மிகப் பெரிய சாதனைகள் புரிந்தவர்தான் அவர். இருந்தாலும், முக்கியமானதை இனிமேல்தான் சாதிக்க வேண்டும் என்றோர் எண்ணம் சாப்புண்ணி நாயருக்கு எப்போதும் இருந்து கொண்டிருந்தது. அந்த எண்ணம்தான் வாழ்க்கையில் எல்லா வெற்றிகளுக்கும் உந்துதல் நல்கியிருந்தது. பேரக் குழந்தைகள் தன் காலடியில் வந்து கட்டிப் பிடித்து, 'தாத்தா, அம்மா கிட்ட அப்பம் தரச் சொல்லு' என்று கெஞ்சிக் கேட்கும் காட்சிகள் உணர்வில் ஒளிந்திருப்பதாக அவருடைய மனக் கண்கள் பார்த்திருந்தன. அந்தச் சின்னஞ் சிறுசுகளுக்காக வேண்டி இனியும் சிலவற்றைத் தேடி வைக்க வேண்டியிருக்கிறது. ஆனால் அந்தக் கனவுகள் எல்லாம் சிதறுண்டு போயின. அவருக்கொரு நிகழ்ச்சிநிரலில்லை. அரக்கு அடைத்துப்போன புல்லாங்குழலில் ஊதுவதான ஓர் அனுபவம்.

உம்மாச்சுவின் வீட்டுக்கு அவர் போனது சேணம் கட்டிய குதிரையைப் போலத்தான். தனக்கு இருபுறமும் என்ன நடக்கிறது என்று தெரிந்துகொள்ள அவர் ஆர்வப்படவில்லை. ஒரு நாள் சாப்புண்ணி நாயர் உம்மாச்சுவின் வீட்டிலிருந்து திரும்பும்போது வழியில் தம்புரானைக் காண நேர்ந்தது.

"ஓ, சாப்புண்ணியாரா?" - தம்புரான் அருகில் வந்தார்.

"தம்புரானுக்கு வெள்ளெழுத்து ஆரம்பிச்சிருச்சா?" சாப்புண்ணி நாயர் உரக்கவே கேட்டார்.

"இல்லே... என்ன சுகம்தானே?"

"உம்.."

"மகளைப் பார்க்கப் போயிருக்கணும், இல்லே?"

"இல்லே."

"இருந்தாலும் சின்னம்மு செஞ்சது பெரிய தப்புத்தான்; இல்லே?"

"நீங்க போய்ட்டு வாங்க."

"என்கிட்ட கோவிச்சிக்கிட்டு என்ன பண்ண? மகளுக்கு முஸ்லீம் தான் வேணும்னா என்ன பண்ண முடியும்..."

"சீ!" ஓர் அதட்டல். அப்புறம் வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு ஒரு நடை. அவர் வீடு சென்று கதவைச் சாத்திக்கொண்டு படுத்தார். அந்தத் தகப்பன் தலையணையில் முகத்தைப் புதைத்துக்கொண்டு பொங்கிப் பொங்கி அழுதார்.

"நான் இன்னும் சாகாமே இருக்கேனே!"

நான்கு நாட்களுக்கு சாப்புண்ணி நாயர் வீட்டிலிருந்து வெளியே கிளம்பவில்லை. அவருடைய இந்த நடவடிக்கைகள் லட்சுமியம் மையை அதிகமாகவே வேதனைப்படுத்திவிட்டன. ஆனாலும் அவள் மௌனத்தைத்தான் கடைப்பிடித்தாள். அந்தப் பரிதா பத்துக்குரிய தாய் தன்னந்தனியே விம்மி விம்மி அழுதாள். அவள் பல தடவை யோசித்தாள்:

'நான் எதுக்காக இனி இருக்கணும்?'

அந்த வீட்டில் மனிதக் குரல் கேட்கவே இல்லை. பாத்திரங்கள் தட்டி முட்டிக் கொள்வதோ, கதவைச் சாத்தி அடைப்பதோ ஆன சத்தம் மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது. அந்தச் சத்தம்கூட லட்சுமியம்மைக்கு எரிச்சலை ஊட்டிற்று. ஓசை வராதிருக்க கதவின் தாழ்ப்பாள்களில் அவள் தண்ணீர் ஊற்றி வைத்தாள்.

அக்கம் பக்கத்தார் அந்த வீட்டுக்குப் போவதில்லை. இருந் தாலும், விசாரிப்பது அந்தத் தம்பதிகளைக் கலவரப்படுத்து மென்றும், அது ஒரு சண்டையில்தான் முடியுமென்றும் அவர்களுக்குத் தெரியும். பிள்ளைகள் போகப் புறப்பட்டால் தாய்மார்கள் தடுத்து நிறுத்துவார்கள். மனப்பக்குவம் பெற்றிருந்த பாட்டிமார்கள் மட்டும் எப்போதாவது லட்சுமியம்மையைக் காணச் சென்றார்கள். அவர்கள் வேனிலின் சூடு பற்றியும், விடிகாலை நேரத்தின் பனியைப் பற்றியும், நெல்லில் பதர் கூடியதைப் பற்றியும் எல்லாம் பேசினார்கள். சின்னம்முவைப் பற்றி மட்டுமல்ல, பொதுவாக பெண்களைப் பற்றியே மௌனம்

தான் சாதிப்பார்கள். அந்த மௌனமே லட்சுமியம்மையை அதட்டுவது போலிருந்தது.

தாய்க்கு மகளைக் காண வேண்டுமென்று ஆசை. ஆனால் அந்த ஆசையை வெளியே சொல்ல அவளுக்கு பயமாக இருந்தது. சாப்புண்ணி நாயருக்குத் தெரிந்தால் தலையைச் சீவி விடுவார். அப்படிச் செய்ய அந்த மனிதருக்கு அதிகாரமுண்டென்று அவள் நம்பினாள். ஆனாலும் 'நான் பெத்தவளில்லையா?' என்றுதான் அவள் யோசித்தாள். ஒளிந்து நின்றாவது ஒரு தடவை பார்த்தால் போதும். அங்கே போக வாய்ப்பில்லை; இங்கே வரவழைக்கவும் வாய்ப்பில்லை. விம்மிப் புலம்பிய நாட்கள் அப்படியே கழிந்துகொண்டிருந்தன.

கடைசியில் அவளுக்கொரு யுக்தி தோன்றிற்று. கோயிலுக்குப் போகும் நேரத்தைக் கொஞ்சம் தாமதப்படுத்தினாள். வழியில் ஒரு மூங்கில் புதரின் மறைவில் பதுங்கியிருந்தாள். அந்த வழியாகத் தான் சின்னம்மு ஸ்கூலிலிருந்து போக வேண்டும். பதினைந்து நிமிடம் கழித்து, சின்னம்முவின் குடை இடைவழியினூடே திரும்பி வருவதை லட்சுமியம்மை பார்த்துவிட்டாள். அவள் அருகில் வந்துவிட்டாள்.

"மகளே!"

சின்னம்மு அதிர்ந்துபோனாள். அதிர்ந்து நடுங்குவது அவளுடைய இயல்பு இல்லைதானென்றாலும் அவள் திகைத்து நின்றாள். சுற்றிலும் நோக்கினாள். புதர் மறைவிலிருந்தாள் அம்மா.

"அம்மா!"

தொடர்ந்து சிறிது நேரத்திற்கு இரு சாராருக்கும் எதுவும் பேச முடியவில்லை. சின்னம்முவின் கண்கள் நிறைந்தன; லட்சுமியம்மையின் கண்கள் நிறைந்து ஒழுகின. என்ன கேட்பதென்று தாய்க்குத் தெரியவில்லை; என்ன பேசுவதென்று மகளுக்கும் புரியவில்லை. சின்னம்மு இப்படி ஒரு கலக்கத்தை அவளுடைய வாழ்க்கையில் அனுபவித்ததில்லை.

"நான் நாளைக்கு வர்றேன், மகளே."

"வரணும்." - மகளும் விரும்பினாள். ஒரு நிமிடம் நன்றாக அங்கேயே நின்றிருந்தார்கள்; பின்னர் இரண்டு பாதைகளில் பிரிந்து சென்றார்கள்.

கோயிலுக்குச் செல்லும் பாதையின் கோடியில் உள்ள புன்னை மரத்தின் கீழே மறுநாள் லட்சுமியம்மை மகளைச் சந்தித்தாள். அம்மாவுக்கு ஒரு பத்து வயதுப் பிராயம் கூடிவிட்டதுபோல் சின்னம்முவுக்குத் தோன்றிற்று. தாய் மகளை உற்றுப் பார்த்தாள் பிறகு கேட்டாள்:

"உனக்கு களைப்பா இருக்கா, மகளே?"

"இல்லேம்மா."

"இனிமே எதுக்கு ஸ்கூலுக்கெல்லாம் போறே?"

"வேலை செஞ்சி சாப்பிடறதுதானே கௌரவம்?"

அதற்குப் பிறகு என்ன பேசுவதென்று லட்சுமியம்மைக்குத் தெரியவில்லை. அவளுக்கு ஏதாவது பேச வேண்டுமென்றும் தோன்றவில்லை. மகளைப் பார்த்தால் போதும். கண்கள் மகளுடைய தலையிலிருந்து கால்நகம் வரை மெள்ள மெள்ள சஞ்சரித்தன.

"மகளே!"

"என்னம்மா?"

"நடக்கிறது நல்லதுதான். ஆனா ஆயாசம் வர்றாப்பிலே எந்த வேலையும் செய்யக் கூடாது."

"சரி!"

"தினமும் கொஞ்சம் சீரகக் கஞ்சி வச்சிக் குடிக்கணும்."

"குடிக்கிறேன்."

"யாரு பண்ணித் தருவா என் மகளுக்கு?..." அதைச் சொன்ன போது தொண்டை இடறிற்று. "வேணும்னா நான் தினமும் காய்ச்சி இங்கே கொண்டு வர்றேன்."

"வேண்டாம்மா, அதுக்கெல்லாம் அங்கே வசதி இருக்கு."

"மகாதான்வந்தரம் மாத்திரை தினமும் ரெண்டிரண்டு சாப்பிடணும். என் கையிலிருக்கு, நான் கொண்டு வந்து தர்றேன்."

"உ-ம்." சின்னம்மு கீழே குனிந்தபடி சம்மதம் தெரிவித்தாள். அந்த நிமிடம் தாங்க முடியாத ஒரு வேதனை அவளுடைய இருதயத்தில் முளைத்தது. அவளும் அம்மாவும் அருகருகேதான் நின்றிருந்தார்கள். ஆனாலும் அவர்களுக்கிடையில் எவ்வளவோ மைல் தூரம் இடைவெளி இருப்பதாக சின்னம்முவுக்குத்

தோன்றிற்று. தாயும் மகளும் இரு வேறு உலகங்களில் இருந்தார்கள். சின்னம்மு பொங்கிப் பொங்கி அழவில்லை; அவள் அடக்கிக் கொண்டாள். ஒரு நிமிடம் கழித்து இப்படிக் கேட்கவும் செய்தாள்:

"அப்பாவுக்கு உடம்புக்கு ஒண்ணும் இல்லேல்லம்மா?"

"இல்லே...பின்னே, அங்கே வர்றப்போ அப்பா.."

"இல்லே, நான் போய்ப் பார்க்கிறதில்லே. அப்பாவுக்குத் தொந்திரவு கொடுக்க வேணாம்."

மௌனம்; நீண்ட மௌனம். அதன் முடிவில் அவர்கள் இரண்டு பாதைகளில் பிரிந்து போனார்கள்.

சம்பளம் கிடைத்தபோது சின்னம்மு ஒரு தொகையை ரகசியமாக அம்மாவிடம் கொடுத்தாள்.

"எனக்கு இதெல்லாம் வேண்டாம், மகளே."

"என்னைத் தொடக் கூடாதுன்னாலும் என் காசையாவது தொடலாமில்லம்மா?"

அவள் மகளைக் கட்டிப் பிடித்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள். அவளுடைய நெஞ்சிலிருந்து ஒரு கதறல் பொங்கிப் புறப்பட்டது.

"எனக்கு நீதான் வேணும், மகளே."

"அது எனக்கும் தெரியும்மா!"

லட்சுமியம்மை அந்தப் பணத்தை வாங்கி மடியில் முடித்துகொண்டாள். தொடர்ந்து எல்லா மாதமும் அவள் ஒரு தொகை கொடுத்து வந்தாள். லட்சுமியம்மை அதைப் பெற்றுக் கொள்ளவும் செய்தாள்.

இதற்கிடையில் அபவாத வதந்திகளுக்கான கனம் குறைந்து வந்தது. ஆறேழு மாதங்களுக்கும் அதிகமாக ஒரே கதையைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்க ஆட்களால் முடியவில்லை.

அப்போதும் சாப்புண்ணி நாயர் உம்மாச்சுவின் வீட்டிற்கு செல்வதுண்டு. இடமும் வலமும் பார்க்காமல் உம்மாச்சுவை சென்று பார்ப்பார்; விவரம் சொல்வார்; திரும்பி விடுவார். அன்று உம்மாச்சு படுத்திருந்தது வழக்கம்போல் படுத்திருக்கும் அறையிலல்ல; அடுத்திருந்த மற்றோர் அறையில். உம்மாச்சுவிடம் ஏதோ ஒரு கையெழுத்து வாங்குவதற்காகச் சென்றிருந்தார். அதை

வாங்கியாகிவிட்டது. திடீரென்று அடுத்த அறையிலிருந்து ஒரு குழந்தையின் அழுகுரல் கேட்டது: 'ள்ளே...ள்ளே...ள்ளே...'

'யார் அது?' என்ற கேள்வி சாப்புண்ணி நாயரின் தொண்டை வரை வந்துவிட்டது. சட்டென்று நிறுத்திக்கொண்டார். உடம்பெங்கும் ஒரு சிலிர்ப்பு. சாப்புண்ணி நாயரும் உம்மாச்சுவும் பரஸ்பரம் ஒரு முறை பார்த்துக்கொண்டார்கள்.

"நான் வர்றேன்."

"உம்..."

அவர் அறையைவிட்டு வெளியே கிளம்பினார். அப்போதும் குழந்தையின் அழுகுரல் கேட்டுக்கொண்டிருந்தது: 'ள்ளே..ள்ளே... ள்ளே'

அவர் நின்றார். உள்ளே இருந்து ஏதோ ஒன்று தள்ளித் தள்ளி வந்துகொண்டிருந்தது. ஆனாலும் மூப்பில் நாயர் பொருட்படுத்தவில்லை. வாசலுக்குச் சென்றார். சட்டென்று ஓர் ஓவியம் அந்தத் தந்தையின் மனதில் நிழலிட்டது. 'ள்ளே ள்ளே' என்று கூக்குரலிடும் சின்னம்முவை மடியில் வைத்திருந்த லட்சுமியம்மையினுடையதாக இருந்தது அந்த ஓவியம். அவருடைய கடந்த கால வாழ்க்கையில் அவ்வளவு மனம் கவர்ந்த ஒரு நிமிடம் இருந்ததில்லை. அந்த நிமிடம் திரும்புகிறதோ? 'அவளும் கால் நீட்டி மடியில் குழந்தையை வைத்திருப்பாள்...' அந்தத் தந்தை நினைத்துப் பார்த்தார். காலை முன்னோக்கி வைக்க முனைந்தார். சட்டென்று அந்த அழுகுரல் வந்தது: 'ள்ளே-ள்ளே..'

அந்த அழும் குழந்தை எது? தனக்கும் அதற்கும் என்ன உறவு? அந்தக் குரல் தன்னுடையதே அல்லவா? அந்தக் குரல் தனக்குப் பின்னாலேயே ஓடித் தாவி வருவதாக சாப்புண்ணி நாயருக்குத் தோன்றிற்று. அந்த மழலைக் குரலில் 'தாத்தா..தாத்தா..' என்று அவர் அழைக்கக் கேட்டார். தந்தையாக வாழ்ந்த எந்த மனிதனும் பின்னர் கேட்க ஆசைப்படும் மிகவும் இனிமையான குரல்; தலைமுறைகளினூடே தான் நிரந்தரமாக்கப்பட்டாயிற்று என்ற உணர்வு தரும் அந்தக் குரல். உயிரின் துடிப்பு, இயற்கையின் முறியடிக்கப்படாத முன்னேற்றம். தெய்வத்தின் காலடிச் சுவடுகள்- மனிதனால் உருவாக்கப்பட்ட வெளிவேஷங்கள் அங்கே உடைந்து தகர்கின்றன. மனதும் மனதும் புரிந்துகொள்கின்றன; இதயமும் இதயமும் கட்டித் தழுவுகின்றன. ஆத்மா ஆத்மாவில் சங்கமமாகிறது. உயிரின் ஒரு துளியும் மற்றொரு துளியும் சேர்ந்து

ஒரு பெரிய துளியாகித் தீரும். அங்கே 'நீ' இல்லை; 'நானே' உண்டு. சாப்புண்ணி நாயர் ஒரு பெரிய 'நானாக' ஆகியிருந்தார். அந்தக் குரல் மீண்டும் உரக்கக் கேட்டது: 'தாத்தா!...'

மூப்பில் நாயர் தளர்ந்து குழைந்து அந்த வாசல் திண்ணையில் உட்கார்ந்து விட்டார். வியர்த்த நெற்றியில், சராசரங்கள் அனைத்தையும் சிறைப்படுத்துகின்ற இயற்கையின் இளங்காற்று வந்து தழுவியது. அவர் மனம் நொந்து கூப்பிட்டார்.

"கடவுளே....."

Printed at the Central Electric Press, A12/1, Naraina Indl. Area-I, New Delhi-110028